# உதயண கதா பீடம்

அல்லது

# பெருங்கதை

## புவியில் வெளிப்போந்த வரலாறு



இதனை

வடமொழியிலிருந்து

தமிழில்

குறிப்புரையுடன் மொழிபெயர்த்தது


## ஸ்ரீ. அ. திருமலைக்கொழுந்து

ஆங்கில ஆசிரியன்

எட்டயபுரம் சமஸ்தானம்


 [Price Re. 1

This book is Dedicated

to the Memory of

My Divine Daughter

Muttu Parvati

The very incarnation of Grace and Truth

Who entered into my very being and ennobled it.

Lives of great men oft remind us
We can make our lives sublime
And departing leave behind us
Foot-prints on the sands of time.

உ

சிவமயம்

# குழந்தைகட் கறிவிப்பு

## விநாயகர் வணக்கம்

ஓமெனப் பெயரிய வொருமுத லுருவனை
தேவெனப் படுவரிற் றலைநின்ற தனியனை
கோவென மனத்தினுட் குடிகொண்ட கொம்பனை
காவெனக் கடிமலர் கைகளாற் றூற்றுதும்.

தமிழறியும் நாவுடைய எனதருங் குழந்தைகாள்! உங்களது க்ஷேமத்தின்பொருட்டே, இஃதெழுதப்பட்டது, எழுதவும் படுகின்றது. சிறிது கவனத்தோடிதனைப் படிக்கத் தொடங்கி, நூலைப் பற்றிக்கொள்வீராயின், மிக்க நன்மை யுங்கட்கு விளையாநிற்கும். "சிக்கெனப் பிடிக்கும் திறமுடையாரே" எதனையும் வென்றிகொள்ள வல்லவர்.

இளைஞராகிய உங்களது நெஞ்சத்தில், ஞானமாகிய மெய்ப்பொருளை எளிதே பதித்தற்குத் தக்கவாயில் கதையேயாம். காலப்போக்குக் காலப்போக்காய், அறிவிற் கமுதூட்டி, நல்வழிப் படுத்தற்கியன்ற நெறி கதையையன்றி வேறென்னும்? அறிவு முதிராது பாமரராயிருந்த வோர் அரையன் மக்களைச் சோமசன்மா வெனும் அந்தணன் பஞ்சதந்திரக் கதைகூறி நல்லறிவு கொளுத்தினனன்றே!

இந்நூற்கண் அருள் வடிவனான வாருசி சரிதமும், சத்தியத்தைப் பெரும்பேருகக் கொண்ட குணாட்டியன் சரிதமும், கற்பரசியாகிய உபகோசை சரிதமும், நீங்கள் கவனத்துடன் வாசித்து நன்மை பெறுதற்கியன்றன. இம்மூவரும் சிவலோக வாழ்வை ஊழ்வலியா லிழந்து, பின்னர் சாபம் விடுபட்டுத் திரும்பவும் அதனைக் கிட்டினர். இவ

ருள், குணாட்டியனே பெருங் கதையாகிய உதயணன் சரிதத்தை உ
கத்திற் பாவவிட்டவன். இவையேயன்றிக் குமாரனது* அருள் பெற்
சர்வவர்மன் சரிதமும் வீரரிற் றலைநின்ற சாதவாகனன் சரிதமும் ம
திற்குப் பேருறுதி பயப்பன.

குணாட்டியன் சுப்ரதிஷ்டா நகரப்பிரவேசஞ் செய்த வர்ண
மனப்பாடஞ் செய்தற் கமைந்தது.

இந்நூலில் ஆங்காங்கு வந்துள சில உறுதி வாக்கியங்களை யிவ
தொகுத்து மொழிவாம்:

எவனே தனத்தையும் இரகசியத்தையும் தனது மனைவிக்
மறைத்திருக்கவல்லன்!

பெண்பாலருள் எவளே இரகசியத்தை வெளி விடாதாள்!

முக்திக்கு வித்தாகிய பிரணவம்.

இவன் எதனையேனும் ஒரே தரங் கேட்க நேரினும் அதனை மு
மையும் மனக்கண் பதியவாங்கி வைத்துக்கொண்டு பின்னர் வேண்
யக்கால் அதனை யவ்வாறே வெளித்தரவல்லவன்.

க்ஷணநேரத்தில் ஒன்றுமற்றுப்போகும் பெற்றியதான சரீ
திடத்தும், சாரமற்ற சம்சார சாகரத்தும், அறிஞன் எவன்தான் கு
டுத்தனமாய் முழுகுவன்!

ஐவரால் ஆகாததொன்றுமில்லை.

ஐவர் எற்றிற்கு? இருவர் ஏகச்சித்தமாக வொன்றுகூடி நிற்
அசாத்தியமான தொன்றுமிலது.

பேதாய்! அழகெனவோர் பொருள் வேறுளதோ? எதனை ம
மிகக் காமிக்கின்றதோ, அதுவே அம்மனதிற்கு யாவற்றினுஞ் சிற
அழகிய பொருளாம்.

மறைவாயிருக்கும் இரகசியத்தை அறிஞர் முத்திறத்தா லு
வல்லர்; அவை குறி, ஊகம், அருள் ஆகியமூன்றும்.

---

*சிவகுமாரனாகிய சுப்ரமண்யக்கடவுளது.

## குழந்தைகட் கறிவிப்பு

ஈசனது மாயப்பிரபாவத்திற் சிக்குண்டு சத்தை * நோக்காது வீணே யேன் தவிக்கின்றீர்? ஞானக்கண் கொண்டு நோக்கின் துக்க மெங்கனுளது! எல்லா மாயமன்றோ? பிறர் மனந் தடுமாறின், அவர்க் குறுதிகாட்டி நல்வழிப்படுத்த வல்லபோறிஞராகிய நீர், அவ்வுறுதியை நோக்காது அலமருவது இறும்பூதே!

பணத்தைக்கொண்டு பணத்தை விருத்தியாக்குவதில் என்ன வியப்பு! நானோ மூலதனமின்றியே தனவந்தனானேன்.

கல்வியாகிய கண்ணில்லானை அலங்கரித்தல் கட்டையைப் புனை வது போலாம்.

அரசர்களோ சுகஜீவிகள்.

தேவர்கள் தமக்கு விநோதார்த்தமாக மனுஷரிடம் ஜாலஞ் செய்வ துண்டு.

பண்டைப் பிறவியில் ஒருவற்கோராற்றாற் கிட்டியும் எட்டாது தடைப்பட்டு நின்ற சித்திகள் இப்பிறவியில் எளிதே கைகூட யாது தடையுளது!

எவன்தான், தானறிஞனா யிருப்பவும் மற்றோர் அறிஞனேல் அவ மதிக்கப்படின் அதனை எளிதே சகித்திருக்க வல்லன்!

பெருங்கதையின் வரலாறாகிய இந்நூலைப் பயிலின் அநேக நன்மை கள் விளையும். அவற்றுட் சிலவற்றைக் கூறுதும்,—

மந்தபுத்தி காரணமாகக் கல்வியி லூக்கம் பிறவாதிருப்பின், அவ் விடையூறு சாதவாகனபூபதி சரிதத்தால் நிவர்த்தியாகிக் கல்வியேறும்; பாணினி முனிவர் சரிதமும் அத்தகைய வுண்மையை வலியுறுத்தும்.

தெய்வானுகூலத்தைப் பெறின் நினைத்த வெதனையும் உள்ளவா சாதிக்கலாம். முன்னவனே முன்னின்றால் முடியாத தொன்றுண்டோ! இவ்வுண்மையைக் குமாரக் கடவுளது அநுக்கிரகத்தைப் பெற்றுத் தனது பிரதிக்ஞையை முட்டின்றி முடித்த சர்வவர்மன் சரிதத்தால் விளங்கக் காணலாம்.

* அழிவிலா முதலை.

## குழந்தைகட் கறிவிப்பு

பேரறிஞரை யாராயாது குற்றங் கூறுவது பெருந் தவறென்பது வாருசியது சரிதத்தால் விளங்கும். பேரறிஞர் தமது நண்பர்கள் இடையூறு விளைக்கக் கருதினும், அதனைப் பேதமை யெனக் கண்டு தாம் அருளைவிட்டு நீங்காராய் அவர்கட்கு நன்மையையே நாடி நிற்ப ரென்பதுவும் வாருசி சரிதத்தால் விளங்கும்.

சத்தியத்தின் வாயிலாக வோர் உறுதியைக் கைக்கொள்ளின், அதனை யுயிர் நீங்கும்வரையும் காப்பாற்ற வேண்டியது அத்தியாவசிய மென்பதைக் குணாட்டியன் சரிதம் விளக்கும்.

சினேக வஞ்சகம் மிகக் கொடியதென்பது, காடியால் அரசிளங் குமரனுக்கு நேர்ந்த பைத்தியத்தால் நன்குணரப்படும்.

மற்றுமிந்நூல் விளைக்கவல்ல பெருநன்மை யாதெனின், சிரத்தை யோடிதனை வாசிப்பவர்கள், சிவபெருமானருளால், பூர்வஜன்ம வுணர்ச்சியையும் தமக்கு முதல்முதல் பிறவிநேர்ந்த விரகசியத்தை யும் உணர்ந்து, காலமாயையைத் தாண்டிச் சென்று, தமதழியா நிலையை யடைவரென்பதாம்.

மற்றொன்று கூறி முடிப்பல். நெருப்பைப் பெறக் கருதிக் கட்டை யைக் கடைவோன், அஃது வெளிப்படுங்காறும் கடைதலை விடாதது போல் அருளுள்ளவா வுதயமாகும்வரை யிந்நூலைக் கைவிடாது பயி லக்கடவீர்.

குழந்தைகாள்! உங்கட்குப் பெரிதும் க்ஷேமமுண்டாகுக. சுபம், சுபம், சுபம்.

ஓம் திருச்சிற்றம்பலம்

---

குறிப்பு—நூன்முகத்தை நூல்தொடங்கு முன்வாசிக்க வெண் ணங் கொள்வோர், தமது ஆசிரியரைத் துணைக்கொண்டு வாசித்துப் பொருள் காண்க. அல்லையேல் நூலை ஓர்தர முடித்தபின் அதனை வாசிக்கக்கடவர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நூன்முகம்

ஆதியிற் றமிழ்நூல் அகத்தியர்க் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞானம் நலம்பெறற் பொருட்டே

மாந்தர்க்குப் பேருறுதி பயப்பனவாகிய பாரத ராமாயணங்களும் புராணங்களுமோர் வழிநிற்ப, பெருங்கதை (பிரஹத்கதா) யெனும் ஓர் ஒப்பரிய நிதியையும் அறிஞர் தமது ஞாபக சக்தியி லமைத்தல் சாலவும் அழகாகும். பெருங்கதையின் பெருமையை இவண் விரித்துக் கூற வந்திலம்; ஓர் சிறிதே கூறி நூலைத் தொடங்குதும்.

சிவானுபூதிச்செல்வமும் மதிநுட்பமும் வாய்ந்த அப்பைய தீக்ஷிதரென்னும் மகான், தாமியற்றிய அலங்கார சாத்திரமாகிய குவலயானந்தத்தில், தமக்கெட்டியவோர் பழைய சுலோகத்தை ஓர் அலங்காரத்திற்குதாரணமாக வெடுத்துக் கூறியுள்ளார். அஃது வருமாறு,—

'தமியேன், ஒன்றாய்ப் பின்னிக்கிடந்த ஒலித்தொகுதியைச் சிக்கெடுத்து நான்கு கூறாகப் பிரித்தவனு மல்லேன்; புற்றிலிருந்து பிறவியுற்றவனு மல்லேன்; அச்சுதனது உந்தித்தாமரையினின்று வெளிப்போந்தவனு மல்லேன்; மிக்குயர்ந்த உறுதி பயப்பதாகிய மகா பாஷியத்தை மொழிந்தவனுமல்லேன்; விம்மிதப் பொருள்கள் நிரம்பிய பெருங் கதையைச் செய்தவனுமல்லேன்; இந்திரனுக்கு ஆசிரியனாக விருந்தவனுமல்லேன். (எனது சக்தி யிவ்வாறாக மிகச்சிறுமையுற்றிருப்ப) அரசே, நினது குணத்தை வாக்கால் விளக்கஞ்செய்தற் கென்னாலியலுமோ !!!'

இதனால், தெய்வீகமான வாக்கைக் கண்டு அதனையாண்ட பெரியோர் வியாசன், வான்மீகி, விரிஞ்சன், பதஞ்சலி, குணாட்டியன், வியாழப்புத்தேள் ¦என்பவரென்பது குறிப்பாலுணர்த்தப்பட்டது. பெருங்கதையை உலகத்திற்குக் காட்டவாயிலாயிருந்த குணாட்டியன் எவர்களோடொட்டி யெண்ணப்படுகின்றா னென்பதனை யுய்த்துணர்க.

பெருங்கதையது சிறப்பு காளிதாச மகா கவியால் மேகதூதனென்ற வோர் காவியத்திலும் குறிக்கப்பட்டுளது,—

'உதயணன் கதையில் வல்லவரான கிழவர்கள் வாசஞ்செய்யும் பல கிராமங்கள் நிறைந்த அவந்திதேசத்தை யடைந்து அப்பாற் செல்தி'

ஆகவே உதயணன் கதையாகிய பிரஹத்கதை மற்றைப் புராணவிதிகாசாதிகளைப்போல் எளிதே எவர்க்கும் கிட்டுவதன்றெனவும், இரகசியப் பொருட்கண் அவாவுற்றார் சிலராலேயே உணர்தாக் கிடந்ததெனவும் ஊகிக்கப்படுகின்றது

உலகத்திலாங்காங்குக் கூறப்படும் பற்பல கதைகளனைத்திற்கும் உற்பத்தி பீஜமாயிருப்பதூஉம் பெருங்கதையேயாம்.

பெருங்கதையைக் கூறப்புகுமுன் அஃது மண்ணுலகில் வெளிப்பட்ட வரலாற்றைக் கூறவேண்டிய தின்றியமையாததலின், சாதவாகனபூபதியா லியற்றப்பட்ட விக்கதாபீடத்தை யிவண் தமிழ்க்கண் மொழிகின்றாம்.

இக்கதை சிவபெருமானது மனத்துட் கிடந்து பின்னர் அம்பிகைக்கெட்டி முடிவில் மண்ணுலகில் குணாட்டியனால் வெளியாக்கப்பட்டது. குணாட்டியன் இக்கதையை பைசாச ப்ாஷையில் ஓர் லக்ஷம் செய்யுளாக விசைத்தான். அப்புலவர் பெருமான் இவ்வரும்¦ பெருங்கதையைத் தேவபாஷையாகிய சம்ஸ்கிருதத்திலேனும் அல்லது பிராகிரத்திலேனும் மொழியாது பைசாச பாஷைக்கண் மொழிந்த இரகசியத்தை விக்கதாபீடம் விளக்கும்.

பெருங்கதை தமிழ்க்கண்ணும் அற்புத வகவற்பா ரூபமாக இசை

நுணுக்கமறிந்த ஓர் பேரறிஞரால் யாக்கப்பட்டுள்ளது. தமிழ்க்கு ஆணிப்பொன்போன்ற ஐம்பெருங் காவியங்களிலொன்ருகிய சிலப்பதிகாரத்திற்கு உரைகண்ட அடியார்க்கு நல்லார், பெருங்கதைக்கண்ணிருந்து அநேக வுதாரணங்களைத் தமதுரைக்கண் பொழிந்துளார். பெருங்கதை சில ஏட்டுப்பிரதிகளில் சிலர்க்குக் கிட்டியிருக்கின்றது. ஆயினும் உதயணன் கதை முழுமையும் தமிழ்ப்பா வாக்கப்பட்டதோ வென்பது ஐயத்திற்கிடமாக நிற்கின்றது. இதுவன்றியும் உதயண குமார காவியமென மற்ெருரு செய்யுள் ரூபமானவோர் தமிழ் நூலும் உளதெனக் கூறுவர். நிற்க.

சோமதேவ பட்டரென்பவர் பெருங்கதையைப் பைசாச பாஷையினின்று சாரமும் உட்கதைகளும் விடாது வடமொழியில் முப்பத்தையாயிரங் கிரந்தமாக விசைத்தார். இத்தமிழ்நூல் அதனது சாரமாகும். அஃது (சோமதேவ பட்டரியற்றிய கதாசரித் சாகரம்*) பின்வரும் பதினெட்டு இலம்பகங்களை யுடைத்து :—

1-வது : கதாபீட விலம்பகம்
2-வது : கதாமுக விலம்பகம்
3-வது : இலாவாணக விலம்பகம்
4-வது : நரவாகன தத்தஜனன விலம்பகம்
5-வது : சதுர்த்தாரிகா விலம்பகம்
6-வது : மதனமஞ்சுகா விலம்பகம்
7-வது : இரத்தினப்பிரபா விலம்பகம்
8-வது : சூரியப்பிரபா விலம்பகம்
9-வது : அலங்காரவதியிலம்பகம்
10-வது : சத்தியபோ விலம்பகம்
11-வது : வேலாவிலம்பகம்
12-வது : சசாங்கவதி யிலம்பகம்

* கதைகளாகிய நதிகளெல்லாம் போய்விழும் சமுத்திரம்.

13-வது : மதிராவதி யிலம்பகம்
14-வது : பஞ்சவிலம்பகம்
15-வது : மகாபிஷேக விலம்பகம்
16-வது : சுரதமஞ்சரி யிலம்பகம்
17-வது : பத்மாவதி யிலம்பகம்
18-வது : விஷமசீல விலம்பகம்

இக்கதைகள் மிகத் தெய்வீகமுடையன வாதலின் சிரத்தையோடு பயில்வார்க்குத் தமது பூர்வ அழியாநிலையை விளக்கிப் பிறப்பறுத்து நற்கதி பயத்தற்குச் சாதனமாமென்பது திண்ணம், திண்ணம், திண்ணம். இக்கதாபீடத்தைத் தமிழுலகிற்குக் காட்டப் புகுந்ததற் கிஃதோர் காரணயாகும்.

ஓம் சாந்தி சாந்தி சாந்தி

திருச்சிற்றம்பலம்

---

இந்நூற் சிறப்பை மற்றுஞ் சிறிது சுட்டுதும்

பெருங்கதை வெளிப்போந்த வரலாறாகிய இக்கதாபீடத்தைச் சிரத்தையோடு வாசிப்பவருள் எவரே மண்ணுலக வாழ்க்கையைத் திரணமெனக் கருதி வாருசியையும் வியாடியையும் பின்பற்றி அருள் வழி நிற்கக் கூசுவர்?

எவரே சாதவாகன பூபதி யெய்திய பாண்டித்தியத்தைக் கண்டு வித்யா நிதியைத் தாமும் கைப்பற்ற ஊக்கங்கொள்ளமாட்டாதார்?

எவரே குணாட்டியன் சரிதத்தை யுணர்ந்தபின் சத்தியமெனும் பொருளைத் தம்முயிரினும் மேம்பாடுடையதென வதனை யோம்பா தொழுவர்?

சர்வவர்மனது சரிதத்தை யுணர்ந்தபின் எவரே நல்வழிப்பட்ட தமது பிரதிக்ஞையைக் கைசோரவிடுவர்?

எவரே சர்வவர்மனது திவ்விய சரிதத்தை யுணர்ந்தபின், சுந்தழி * யளிக்கும் கடவுளாகிய சிவகுமாரனிடம் மெய்ப்பக்தியைக் கொள்ளத் தவறுவர்!

இக்கதையைச் சிரத்தையோடு பயிலும் எம்மாதுதான் தெய்வீகமாகிய தனது கற்பை இடையூறுக்கஞ்சிப் போற்றுது பின்வாங்குவள்!

இக்கதையை விநயத்தோடு பயிலும் எம்மாதுதான் தனது கணவற்குத் தக்க சமயத்தில் ஊக்கத்தை யூட்டி சத்தியத்தைக் கைசோரவிடாது காக்கமாட்டாள்!

வருஷாது சரிதத்தை யுணர்ந்தபின் எம்மாதுதான் தனது கணவனை வித்யாநிதிக்கு அருகனுக்கத் தவறுவள்!

பாணினி சரிதத்தையும் வருஷாது சரிதத்தையு முணர்ந்தபின், எவன்தான் தனது மந்தபுத்தியைத் தொலைத்து எவர்க்கும் பெரும்பற்றுக் கோடான பேரறிவை நாடத் தாழ்ப்பன்!

அன்றியு மிந்நூலால், அறிஞர், பிறர் தீங்கு நினைப்பினும் அவர்பால் தாம் அருளையே வகிக்கவேண்டு மென்பதனையும், சுயநலங்கருதி சிநேக வஞ்சகத்தை யோர்போழ்தும் நாடக்கூடாதென்பதனையும், உள்ளவா மானம்பூண்டு தெய்வகடாக்ஷத்தை நாடுவோன் அதனைப் பெற்றுச் சகல சித்திகளையு மெளிதே யடையக்கூடுமென்பதனையுந் தெரிந்துகொள்வர்.

மற்றுமிந்நூலால் உணர்தரக்கிடந்த விஷயங்கள் யாவையெனின்,—

க. முக்திமுதலாகிய பரஞ்சுடர் மகாவிரதம் பூண்ட விரகசியமின்னதென்பதும்:

---

* ஒருதானுகி நிற்கும் மோக்ஷநிலை; காலங் கடந்து எவற்றையும் தாங்கி நிற்கும் பரமத்தானம்.

௨. அம்பிகையினருளை நாடுவோர் அதனை எளிதே பெறுதற் கியைந்த தலம் விந்தியவாஸினி யென்பதும் :

௩. பாடலிபுத்ர மெனும் நகரம் தெய்வீகசக்தியால் நிர்மாணஞ் செய்யப்பட்டதென்பதும் :

௪. உலகவாழ்க்கையைப் பெரிதாகக் கருதுவோன் அற்பரை யும் தன்பாற் பகைகொள்ள விடங்கொடாதிருக்க வேண்டுமென் பதும் :

௫. அருள்வழி நிற்போனை பகைவரும் பணிந்துபோற்றி யவ னது கிருபைக்குப் பாத்திரமாகக் கருதுவரென்பதும் :

௬. ஆழ்ந்தாராயாது அரசனொருவரையும் தண்டிக்கக்கூடா தென்பதும் :

௭. சிவபாஞ்சுடரது அருளைப்பெற்றவர் இம்மண்ணுலக வின் பங்களை முட்டின்றித் துய்த்துப் பின்னரழியா நிலையை வகிக்கக்கூடு மென்பதும் :

௮. அருளுடையாரது வாக்கைச் செவிக்கொள்ளின் மனிதரே யன்றிப் பூதபிசாசங்களும் மிருகங்களும் தெய்வகதியை யடையுமென் பதும் மற்றுஞ் சிலவுமாம் :

'ஆப்தமானார் * அயலவர் கூடி
நாத்திகம் † பேசி நாத்தழும் பேறினர்'

என வாதவூரடிகள் கூறியவண்ணம், மண்ணுலகிலுதித்த மாந்தர் பெரும்பாலார் தாமிப்புவியில் வெளிப்பட்டுதித்த வழியையும், இம் மண்ணுலக வாழ்வைவிட்டு நீங்கு மாற்றினையும், ஓர் சிறிதும் கருதா ராய், தெய்வீகம் மறைவிருந்து உலகத்தை நடத்தாநின்ற மெய்மையை

* சிநேகர்கள்.

† தெய்வமிலதெனக் கொள்ளும் மதம்.

மனக்கண் கொள்ளாராய், ஏதோ வீண் வாதங்களையும் போர்களையும் தொடுத்து காலஹரணஞ்செய்து பிறப்பதற்கே யாளாகி இறக்காநிற்பர். பெரும் பாப்பினதாய சமுத்திரத்தைத் தாண்டிக் கரையேறுதற்கியன்ற மரக்கலம்போல், பவசமுத்திரத்தை* த் தாண்டிப் பரமசாந்தித் தானத்தைக் கிட்டுதற்குகந்த இவ் அரிய மனிதவுடம்பைப் பேதமையால் நற்பயன் கோடாது அவலமாக்கும் மாந்தரது நாத்திகபுத்தியைக் களைந்து, ஆத்திக புத்தியை ‡ நாட்டுதற் கோரோவழி இந்நூல் கருவியாய் நிற்றலுங் கூடுமென வுன்னி யிதனைத் தமிழுலகத்திற்குக் காட்டலாயிற்று.

ஸ்ரீ. அ. திருமலைக்கொழுந்து,

21st February 1911. ஆசிரியர்.

ஓம் சுபம் சுபம்.

---

* பிறவிக்கடலை.

‡ பேரறிவு வாய்ந்த தெய்வம் உலகத்தை மறைவிருந்து ஆளாநின்றதெனும் துணிவை.

# இந்நூற்கண் போந்துள தலங்கள்

## நாடுகள்

பிரதிஷ்டானம் (Berar.)
பர்கச்சு (Baroda or Broach.)

## மலைகள்

கைலாயம் : *இஃது ஹிமாசலத்திற்கு வடபால் மானசவாவிக் கயலே யுளது. இதுவே உத்தரகைலாச மெனப்படுவது.*
ஹிமாசலம் (The Himalayas)

## நதிகள்

கங்கை.
நர்மதை.
கோதாவரி.

## நகர்கள்

கௌசாம்பிநகரம் : *இஃது யமுனைக் கரையில் பிரயாகைக்கு மேற்கே உத்தர மதுரைக்குக் கீழ்பாலமைந்து முற்காலத்தில் மிகப் பிரசித்தி பெற்றிருந்தது.*

சுப்ரதிஷ்டம் : *இஃது பிரதிஷ்டான தேயத்தின் தலைநகராய் சாதவாகன பூபதி காலத்திலும் அவனது முன்னோர் காலத்திலும் புகழ்பெற்று நின்றவிடம். இதுவே பித்தனை மகாமட் டோக்லாக் என்பவனாற் காமிக்கப்பட்டு அவனாற்றனக்குத் தலைநகரமாக வாக்க முயலப்பட்டது போலும்.*

விந்தியவாசினி : The modern Mirzapoor. *உரையிற் காண்க.*
பாடலிபுத்திரம் (Patna).
வேதசம் (Vedisa at a pretty long distance to the East of Ujjain.)
உஞ்சை : *உஜ்ஜினி,* Ujjain.
ராஜக்கிரகம் : *இதைப்பற்றியுரையிற் காண்க.*
ஆகர்ஷிகை : *கங்கைக்கரையில் பாடலிபுத்ரத்தின் பாங்கரமைந்திருந்த வோர் நகரமாகத் தோன்றுநின்றது.*
அயோத்தி.
பதுசுவர்னகம் (*ஓர் அக்கிராமம்*)
பதரி : *உரையிற் காண்க.*
கனகலம் : *உரையிற்காண்க.*
தேவகிருதி : *இஃதோர் நந்தவனம். சுப்ரதிஷ்டாநகரின் பாங்கரமைந்துளது. இதனைப்பற்றி யுரையிற் காண்க.*

# இந்நூலில் வந்துள

## பிரதானதேவர், மனிதர் முதலாயினோர்

**சிவபெருமான்:** *ஞானசொரூபியாகிய சிவபரஞ்சுடரது மனமெனும் சமுத்திரத்திலேயே இக்கதை மறைந்து கிடந்தது.*

**பார்வதி:** *சிவசக்தியாகிய பார்வதி இக்கதையைச் சிவபெருமானது மனத்தினின்று வெளிக்கிழுக்க வாயிலாயினள்.*

**புஷ்பதந்தன்:** *இவன் சிவகணங்களிலொருவன். இவன்தான் அம்பிகை யிரகசியமாகச் சிவபெருமானிடம் கதைகளைக் கிரஹிக்கும் போழ்து மறைவிருந்து அவற்றைத் தனது செவிவழி யிழுத்து மறைவைப் பயிரங்கப் படுத்துதற்கு ஆதிவாயிலாயிருந்தவன்.*

**ஜயை:** *புஷ்பந்தனது மனைவி; அம்பிகையின் சேடியரிலொருத்தி புஷ்பதந்தனிவளிடம்தான், தானறிந்த மறைப்பொருளை வெளியிட்டான்.*

**மாலியவான்:** *சிவகணங்களி லொருவனும் புஷ்பதந்தனது நண்பனுமாவன். புஷ்பதந்தன், மாலியவான், ஜயையெனும் மூவரும் அம்பிகையாற் சாபமுற்று மண்ணுலகில் முறையே வாருசி, குணாட்டியன், உபகோசையெனப் பிறவி யெய்தினர்.*

**காணபூதி:** *இஃதோர் பிசாசம். குபேரனது சாபத்தால் யக்ஷவாழ்வைத் துறந்து விந்தியாடவியில் பிசாசாக வுறைந்தது. வாருசியின்பால் மகாவித்தியாதர சரிதங்களைக் கேட்டுப் பின்னர் அவற்றைக் குணாட்டியனுக் கெடுத்துரைத்துப் பின்னர் நற்கதி பெற்றது.*

**வருஷர்:** *இவர் பாடலி புத்திரத்தில் வாருசி வியாடி பாணினி முதலியோர்க் காசிரியராக விருந்தவர்.*

**உபவருஷர்:** *இவர் வருஷரது சகோதரர். இவர் தமது புத்திரியாகிய உபகோசையை வாருசிக்கு வதுவை செய்வித்தவர்.*

**வியாடி—இந்திரதத்தன்,** *இவர்கள் சகோதரர். வியாகரணத்தில் மிகுந்த விற்பத்தி யுடையவர். வாருசியைச் சகபாடியாகக்கொண்டு*

வருஷரிடம் கலைகளைப் பெற்றவர்கள். இவருள் இந்திரதத்த தனது யோகவலியால் யோகநந்தனுயினன்.

**வாருசி:** புஷ்பதந்தனது மனுஷாவதாரம். இவர் யோகநந்தனிடம் ம திரியாக விருந்தவர்.

**குணாட்டியன்:** மாலியவானது மனுஷாவதாரம். இவரே பைசாசபாஷையில் மகாவித்தியாதர சரிதங்களைச் செய்தவர். இவர் சாதவாகன பூபதியின் அவைக்களத்திலோர் மந்திரியாக விருந்தார்.

**சர்வவர்மன்:** இவர் சாதவாகனபூபதியின் முதன் மந்திரி; குகப்பெரு மானது அருளைத் திடமான சங்கல்பத்தாற்பெற்றவர். இவரோ வாதாடியே குணாட்டியன் வெளியேறிப் பைசாச பாஷையில் பிரஹத்கதையை வெளியிட நேர்ந்தது.

**சாதவாகனன்:** பிரதிஷ்டான தேயத்தரசன். சிங்கத்தின்வயிற்றினின் றுதித்தவன். இவன் ஓர் பெரிய மானி. சர்வவர்மனிடமிருந்து சகலகலா வல்லனானன். சாலியவாகனனுமிவனே யென்ப.

**யோகநந்தன்:** இந்திரதத்தன் மகத தேசாதிபதியாயிருந்த நந்தனது பிரேதத்துட் புகுந்து அதனைத் தேகமாகக் கொண்டபோழ்து அவனுக் குற்ற பெயர்.

**நந்தன்:** மகதநாட்டரசன்.

**சகடாலன்:** நந்தனுக்கும் பின்னர் யோகநந்தனுக்கும் மந்திரியாக விருந் தவன்.

**சாணக்கியன்:** ஓர் கொடுங்கோபி. இவனே யோகநந்தனுக்கு அகால மரணத்தைக் கொடுத்தவன்.

**ராக்ஷதன்:** நந்தனது நகரமாகிய பாடலிபுத்திரத்தைக் காத்துவந்தவன்

**உபகோசை:** வாருசியது மனைவி; கற்பரசி.

# INTRODUCTORY NOTE

With a view to remedy the want of suitable prose in Tamil, this work has been undertaken. It is also a piece of information throwing light upon the mediæval times of India. If real earnestness is shown by the reading public it is proposed to bring out the whole remaining portion of the Great Story in a series.

I cannot forget to give my thanks to Mr. Viraswamy Aiyengar of the Ettayapuram Samasthanam, for it is he that turned my attention to the treasures of the Brihatkatha. My thanks are also due to Mr. Ambi, the Sanskrit medalist who helped me a great deal during the course of this translation.

18th *January*, 1913. S. A. T.

# ஓர் கடைப்பிடி

அருளே புகலிடமாய் அநவரதம் ஆட்படுமின்
இருள்சே ரிருவினையு தீண்டாவாம்—மருடீர்ந்த
அன்பர்கண் டின்புறூஉ மானந்த நெறியிதுவே
துன்பகமக்கேளே துணி.

உ

சிவமயம்

# அட்டவணை

அட்டவணை

பக்கம்

அட்டவணை

அட்டவணை

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## காப்பு

அம்பிகையது பிரார்த்தனையாகிய மந்திரகிரியால் உழக்கிய சிவபெருமானது முக சமுத்திரத்தினின்றும் திரண்டு வெளிப்போந்த பெருங்கதையாகிய இவ்வமுதத்தைச் (சாவாமருந்தை) சிரத்தையுடன் எவர்கள் பொருணலங்கண்டு சுகிப்பார்களோ, அவர்கள், ஓரிடையூறுமின்றிச் செல்வப்பேற்றை யடைந்து பரஞ்சுடாருளால் இம்மண்ணுலகிலேயே தேவர்களாகா நிற்பர்.

---

## விநாயக தோத்திரம்

தமது மகிமையால் இடையூறுகளைச் சுட்டெரிப்பவர் போல் தமது முகத்தினின்று பொழியும் மும்மதத்தால் பூமியிலுள்ள தூளைச் சிவக்கச்செய்யும் கணேசன்நம்மைக் காப்பதாக.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உதயணன் கதை

## புவியில் வெளிப்பட்ட வரலாறு

### (கதாபீட விலம்பகம்)

### முதற்றரங்கம்

ஓர்கால், கைலாச கிரியில், பார்வதிதேவி சிவபெருமானை நானுவிதத்தால் மிகவும் மகிழ்வித்தபோழ்து, அம்மையப்பர், மிகவும் மனமுவந்து, அம்பிகையைத் தனது மடியில் இருத்தி, மிகக் கருணைகூர்ந்து அவளை நோக்கி 'நீ யிப்போழ்து எதனை விரும்பிக் கேட்கினும் உடனே உனது எண்ணத்தை முடித்து வைக்கிறேன் ; நீ வேண்டியதைக் கேட்டுக்கொள்தி' யெனலும், ஜகமாதா அவரை நோக்கி 'எனக்கோர் புதுமையான கதையைச் சொல்லவேண்டு' மெனப் பிரார்த்தித்தனள். அவளிச்சையைப் பூரணஞ்செய்யத் திருவுளங்கொண்ட பரமன், அம்பிகையை நோக்கி 'உனக்கு இறந்த காலத்திய கதையைக் கூறவோ ; நிகழ்காலத்திய கதையைச் சொல்லவோ ; அல்லையேல் எதிர்காலத்திருக்குங் கதையை மொழியவோ ? ' வென விடையளித்தார். மலையரையன் புதல்வி அம்மாற்றத்தைக் கேட்டு, 'எனக்கிதுவரை தெரியாத கதையொன்றைக் கூறின் நான் மகிழ்வல்' என்றாள்.

## பரமன் பார்வதியின் வரலாற்றை யவட்குக் கூறுவது

அதற்குப் பரமன், 'பூர்வம் ஓர் சமயம் பிரமனும் விண்டுவும், என்னைத் தரிசிக்கக் கருதி, ஹிமாசலத்தை யடைந்த போழ்து, அவர் எதிரே சுத்த வெண்ஜோதி மயமான ஓர் இலிங்கம் தோன்றிற்று.[1] அவ்விருவரும் அதனது வியாபகத்தை அளவிட்டறிய எண்ணங்கொண்டு, பிரமன் அவ்விலிங்கத்தின் உச்சியை நாடி அன்னமாகப் பறந்தும், விண்டு அதனது அடியை நாடி கடுமுரணேன[2]மாகிப் பூதலத்தை அகழ்ந்து சென்றும், முடிவு காணமாட்டாது தவித்து என்னை 'ஊழி முதல்வஜயஜய' வென்று வழுத்தியகாலே, யான் அவர்க்குப் பிரசன்னமாகி 'நீங்களிருவரும் காமித்த வரங்களை என்னிட மிருந்து பெற்றுக்கொள்தி' ரென வாக்களித்தேன். அவருள், பிரமன், ஏதோ பிரமைகொண்டு என்னையே தனக்குப் புத்திரனுகப் பவிக்கும்படி[3] வேண்டினன். எனக்கவன்பாற் பிரியம் குன்றியது. விண்டுவோ என்னை நோக்கி, 'மகேசா, அடியேன் தங்கட்குஎக்காலத்தும் இடைவிடாத் தொண்டுபுரியும்வாழ்வை

---

[1] பிரம விட்டுணுக்களுக்குத் தோன்றியும் முடிவிடங்காண முடியாத ஜோதிலிங்கம் பரமநிலையை யுணர்த்தும்; இக்கருத்தை வாதவூரடிகள் வாக்கால் நன்குணர்க.—

பிரமன் அரியென் றிருவருந்தம் பேதமையால்
பரமம்யாம் பரமம்யா மென்றவர்கள் பதைப்பொடுங்க
அரனுர் அழலுரு வாயங்கே யளவிறந்து
பரமாகி நின்றவா தோணேக்க மாடாமோ.

[2] கடுமுரணேனம் = கடுமையான தேகவலி படைத்த பன்றி.

[3] பவிக்கும்படி = பிறக்கும்படி ; உற்பவிக்கும்படி.

எனக்கு அனுக்கிரகிக்கவேண்டு' மென்றான். அவ்வாறு என்பால் விடாது காதல்கொண்ட அந்நாராயணனே [4] நீ; நீ எனது சக்தி. முன்பும் நீ எனது மனைவியே' என்றனர்.

இம்மொழிகளால், அம்பிகை சிறிது பிணங்கி, 'யான் இதற்கு முன்னர், வேறோர்விதமாக மனைவியா யிருந்ததாகச் சொல்வதைத் தெளிகின்றிலேன். அவ்விரகசியத்தை விளங்கக் கூறவேண்டு' மென பிரார்த்திப்ப, பரமன்,

'நீ, முன்னம் தக்ஷனுக்கோர் பெண்; சதி [5] யென்னும் நாமங்கொண்டிருந்தாய்; உன்னோடுகூட உற்பவித்த சகோதரிகளான மற்றைப் பெண்டிரை, தக்ஷன் ஏனையோர்கட்கு வதுவை செய்வித்தான். உன்னை யான் மணந்தேன். அந்த தக்ஷன்

[4] நாராயணன் என்னும் பதம் நீரை யுறைவிடமாகக் கொண்டவன் என்னும் பொருட்டு. சக்தி நீராகவும் அதனை யாளும் அறிவாகிய சிவம் தீயாகியும் எப்பொருட்கண்ணும் இரட்டையாய் உறைந்து அவற்றைப் பணிகொள்ளும். இதுபற்றியே சிவபெருமான் அர்த்தநாரீசுர னெனவும் கூறப்படுகின்றார். அடிகள் சிவனை நீருறுதீயே யெனக் கூறியதையுங் காண்க.

[5] சதி : இஃது அம்பிகையின் பெயர். சத்தாகிய சிவனைவிட்டு நீங்காதுறையும் சக்தி யாதலின் சதியெனப் பெயர் பெற்றாள். தாக்ஷாயணியது நாமம் சதி. மிக்குயர்ந்த பதிவிரதை யெனும் பொருட்டு. கணவனை யிழந்தபின் அக்கினிப்பிரவேசஞ் செய்து தமதுகணவரை விடாது தொடரும் பத்தினிப்பெண்டிர் சதிகளெனப் படுவர். உடன் கட்டை ஏறுதலும் சதியெனப்படும் (Sati). இவ் வழக்கம் கங்காப்பிரதேசத்தும் தமிழ் நாட்டின் கண்ணும் பரவி யிருந்தது. கலி மிகுந்து பொய்யுங்களவும் பெருகிய பின்னர் இத்தெய்வீகம் குன்றி மறைவா யுறைகின்றது.

ஓர் பெரும் வேள்வி செய்யக்கருதி சகல தேவர்களையும் தனது யாகத்துக்கு வரும்படி வரித்தவன், என்னைமட்டும் வேண்டிக் கொள்ளவில்லை. நீயோ, உனது பிதாவின்மாட்டிருந்த அன்பால், அவனது யாகத்துக்கு போகத் தலைப்பட்டாய். உன்னையோ அவன் பொருட்படுத்திலன். நீ யவனை நோக்கி 'நீர், என் தேவதேவனாய் எவர்க்கும் மேலாந் தானத்திருக்கும் பரமேஸ்வரனை, வரிக்கவில்லை? யென வுசாவவும், அவன் உன்னை நோக்கி 'உனது கணவன் எவர்கட்கும் வெறுப்பாக, கபால மாலைகளை அணிந்துகொண்டு, சுடுகாட்டையே தனக்குகந்த வாழ்விடமாகக்கொண்டு திரிகின்றானாதலின், அவனை யான் பொருட்படுத்திலேன்' என வெறுத்து விடைகூறினான். அவனது வசனங்கள் உனக்கு அடங்கா வெகுளித்தீயை யுண்டாக்கின. அவன் வழியாகத்தோன்றிய நினதுடலை நீ விட்டு நீங்கினாய். உனக்கு நேர்ந்த கதியை நோக்கி, யான் சீற்றங் கொண்டு, அவனது யாகத்தை முற்றும் பங்கஞ் செய்து, தேவர்களெல்லாம் நிலைகுலைந்தோட, அத்தக்கனைத் தலையறுப்பித்துப், பின்னர் சிறிதருள் கூர்ந்து அந்தச் சிறுவிதிக்கு[6] ஆட்டுத்தலையைப் பூட்டுவித்தேன். பின்னர்,

[6] சிறுவிதி = தக்ஷன். பிரமதேவன் அவரவர் தலைவிதியாயிருந்து அவரவரை யவரது வினைவழியாக வாட்டுவிப்பானாதலின் அவன் விதியெனப்படுவன். பிரமனது எழுத்தைக் கடக்கமுடியாதென்பது ஓர் பெருவழக்கு. 'அன்றெழுதினவன் அழித்தெழுதப் போகிறானோ' வெனும் பழமொழி யுளதன்றே. சிவபெருமானதருளைப் பெறில் தலைவிதியையும் மாற்றலாம். வேதஹிருதயமாகிய சதருத்திரத்தைப் பயில்வோர் பிரமனெழுத்தையும் கடக்கவல்லவர். இவ்வுண்மையைப் பிரமோத்திர காண்டத்திற் காண்க.

நீ பர்வதராஜனுக்குப் புத்திரியாகத் தோன்றினை. அக்காலம் யான் ஹிமாசலத்திற் றவம் புரிய நேரிட்டபோழ்து, நீ எனக்குத் தொண்டுசெய்து என்னை மிகவும் மகிழ்வியா நின்றாய். அச்சமயம் தேவர்கள் தாருகாசுரனது கொடுங் கோலிற்காற்றாது, அவனை அழித்தற்காக, என்னிடமோர் புத்திரனைக் கருதி, என்பால் மன்மதனை யனுப்பினர். நான் அவனை எனது நெற்றிக்கட்டீயாற் சாம்பராக்கினேன். பின்னர் நீ மிக வுக்ரமான தவஞ்செய்து என்னை வசீகரப்படுத்தினை. உடனே தேவர்கள் யாவரும் கொண்டாட பார்வதியாகிய வுன்னைத் தீவேட்டேன்.[7] பின்னர் நமக்கு ஓரிளங்குமரன் சம்பவமானான்.'

என வம்பிகைக்கு அவளது பூர்வ நிலையை விளக்கினர் இக்கதையினால், லோகநாயகி திருப்தியுறாது, சிறிது சிவபெருமானோடூடல் கொண்டு, பின்னர் சிலவுல்லாச வசனங்கள் கூறி மற்றும் பெருமானை மிகப் பிரார்த்தித்துத், தனக்கு மிக்க நல்லவோர் இரகசியமான கதையைக் கூறும்படி, கேட்டுக்கொண்டாள்.

## புஷ்பதந்தனும் மால்யவானும் சாபம் பெறுகை

பரமன் அம்பிகையினது எண்ணத்தை யுள்ளபடி மகிழ்விக்கத் திருவுளங்கொண்டு, நந்திதேவரை விளித்து, 'யாம்

---

7 தீவேட்டல்=கனல் சான்றாக வதுவை செய்தல். இதனை,—
மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்டிருவை
உலகறியத்தீவேட்டான் என்னுமது வென்னேடி
உலகறியத் தீவேளா தொழிந்தனனே லுலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெலாங் கலங்கிடுங்காண் சாழேலோ
என்பதனாலுணர்க.

அம்பிகையோடு ஏகாந்தமாகச் சில இரகசியங்களைக் கூறப்போகின்றோம்; ஆதலின், நீ யொருவரையும் நமது சந்நிதானத்திற்கு வர விடங்கொடாதிருக்கக் கடவாய்' என ஆக்ஞை செய்து, நித்திய சுகிகளாகிய தேவர்களது சரிதங்களையும், நித்திய துக்கிகளாகிய மனுஷிய சரிதங்களையும், கூறுவதை விட்டு, மிக வற்புதமான மகா வித்யாதரர்களது [8] சரிதங்களை, அம்பிகை களிக்கக் கூறிவாராநின்றார். அச்சமயம், பிரமத கணத்தி லொருவனான புஷ்பதந்தன், சிவசன்னிதானத்தை அடைதற்காக, நந்தியெம்பெருமானை வழிவிடும்படி கேட்ப, அவர் 'இச்சமயம் நீ உள்ளே புகத் தகா' தென மறுப்ப, புஷ்பதந்தன் 'ஏதோ ஓர் அரிய இரகசியம் சிவசந்நிதானத்தில் நேர்கின்றதுபோலும்; அதனை எவ்வாற்றானேனும் அறிதல் வேண்டு' மெனக் கருதித் தனது யோகவலியால், நந்தியம்

---

[8] வித்தியாதரன் = கலைகளைத் தன்பாற்கொண்டு அவற்றைப் பணிகொள்ள வல்லவன்; விச்சாதரன்.

வித்தியாதரத்துவ மென்பது வித்தையையேனும், சுத்தியையேனும், மாலையையேனும், மற்றெவற்றையேனும் கருவியாகக்கொண்டு ஒருவன் தனது மகிமையை வெளிப்படுத்தற்குரியது.

பரமனை வழிபட்டு அவனது அருளைப் பெற்றவரே வித்தியாதரத்துவத்திற் குரியர்: பரமசிவனே வித்தியாதரர்கட்கெல்லாம் பெரும் பற்றுக்கோடாக விருக்கும் இரகசியத்தை,

விண்ணுலக காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்
புண்ணிய ரென்றிரு போதும் தொழப்படும் புண்ணியரே
கண்ணிமை யாதன மூன்றுடை யீருங் கழல்பணிந்தோம்
திண்ணிய தீவினை தீண்டப் பெறாதிரு நீலகண்டம்.

எனும் வாக்காற் றெளிக.

பெருமானும் அறியாவண்ணம், அவர் கட்டைத் தாண்டி, சிவ சந்நிதானத்துட் சென்று, மறைவிருந்து, ஏழு மகா வித்தியா தரர்களது சரிதங்களை யம்பிகைக்குச் சிவபெருமான் கூறும் வரை கேட்டிருந்து, பின்னர், தான் உட்புகுந்தவண்ணமே, ஒருவரும் அறியாமல் வெளியேறித், தான் விம்மிதத்தோடு செவிவழியுள்வாங்கி, மனத்துட்கொண்ட, அவ்வேழு அரிய அற்புத சரிதங்களையும், தனது பார்யை ஐயை என்பவளுக்கு விளங்கக்கூறித் தனது காதலியை மகிழ்வித்திருந்தான். எவன் தான் தனத்தையும் இரகசியத்தையும் தனது மனைவிக்கு மறைத்திருக்க வல்லவன்!

மறுநாள், ஐயை பார்வதிதேவியாரைத் தரிசித்தபோழ்து, தான் தனது காதலனிடமிருந்து கேட்ட ஏழு சரிதங்களையும், விம்மிதத்தோடு அம்பிகைக்கு வெளியிட்டாள். பெண்பாலாருள், எவளே, இரகசியத்தை வெளியிடாதாள்! உடனே அம்பிகை சிவபெருமானைக் கிட்டி 'எனக்கு மிக இரகசியமென, வற்புறுத்திக் கூறிய சரிதங்கள், உலகப் பிரசித்தமான கதைகளாகத் தோன்றுகின்றனவே' யெனப் பகர்ந்து, ஐயைக்கு அக்கதைகள் தெரிந்திருப்பதனைப் பரமனுக்குக் கூறினள். சிவ பெருமான் சிறிது ஞானதிருஷ்டிகொண்டு நோக்கிப், புஷ்ப தந்தன், தனது யோக மாயையால் நந்திகாவலையுங் கடந்து வந்து, கபடமாக அச்சரிதங்களைக் கேட்டுக்கொண்டதாக, மொழிந்தார். உடனே அம்பிகைக்குக் கோபம் பிறந்து புஷ்பதந்தனை வரவழைத்தபோழ்து, அவன் தனது பாரியையோடும் தம்பி மாலியவானோடும் அம்பிகை சந்நிதானத்தைக் கிட்டினன். அம்பிகை புஷ்பதந்தனை நோக்கி 'நீ, கபட மார்க்

கத்தால், இரகசியத்தைத் தெரிந்துகொண்டமையின், நீ மண்ணுலகில் உற்பவிக்கக்கடவாய்' எனச் சபித்தனள். அப்போழ்து மால்யவானும் ஐயையும் தேவியிடம் புஷ்பதந்தனுக்காகப் பரிந்து பேசவே, அவர்களையும் புவியிற் பிறக்கும்படி பார்வதி சபித்தனள். பின்னர் அவர்கள் மிகப் பணிவுடன் தங்கட்குச் சாபவிமோசனமெவ்வாறு கைகூடு' மென வேண்டியிரப்ப, ஜகன்மாதா புஷ்பதந்தனை நோக்கி 'விந்தியாடவியில் குபேரனது சாபத்தால், சுப்ரதீகன் எனப் பெயரிய ஓர் யக்ஷன் காணபூதியாய் ஓர் பிசாசாக வலைகிறான். நீ புவியிற் பிறந்து, அவனைக் காண நேருங்கால், உனக்குனது பூர்வ நிலை மனத்திலுதிக்கும்; நீயுனது விருத்தாந்தத்தைக் காணபூதிக் குரைப்பாய்; அப்போழ்துன்சாபமுன்னை விட்டுவிலகும். பின்னர் மால்யவானும் காண பூதியைப்பார்க்க நேரும்; காணபூதி, உன்னிடங்கேட்ட வித்தியாதர சரிதங்களை மால்யவானுக் குரைத்தலும், காணபூதியும் மால்யவானும் சாபநீங்கப் பெறுவர்' என வவர்களது சாபம் நீங்கும் மார்க்கத்தை யுணர்த்தினள். உடனே அவர்கள் மின்னல் மேகத்துள் மறையுமாபோல் தமது தேஜஸை யிழந்து மண்ணுலகில் உற்பவமாகா நின்றனர்.

கைலையிற் சிறிதுகாலஞ் சென்றபின், தேவியோர் சமயம் சிவபெருமானை நோக்கிப் 'புஷ்பதந்தனும் மால்யவானும் புவியிலுற்பவமாதற்குச் சென்றனரே, யவர்கள் கதி, யிப்போழ்து யாதாயிற்' றெனக் கேட்டலும், பரமன், 'புஷ்பதந்தன் கௌசாம்பி நகர்க்கண் வரருசியாகப் பிறந்தான்; மால்யவான் சுப்ரதிஷ்டத்தில் குணாட்டியனாக வவதரித்தான்' எனச் செப்பினர். நிற்க,

## இரண்டாந்தரங்கம்

### வரருசி விந்தியவாசினியின் கிருபையால் காணபூதியைக் காண்கை

புஷ்பதந்தன், வரருசி யெனவும் காத்யாயன னெனவும் பெயர் வகித்து, பாடலிபுத்திரத்தில், யோகநந்தனது அவைக்களத்தில் மந்திரியாகவும், வித்வானாகவும், உறையுங்கால், விதிவயத்தால் மிகவும் மனமுடைந்து அந்நகரத்தைவிட்டு நீங்கி வெளியேறி விந்தியவாசினி [9] யின் சந்நிதானத்தை யடைந்து துர்க்கையைப் பூசித்து வருங்கால், தேவி யவனது கனவிற்

[9] விந்தியாவாசினி என்பது தேவிக்குகந்த க்ஷேத்திரம். தேவி கடாக்ஷத்தை எளிதிற்பெற விரும்புவோர் இத்தலத்தைத் தரிசிக்க வேண்டும். விந்தியவாசினி யென்பது அத்தலத்துறையும் அம்பிகையையும் குறிக்கும்.

இஃது கங்கையின் தென்கரையில் ஓர் சிறு குன்றத்தில் காசிக்கும் பிரயாகைக்கும் மத்தியிலுள்ளது. காசியிலிருந்து 45 மைல் தூரம். மார்க்கண்டேய புராணத்திற் கூறப்படும் சண்டியின் தானமு மிஃதே. சிலர் ஸ்ரீகிருஷ்ணனது தங்கையாகிய நந்தகுமாரி கம்சனுக்குத் தப்பி வந்தெழுந்தருளி யிருப்பதாகக் கொள்வர்.

விந்தியகிரி கங்கைக் கரையிலிருக்கும் இத்தலம்வரை சென்றிருக்கின்றது போலும். இத்தலத்தை யடுத்து பல விநோதங்களுள. அவற்றுள் ராமவிருக்ஷ மென்பதொன்று அஃதப்பெயர் என் கொண்டதெனின் அவ்விருக்ஷத்தின் பட்டையை யுரித்தால் ராமராம எனும் அக்ஷரங்கள் உள்ளே தென்படுகின்றனவாம். ஓர் அரண்ணியமும் சமீபத்தேயுளது ; அது விந்தியாடவி யெனக் கூறப்படுகின்றது. முற்காலத்திலோர் பெரும் நகரம் இத்தலத்தருகிலிருந்ததாகத் தோன்றுகின்றது. தற்காலம் மிர்சப்பூரெனப்படுமிட மிஃதே.

இத்தலம் பூர்வஜன்ம உணர்ச்சியை விளைவித்து பிறப்பறுத்து சித்திக்கும் முக்திக்கும் வழிகாட்ட வல்ல வற்புத ஸ்தலமாகப் பெருங்கதையாற் றோன்றுகின்றது.

பிரசன்னமாகி 'நீ காணபூதியைக் காண்' என ஆக்ஞை செய்து அந்தர்த்தான மாயினன்.

மறுநாளுதயமாதலும், வாருசி, தேவிசந்நிதானத்தை விட்டு நீங்கி, விந்தியாடவியை நோக்கிச் செல்லுங்கால், புலி முதலிய துஷ்ட மிருகங்கள் நிறைந்த வோர் வனத்தில், ஓர் ஆலமரந் தோன்ற, வதனை யவனணுகலும், அவண், பல பிசாசங்கள் சூழ அவற்றின் நடுவண், மரம்போன்ற பரிய உருவந் தாங்கி, காணபூதி பிசாசாக வுறைவதைக் கண்ணுற்றான். காணபூதி வாருசியைக் காணுதலும், மிகக் களிப்பெய்தி விநய மாக அதிதியுபசாரஞ் செய்து வரவேற்று உபசரிக்கவே, வாருசி யவனைநோக்கி 'அந்தோ! மகானாகிய வுமக்கு இந்தப் பைசாச கதி எவ்வாறு நேர்ந்த' தென வுசாவ, உடனே காணபூதிக்கு ஓர் ஞாபகம் தோன்றவே தனது பூர்வ நிலைமைப் பின்வருமாறு கூறத்தொடங்கினன்,—

## காணபூதி வரருசிக்குத்தான் கேட்டவோர் இரகசியத்தை வெளியிடல்

ஓ பெரியாய், எனக்குச் சொந்த ஞானம் கிடையாது. நான் ஓர் சமயம், உஞ்சைநகரின் மயானத்தில் திரிந்துகொண்டிருந்த போழ்து, அவண், சாம்பமூர்த்தியுடன் விளையாடிக் கொண்டி ருந்த அம்பிகை, அவரை நோக்கி, 'நீரேன் கபாலத்திடத்தும் சுடலையின் மாட்டும் ஓயாவேட்கையைக் கொண்டிருக்கின்றீ' ரெனவுசாவலும் பரமன் அவளை நோக்கி,

## சிவபெருமான் மகாவிரதம் பூண்ட இரகசியம்

'ஜகம் ஊழியின் முடிவில் பிரளயமுற்று, ஜீவராசிகள் அனைத்தும் ஒடுங்கி, ஜலமயமாயிருந்த போழ்து, யான் ஜகத்

தைத் திரும்பவும் வெளிப்படுத்தக் கருதி, எனது தொடையி னின்று ஓர் சொட்டு இரத்தத்தை (ஓர் ரத்தபிந்துவை) தண்ணீ ரில்விட்டேன். அத்துளி ஓர் முட்டையாகிப், பின்னர் இருகூறு கப் பிளந்தது. அதனுள் ஓர் புமானிருந்தான். யான் பிரபஞ்ச விருத்தியைக் கருதி, அப்புருஷனிடமிருந்து, பெண்டன்மை யான பிரகிருதியை வெளிப்படுத்தினேன். அவன் அவ்வாறு வெளிப்பட்ட பிரகிருதியைக் கலந்து பிரஜாபதியைப் பயந் தான். இப்பிரஜாபதி தன்னிட மிருந்து ஜீவராசிகளாகிய சகல பிரஜைகளையும் வெளிக் கொண்டுவந்தான். ஆதலின் உலகத்தில் வாழும் சகல ஜீவகோடிகட்கும் ஆதி புருஷனை பிரமனே பிதாமகன் (பாட்டன்) [10]

இவ்வாறு, அனைத்துயிர்க்கும் தானே பாட்டனாக விருப் பதை யுன்னிப், பிரமன் மிகச் செருக்குற்றான். அவனது அகந்தையை யொழித்தற்காக, அவனது ஐந்து சிரங்களி லொன்றை யான் கொய்தேன். இவ்வாறு விரிஞ்சனைப் பங்கஞ் செய்து செருக்கறுத்த பின்னர், யானே எனக்குட் பரிவெய்தி அவனது தலையோட்டைக் கைக்கொண்டு (கபாலபாணியாகி) சுடுகாட்டை வாழ்விடமாகக்கொண்டு ஓர் மகாவிரதத்தைப் பூண்டுகொண்டேன். அம்முட்டையின் இரு தோடுகளே விண்

10



ணும் மண்ணுமாவன. மற்றொன்றுமறிதி; உலகடங்கலும் எனதங்கையில் கபாலமாக வடங்கி நிற்கின்றதைப் பாராய்'

எனப் பரமன் கௌரிக்குக் கூறிவருங்கால், அவள் மனத்தில் ஓர் நினைவு தோன்ற, அவள் பரமனை நோக்கிப் 'புஷ்பதந்தன் எப்போழ்து சாபம் நீங்கி நமதுலகத்தை யடைவான்' என வினவினள். அப்போழ்து கறைமிடற்றண்ணல்.[11] அம்பிகைக்கென்னைச் சுட்டிக்காட்டிக் 'காணபூதியாகிய இப்பிசாசத்தைப் புஷ்பதந்தன் எப்போழ்து பார்க்க நேருமோ, அப்போழ்து அவனது சாபம் நீங்கும். இவன் ஓர் யக்ஷன், குபேரனது [12] கிங்கரன். இவன் ஸ்தூல சிரசெனும் இராக்ஷதனோடு நட்புக்கொண்டிருப்பதைக் கண்ட நிதிக்கிழவன், வெகுண்டு, இவனை விந்தியாடவியில் பிசாசாகத் திரியும்படி சபித்தான். அப்போழ்திவன் தமையனாகிய தீர்க்கஜங்கன், குபேரனது பாதங்களில் வீழ்ந்து, தம்பியைப்பற்றிப் பரிவுறவே தனபதி யவனை நோக்கி, 'சாபவசத்தால் புஷ்பதந்தன் புவியில் மனிதனா யவதரிக்கப்போகின்றான். உனது தம்பி யவனிடம் மகா கதைகளைக் கேட்டுக்கொண்டு, பின்னர் அவற்றை மால்யவானது அவதாரமாகிய ஓர் சிவகணத்தலைவற்குச் செப்பநேரும். அப்போழ்து மால்யவானும் உனது பின்றோன்றலும் சாபவிமோசனம் பெறுவர்' என்றான். 'நீயுமவ்வாறே

[11] கறைமிடற்றண்ணல் = ஸ்ரீநீலகண்டன். கறையாகிய நீல விஷத்தை மிடறாகிய கண்டத்தில் வைத்த பெரியோன்.

[12] குபேரன்: சிவபெருமானது பொக்கிஷதாரனாய் சகல தனத்திற்கு மதிபதியாய் யக்ஷர்கட்குத் தலைவனாய் கைலாசத்திற்குச் சமீபத்தில் உறைதராநின்றான்.

புஷ்பதந்தனுக்குச் சாபவிமோசனத்தை யருளியிருக்கின்றாய், நன்றாய் நினைத்துப்பார்' எனக் கூறலும், 'நான் கழிபேருவகை யெய்தி யிவண்வந்து, எப்போழ்து புஷ்பதந்தனது தரிசனங் கிட்டுமோவென, ஆசையோடு காத்துக்கொண்டிராநின்றேன். அதிர்ஷ்டவசத்தால் மகானாகிய வும்மை யின்று தெரிசிக்கப் பெற்றேன். இதுவே எனது வரலா' றென விசைத்தான்.

இவ்வரிய மாற்றம் வாருசியது செவிக்கண் வீழ்தலும், அவனுக்குத் தனது பூர்வநிலை மனக்கண் உதயமாயிற்று. உடனே யவன் காணபூதியை நோக்கி 'நான்தான் அந்தப் புஷ்ப தந்தன்' எனச் செப்பி மிக்க வுவகையோடு ஏழுலக்ஷங் கதை களை எடுத்துரைத்தான். மகா வற்புதமான ஏழு மகாவித்யா தரர்களது சரிதங்களை, செவியமுதமாகக் காணபூதி பருகிய பின், அப்பிசாசம் ஆர்வமேலீட்டால் வாருசியை நோக்கி 'நீர் உள்ளவா ருத்திராவதாரமே, அல்லையேல் அளவிடற்கரிய இவ் வரிய கதைகளைச் சாங்கோபாங்கமாக எவ்வாறெடுத்துரைக்கக் கூடும்? நீர் உமது தத்கால மனுஷாவதாரத்தின் விர்த்தாந்தத் தையும் அடியேற்கு விரிவாயெடுத்துரைத்து என்னை மகிழ் விக்க வேண்டு' மெனக் குறையிரந்தான். அதற்கிணங்கி வாருசி தனது சரிதத்தைக் கூறுவானாயினன்.—

## வரருசி சரிதம்

கௌசாம்பி நகர்க்கண், சோமதத்தன் அக்னிசிகன் என விருநாமம் பெற்றவோரந்தணன், முனிகன்னிகையாகிய வசு தத்தா வென்பவளைப் பாணிக்கிரகணஞ் செய்து வாழுங்கால், அவர்களது அருந்தவத்தால் நான் அவர்கட்குப் புத்திரனாக

வவதரிக்க நேர்ந்தது. எனது அதிபால்யத்திலேயே எனது தந்தை காலஞ் சென்றார். எனதன்னை என்னை மிகவும் அருமை பாராட்டி வளர்த்து வந்தாள். ஓர்நாள் இரண்டு அதிதிகள் எங்கள் கிருகத்திற்கு வந்தார்கள். அவர்களை மிக வுபசாரத்தோடு விருந்தேற்று மகிழ்வித்தோம். அன்றிரவு, நாங்கள் நால்வரும் சம்பாஷித்துக் கொண்டிருக்குங்கால், ஓர் அற்புதமான மிருதங்கத்தொனி எங்கள் செவிக்கெட்டிற்று. அப்போழ்து, எனதன்னைக்கு எனது தகப்பனார் நினைவு தோன்றவும், அவள் என்னை நோக்கி 'இஃது உனது பிதாவின் நண்பனாகிய நந்தன் செய்விக்கும் நாட்டியம்; மிக வற்புதமாக விருக்கும்' என்றாள். உடனே நான் 'அம்ம, நான் போய் அந்நாட்டியத்தைப் பார்த்து வந்து பின்னர் அதனை அவ்வண்ணமே உனக்குக் காட்டா நிற்பேன்' என்று கூறவே, அவ்வதிதிகளிருவரும் மிக விறும்பூது[13] எய்தி, என்னை நோக்கி 'நீ சொல்வது மிகவும் துர்லபமான காரியம்; ஏன் வீண்முயற்சி' யென்றனர். அதனைக் கேட்ட எனது தாய், அவர்களை நோக்கி 'நீங்கள் ஐயுற வேண்டாம்; நீங்கள் இவனை அறியீர்; இவன் எதையேனும் ஓர்தரம் கேட்க நேரினும், அதனை முழுமையும் மனக்கண் பதிய வாங்கி வைத்துக்கொண்டு, பின்னர் வேண்டியக்கால், அதனை அவ்வாறே வெளித்தர வல்லவன்' என்றாள். அவர்கள் எனது ஞாபகசக்தியை நேரே பரீக்ஷிக்கக்கருதி, பிராதிசாக்கியத்தை[14]

---

13. இறும்பூது = அதிசயம்.

14. பிராதிசாக்கியம் என்பது வேதாந்தங்களி லொன்றாகிய மூல வியாகரணமாகும். பாணினீயம் முதலிய இலக்கணங்கட்கு ஆதிவித்தாகும். வேதம் என்னும் விருக்ஷத்தினது சாகைகளைப் பற்றிக் கூறுவது.

ஸ்வரத்தோ டென்முன் கானஞ் செய்தனர். நான், அதனைப் பின்னர் அக்ஷரலோபமும் சுவர பேதமுமின்றி, யவ்வாறே திரும்பப் பாடிக் காட்டினேன். அவர்கள் என்னை மிகவும் கொண்டாடினர்கள். பின்னர், நானும் அவ்விருவரும் நாட்டியம் நிகழுமிடத்திற் போய்க் கூத்தையும் அபினயத்தையும் கண்டுவிட்டு வீட்டுக்குத் திரும்பிவந்தகாலை, நான் எனதன்னைக்கும் அவ்விருவர்க்கும் நாட்டியத்தை அவ்வாறே தரிசிப்பித்தேன். அதிதிகளிருவரும் மிகக் களிப்பெய்தினர். அப்பொழுது, இவ்விருவருள் ஒருவராகிய வியாடி எங்களிருவரையும் நோக்கி, தாம் வந்த உத்தேசத்தை எங்கட்குத் தெரிவிக்க வெண்ணங்கொண்டு தமது வரலாற்றினைக் கூறத் தொடங்கினர்,—

## வியாடியின் சரிதம்

வேதசம் எனும் நகரில் தேவசாமி, கரம்பகர் என்றவிரண்டு அந்தணர்கள் சகோதரர்கள். அவர்கட்கு இவ்வதிதியாகிய இந்திரதத்தரும், யானும் முறையே புத்திரர்கள். எனது பிதா காலஞ் செல்தலும் எனதன்னை சககமனஞ் செய்துவிட்டாள். தனது சகோதரரது பிரிவை யாற்ருது, தேவசாமி என்பவரும் மரணமுற்ருர். அவர் மனைவியும் அவரோடு சககமனஞ் செய்துவிட்டாள். நாங்கள் திக்கற்றவர்களாகி, எங்கட்கிருந்த செல்வத்தைக் கைப்பற்றிக்கொண்டு, எழுமைக்கும் உறுதி பயக்க வல்ல கல்விச்செல்வத்தைப்[15] பெறக் கருதி குமாரக் கட

---

15. கல்விச் செல்வம் எழுமைக்கும் உறுதிபயக்க வல்லதென்பதைப் பின்வருங் குறளாற் றெளிக.

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்கு
எழுமைக்கு மேமாப் புடைத்து.

ஞானமயமாகிய கல்வியே யொருவனை பிறவிகடோறும் தொடர்ந்து உடன் சென்று வினையொழித்து முத்திக்கரை சேர்த்தற்கு வாயிலாகும்.

வனை நோக்கித் தவம் புரிந்தோம். சிவகுமாரன், எங்கட்குச் சொற்பனத்திற் பிரத்தியக்ஷமாகி, எங்களை நோக்கி பாடலிபுரத்தில் வருஷனெனப் பெயரிய அந்தணனொருவனுளன். அவன்மாட்டு சர்வ வித்யாதனமுளது. அவனையடைந்து நீங்கள் கலைஞானத்தைப் பெறக்கடவீர்' எனவருள்செய்து மறைந்தனர்.

தெய்வம் அனுக்கிரகித்தவண்ணமே யாங்களிருவரும் பாடலிபுத்திர நகரைக் கிட்டி, வருஷரைப்பற்றி ஊராரை விசாரித்தபோழ்து, அவர்கள் 'அவன் ஒன்றுமே தெரியாத பேதையன்; அவனை நோக்கியோ, வித்யையைப் பெற வந்தீர்கள்' எனவெங்களை ஏளனஞ் செய்தனர். யாங்கள் தெய்வ வாக்கை உல்லங்கனஞ் செய்தற்கஞ்சி, அவரது கிரகத்தைக் கேட்டறிந்து கிட்டியகாலை, அவ்வீடு நாலுபக்கங்களினும் பெருச்சாளி பறித்துக், கண்டவிடமெல்லாம் புத்துவைத்துப், பார்ப்பதற்கு மிகவும் ஹீனமாயிருப்பதைக் கண்டோம். நாங்கள் கிரகத்தினுட் புகுந்தபோழ்து, வருஷர் ஓர் பக்கம் தியானத்திலமர்ந்திருந்தனர். உத்தமியான வவர் பத்தினியோ, எங்களை மிக வுபசாரத்தோடு அதிதிபூஜை செய்தேற்றுக் கொண்டு, நாங்கள் எங்களது எண்ணத்தை வெளியிட்டபோது, அவள் எங்களை நோக்கி 'நீங்களோ எனது புத்திரர்கட்குச் சமானம், எனக்கென்ன கூச்சமுளது. நேர்ந்த விஷயங்களை யுங்கட்கு விளங்கக் கூறுவல், செவிகொடுத்துக் கேண்மின்' எனப் பகர்ந்து தனது கணவனது சரித்திரத்தைக் கூறுவாளாயினள்,—

## வருஷரது சரிதம்

இந்நகரில் சங்கரசுவாமிகளென்பவ ரொருவரிருந்தார். அவ்வந்தணற்கு இருவர் புத்திரர். அவர்கள் வருஷர் உபவருஷரெனும் பெயரினர். இவர்களுள், வருஷர் பேதமையையும் நல்குரவையும் ஊழாற் பெற்றவர்; உபவர்ஷரோ நிரம்பக் கல்வியையும் செல்வத்தையும் படைத்தவர். மிக்க அறியாமையைத் தாங்கி என்னோடு தனது வாழ்நாளைக் கழித்து வந்த வருஷர், ஒருநாள் அறிவுடைய பார்ப்பானெவனும் ஏற்றுக் கொள்ள மாட்டாதவோர் ஹீனமான தானத்தை உபவர்ஷரது மனைவியிடம் ஏற்றுக்கொண்டு வீட்டுக்கு வந்தபோழ்து, யான் அவர் செயலைச் சகிக்கலாற்றாது, அவரை நோக்கி 'நீர் குமாரக் கடவுளை நோக்கித், திடமான தவம்புரிந்து, மெய்ப்பொருளாகிய வித்யையைக் கட்டாயம் பெற்று வரவேண்டு,மெனக்கடிந்து கூறினேன். அருள்துணை நின்றதால், எனது வாக்கியத்தையவர் சிக்கெனப் பிடித்து வீட்டைவிட்டு வெளியேறிச் சென்று ஏகாக்ர சித்தத்தோடு [16] சுப்ரமண்யக்கடவுளை நோக்கிப் பசி தாகங்களைத் துறந்து தவம்புரியவே, குமாரக்கடவுள் பிரத்தியக்ஷமாகி வித்யாதனத்தை அவர்க்கீந்து அவரைநோக்கி 'உன்

[16] ஏகாக்ரசித்தமென்பது ஓர் முனைப்பட்ட மனம். கவடுபடாத இத்தகைய மனமே யோகத்திற்குச் சிறந்த சாதனம். இதுவே நாடிய பொருளிற் பதிந்து அதனது இரகசியத்தைக் காணவல்லது.

கல்வியை யுள்ளவாறு விரும்புவோர் குமாரக்கடவுளை நோக்கித் தவஞ் செய்தலே நல்வழி. அவன் கடவுளுக்கும் பிரணவத்தை யுரைத்த ஞானபண்டிதனன்றோ! பிரமனைக் குட்டிச் சிறையிட்டவனும் கந்தனன்றே!

பாற் கிட்டிய இவ்வரிய வித்யை (கல்விச்செல்வம் = கலைஞ்ஞானம்) ஒரே தடவையிற் கேட்டு மறவாது மனத்துட் டரிக்க வல்ல சதுர்த்தன்[17] உன்னைக் கிட்டியவழி, பிரகாசிக்கும். அத்தகைய தக்க மாணவகனைத் தெரிந்து, உனது கல்வியைக் கொடு' வென ஆக்ஞை செய்து அந்தர்த்தானமாயினர். அரிய வித்யாகலையை, இவ்வாறு சிவகுமாரனிடம் பெற்றுக்கொண்டு, இவன் வந்து நடந்த வரலாற்றினை எனக்குக் கூறித், தக்க மாணவகனை நாடினவராய்க் காலத்தை வீண்போக்காது சதா நிஷ்டாபரரா யிருக்கிறார். ஆதலின், நீங்கள் ஒரே தடவையில் கலையைக் கேட்டுள்ளத்தில் மறவாது பிணிக்கவல்ல சமர்த்தனை நாடிக் கடிதிற் கொண்டுவரக் கடவீர்' என செப்பினள்.

உடனே, நாங்கள் நூறு பொன்னை யவட்குக் காணிக்கையாகக் கொடுத்துவிட்டு, அவளது கோரிக்கையின்படி, தக்க மாணவகனைத் தேடிக்கொண்டு வருவதாக வாக்களித்து, பாடலிபுரத்தைவிட்டு நீங்கி, ஏகச்சந்தக்கிராகி[18] யைக் காண நாடெல்லாம் தேடித் திரியாநின்றேம். புண்ணிய வசத்தால் உங்கள் கிரகத்தைக் கிட்டினேம். அம்மா, உனது குமாரன் ஏகச்சந்தக்கிராகி யென்பதற்கையமில்லை. ஆதலின், தயைசெய்து

---

17. சதுர்த்தன் = சதுரன், சாதுரியன், சாமர்த்தியன். பதப்பொருள் நான்காமவன். ஜாக்கிர சொற்பன சுழுத்திகளைக் கடந்து நான்காந்தானமாகிய துரிய பூமியைக் கண்டவன் என்பது விசேடப் பொருள்.

18 ஏகச்சந்தக்கிராகி = ஓர்தரம் கேட்டமாத்திரையானே மறவாதுள்ளிழுத்து வைக்கவல்லவன். ஏகம் = ஒன்று, சந்தம் = வண்ணம்; கிராகி = கிரகிப்பவன்.

இக்குழந்தையை, எங்களோடுகூட கலைஞானம் பயிலுதற்காக, அனுப்புவிக்கவேண்டுமென எனதன்னையை வியாடி வேண்டிக்கொண்டனர்.

## வரருசியென்ற பெயர் வந்த காரணம்

அப்போழ்தெனது தாயார் அவர்களை நோக்கி இப்புத்திரன் எனக்குப் பிறந்தபோழ்து ஆகாயவாணி 'இவன் ஓர்தரம் கேட்பினும் எதனையும் கிரகித்து மறவாமல் மனத்துட்டரிக்க வல்ல தீரனவன். இவன் வரமானதை (நல்லபொருளை) விருப்பத்தோடும் ருசிக்க வல்லவனாதலின் இவனது நாமம் வாருசியென வெங்கணும் பிரசித்திப் பெறும். இவன் வருஷரிடம் பிரம்மவித்யையை முழுமையும் கிரகிப்பன் எனச் செப்பியதுண்டு.

நான் இதுவரை யொன்றுமே தோன்றவில்லையே யெனக் கவலைகொண்டிருந்தேன். உங்கள் வரவால், எனக்கிருந்த கவலை நீங்கிற்று. இவன் எனக்கேக புத்திரன். நீங்கள் இவனை சிரத்தையோடு ஆதரித்து, மூவரும் வருஷரிடம் கல்வி பயிலுங்கள். இவனைப் பாதுகாப்பது உங்கள் பொறுப்பு" எனக் கூறினன். உடனே வியாடி என்னை வேதபாடத்திற் கருகனாகும்படி, எனக்கு வேதோக்தமாக [19] உபநயனம் [20] செய்

[19] வேதோக்தம் என்பது வேதத்தின்படி பொருத்தமானது. வேதம் + யுக்தம்.

[20] உபநயனம் = சகாயமான கண் = ஞானக்கண் ; அந்தணர்களது எக்ஞோபவீதமாகிய பூணூல் கல்யாணம். வேதவிதிப்படி நடக்கும் இச்சடங்கால் ஞானக்கண் திறக்கப்படும். இஃது மறைவிருக்கும் ஞானத்தைப் பிறப்பித்தலில் அந்தணர் இருபிறப்பாளர் எனப்படுகின்றனர்.

வித்தார். பின்னர் நாங்கள் மூவரும் எனதன்னையிடம் செலவு பெற்றுக்கொண்டு, கௌசாம்பி நகரத்தைவிட்டு நீங்கிக் கூடிய சீக்கிரத்தில் பாடலிபுத்திர நகரை யடைந்தோம்.

வருஷாது கிரஹத்தில் நாங்கள் பிரவேசித்த காலையில் அவர் என்னை, ஸ்கந்தப்பிரஸாதமே [21] மூர்த்திகரித்து வந்ததாக வெண்ணி, மிகவும் மகிழ்ச்சியோடு வரவேற்றார்.

## வரருசிவருஷரிடம் கல்வி பயிலல்

பின்னர், அவ்வாசிரியர், எங்கட்கு முத்திக்கு வித்தாகிய பிரணவத்தை [22] யுபதேசித்து, வேதாதி கலைகளை யெல்லாம், ஒழுங்காகப் பயிற்றுவித்தனர். வரருசியாகிய யான் எக்கலையையும் எனதாசிரியர் வாய்திறந் தோர்தரம் சொன்னவளவில், சிக்கென மறவாமற் கிரகிக்கும் ஆற்றலுடையவனானேன். வியாடியோ, ஆசிரியரிடம் கேட்டபின் என்னிடமும் கேட்டு இருதரத்தில் எதனையும் கேட்டுத் தரிக்க வல்லவராயிருந்தார். இந்திரதத்தர் எம்மூவரிடத்திலும் வரிசையாய் கேட்டு மூன்றுதரத்தில் கிரகிக்கலானார். இவ்வாறு, வருஷர் வேதாதி கலைகளை யெல்லாம் ஓதுவித்து வரும்போழ்து, அவரது புகழ் எங்கணும் ஓங்கி பரவ வாரம்பித்தது. அந்நகர்க்கதிபனான நந்தன், வருஷ

[21] ஸ்கந்தப்பிரசாதம் = ஸ்கந்தனது அருள்.

[22] பிரணவம்: ஒலிமயமாய் சகல மந்திரங்கட்கு மூலமந்திரமாகிய ஓங்காரம். ஓங்காரம் பிரணவமெனப் பெயர்கொண்ட காரணத்தைக் கேட்டறிந்துகொள்க.

"உய்யவென்னுள்ளத்து ளோங்காரமாய் நின்ற மெய்யா" என்றன ரடிகளும்.

ரது கிரகத்தைச் சொர்ன மயமாக்கி மற்றும் வேண்டிய தனத்தை யவர்க்குதவினான். இவ்வாறு, நாங்கள் பிரம்ம வித்தையை வருஷரிடம் பயின்று வருநாளில், ஓர் தினம் நாங்கள் எங்கள் ஆசிரியரோடு கங்கையாடப் போயிருந்த போழ்து, நான் அவரை நோக்கி 'பகவ, இப்பாடலிபுத்திரம், எக்காரணத்தால் பூமகளும் நாமகளும் ஒன்றுகூடி ஐக்கியமாயுறைந்தாங்கு, கல்விச்செல்வத்தாலும் பொருட்செல்வத்தாலும் மேம்பட்டு விளங்காநின்ற' தெனக் கேட்டேன்.

உடனே வருஷர் பாடலிபுத்திர நகரத்தின் வரலாற்றை எங்கட்கு விளங்கக் கூறத்தொடங்கினார்,—

## மூன்றுந்தரங்கம்

### பாடலிபுத்திரத்தின் வரலாறு

கங்காநதி, மலையைவிட்டிறங்குமிடமாகிய கனகலம்[23] என்ற க்ஷேத்திரத்தில், தக்ஷணத்திருந்து ஓர் அந்தணன் வந்து

---

[23] கனகலம்: இஃது அற்புதமான வோர் க்ஷேத்திரம். சப்த மோக்ஷதானங்களிலொன்றாய் கருதப்படும் மாயாபுரியாகிய ஹிரித்துவாரத்திற் கருகேயுள்ளது. கங்கை மலையைக் கிழித்துக்கொண்டு பூமியிலிறங்கும் தானம் ஹிரித்துவாரம். ஹரித்துவார ஸ்நானத்தை விரும்புவோர், அதன் சமீபத்திலுள்ள கனகலத்தில் வசிப்பது வழக்கம்.

கனகலத்திற்றான், சிறுவிதியாகிய தக்ஷன் தனது யாகத்தை நடத்தியது. இவ்விடத்திலேயே சதி யுடலத்தை விட்டதூஉம். வீரபத்திரக்கடவுள் தக்ஷயாகத்தை யழித்துத் தேவர்களைத் தண்டித்த விடமு மிஃதேயாம்.

இத்தலம் மகா கவியாகிய காளிதாசனால் மேகதூதத்திற் கூறப்படுகின்றது.

தவம் செய்துகொண்டிருந்தான். அவனுக்குப் புத்திரர் மூவர். தாய்தந்தையர் காலஞ் சென்றபின் அம்மூவரும் கல்வியை நாடி ராஜக்கிரகத்தை [24] யடைந்தனர். அவண் வித்தைகளைப் பயின்றபின் சிவகுமாரனது கிருபையை நாடி தெற்கு நோக்கிச் சென்று கடற்கரையை யடுத்த சிஞ்சினியெனப் பெயரிய வோர் நகரத்தை யடைந்தனர். இவர்கள் போஜிகன் எனும் அந்தணனால் மிகவும் உபசரிக்கப்பெற்றுப் பின்னர் அவனது புதல்வியர் மூவரையும் முறையே வதுவை செய்துகொண்டனர். போஜிகனுக்கு ஆண் சந்ததி கிடையாமையால், அவன் தனது தனத்தை யவர்கட்குக் கொடுத்துவிட்டுத் தவஞ்செய்யக் கானகஞ் சென்றான். பின்னர் ஓர் பெரும் பஞ்சமுண்டான காலை, அம்மூவரும் தமது மனைவியரைப் போஷித்துக் காப்பாற்ற முடியாமையால் தமது தேவியரைத் துறந்து தேசாந்தரஞ் சென்றனர்.

இவர்கள் தம் மனைவியரை விட்டுப் பிரியும்போழ்து, அப்பெண்டிருள் நடுவுள்ளவள் கர்ப்பவதியாயிருந்தாள். தங்காதலர்கள் பிரிந்தபின் அம்மூன்று ஸ்திரீகளும் தம் பிதாவின் சிநேகனாகிய எக்ஞதத்தனை யடுத்து, அவனாற் போஷிக்கப்பட்டு தமது கணவர்களது வரவை ஏக்கமாக எதிர்நோக்கி யிருந்தனர்.

---

[24] இராஜக்கிரகம் : இந்நது பாடலிபுத்ர நகரமுண்டாகுமுன் மகதநாட்டின் தலைநகராய் நாமகள் விளையாடிக்கொண்டிருந்தவிடம் இவண் ஓர் குகையுள்ளதுபோலும். பலதடவைகளில் புத்தசங்கமிவண் கூடியது. இந்நது பாடலிபுத்திரத்திற்குத் தெற்கண் சிறிது தூரத்திலிருப்பது. சீனயாத்திரவாசியாகிய பாஹியான் (Fahian) என்பவரால் நேரே தரிசிக்கப்பட்ட தலங்களிலொன்று.

காலக்கிரமத்தில் நடுவுள்ளவள் ஓர் ஆண் மகவை யீன்ருள். அக்குழந்தையை யவர்கள் செப்புதற்கரிய ஆதாவோடு சீராட்டி வளர்த்து வராநின்றனர். ஓர் நாள் ஆகாய வீதியில் சம்புவின் மடியிலிருந்து காலத்தை உல்லாசமாகக் கழித்த பார்வதிதேவி, அக்குழந்தையை அன்னையர் மூவரும் ஒப்பரிய பரிவுடன் சீராட்டி வளர்'ப்பதைக் கண்ணுற்றனள். உடனே அம்பிகைக்குக் அக்குழந்தையின் மாட்டு அருள் சுரத்தலும், அவள் பாமனை நோக்கி 'இம்மாதர் மூவரும் எவ்வளவன்போடும் தம் புதல்வனைப் போற்ருநின்றனர். இவனுல் மிகவும் க்ஷேமத்தைப் பெறலாமென்றல்லவோ அவர்கள் கருதாநின்றனர். சிறிது இவர்கள்மேல் கடாக்ஷத்தைக் காட்டியருள்க' வெனப் பிரார்த்தித்தனள். அதற்குப் பாமன் 'இக்குழந்தை, முற்பிறவியில் என்னை மிகவும் பூஜித்து வழிப்பட்டவன். ஆதலின் இப்பிறவியில் ஏற்கனவே இக்குழந்தைக்கு நல்ல போகம் ஏற்பட்டுளது. முற்பிறவியில் இக்குழந்தைக்கு மனைவியாயிருந்தவள் இப்போது மகேந்தாவர்மனது புத்திரியாய்ப் பாடலி எனும் நாமத்தோடு வளராநின்றனள்' என்றம்பிகைக்குரைத்துப் பின்னர் அம்மாதரார் கனவிற்ருேன்றி 'இக்குழந்தை நீங்கள் செய்த பூஜாபலத்தால் உங்கட்கு மகவாய் உதித்தான். இவனுக்குப் புத்திரகன் எனும் நாமஞ் சூட்டுக; இவன் தூங்கி விழித்தெழும்போதெல்லாம், இவன் சிரசிலிருந்து லக்ஷம்பொன் விழும்; இவனாசனுவான்' என அனுக்கிரகஞ் செய்தார். அன்னையர் கழிபேருவகையெய்தினர்.

ஈசனருளியவாறே பிரதி தினமும் பொன்விளையா நின்

றது. அவர்களைப் பிடித்திருந்த தரித்திரம் ஓட்டெடுத்தது. சிவாக்ஞையை சிரமேற்கொண்டு அவர்கள் தம் புதல்வனுக்குப், புத்திரகன் எனும் நாமஞ் சூட்டினர். பின்னர் அச்சிஞ்சினி நகர்க்குப் புத்திரகன் அரசனானன். ஓர்நாள் எக்ஞதத்தன் புத்திரகனை நோக்கி 'நீ யுனது பிதாக்களைக் காணும்படி விரும்புகின்றாயாதலின், பிரதி தினமும் பிராமணர்கட்கு சுவர்ணதானஞ் செய்துவா. உனது கொடை எங்கணும் புகழ்பரவி உனது பிதாக்களும் செல்வங்கருதி யிந்நகர்க்கு வரக்கூடும். முயற்சியாற் கைகூடாத காரியம் கிடையாது. ஓர் சரிதமுமுளது அதனைக் கேளெனக் கூறுவனாயினன்,—

## பொன்னிற அன்னங்களின் சரிதம்

பிரமதத்தனென்றவோர் அரசனிருந்தான்-ஓர் நாள், அவனெதிரில் அநேக அன்னப்பக்ஷிகள் பறந்து செல்லுகையில், அவற்றின் மத்தியில் இரண்டு சுவர்ணமயமான அன்னங்கள் காணப்பட்டன. அரசனுக் கவ்விரண்டு அன்னங்களையும் பிடித்தற்கு மிக விருப்பமுண்டாயிற்று. இவ்வாசை யவனது மனக்கண்மீதூர்ந்தெழுந்ததால், அவன் தனது அரசாட்சியைப் பேணாது அவற்றைத் திரும்பக் காண்பதுவே கருத்தாய், ஓர் அற்புதமான தடாகத்தை யுண்டுபண்ணினான். அவன் புரிந்த சூழ்ச்சியால், அவனெண்ணிய வண்ணம் அவ்வன்னங்கள் அத்தடாகத்தை நோக்கித் திரும்பவும் வந்தன. தங்கமயமான அவ்வன்னங்களை யவன் விளித்து 'உங்கட்குச் சிறகுகள் எவ்வண்ணம் சொர்ணமயமாயின?' வெனக் கேட்டான். அவையவனைப் பார்த்து, 'பூர்வம் நாங்கள் காகங்கள். ஓர் நாள் பாழடைந்தவோர் சிவாலயத்தில் சிலர் காகங்கட்குப் பலிபோட்டார்கள்.

அப்பலியைப் புசித்தற்காக, நாங்களிருவரும் மிகப் போராடி விதிவசத்தால் ஓர் நீர் நிரம்பிய பாத்திரத்தில் வீழ்ந்து உயிர் துறந்தோம். சிவசந்நிதானத்தில் எங்கட்குற்ற மரணத்தால், இப்பிறவியில் சொர்ணமயமான ஹம்சங்களாக அவதரித்தோம்' என்றன. அரசன் தனது விடாமுயற்சியைப் பற்றுக் கோடாய்க் கொண்டுகிடைத்தற்கரிய தெய்வீக அன்னங்களைத் தன்பால் வரவழைக்கும் சாமர்த்தியத்தைப் பெற்றானன்றே! ஆதலின் திடமான சங்கல்ப்பம் எதனையுங் கைகூட்டுவிக்கு'மென எக்ஞதத்தன் புத்திரகனுக்கு உறுதி கூறினன்.

எக்ஞதத்தன் செப்பியாங்கு, புத்திரகன் அநுதினமும் அந்தணர்கட்கு சொர்னதானஞ் செய்து வருங்கால், அவனது புகழ் எங்கணும் பரவ அவனது பிதாக்கள் தமது மிடிதீர வோர் நற்சமயம் வாய்த்ததெனவெண்ணி, சொர்னதானத்தைக் கருதி யந்நகரத்தை யடைந்தனர். புத்திரகன் தனது பிதாக்களை மிக மகிழ்ச்சியோடு வரவேற்றான். ஆயினும், அவனது தந்தையர், தீவினையின் வலியால், தமது புத்திரனிடம் அன்பை வகிக்காது, அவனது சம்பத்தை நோக்கிப் பொச்சாப்புற்றனர். அவனது செல்வத்தையும் அரசையும் தாம் கைப்பற்றிக்கொள்ளலாமென்ற விபரீத வெண்ணத்தை அவர்கள் தமது மனத்துட்கொண்டு, ஓர் தந்திரத்தால் அவனைக் கொல்லக்கருதி யவனை நோக்கி 'நாம் தேவியைத் தரிசிக்க விந்தியவாசினிக்குச் செல்வா'மெனச் சாக்குக்காட்டித் தமது புத்திரனை அவ் ஆலயத்திற் கழைத்துக்கொண்டு சென்றார்கள். ஆலயத்தை யணுகலும் அவர்கள் அவனை நோக்கி 'நீ முதற்கண் ஆலயத்துட்செல் ; நாங்கள் பின்னால் வருகிறோம்' எனச் செப்பலும்,

புத்திரகன் அவர்களது வஞ்சனையையறியாது கோயிலுட் புகுந்தான். இவனைக் கொலைபுரிதற்காக முன்னரே ஆயத்தஞ் செய்யப்பட்டிருந்த கொலைஞர், இவனைப் பிடித்துக் கொல்ல வந்தார்கள். இவன் அவர்களை மிகவும் இரந்து கேட்டுக்கொண்டு, தனது இரத்தின மாலையை யவர்கட்குக் கழற்றிக் கொடுத்துவிட்டு, உயிர்தப்பி, அவ் ஆலயத்தைவிட்டு நீங்கிக், காட்டுவழி, துரிதமாய்ச் சென்றான். கொலையாளிகளோ, அவனது பிதாக்களினிடம் தாம் அவனை வினைமுடித்து விட்டதாக, ஏற்கும் வண்ணம் பொய்கூறி மகிழ்வித்தலும், அவர்கள் தமது நகரத்தை நோக்கித் திரும்பிச்சென்றனர். புத்திரகனது மந்திரிகள் புத்திரத் துரோகிகளாகிய இக்கொடியவரைச் சந்தேகத்தாற் சிறைப்படுத்திப் புத்திரகன் திரும்பாமை பற்றி யவர்கட்கு மரணதண்டனை கொடுத்தார்கள். கெடுவான் கேடு நினைப்பானென்றபடியாயிற்றன்றே !

## புத்திரகன் சித்திபெறல்

புத்திரகன் தெய்வாதீனமாகத் தப்பிப்பிழைத்து விந்தியாடவியிற் பிரவேசித்துச் செல்லுங்கால், அசுரதச்சனை மயனது புதல்வரிருவர் ஒருவரோடொருவர் ஓயாது மற்போர் புரிவதைக் கண்ணுற்றான். ‘இவ்வாறு நீங்கள் ஒருவருமறியா வண்ணம் ஏன் ஏகாந்தமான விடத்தில் ஒருவரோடொருவர் இடையறாது போர் புரியாநின்றீர்’ எனப் புத்திரகன் அவர்களை வினவியபோழ்து அவர்கள் ‘நாங்கள் மயனது புத்திரர்; இதோவிருக்கும் மூன்று பொருள்களையும் பற்றி மல்லாடாநின்றோம்’ என்றனர். புத்திரகன் அவண் ஓர் பாத்திரம், மாத்திரைக்கோல், பாதுகையாகிய மூன்று பொருள்களிருப்பதை

நோக்கி 'நீங்கள் இவ்வற்பமான பொருள்களின் பொருட்டோ உயிரை வெறுத்துப் போராடா நின்றீர்கள்' எனச் செப்பலும், அவர்கள், புத்திரகனை நோக்கி 'நீர் இப்பொருள்களது அருமையை யறியீர், ஆதலின் இவ்வாறுரையாநின்றீர். இப்பாத்திரத்தை யொருவன் கைக்கொண்டு எவ்வித ஆகாரத்தை யிச்சிக்கின்றானோ அவ்வித ஆகாரம் உடனே இதனுள்விளைந்து நிற்கும்; இப்பாதுகையை ஒருவன் காலிலணிந்துகொண்டு ஏதேனுமோரிடத்திற்குப்போக உத்தேசிப்பானாயின் உடனே ஆகாசகமனமாய் அவ்விடத்தைக் கடிதிற் கிட்டுவன்; இக்கோலைக்கொண்டு நிலத்திலெதனையெழுதினும் அஃது உடனே கண்கூடாகச் சித்திக்கும்' என்றனர். அப்பொருள்களது இரகசியமான மகத்துவத்தை யுணர்ந்துகொண்ட புத்திரகன் அவர்களை நோக்கி 'ஆயின் ஒன்று செய்மின். அதோ தோன்றும் அக்குறியை உங்களுள் எவன் முதற்கண் ஓடித் தொட வல்லனோ அவனே இம்மூன்று பொருட்கும் பாத்திரமாவான்' என்று ஓர் தந்திர வசனங் கூறினன். இவர்கள் இவனது கபடச் சிந்தையை யோராது அவன் சுட்டிக்காட்டிய குறியை நாடி மிக வேகமாக வோட வாரம்பித்தனர். அவர் தூரத்தே யோடுவதைக் கண்ட புத்திரகன் அவணிருந்த பாதுகையைக் காலிற் பூட்டிக்கொண்டு மற்றிரு பொருள்களையும் கையிலிடுக்கிக்கொண்டு ஆகாயவீதி வழி நெடுந்தூரஞ் சென்று ஆகர்ஷிகை யென்ற வோர் நகர் தென்படலும் அதன் கண்ணிறங்கினான். அந்நகருள் தாசிகள் வீட்டிலேனும் வணிகர் வீட்டிலேனும் பிரவேசிக்கின் கைப்பொருள் பறிமுதலாய் விடுமெனக்கருதி, ஓர் பாழ்மனை தோன்ற, புத்திரகன் அவ்வீட்டினுட் புகுந்தான். அவண் ஓர் கிழவி யிருந்தாள்.

அவளவனை மிகவுமுபசாரத்தோடு வரவேற்றாள். புத்திரகன் அவள் மனம் மிகமகிழ, வேண்டிய நிதியை யவட்குதவினான். பாட்டியார் புத்திரகனை மிக வாதரவோடு தக்கபோஜனாதிகளை யுதவி பரிபாலனஞ் செய்துவந்தாள். இவ்வாறாகச் சில தினங்கள் புத்திரகன் அந்நகரில் மறைவாய் வசித்து வந்தான்.

## புத்திரகனும் பாடலியும்

இவ்வாறு காலஞ்செல்லாநிற்புழி யோர் நாள் பாட்டியார் புத்திரகனை நோக்கி 'என் கண்மணியே, நீ தக்க யௌவனமும் ஓவியத்தெழுதவொண்ணா வனப்பும் [26] வாய்ந்திருக்கின்றாய். உன் அழகுக்கும் குணத்திற்குமிசைந்த வடிவழகியைப்பற்றி யுன்னிடம் பேசவேண்டும். இவ்வூரரசனுக்கு ஊர்வசியினும் [27] மிக்க தேசுலாவண்ணியமுடைய குமாரத்தி அவனதரிய தவத்தாலுதித்தனள். அரசன் அவளை மிக விनயத்துடன் வளர்த்துவாராநின்றான். கன்னிகாமாடத்தில் மிகக்காவலோடு வளரா

---

[26] ஓவியத்தெழுத வொண்ணா வனப்பு = சித்திரத்தாற் சித்திரிக்க முடியாத பேரழகு.

கம்பர் ஸ்ரீராமபிரானை,

'ஓவியத்தெழுதவொண்ணாவுருவத்தாய்'

எனக் கூறியுளார்.

[27] ஊர்வசி = இவள் மிக வனப்பினள், தேவகணிகையருள் ஒருத்தி. இவளது பெயர்ப்பொருள் தொடையழகி.

இவள் புரூருவச் சக்கரவர்த்திக்குக் காதலியாக வமைந்தமையும், பின்னர் தனது காதலுக்குக் காண்டீப னிணங்காமையால் அவனை நபுஞ்சகனாகும்படி சபித்தவரலாறுதிகளையும் பாரதத்திலுணர்க. வசிட்ட முனிவனுக்கு ஊர்வசியே தாய்.

நின்றாள். அவளது நாமம் 'பாடலி' யெனக் கூறிக் காதலை யூட்டினள். இம்மாற்றம் செவிவழி புத்திரகனது நெஞ்சத்துட் புகவே அவன்காமஞ்சான்ற அவ்விளையாள்வயின் ஏமஞ்சாலாவிடும்பை எய்தினன்.[28] காமத்தீயால் மீதூரப்பட்ட அவ் இளைஞன் அன்றிரவே தனது பாதுகையைக் காலிற் பூட்டிக்கொண்டு அம் மடமாது கண்வளரும் உப்பரிக்கையை யடைந்து அவளருகே சென்றான். அவள் அயர்ந்து நித்திரை புரியினும் அவளது வடிவழகு அவனது கண்வழியுட்சென்று அவனது மனத்தை யடிமைப்படுத்தியது. அவளை நித்திராபங்கஞ்செய்வது தகுதியோ வென வையுற்று அவன் மனந்தடுமாறு நிற்புழி, ஒவ்வொரு ஜாமத்திற்குந் தக்க கானங்களைப் பாடும்படி ஏற்பட்ட யாமிகருள் அந்த ஜாமத்திற்குரிய யாமிகன் மிகவும் சிங்காரரசம்[29] ததும்பக் 'காளைப்பருவத்தார் தம் காதலிகளை எழுப்பியின்புறுவதே சாலவழகிதாம்' எனும் பொருடோன்றப் பாடினன். உடனே புத்திரகன் நித்திரை புரியும் பாடலியைத் தனது தோள்கள் இறுக ஆலிங்கனஞ் செய்தான். அவள் திடுக்கிட்டு விழித்தெழலும் தன்னை யொப்புயர்வில்லா வடிவழகன் இறுகப் புல்லுவதைக்|கண்டு'இஃது தெய்வம் நமக்குச் செய்த பேருதவி'

---

[28] காமஞ்சான்ற இளையாள்வயின் ஏமஞ்சாலா விடும்பை யெய்தினன் = பெண்ணலங் கனிந்துநின்ற அம்மெல்லியல் மாட்டு அவளையன்றி வேறு மருந்தாற் றீரமாட்டாத துன்பநோயைக் கொண்டனன். ஏமம் = காப்பு, புகலிடம்

[29] சிங்காரரசம் = காமச்சுவை. வடநூலார் ஒன்பதுவகை ரசங்களுளவென்ப. தொல்காப்பியர் சுவை எண்வகைத் தெனக்கூறினர். பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியலில் சுவையினது இலக்கணத்தைக்காண்க.

யென மனமுவந்து அவனை இன்புற நோக்கிப் பின்னர் இருவரும் ஏகபோகமாயினர். நான்காம் ஜாமம் விட்டுதலும் புத்திரகன் தனது பாதுகையை யணிந்து தனது இடிந்த மனைக்கு வந்து கண் வளர்ந்தான். இவ்வாறாகச் சில தினங்கள் இருவரும் இரவில் ஒருவருமறியாவண்ணம் ரமித்து வந்தனர். பின்னர் காவலாளர் பாடலிபால் புணர்ச்சிக் குறிகள் தோன்றுவதை நோக்கி அரசனுக்கு இரகசியத்தை வெளியிட்டனர். அவன் மிகவும் தந்திரமாக ஓர் ஸ்திரீயை நியமித்து பாடலி தூங்கும் சயனக் கிரகத்தில் அவளறியாவண்ணம் மறைந்திருந்து இரகசியத்தை யுள்ளவாறு கண்டறிந்து வந்து தனக்கு வெளியிடும்படி ஆக்ஞை செய்தான்.

## பாடலிபுத்ர நகரநிர்மாணம்

அவ்வாறு அம்மாது மறைவிருந்த போழ்து புத்திரகனும் பாடலியும் காந்தர்வமாகப் போகித்துப் பின்னிருவரும் அயர்ந்து நித்திரை புரியுங்கால், அவள் ராஜகுமாரனது வஸ்திரத்தில் அடையாளத்திற்காக வோர் அலக்தகத்தை (செங்குழம்பை) யோர் பக்கத்திற் றடவினள். அக்குறியினை யறியாது புத்திரகன் விழித்தெழுந்து தனது கிரகத்திற்கு வந்து விட்டான். மறுநாள் விடிந்த பின் அரசனது சேவகர்கள் வீடுவீடாய்ச் சென்று ஆராயுங்காலை அவ் அலக்தகக் குறியால் அவனைக் கண்டுபிடித்து அரசன் முன்னர் கொண்டுவந்து விட்டனர். அரசன் அவனை வெகுண்டு நோக்கிப் பேசவே புத்திரகன் தனது பாதுகையின் வலியால் உடனே யவ்விடத்தை விட்டு மறைந்து பாடலியது உப்பரிக்கை வந்து சேர்ந்து நேர்ந்த விபத்தை யவட்கெடுத்துக் காட்டி, அவளையுடன்கொண்டு ஆகாச வீதிவழியாக அந்தக

ரத்தை விட்டு நெடுந்தூரஞ் சென்றுன். பின்னர் இருவரும் களைப்பெய்திக் கங்கைக் கரையிலிறங்கினர். மிக்க பசி நோய் அவர்களை வாட்டா நிற்கவே, புத்திரகன் சித்திவாய்ந்த தனது பாத்திரத்தை யெடுத்து, அக்காலத்திற் புசித்தற்கு மிகவுசித மான ஆகாரத்தை மனத்தால் உத்தேசித்தான். உடனே யவன் காமித்த போஜனம் அப்பாத்திரத்துட் கடிதில் அமைந்து தோன்றிற்று. இவ்வற்புதத்தைக் கண்ட பாடலி தனது காதலன்பால் மற்றுமடங்கா மோகங் கொண்டாள். தமக்குக் கிடைத்த போஜனத்தை இருவரும் மிகவுருசியுடன் புசித்து கங்காஜலத்தைப் பானம் பண்ணித் தமது களை தீர்ந்தனர்.

பின்னர் புத்திரகன் தனது மாத்திரைக்கோலால் நிலத்தில் 'சதுரங்க பலத்தோடும் இவ்விடத்தில் தெய்வீகமாக வோர் நகர் அமைக' வென வெழுதினுன். மாயையின் வலியால் உடனே அதியற்புதமான வோர் நகர் தேர், யானை, இவுளி, காலாள் ஆகிய நால்வகைத் தானையோடும் தோற்றுவாய் செய்தது. அந்நகரத்தைப் புத்திரகன் பாடலியோடும் அரசாண்டு வந்தான்.

இவ்வாறு பாடலிக்காகப் புத்திரகனுல் நிர்மாணஞ் செய்யப்பட்டவந்நகரம் அவ்விருவர் பெயராலும் பாடலிபுத்ரமென உலகெங்கும் பிரசித்திபெற்றது.

பின்னர் புத்திரகன் பாடலியின் தந்தையாகிய மகேந்திர வர்மனை தன்னருகே வரவழைத்துத் தக்காங்கு உபசரித்து வெகுமதி செய்து அவனைத் தன் கீழரசனுக வாக்கிக்கொண் டான்.

தெய்வீக சக்தியால் நிர்மாணஞ் செய்யப்பட்ட நகராதலின்

இந்நகருள் இலக்ஷ்மியும் சரஸ்வதியும் சதா குடிகொண்டு சகலர்க்கும் பொருட்செல்வத்தையும் செவிச்செல்வத்தையுங் கொடுத்தாதரிக்காநின்றனர்,

என வருஷர் பாடலிபுத்ர நகரத்தின் வரலாற்றை எங்கட்கு விளக்கமுற வெடுத்துரைத்தார். நிற்க.

## நான்காம்தரங்கம்

### வரருசி உபகோசையை மணம்புரிகை

நாங்களிவ்வாறு வருஷரிடம் வித்யையைப் பயின்று வருங்கால் வருஷாவருஷம் இந்திரனுக்குத் திருவிழாக் கொண்டாடுவதுபோல், ஓர் வருஷம் இந்திரனுக்கு உற்சவம் நடந்து வாராநிற்புழி, திவ்விய சௌந்தரியம் வாய்ந்த வோர் கன்னிகையை நான் தெய்வாதீனமாய்க் காண நேர்ந்தது. அவளும் என்னை அன்போடும் நோக்கினள். 'காகத் திருகண்ணிற்கு ஒன்றே மணிகலந்தாங்கு'[30] யாங்கள் உடலிரண்டாய் மனமொன்றான வோர் அரிய பிராணியாயினோம். எனது நெஞ்சத்தைத் தன் வயிற்படுத்திய வப்பெண்கனி உபவருஷரது புதல்வி. அவள் பெயர் உபகோசை. எனது மனம் உப

[30] 'காகத்திரு கண்ணிற் கொன்றே மணிகலந்தாங்
கிருவர் ஆகத்துள் ஓருயிர் கண்டனம்யாம்' என்பது திருக்கோவையாருட் கண்டது. இஃது, காதலாலொத்த தலைவன் தலைவிகளின்மாட்டு உடலிரண்டேயாயினும் உயிரொன்றே யிருப்பதுபோற் றோன்று மதிசயத்தைத் தோழி கண்டு தன்னுள் மகிழுந் துறை.

கோசையின் மாட்டு தாரணை [31] கொண்டதால் வேறொன்றுஞ் செய்தற்கியலாது, மனதிற் பதிவுற்ற வவளது உருவமே தியான மாக, வோர் தனியிடத்தில் யோகநித்திரை [32] புரியாநின்றேன். அப்போழ்து அதியற்புதமான வோர் சொற்பனம் எனக்குத் தோன்றிற்று. அதில் வெள்ளைக்கலையுடுத்த வோர் அணங்கு தரிசனமாகி என்னை நோக்கி 'உபகோசை பூர்வம் உனது மனை வியே. அவள் உன்னையன்றி வேறொருவரையும் மனத்தாற் காமியாள். அவள் உனக்கே கடிதில் மனைவியாவள். நானே வுன்னை விட்டோர்போழ்தும் பிரியாது உடனுறையும் சரஸ் வதி. [33] நீ துக்கமுறுவதை எவ்வாறு சகிக்க வல்லேன்! ஆத லின் உறுதிகூறி யுனது மனக்கவலையை யொழித்தற்காக விவ் வாறு பிரசன்னமாயினேன்' எனச் செப்பி உருக்கரந்தாள். நித் திரை நீங்கிய பின்னர், நான், உபகோசையது கிரகத்திற் கயலே

[31] தாரணை யென்பது அட்டாங்க யோகத்தின் ஓர் கூறு. மனம் அசையாது ஓர் பொருளின்கண் பூட்டப்பட்டிருப்பதென்பது பொருள். தமிழ்க்கண் இஃது பொறையெனப்படும். 'மனத்தினை யோரு வழி நிறுப்பதுபொறையே' என்பது பழஞ்சூத்திரம். இதன்பின் நிகழ்வது ஞானதிருஷ்டியாகிய தியானம்; அதன்பின் கை கூடுவது சமாதி.

[32] யோக நித்திரை யென்பது அறிதுயிலாகிய தூங்காத்தூக்கம். விண்டு பாற்கடல் நாப்பண் ஆலிலைமேல் அறிதுயில்கொள்வர்.

[33] சரஸ்வதி எப்போழ்தும் எவரிடத்தும் கூடவே யுறையும் தெய்வீக சக்தி. இவள் நீர் மயமாய் அறிவாகிய தீயோடு கலந்துநின்று அதனை விடாது தூண்டிக்கொண்டிருக்கும் வாக்கு. இதுவே காயத்திரி யிற் கூறப்படும் சவிதா. இஃது ஒருவனைவிட்டு நீங்குமாயின் பிரக்ஞை தொலையும். சரஸ்வதி யெனும் பதப்பொருளை நோக்குக.

இவளே தமிழில் நாமகளெனக் கூறப்படுவள்.

நிழல் பயந்துநின்ற மாமரத்தடியில், விரகத்தோடே நின்றேன். அப்போழ்து உபகோசையிடமிருந்து ஓர் சகி தனிநின்ற வென்னைக் குறுகி உபகோசை என்மீது அடங்காவிரகம் பூண்டிருப்பதாக மொழிந்தாள். இம்மாற்றம் எனது காதலை முன்னினும் ஓர் மடங்கதிகமாகத் தூண்டிற்று. நான் அவ்வுயிர்ப் பாங்கியை நோக்கி 'குரவர்களது அனுமதியின்றி யான் என்செய வல்லேன். வேண்டுமாயின் நீயவளது தாய்தந்தையர்க்குச் சமயமறிந்து தெரிவித்துக் காரியத்தை முடிவிக்கப் பார்' என விடையளித்துத் தோழியை உபகோசையிடம் திரும்ப வனுப்பிவிட்டேன். இதனை யவள் உபகோசைக் கறிவித்தாள். உபகோசை தனது தாபத்தைத் தனது அன்னைக்கு வெளியிட்டாள். அவள் இதனை உபவருஷருக்கெடுத்துக் கூறினள். பின்னர் எங்களது விரகம் எமது ஆசிரியராகிய வருஷருக்கும் எட்டிற்று. உடனே பெரியவர்கள் ஒன்றுகூடி விவாக முகூர்த்தத்தை நிச்சயஞ் செய்துகொண்டு வியாடியைக் கௌசாம்பி நகர்க்கனுப்பி எனது தாயாராகிய வசுதத்தையைப் பாடலிபுத்ரத்திற்கு வரவழைத்தனர். உடனே சுப முகூர்த்தத்தில் வேதவிதிப்படி கனல்சான்றாக[34] உபகோசையை எனக்குப் பாணிக்கிரஹணஞ் செய்வித்தார்கள். உபிரோகியம் போன்ற உபகோசையது இளநலத்தைத் தேவாமுதத்தைப் பருகுவதுபோல் மனம் பூரிக்கவுண்டு களித்து வந்தேன். காமச்

[34] கனல் சான்றாக = அக்னி சாக்ஷியாக. அக்னிதான் சகல தேவர்களுக்கும் முகமாக விருப்பவன். அவனது சொரூபம் சத்தியம். சத்தியஞ் செய்வோர் தீபத்தைப்பற்றி சத்தியஞ் செய்வது வழக்கமன்றே! பதினெண் புராணங்களுள் அக்கினிதேவனுக்கோர் புராணமுளது.

சுவையும் கல்விச்சுவையும் என்னிடம் ஓங்கி வளர்ந்தன. நிற்க.

## பாணினி வரலாறு

வியாடி இந்திரதத்தர் வரருசியாகிய நாங்களேயன்றி, மற்றும் பல மாணவகர்கள் வித்தியாநிதி படைத்த உபவருஷரை யடைந்து கலைகளை யோதிவந்தனர். இம்மாணக்கருள் பாணினி [35] யென்பவ ரொருவர். இவருக்குப் புத்தி மிக மந்தமாயிருந்தது. ஆயினும் ஆசிரியர்க்குத் தொண்டு புரிவதில் மிக வினையமுடையவர். இவருக்கு வித்தை ஏழைமையை நோக்கி வருஷாது பத்னி மிகப் பரிவெய்தி யவரை நோக்கி ' நீ ஹிமாசலத்தை யடைந்து இந்துசேகரனாகிய மகேஸ்வரனைநோக்கித் தவஞ்செய்து அவனது அனுக்கிரகத்தால் பூரண பாண்டித்துவத்தை எளிதே பெறக்கடவாய் ' என வாக்ஞாபித்து அவரைத் தவஞ்செய்வதற்காக வனத்திற்கனுப்பினள். அவளது வாக்கை சிரமேற்கொண்டு பாணினியார் கானகஞ் சென்று உமாமகேஸ்வரனை நோக்கி யருந்தவஞ் செய்தலும், சிவபெருமான் பிரசன்னமாகி யவருக்கு சர்வவித்தியாமுக

[35] பாணினி : இவர் பணின் எனும் வமிசத்துதித்தவரென்ப. இவர் காந்தாரதேசத்திலோர் நகராகிய சாலதுரமென்பதனை விட்டு நீங்கி வித்யை பயிலுதற்காகப் பாடலிபுத்ரம் வந்து வருஷரிடம்தொண்டு பூண்டனர்போலும். தாம் பிறந்த பதியால் சாலதுரிய னெனப்படுவர். இவர் பிதா தேவலன், தாய் தாக்ஷி. ஆதலின் தாக்ஷேயனெனும் நாமமும் இவர்க்குளது. இவர் தவஞ்செய்து மகேஸ்வரனிடமிருந்து வாக்கின் தந்திரத்தைப் பதினான்கு சூத்திரமாகப் பெற்று தேவபாஷையின் உள்ளீட்டைக் கண்டு தெய்வீகமாகிய பாணினீயமெனும் வியாகரணத்தைக் கண்டார்.

னித்தபோழ்து, அவள் அவனை நோக்கி 'கணவன் தேசாந்தரம் போனவட்கு அக்கணவனுல் யாது சுகம்? நடுவழியில் நாமேன் ஊர்வசைக்காளாய்ப் பேரைக் கெடுத்துக்கொள்ள வேண்டும்; நீர் வசந்த உத்சவத்தில் முதல்நாளிரவில் ஒருவருமறியாது முதல் ஜாமத்தில் எனது கிரகத்தை யடையும். மனோரதம் நிறைவேறும்' என வவனையோர் படைத்த மொழியால்[39] ஏய்த்துவிட்டு ஈரேலென வீட்டைநோக்கிச் செல்வாளாயினள். ஆயினும் வீட்டை யடையுமுன் ஓரிடத்தில் புரோகிதன் குறுக்கிட்டு வம்புபண்ண எத்தனிக்கையில் அவனுக்குமவ்வாறே போக்குக் காட்டி முன், மந்திரி குமாரனுக்குக் குறிப்பிட்ட அற்றையிரவின் இரண்டாம் ஜாமத்தில் தன் வீட்டுக்கு வந்து மனோரதத்தை நிறைவேற்றலாமென வீணைசைக் காட்டி யவனை யொதுக்கி விட்டுக் கடிதாக வீட்டை நோக்கிச் செல்லாநின்றாள். ஆயினும் மற்றுமோர் இடையூறு நேரிட்டது; நடுவழியில் தண்டாதிபன் குறுக்கிட்டு அக்கிரமத்திற் கெத்தனித்த போழ்து அவனையும் மருட்டி அற்றையிரவின் மூன்றும் யாமத்திற் றன்னைவந்து கிட்டும்படி போக்குக் காட்டிவிட்டு மனம் மிகவும் நொந்து தனது இல்லத்தை யடைந்தாள்.

தனது கணவனது பிரிவாற்றாமையாகிய நோய் மனத்தை யோர்பக்கம் புண்படுத்த, துஷ்டர்களது கொண்டாட்டத்திற்குப் பதிவிரதை யென் செய்வாள்! உபகோசை துக்கத்தைத் தாங்கலாற்றாதவளாய்த் தனது சகியைநோக்கி 'புருஷன் தேசாந்தரஞ் செல்ல நேரின் கற்புடைய மாது மரணமுறுவதே நலம்; துக்கத்தை யடக்கிக் கற்பைப் பழுதுறாவண்ணம் பெண்டிர் காப்

[39] படைத்தமொழி=பொய்வார்த்தை.

பாற்ற முயல்வது எவ்வளவு கஷ்டம் பாராய்! யாது செய்வது? மற்றுஞ்சிறிது இத்தேகத்தைக் கணவன்பொருட்டுத் தாங்கி நிற்பல். தெய்வம் துணை செய்யவேண்டும். பிராமணர்களைப் பூஜித்து க்ஷேமத்தைப் பெறக்கூடும். ஆதலின் நீ ஹிரண்யகுப்தனிடம் சென்று பிராமண பூஜையின்பொருட்டு சிறிது திரவியம் பெற்றுவருதி' யெனச் செப்பித் தனது தோழியை இரத்ன வியாபாரியிடமனுப்பினாள். பாதகத்திற் கஞ்சாத அந்தத் துரோகி உபகோசையை யடைந்து 'நீ யுனது வடிவழகோடு மன்மதலீலை செய்ய எனக்கிடங் கொடுப்பையாயின், உனது கணவன் ஒருவருமறியாவண்ணம் என்வசமொப்புவித்த தனத்தை யுனக்குத் தருவேன். இல்லையாயின் தரேன்' எனக் கபடஞ் செய்தான். செட்டி மோசஞ்செய்ய எத்தனித்ததைக் கண்ட உபகோசை அவனது சொற்கிணங்கினவள் போல் நடித்து, முன்னமே மூன்று துட்டர்களையும் எவ்விரவிற் றன்னிடம் வரும்படி ஏற்பாடு செய்திருந்தனளோ அவ்விரவின் நான்காம் ஜாமத்தில் அவனையுந் தன்னிடம் வந்து போகந் துய்க்கும்படி யிணக்கங் காட்டினள். செட்டி உட்சூதை யறியாது மனமகிழ்ச்சியோடும் வீட்டுக்குத் திரும்பிச் சென்றான்.

பாவத்திற்கஞ்சாது தன்னைப் பெண்டாளக் கருதிய நான்கு துட்டர்களையும் இவ்வாறு போக்குக்காட்டிப் பொய்யாசை யூட்டிவைத்த உபகோசை, அவர்களை யூர்சிரிக்க வவமானஞ் செய்ய வுன்னித் தனது சகிகளை யழைத்து ஓர் கொப்பரையில், தைலமும் கத்தூரியும் மையுங் கலந்து நான்கு துண்டு வஸ்திரங்களை யதனிற் றோய்த்தெடுத்து வைத்திருக்கும்படி

ஏற்பாடு செய்து வெளித்தாழ் போடக்கூடிய வோர் பேழையை சித்தப்படுத்தினாள். குறிப்பிட்ட தினம் வரவே அற்றை யிரவின் முதல் யாமத்தில் மந்திரி குமாரன் பரபரப்பா யொரு வருமறியாது வீரமாதாகிய உபகோசையது கிரகத்தை யடைந் தான். உபகோசை அவ் அறிவிலியை நோக்கி 'நீர் அசுசியாக வென்னைத் தீண்டத் தகாது; உட்சென்று அப்பியங்கனம் செய்து வருதிர்' எனச் சொல்லவே மூடசிரோமணி யுட்சென் றான். சகிகள் அவனது ஆடையாபரணங்களைக் களைந்துகொண்டு நான்கு கரித்துணிகளி லொன்றை யிடுப்பிற் கட்டிக்கொள்ள வுதவி கருந்தைலத்தை யவன் சென்னியிற்றேய்த்துத் தாளம் போடவாரம்பித்தனர். இவ்வாறு பணிவிடை நடந்துவருகையில் இரண்டாம் ஜாமம் கிட்டியதால் புரோகிதன் காலந்தாழ்க்காது வந்து கதவைத் தட்டினான். இச்சத்தம் மந்திரிகுமாரனது செவியில் விழுந்து அவன் திகிலுறவே, அத்தோழிகள் 'ஐயோ வாருசியது சிநேகிதரொருவர் கதவைத்தட்டாநின்றனர். என்ன மோசம்! நீர் ஒருவருமறியாவண்ணம் இப்பேழையுட் புகுந்து கொள்ளும், அவர் போனபின் ஸ்நானாதிகளை முடிக்கலா' மென விரகசியமாகச் செப்பிப் பயமுறுத்தி யவனைப் [40] பேழைக்குட் புகுத்தி வெளித்தாழை யிறுகப் போட்டனர். புரோகிதனுக் கும் தண்டாதிபனுக்கும் அவரவர் முறையில் இவ்வாறே மரி யாதைகளாயின. மூவரும் பேழையுள் ஒருவரையொருவர் இடித்துக்கொண்டு நெருங்கி யிருப்பினும் நாணத்தாலும் பயத் தாலும் நாவெழாதும் ஒருவரையொருவ ரின்னாரென்பதைத் தெரிந்துகொள்ளாதும் பல்லைக் கடித்துக்கொண்டு மௌனமா

[40] பேழை=பெட்டி.

கத் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டிருக்கும்படி நேர்ந்தது நான்காம் ஜாமத்தில் வந்த ஹிரண்யகுப்தனுக்கு யாது கதி நேர்ந்ததெனின், உபகோசை யவனையும் முன்னை மூவரையும் உள்ளே யனுப்பியவண்ணம் அனுப்பி அவனது ஆடை ஆபரணங்களைக் களைந்து கரித்துணி யுதவிப் பாங்கிகள் தைலமிட்டுத் தாளம் போடுங்கால, வீரபத்னி யவனைக் கிட்டித் தனது கணவன் அவனிட மொப்புவித்த தனத்தைத் தனக்குத்திரும்பக் கொடுப்பதாக வாக்குத்தத்தஞ்செய்யும்படி குறையிரப்ப, அக்கபடி. சம்மதிக்கவே, யவள் 'நீர் இந்தப் பேழை யறிய நிதியைக் கொடுப்பதாக வாக்களிப்பின் சாலும்' எனலும், சூதை யறியாத வாணிபன் 'நான் இந்தப் பேழையறிய வாருசி யென்னிட மொப்புவித்த நிதியை உனக்குக் கொடுப்பேனாக' வெனச் சத்தியம் செய்தான். இவ்வாறு நிகழ்கையில் பொழுது விடிய வாரம்பித்தலும், பாங்கியர் 'இனி நீர் இங்கிருத்தல் அழகிதன்று, சீக்கிரம் இவ்விடத்தைவிட்டு ஓட்டம் பிடியும்' எனச் செப்பி யவனை வீட்டைவிட்டு துரத்திவிட்டார்கள். கரித்துணியைக் கௌபீனமாகக் கட்டிக்கொண்டு கருங்குழம்பால் தேகாதி முழுமையும் வெகு விகாரமாகத் தோன்றிய யவனது உருவத்தைக் கண்டு ஊர்நாய்கள் பலவும் அவன்மேற் பாய்ந்து அவனை யோடவோடத் துரத்திக் கடித்தன. வழியில் மிக்க அவமானத்தையும் கஷ்டத்தையும் அனுபவித்து ஹிரண்யகுப்தன் தனது இல்லம் வந்து சேர்ந்து தனது பணிவிடைக்காரர்களால் அழுக்குப்போக ஸ்நானஞ் செய்விக்கப் பெற்றுத் தலையை வெளிக்காட்டாது வீட்டினுள் ளிருந்தான்.

தனது நிறையை யழிக்கக் கருதிய நால்வரையும் இவ்

வாறு சிக்ஷை செய்த உபகோசை, யவர்களது அயோக்கியத்தை அரசனுக்குத் தெரிவிக்க வெண்ணங் கொண்டவளாய், அந்நகர்க் கரசனான நந்தனது அவைக்களத்தை யடைந்து 'ஹிரண்யகுப் தன், எனது கணவ னொப்புவித்த தனத்தைக் கவர்ந்து கொண்டு தான் ஓர் தனமும் பெறவில்லை யெனச் சாதிக்கின் றான், அவனை வரவழைத்து எனது கணவன் என்னைப் பாது காப்பதற்காக நம்பி யவனிட மொப்புவித்த நிதியை எனக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டு' மென விண்ணப்பஞ் செய்து கொண்டாள். நந்தபூபதி சேவகர்களை யனுப்பி ஹிரண்யகுப் தனைக் கடிதிற் றன்னிடம் கொண்டுவரும்படி ஆக்ஞாபிக்க வவர் அவ்வாறே ஹிரண்யகுப்தனை நியாய சபைக்கு இட்டுக் கொண்டு வந்தனர். அரசன் அவனை அவ்விஷயத்தைப்பற்றி உசாவியபோழ்து அபகார சிந்தையனான அவ்வியாபாரி தான் ஓர் பொருளையும் வரருசியிடமிருந்து பெறவில்லை யெனச் சாதித் தான். அப்போழ்து உபகோசை 'இவர் ஒப்புவித்த தனத்தை எனக்குத் திரும்பக் கொடுத்து விடுவதாக வெனக்கு வாக்களித் திருக்கிறார். அதற்குச் சாக்ஷியாக வோர் பேழையுமுளது' எனக்கூறினள். அரசனதிசயித்து அப்பெரும் பெட்டியைக் காவலாளர்களால் நியாய சபைக்கு எடுத்து வரும்படி செய்தான். அப்போழ்து கற்பிற்கரசியாகிய உபகோசை,மிகச் சாதுரியமும் படைத்தவளாதலின், அப்பெட்டியை நோக்கி 'பேழையுள்ளிருக் கும் தேவதைகாள், இவஹிரணயகுபதன தனனிடம கணவன் ஒப்புவித்த தனத்தை என்னிடம் திரும்பக் கொடுப்ப தாக நீங்களறிய என்னிடம் உறுதிமொழி கூறினனல்லனோ? நீங்கள் மெய்யை வாய்திறந்து செப்பாது மௌனஞ் சாதிப்பீரா

யின் உங்களை இச்சபைக்கண் மானபங்கஞ் செய்வேன்'என்றாள். உடனே அப்பேழையுள்ளிருந்து மூன்று குரல்கள் 'உபகோசை சொல்வது சத்தியம் சத்தியம் சத்தியம்' எனக் கேட்டன. அரசன் வியப்புற்றான்; ஹிரண்ணியகுப்தன் நடுக்குற்றான். பேழையைத் திறத்தலும் அதனுட் பதிவிருந்த துட்டர் மூவரும் மூன்று கரும்பூதங்கள் புறப்பட்டாங்கு பெட்டியிலிருந்து வெளிப்பட்டனர். அரசனும் சபையாரும் சூதை யறிந்து கொண்டார்கள். பின்னர் உபகோசை அந்நால்வாது தீய வொழுக்கத்தையும் சவிஸ்தாரமாக அரசனுக்கு அறிக்கையிட்டாள். அரசன் அவளை மிக்க கொண்டாடி அந்நால்வரையும் தக்கபடி சிக்ஷைசெய்து உபகோசைக்குச் சேரவேண்டிய நிதியைச் செட்டியிடமிருந்து இறுத்துக் கொடுத்தான். உபகோசையைத் தனது தங்கையாகப் பாவகஞ்செய்து மரியாதைப் படுத்தினான். அவளது கற்பும் அறிவும் நாடெங்கும் புகழ் பெற்றுப்பரவ வாரம்பித்தது. அவளைத் தெய்வமாகக் கொண்டாடாதா ரொருவருமிலர். நிற்க.

## வரருசி

## தவம் முடித்து ஆசிரியரை யடைதல்

நான் சம்புவை நோக்கி இடையறாத்தவம் பயின்றதால் மகேஸ்வரன் எனக்குப் பிரத்தியக்ஷமானார். உடனே யவரிடமிருந்து பூரண பாண்டித்துவத்தைப் பெற்றேன். என்னாற் பாணினீயம் விளக்கம் பெற்றது. அஃது என்னாற் பூரணமுற்றது

[41] வரருசி பாணினீயத்தை நன்குணர்தற் கின்றியமையாத வார்த்திகத்தை யியற்றி பாணினீயத்தைப் பூரணஞ்செய்தார். அதன்

சிவபெருமானது அருளைப்பெற்றபின் நான் ஹிமாசலத்தைவிட்டு நீங்கிக் கூடிய சீக்கிரத்தில் பாடலிபுத்ரத்தை யடைந்தேன். உபகோசையது செயல்களைக் கேட்டு அவளது கற்பின் பெருமையையும் புத்திக்கூர்மையையும் கொண்டாடி யவளோடு மகிழ்வுற்றேன்.

பின்னர் எனதாசிரியராகிய வருஷரிடஞ் சென்று நான் பெற்றுவந்த புதிய வியாகரணத்தை யவர்க்குபதேசித்தேன். குமாரக்கடவுள் அவரது அறிவைப் பிரகாசிப்பித்தார்.[42] பயில வேண்டிய கலைகளெல்லாம் சம்பூரணமாகிவிட்டபடியால் வியாடியும் இந்திரதத்தரும் யானும் வருஷக்குரிய குருதக்ஷிணையைச் சமர்ப்பிப்பதற்காக வவரை உத்தரவு கேட்டோம். அவர் கோடிபொன் குருதக்ஷிணையாகக் கேட்டார்.

அவ்வளவு பெருந்தொகைக் கென்செய்வதென நாங்கள் வாட்டமுறு நிற்கையில் நந்தனிடம் யாசகங்கேட்டு அப்பெருந்தொகையை எளிதே பெறலாமென வெமக்குத் தோன்றிற்று. ஏனெனில் அவனிடமொன்று குறைய நூறு கோடி திரவியமுண்டெனத் தெரியவந்தது. அன்றியும் அவன் உபகோசையைச் சகோதரிகாபாவஞ் செய்திருந்தானன்றே!

---

பின்னர் மற்றும் விரிந்த விளக்கமாகிய மகா பாஷியத்தைப் பதஞ்சலி பகவான் அனுக்கிரகித்தார்.

[42] வியாகரணம் சர்வவித்தியாமுகம், மோக்ஷத்திற்கும் வாயில். குமரக்கடவுள் ஞானபண்டிதனும் முக்திநிலையைக் காட்டும் அழியா இளமையனுன தெய்வம். கந்தழிச்செல்வத்தை யளிக்கும் பரமகுருவென்பதனைத் திருமுருகாற்றுப்படையா லுணர்க.

எழுத்தாகிய சரஸ்வதியைக் காட்டும் பரமகுரவன் அறுமுகப் பெருமானென்பதனைப் பின்வரும் சர்வவர்மன் சரிதத்தாலும் தெளிக.

## யோகநந்தன் வரலாறு

அப்பொழுது நந்தன் அயோத்தி நகர்ப்புறத்தே [43] விஜயம் செய்துகொண்டிருந்தான். நாங்கள் மூவரும் குருதக்ஷிணைக்குரிய பொன்னையவனிடம் யாசிக்க வுத்தேசங்கொண்டு அவண்சென்றோம். "கைக்கெட்டியது வாய்க் கெட்டாமற் போவதுபோல்" நாங்கள் அவனைக் கிட்டி யாசிக்கு முன்னர் வினைவலியால் அவ்வரசன் உடல் நீத்தான். இன்னது செய்வதெனத் தோற்றாது மூவரும் திகைத்தோம். அப்பொழுது எங்களுள் இந்திரதத்தருக்கு ஓர் சூழ்ச்சி மனக்கண் தோன்றிற்று. அவர் யோகசித்தி கைவந்தவர். அவர் எங்களை நோக்கி 'யான் எனது யோக மாயாசக்தியால் எனது கூட்டைவிட்டுப் பிரிந்து இறந்து கிடக்கும் நந்தனது சரீரத்திற் பரகாயப் பிரவேசஞ்செய்து அத்தேகத்தை உயிர்ப்பிக்கின்றேன். உங்களுள் வரருசி யத்தருணம் என்னைவந்து குருதக்ஷிணைக்காக யாசிக்கட்டும். வியாடி எனது தேகத்தைச் சிறிது நேரம் பாதுகாத்துக்கொண் டிருக்கட்டு' மெனச் செப்பினார். இத்தந்திரம் எங்கட்கு மிகவும் பொருத்தமாகத் தோன்றிற்று. இவ் இரகசியச் செய்கையை நடத்த வெண்ணங்கொண்டு மூவரும் ஜனங்கள் மிக நாடாத வோர் பாழ்ங்கோயிலை யடைந்தோம். இந்திரதத்தர் தமது யோகவலியால் தமது ஹம்சத்தை [43] த் தமது தேகத்தினின்றும் வெளியேற்றி இறந்து

---

[43] நந்தன் மகதநாட்டை யாண்டபோழ்து அயோத்தி நாடும் ஜயிக்கப்பட்டு மகதநாட்டோடு கூடியிருந்தது.

[43] ஹம்சம் என்பது வாசி. இஃது கீழும் மேலுமாயும் வலசாரி இடசாரியாகவும் நின்று பிறண்டுகொண்டிருக்கும். வாசியை யறிந்த

கிடக்கும் நந்தனது உடலுட் பாய்ந்து அதனை யுயிர்ப்பித்து விளங்கினர். நந்தபூபதி குபீரென உயிர்பெற்றெழுந்ததை நோக்கி யாவரும் அதிசயமுற்றனர். வியாடி தனது சகோதரனது தேகத்தைப் பாழ்ங்கோயிலிற் பாதுகாத்துக்கொண்டு நிற்ப, யான் யோகநந்தனை [44]க் கிட்டி குருதக்ஷிணையைச் சமர்ப்பிப்பதற்காக ஒருகோடி பொன் எனக்கீயும்படியாக வினயமாக யாசித்தேன். உடனே யோகநந்தன் சகடாலனெனும் மந்திரியைக் கூப்பிட்டு 'குருதக்ஷிணைக்காக இந்தப் பிராமணர் என்னை ஒருகோடி பொன் யாசகங் கேட்கிறார், தடை நேராது உடனே ஒருகோடி பொன்னையும் தானமாக வவருக்குச் செலுத்துக,'வென ஆக்ஞையிட்டான். புத்திக் கூர்மையனான சகடாலனோ, பணத்தை யவ்வாறே செலுத்தி விடுவதாகச் சொல்லிக் காலஹரணஞ் செய்தான். ஏனெனில் நந்தன் திடீரென வுயிர்த்தெழுந்ததே யோர் வியப்பு; அக்கணமே யோர் பிராமணன் அவனிடம் அளவிறந்த தொகையைத் தானங் கேட்டது அதனினும் வியப்பு; அத்தகைய பெருந்தொகையை நந்தன் ஓர் சிறிதும் பெரிதென மதியாது கடிதிற் செலுத்தும்படி யுத்தரவளித்தது அதனினும் வியப்பென மந்திரிக்குத் தோன்றி, அவன் எங்களது சூதை யூகத்தாற் கண்டுகொண்டான். தான

வன் பிராண தந்திரங் கைவந்தவன். அவன் பரகாயப் பிரவேச முதலாகிய சித்திகளை யெல்லாஞ் செய்ய வல்லவன்.

[44] **யோகநந்தன்** : இந்திரதத்தன் யோகவலியால் தனதுடலினின்று நீங்கி இறந்து கிடந்த நந்தனது தேகத்துட் புகுந்து அதனை யுயிர்ப்பித்தபின் நந்தனானாயினும் பூர்வ நந்தனல்லன். பூர்வ நந்தனை நிஜநந்த னென்றும் புதியவனை யோகநந்த னென்றுங் கொள்க.

மாக வாக்களித்த திரவியத்தை செலுத்தாது சகடாலன் வீணே நேரம் போக்குவதைப்பற்றி யான் யோகநந்தனிடம் முறையிட்டபோழ்து, அவன் சகடாலனை யழைத்துக் காரணங் கேட்டலும், அவன், தாங்கள் 'தெய்வாதீனமாய் உயிர்த்தெழுந்த அற்புதத்தை நோக்கி யாவரும் பரவசப்பட்டு ஆனந்த முறுவதால் பண்டார அதிகாரிகளும் தத்தந் தொழிலை மறந்து தங்களது நற்பாக்கியத்தைப்பற்றியே பேசாநின்றனர். ஆதலின் தங்களது உத்தரவின்படி பணம் கடிதிற் செலுத்தப்படவில்லை. கூடிய சீக்கிரத்தில் உத்தரவு நிறைவேறும்' எனத் தந்திரமாக விடையளித்தான். பணத்தைச் செலுத்தாது இவ்வாறு நேரத்தைக் கடத்திக்கொண்டே சகடாலன் யோகநந்தனும் நானும் அறியாவண்ணம் இரகசியமாகக் காவலாளரை யழைத்து இவ்வூரில் எங்கெங்கு பிணங்கள் காணப்படுமோ அவற்றை யெல்லாம் உடனே பொசுக்கிச் சாம்பராக்குக' வெனவாக்ஞைபிட்டான். அவனது உத்தரவின்படி காவலாளர் எங்கணும் சோதனை செய்தபோழ்து பாழ்ங்கோவிலில் இந்திரதத்தரது தேகத்தை வியாடி காத்துக்கொண்டிருப்பதை யவர்கள் கண்டுபிடித்து அவர் என்ன தடுத்துங் கேளாது அந்தப்பிராமண தேகத்தைக் கொளுத்திச் சாம்பராக்கினர். வியாடி அரசனது அவைகளத்திற் கழுது கொண் டோடி வந்து 'ஏ நந்த பூபதி, உமது காவலாளர் அநியாயமாகத் தூங்கிக்கொண்டிருந்த வோர் பிராமணனை சுட்டெரித்து விட்டார்கள்' என முறையிட்டார். யோகநந்தனுக்குச் சகடாலன்பால் அடங்கா வெகுளி யுண்டாயிற்று, ஆயினும் அதனை யடக்கிக்கொண்டு தானே பொக்கிஷத்தைத் திறந்து ஒரு கோடிபொன்னையும்

வியாடியிடங் கொடுத்து குருதக்ஷிணையைச் செலுத்தும்படி சொல்லித்தனக்கு பிராமணத்துவம் நீங்கிச் சூத்திரத்துவம்[45] வந்தடைந்ததைப்பற்றி வியாடியோடு மிகவும் துக்கித்துக் கொண்டிருந்தான்.

வியாடி ஏகாந்தத்தில் யோகநந்தனைக் கிட்டி 'சகடாலன் மகாதந்திரசாலி; உன்னைக் கொல்வதற்காகப் பல்வகைச்சூழ்ச்சி செய்யாநின்றான். ஆதலின் அவனது மோசத்திற்காளாகாத படி நீ பாடலிபுத்ரம்சென்றதும் சகடாலனைச் சிறையிற்போட்டு விட்டு வாருசியை யுனக்கு மந்திரியாக்கிக்கொள். வாருசி யுனக் குத் துணைநிற்கும் வரையும் உன்னையோர் பொல்லாங்கும் அணுகா'தென வுறுதி கூறிவிட்டு வியாடி வருஷருக்குக் குரு தக்ஷிணையைச் சமர்ப்பித்தற்பொருட்டு செலவு பெற்றுச் சென்றார்.

## வரருசி யோகநந்தனுக்கு மந்திரியாதல்

பின்னர் யோகநந்தன் தனது பரிவாரங்களோடு பாடலி புத்ரத்தை யடைந்தான். உடனே தண்டமாக்களைக் கூவி சகடா

---

[45] பூர்வநந்தன் அரசனுயினும் க்ஷத்திரியனல்லன் போலும். இந்திரதத்தனுக்கு அறிவு மாறாதிருந்தும் தான் புகுந்த தேகத்திற்குரிய சூத்திரவொழுக்கமே யவனை நடாத்திற்று. ஒவ்வொரு தேகமும் தான் மொண்டு வந்த வினைவழி தன்னுட் குடியிருக்கும் அறிவனை ஆட்டு விக்கு மென்பதனைத் தெளிக.

இவ்வாறே ஜடபாதர் ஞானங்குன்றாது மான்பிறப்பெடுக்க நேர்ந்தபோழ்து மானாகவே யொழுகும்படியாயிற்று.

சுத்த அறிவிற்கும் ஜாதி கிடையாது. ஜாதியேற்பட்டது தேகத்தைப்பற்றியே.

லனையும் அவனது புத்திரர் நூற்றுவரையும் சிறைப்படுத்தி, யவர்களை ஓர் இருட்கிடங்கில் அடைத்துவிட்டு என்னைத் தனக்கு முதன்மந்திரியாக்கிக் கொண்டான்.[46] இருட்டறையி லடைபட்ட சகடாலனுதியோர்க்குப் பிரதிதினம் ஓர் கிண்ணம் மாவும் சிறிது ஜலமும் ஆகாரமாகக் கொடுக்கும்படி கட்டளையிட்டான். இவ்வற்ப வுண்டி ஏக மனுஷனது உயிரைக் காப்பாற்றுதற்கும் போதுமானதன்று. அதனைக்கொண்டு நூற்றொருவர் எவ்வாறுயிர்தாங்கி நிற்கமாட்டுவர் ?

## சிறைச்சாலையில் சகடலானது புத்திரர் நூற்றுவரும் மரணமுறுகை

பசி தாகங்களைத் தாங்கமாட்டாது சகடாலனும் அவனது புத்திரரும் தம்முட் சிந்திப்பாராயினர், 'பிரதிதினமும் நமக்குக் கிட்டாநின்ற இவ்வற்ப வாகாரத்தைக்கொண்டு நாம் அனைவரும் பிராணனைத் தாங்கமுடியாது. நம்முள் எவரேனும் ஒருவனே அதனைப் புசிக்கட்டும். மற்றை நூற்றுவரும் பிராணனை விட்டுவிடுவோம். அவன் நமது பழியை யோகநந்தனிடம் வாங்கவல்ல சமர்த்தனாக இருக்கவேண்டும்.' இவ்வாறு சங்கற்பஞ் செய்துகொண்டு அவர்கள் தங்கள் பிதாவாகிய சகடாலனையே சத்துருவைச் சமயம் பார்த்துப் பழி வாங்கும்

---

[46] முத்திராராக்ஷசம் என்னும் நாடகத்திற் கூறப்படும் சரிதத்திற்கும் இதற்கும் மிக்க வேறுபாடுளது அதன்படி சிறையுற்றவர் மௌரியனும் அவனது புதல்வராய சந்திரகுப்தன் முதலிய நூற்றுவரும். மந்திரியாயது ராக்ஷசன். இவண் ராக்ஷசன் வாருசிக்கு நண்பனாகிய வோர் பெரும்பூதம்.

படி நியமித்து அவ்நூற்றுவரும் தமது வல்லுயிரை மாய்த்துக் கொண்டனர். வீரர் சத்துரு நாசத்தைத் தமதுயிரினும் பெரி தாக மதிப்பரன்றே! நிற்க

## வியாடியின் துறவு

வருஷரிடம் குருதக்ஷிணையைச் செலுத்தச் சென்றிருந்த வியாடி, யவ்வாறு செய்து குருவை மகிழ்வித்துவிட்டுத் திரும்ப வும் யோகநந்தனிடம் வந்தார். நீங்காச் சூத்திரத்துவம் தன்னைப் பிடித்ததைப்பற்றி யோகநந்தன் தனது பிராதாவோடு துக்கித்துப் பின்னர் ராஜபோகத்தைத் தன்னோடு கூடவிருந்து யனுபவிக்கும்படி தனது சகோதரரை வேண்டிக்கொண்டான். வியாடியோ வதற்கிணங்காது யோகநந்தனை நோக்கி 'க்ஷண நேரத்தில் ஒன்று மற்றுப்போகும் பெற்றியதான சரீரத்திடத் தும் சாரமற்ற சம்சார சாகரத்தும் அறிஞன் எவன்தான் குருட்டுத்தனமாய் முழுகுவன்!

'பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுணம்'[47]

---

[47] பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக் கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதை குணமாகமே
தீர்த்தாய் * * * *
* * * * * *

என்பது திருவாசகம்.

வெய்யிலின் கொடுமையால் மலர்நிறைந்த தடாகம்போற் றோன் றும் பொய்த்தோற்றமாகிய கானலை, இஃது நன்மை பயக்கவல்ல மெய்யான மலர்ப்பொய்கை யெனக் கருதி யதனை நாடிச்சென்று வீணே தவிப்பதை யொத்த பேதமை தன்னை யுள்ளவா வுணர்ந்த

தன்னறிவைப் பெற்றனே மயக்கவல்லதாமோ வெனப் பல கடைப்பிடியான வுறுதிகளை எடுத்துக்காட்டி பிராமணத்துவம் நீங்கிய அறிவனை விட்டுச் செலவுபெற்றுப் பிறப்பறுக்கும் பெற்றியாராய்த் தவமுடிக்கக் கானகஞ் சென்றார்.

நான் மந்திரித் தானத்திருந்து ராஜகாரியங்களைச் சரிவர நடத்தி வந்தேன்.

## ஐந்தாம் தரங்கம்

### வரருசி சகடாலனைச் சிறைமீட்டல்

இவ்வாறு ராஜ்யபாரம் நடைபெற்று வருங்கால் யோகநந்தன் நாளுக்கு நாள் பெண்டிரது மோகவலைக்குட் சிக்குண்டான். எதிர்பாராது கிடைத்த ராஜபோகத்தால் உன்மத்தனாகிக் கட்டுக்கடங்கா மதயானை போன்றான்.[48] அவனைச்

அறிஞனை வாதிக்க வல்லதோ? பேதமை யென்பது இவண் அசத்தாகிய ஜகத்தை சத்தெதன நினைத்து பிறப்பதற்கேயாளாகி யிறத்தல். ஜகம் அசத்தென்பதனைத் தாயுமானசுவாமிகள் நன்கு விளக்கியதனை யோர்க—

தேன்முகம் பிலிற்றும் பைந்தாட் செய்யபங் கயத்தின் மேவும்
நான்முகத் தேவே நின்னால் நாட்டிய வகில மாயை
கான்முயற் கொம்பே யென்கோ கானலம் புயலே யென்கோ!
வான்முக முளரி யென்கோ மற்றென்கோ விளம்பல் வேண்டும்!

[48] பிராமணனுய் நல்வழிக்கண் ஒழுகிவந்த இந்திரதத்தன் பிராமண வுடலத்தை நீக்கி நந்தனது சரீரத்துட் புகுந்தபின் அவன் அத்தேகம் உடன்கொண்டு வந்த வினைவழியே மென்மேலு மொழுகும்படி நேர்ந்தது. சுதந்தரமான அறிவிருந்தும் அஃது ஆத்மலாபத்தை நாடாது புகுந்த தேகத்திற்கியைந்த நாடகத்தையே வாட வாரம்பித்

சாதுரியமாக வடக்கிச் சரியான வழிக்கண் செலுத்துவதில் யான் அங்குசம்போலொழுக வேண்டியதாயிற்று. எனது சக்தியை இவ்வாறு அரசனை யடக்கிக்கொண்டு வருதற்கண்ணேயே செலவிடின் யான் எவ்வாறு ஆத்மலாபத்தை யடையலாமெனுங் கவலை என்னுள் ளெழாநின்றது. எனது காலமெல்லாம் ராஜதந்திரத்திலேயே செலவழிக்கப்படின் அதன் முடிவில் எனக்கென்ன கதி விளையுமோ வெனுந் திகிலெழுந்ததால் அவ் அச்சத்தை மிகத் தணித்து ஆத்மலாபத்திற்கு வழியை யுண்டாக்கக் கருதிச் சகடாலனையும் இரண்டாம் மந்திரியாக வாக்கிக்கொள்வது மிக நலமெனக் கண்டேன். சகடாலன் எனக்குத் துணைமந்திரியாக வமையின் ராஜ்யபாரம் அவனாலும் தாங்கப்பட்டு என்னை யதிகமாகக் கீழழுத்தாதன்றே! அன்றியும் யான் முதன் மந்திரியா யிருப்பதால் என்னை யறியாது சகடாலன் அரசனுக்கு வஞ்சகத்தாற் றீங்கிழைக்க முடியா தென்பதனையும் நன்குணர்ந்தேன். இவ்வாறு இவ்வுறுதியை மனத்துட்கொண்டு தக்க சமயமறிந்து அரசனைக் கிட்டிச் சகடாலனது பெருமையை யெடுத்துரைத்து நந்தனைத் திருப்திசெய்து அவனது அனுமதியால் சகடா

---

தது. இவ்வாறே சங்கராச்சாரிய சுவாமிகள் காமதந்திரத்தை யுணர்தற்காக வோர் அரசனது தேகத்துட் பரகாயப் பிரவேசஞ்செய்தகாலை ராஜபோகத்தும் சிற்றின்பத் துறைக்கண்ணும் மூழ்கி தம்மை ஒரோவழி மறக்கலானார்.

திருமூலராகிய சிவயோகியோ மூலனெனும் இடையனது உடலத்துட் கூடுவிட்டுக் கூடுபாய்ந்தாராயினும் அதன் வயமா யொழுகாது அதனையே சிவராஜயோக பாட்டைக் கண் செலுத்திய சதுர்த்தர்,

லனைச் சிறைக்கூடத்திருந்து மீட்டித் துணைமந்திரியாக வாக்கிக்கொண்டேன். ஆயினும் அவன் அரசனுக்குத் தீங்கிழைக்கா வண்ணம் அவனது செயல்களை யுற்றுநோக்கி வந்தேன். நான் கொண்ட வெண்ணப்படி ராஜ்யபாரம் செவ்வனே நடந்துவரா நின்றது.

## ஐந்துவிரலும் இரண்டுவிரலும்
### (அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை)

நாங்கள் இருவேமும் யோகநந்தனுக்கு மந்திரியாயிருந்து அரசனது செங்கோலை[49] நடாத்தி வருங்கால், ஓர் தினம் யோகநந்தன் வேட்டையாடித் திரும்புங்காலை கங்கையின் மத்தியில் ஐந்து விரல்களையும் உயரக் காட்டிக்கொண்டு ஓர் பஞ்சா (ஹஸ்தம்) தோன்றுவதைக் கண்டான். அதன் பொருள் இன்னதென விளங்காது அரசன் என்னைக் கூப்பிட்டு அதனை யெனக்குக் காண்பித்தான். யான் அதனது சூதை யறிந்து கொண்டு எனது விரல்களில் இரண்டை ஒன்றுசேர்த்து அக்குறியின் முன் நீட்டினேன்; உடனே அவ்விரல்களைந்தும் உள் வாங்கிமறைந்தன. அரசன் ஆச்சரியமுற்று என்னை நோக்கலும் யான் அவனை நோக்கிப் 'பஞ்சாவின் தோற்றம் ஐவரால் ஆகாதது ஒன்றுமில்லை[50] யென்பதை யுணர்த்திற்' றென்றும், யான்

---

[49] செங்கோல்=ஓர் பக்கமும் வளையாது நேரிதாகச் சென்ற கோல். பக்ஷபாதமில்லாது நடக்கும் அரசாட்சி செங்கோலெனப்படும். வலியரென்றும் மெலியரென்றுங் கருதாது நீதியை நெறிவழுவாது நடாத்துதல் செங்கோல்.

[50] பாண்டவர் ஐவரால் மஹாபாரதம் முடிந்ததன்றே!

இரண்டு விரல்களை யொன்றுகூட்டி அதனெதிர் நீட்டியபோழ்து பஞ்சா மறைவுற்ற இரகசியம் ஐவர் எற்றிற்கு! இருவர் ஏக சித்தமாக வொன்றுகூடி நிற்பின் அசாத்தியமான தோன்றுமின்[51] றென்பதனை யுணர்த்திற்' றென்றுங்கூறி யரசனை மகிழ்வித் தேன். எனதறிவின் நுண்மையையும் மகத்துவத்தையுங் கண்டு கொண்ட சகடாலன் தன்னறிவால் என்னை வெல்ல முடியா தென்பதையோர்ந்து மனஞ்சோர்ந்து என்னிடம் பய பக்தியை வகித்தான்.

## சேத்த மீன் சிரித்தவிந்தை

மற்றோர் நாள் ஓர் விப்பிரன் யோகநந்தனது மாளிகையின் மேல்மாடியில் ஓர் ஸ்திரி நிற்பதைக் கீணின்று அண்ணாந்து நோக்குவதை யோகநந்தன் கண்ணுற்று, அந்தப் பிராமணனை அவனது அக்கிரமத்திற்காகச் சிரச்சேதஞ் செய்யும்படி ஆக்ஞை செய்தலும், தண்டஞ்செய்வோர் அவனைக் கடைவீதி வழியாகக் கொலைக்களத்திற் கிழுத்துக்கொண்டு செல்லுகை யில், கடைத்தெருவில் விற்பனைக்காகக் கொண்டுவந்திருந்த செத்த மீன்களிலொன்று அவர்களைப்பார்த்துக்கெக்கெக்கெனச் சிரித்தது. இவ்விந்தையைக் கொலையாளிகள் அரசனிடஞ் சென்று அறிக்கை செய்தபோழ்து, யோகநந்தன் அந்தணனுக் கிட்ட மரணதண்டனையை நிறுத்திவைத்து, என்னை யழைத்து

[51] ஐவராகிய பாண்டவர் ஒருவாறு ஒற்றுமையுடையராயினும் சிறிது மனம் வேறுபட்டவர். இராமலக்ஷ்மணராகிய இருவரோ மாறாது ஒன்றுகூடி மூன்றரைக்கோடி யாயுள்பெற்ற லங்கேசனை முடிவு கண்டனர்.

அவ் ஆச்சரியத்தின் இரகசியப்பொருளைத் தனக்கு விளக்கும் படி வேண்டிக்கொண்டான்.

நான் அவ்விரகசியத்தைத் துலக்குதற்காக வரசனிடம் சிறிது ஆவகாசத்தைப் பெற்றுக்கொண்டுபோய் தனியிடத் திற் றியானத்திலமர்ந்து நின்றேன். உடனே ஜகம் மறைந்து சொற்பனந்தோன்ற அதனுள் நாமகள்[52] (சாஸ்வதி) பிரத்தி யக்ஷமாகி ஓர் பனையைச் சுட்டிக்காட்டி 'நீ யின்றிரவு இவ்விரு க்ஷத்தின் மறைவிலிருந்து இரகசியத்தைத் தெரிந்துகொள்தி' யென வுறுதிகூறி அந்தர்தானமாயினள். கலைமகள் எனக்கு வற்புறுத்திய வண்ணம் அற்றையிரவு அப் பனை மரத்தை யணுகி அதன் மறைவிலிருந்து நான் விந்தையை நாடி நோக்கங் கொண்ட போழ்து ஓர் ராக்ஷசி தனது குழந்தைகள் தன்னைப் புடைசூழ அவ்விடத்திருப்பதைக் கண்டேன். அக்குழந்தை கள் அவளை ஆகாரத்திற்காக மிகவும் தொந்தரித்தன. அவள் அவர்களை நோக்கி 'குழந்தைகாள்! சிறிது பொறுத்திருங்கள் ; உங்கட்கு ஓர் பிராமணனது மாம்சத்தைக் கொண்டுவந்து தரு கிறேன். இன்னமவனைக் கொல்லவில்லை. சற்றே பொறுத்திருங் கள், என்றாள். அதற்கவர்கள் 'ஏன் அந்தப் பிராமணனை இன் னங் கொல்லவில்லை யம்மா'வென்று கேட்டார்கள். அதற்கவள் 'ஓர் செத்த மீன் சிரித்தது, அதுபற்றி யவனைக் கொல்லாது தாழ்க்கின்றார்க' ளென்றாள். பின்னரும் அக்குழந்தைகள் தமது தாயை நோக்கி 'ஏனம்மா செத்தமீன் சிரித்தது ?' என்று கேட்டார்கள். அதற்கவள் 'அந்தப்புரத்தில் மகளிரெல்லாம்

[52] நாமகள், கலைமகள், நாவின் கிழத்தி, வாணி, சரஸ்வதி என் பன வொருபொருட் கிளவி. சிந்தாதேவியென்றுங் கூறப்படுவள்.

நடைகோணினர். புருஷரோ பெண்டிர் வேடம்பூண்டு அந்தட் புரத்தில் சுயேச்சையாய் வதியாநின்றனர். பெண் வேடம்பூண்டு நின்றவோர் ஆடவனை மற்றோர் ஆடவன் பார்த்ததைக்குற்ற மாகக்கொண்டு அரசன் மரண தண்டனை விதித்த விபரீதத்தைக் கண்டு செத்த மீனும் விந்தைகொண்டு நகைத்தது' என்றாள். இவ்வாறு வெளிப்படுக்கப்பட்ட விரகசியத்தை யான் உணர்ந்து வீடுவந்து சேர்ந்து யோகநந்தனைக்கண்டு நடந்த விந்தையை யவனுக்கு வெளியிட்டேன். மெய்யை யுள்ளவாறு காண்பதற் காக அரசன் அந்தப்புரத் திருந்தாரைச் சோதனை செய்வித்த போழ்து சேடியரென வெளிக்குத் தோன்றிய ஆட்களெல்லாம் புருஷராகவே காணப்பட்டார்கள். அரசன் என்னை யொரு வாறு மெச்சி அநியாயமாக மரண தண்டனைக்கு ஆளாகிநின்ற ஏழைப்பார்ப்பானை இக்கட்டு நின்றும் நீக்கிவிட்டான்.

## ஓர் விசித்திர சித்திரம்

பின்னர் ஓர் சமயம் படமெழுதுவதில் மிகக் கைதேர்ந்த சிற்பி யொருவன் அரசனைக் கண்டான். அரசன் தனது தேவி யின் படத்தைச் சித்திரிக்க அவனுக்கு அநுமதி கொடுத்தான். அவ்வாறே அவ்வினைஞன் அவ்வுருவத்தை வரைந்து அரச னிடம் அப்படத்தைக் காட்டியபோழ்து அவ்வோவியம் [53] தனது பட்ட மகிஷியே யுயிரோடும் அசைவின்றி மௌன மாகத் தன்னெதிர் நிற்பதுபோற் றோன்றிற்று. அரசன் மிகவும் மனமகிழ்ந்து சிற்பிக்குத் தக்கபடி வெகுமதி யளித்துத் திருப்தி செய்வித்தான். உயிரோவியம் போன்ற அவ்வற்புத

[53] ஓவியம் = சித்திரம்; எழுதிய படம்.

மான படத்தை யோகநந்தன் அந்தப்புரத்தில் ஓர் சுவரிற் ஞெங்கவிட்டிருந்தான். நான் அவண் போக நேர்ந்தபோது அப்படத்தை நோக்கும்படி சம்பவித்தது. அதனை யுற்று நோக்கியபோழ்து அஃது பட்டமகிஷியின் சாயையாய்க் காணப்படினும் ஓர் லக்ஷணத்தில் அஃது அரசனது தேவி யினுருவத்திற் கிணங்கவில்லையென யோக திருஷ்டியாற் கண்டு அக்குற்றத்தை நீக்குதற்காக எழுதுகோலில் மையைத் தோய்த்து ஓர் மருவை யிடுப்போரத்தில் பொட்டிட்டதுபோ லமைத்தேன். அரசன் அவணுற்றகாலை அச்சித்திரத்தின் இரக சியத் தானத்தில் மருவமைந்திருப்பதைக் கண்டு 'என்னையன்றி எனது தேவியின் இரகசியத்தானத்திருக்கும் குறிகளை எவர் காணவல்லா'ரென வெகுண்டு 'இச்செயல் எவரா' தென வுசாவி னன். அவணுள்ளார் 'ஆடவருள் வாருசியைத்தவிர வேறொருவ ரும் அந்தப்புரத்திற்கு வர அதிகாரங் கிடையாது. வேறொரு வரு மிவண் வந்தில'ரென விடைகூறி அரசனுக்கு என்பேரில் ஐயத்தை விளைவித்தனர்.

## வரருசி கரந்துறைதல்

அரசனுக்கென்பேரில் அடங்காச் சீற்றமுண்டாகவே அவன் சகடாலனை யழைத்து என்னைச் சிரச்சேதஞ்செய்யும்படி யவனுக்குக் கட்டளையிட்டான். சகடாலனோ இன்னது செய்வ தெனத் தோன்றாது என்னைக் கொல்ல மனமும் துணியாது என்னைத் தனது வீட்டிற் கழைத்துக்கொண்டுபோய் சிறிது காலம் மறைந்துறையும்படி வேண்டிக்கொண்டு அரசனுக்குப் போக்குக் காட்டுவதற்காக வேறொருவனைக் கொல்வித்து அவனைச் சாந்தப்படுத்தினன்.

## இராக்ஷதன் வரலாறு

நான் ஓர்நாள் சகடாலனை விளித்து 'நீ என்னை யெத்திறத்தாலும் கொல்ல வொண்ணுதென மனவுறுதி கொண்டாயன்றோ? நீயே மந்திரி,[54] ஏனெனில் நீ என்னை யுள்ளவா கொல்லத் துணிந்தாலும் என்னைக் கொல்ல வுன்னல் சாத்தியப்படாது. யான் ஓர் இராக்ஷதனால் காக்கப்பட்டிருக்கிறேன். அவ்விராக்கதன் இவ்வுலகத்தை வேண்டுமானாலும் விழுங்கவல்ல பேராற்றலை யுடையோன். நீ மிக்க நிபுணன்' என்றேன்.

உடனே சகடாலன் என்பால் முன்னினும் மிக்க பயபக்தியைக் கொண்டான். நான் அவனை நோக்கி மிக விரகசியமாக யோகநந்தனது வரலாற்றை யவனுக்கு விளக்க வெண்ணங் கொண்டு 'இந்திரதத்தன்தான் யொகநந்தனுனன். நீ யவனை மாற்சரியங்கொண்டு கொல்லற்க' வென வேண்டிக்கொண்டேன். அவன் எனது சொல்லை அங்கீகரித்தவன்போற் ருேன்றினுன்.

பின்னர் சகடாலன் என்னை மிகவும் பிரார்த்தித்துத் தனக்கவ்விராக்கதனைத் தரிசனஞ் செய்து வைக்கும்படி கேட்டுக் கொண்டான். அவனது வேண்டுகோளுக்கிரங்கி நான் சிறிது நேரம் மனத்தைத் தாரணை செய்து தியானத்தி லமர்ந்தேன். உடனே சகடாலனுக்கு இராக்ஷதன் பிரத்தியக்ஷ மானுன். இராக்ஷதனைத் தரிசித்தபின் சகடாலன் எனக்கெவ்வாறு இரா

[54] நீயே மந்திரியெனும் சொற்பொருத்த முடையாய்; நீயே மறைவை வூகத்தாலுள்ளவா கண்டனை.

க்ஷதனது சிநேகமும் காப்பும் ஏற்பட்டதென்பதை விளக்கும் படி இரந்துகேட்டான்.

நானவனை நோக்கி 'யோகநந்தன் அரசுபூண்டகாலை இப் பாடலிபுத்ர நகரை இரவிற் காத்து வரும்படி ஓர் ரக்ஷகனை (காவலாளியை) நியமித்தான். அக்காவலாளன் மறுநாள் காணப்படாதாயினன். உடனே யரசன் மற்றொரு ரக்ஷகனை நியமித்தான். அவனும் விடிந்தபோது மாயமாய்க் காணமற் போயினன். இவ்வாறு பிரதிதினமும் நேர்வதை நோக்கி யோகநந்த னித னுண்மையைக் கண்டறிந்து கூறும்படி எனக் காக்ஞையிட்டான். நான் அவ்வாறே யோரிரவு காவலைப் பூண்டு வீதிகடோறும் சுற்றி வரலாயினேன். அப்போழ்து இராக்ஷதன் ஓரிடத்திற் றோன்றி யென்னை நோக்கி 'இவ்வூரில் எவள் மிக்க வனப்பினள்?' எனக் கேட்டான். அம்மாற்றத்தை யேற்றுக்கொண்டு நான் சிறிது புன்முறுவல் செய்து அவனை நோக்கிப் 'பேதாய், அழகென வோர் பொருள் வேறுளதோ? எதனை மனம் மிகக் காமிக்கின்றதோ அதுவே யம்மனத்திற்கு எவற்றினுஞ் சிறந்த சௌந்தரியமுடையதாகும்' என்றேன். உடனே அவ்நிசிசரன்[55] என்னை வியந்து நோக்கி 'நான் உன் பால் மிகவும் மகிழ்ச்சியுறுகின்றேன். நானுனக்குச் சிநேக னாயினேன்; நீ நினைத்த போழ்தில் உன் முன் தோன்றி நீ கோறுங் காரியத்தை முட்டின்றி முடித்துவைப்பேன்" என வெனக்கு வாக்குத்தத்தஞ் செய்தான். அதுமுதல் இராக்ஷதன்

[55] நிசிசரன்=இரவிற்றிரிவோன், இராக்ஷதன், அரக்கன்.

எனக்கு ஆப்த சகாயனுய் என்னைவிட்டு நீங்காது நின்று காத்துவராநின்றுன்' [56] எனக் கூறினேன்.

## வரருசிக்குக் கங்கை பிரத்தியக்ஷம்

பின்னர் ஓர் சமயம் கங்காதேவியைத் தியானஞ் செய்தேன். அவ ளென் முன் பிரசன்னமாகித் தோன்றினள். நான் அவளை மிக பயபக்தியோடும் தோத்திரஞ்செய்து மகிழ்வித்தேன்.

இவற்றையெல்லாங் கண்ட சகடாலன் எனது பாதத்தில் வீழ்ந்து தன்னை யிரக்ஷிக்கும்படி வேண்டிக்கொண்டான். இருவரும் பரஸ்பரம் மிக்க வன்பினராயினோம்.

மறைந்துறையவேண்டி யிருந்ததால் என் மனம் புண்பட்டிருப்பதைச் சகடாலன் கண்டு என்னை நோக்கிப் "பரமக்ஞாதாவாகிய வுமக்கு விசனமென்பதேது? அரசனது புத்திக் குறுக்கத்தை நீர் உணர்விரன்றே. நீர் கடிதிற் சுத்தியைப்[57] பெறுவீர். ஓர் கதை கூறுவல் கேண்மின்' எனச் சொல்லத் தொடங்கினுன்:—

## சிவவர்மன் சரிதம்

ஆதித்திய வர்மனெனுமோர் அரசனுக்குச் சிவவர்மன்

---

56 இவ்வாறே வோர் இராக்ஷதன் துரோபதையை விட்டு நீங்காது நின்று கீசகன் அவளைப் பலாத்காரஞ் செய்யாவண்ணம் காத்து வந்தான்.

57 சுத்தியென்பதிவண் பகைநீக்கத்தை யுணர்த்தும், பயமின்மை யெனும் பொருளையும் தரும். யோகநந்தனது பகையே வாருசியின் மனத்தை வாதித்து வந்தது.

எனப் பெயரிய வந்தணன் மந்திரியாக விருந்தான். இவ்வந்தணன் அரசனுக் குயிர்போன்ற நண்பன்.

ஏதோ காரணத்தால் அரசன் அந்தப்புரத்தைச் சிலகாலம் நாடாதிருந்தான். அவ்வாறிருப்பவும் அவனது தேவியருள் ஒருத்தி கற்பவதியானாள். இவ்விஷயம் அரசனுக்கெட்டிய காலை யவன் மிக வெகுண்டு 'யான் இரண்டு வருஷ காலமாக வந்தப்புரத்தை நாடாதிருப்பவும் எவ்வாறு அவண் கற்பமுதயமாகு' மெனத் துவாரபாலகரை உறுக்கிக் கேட்டபோழ்து அவர்கள் நடுநடுங்கி 'ஏந்தலே, சிவவர்மரைத்தவிர வேறொருவரும் அந்தப்புரத்தைக் கிட்டினதில்லையே. யாங்கள் என்செய்வ' தென விடை கூறலும் அரசனுக்குத் தனது மந்திரியின் மாட்டுத் துவேஷம் உண்டாயிற்று. அரையன் கபடத்தை யுள்ளடக்கித் தனது மந்திரியாகிய சிவவர்மனை யருகழைத்துத் தன் கீழரசனாகிய போகவர்மனிடஞ் சென்று ஓர் வினையை முடித்துவரும்படி ஆக்ஞைபிட்டான். மற்றும், அம்மந்திரி யறியாது வேறோர் தூதுவனை யழைத்து அவன் கையில் 'சிவவர்மன் உன்னிடம் வந்தவுடன் அவனைச் சிரச்சேதஞ் செய்க' வென வெழுதியவோர் ஓலைச்சுருளைக் கொடுத்து 'இதனைக் கடிதிற் கொண்டுபோய் போகவர்மனிடம் சேர்ப்பி' என வாக்ஞைபிட்டான். சிவவர்மனும், அவனறியாது தூதனுப்பப்பட்ட வொற்றனும் போகவர்மனது நகரைக் கிட்டுதற்கு ஏழுநாட் சென்றன.

இதன் மத்தியில் அரசன், ஓர்நாள், தனக்கு ஐயத்தை விளைவித்த சூல்கொண்ட மாது ஓர் தோழியைத் துணைக்கூட்டிக்கொண்டு அரண்மனையை விட்டுத்தப்பியோடப்பார்ப்பதைக்

கண்டு இருவரையும் பிடித்துச் சோதித்தபோழ்து தோழி போல் வெளித்தோன்றிய ஆள் பெண்வேடம் பூண்ட ஆடவனாக ருசுப்பட்டது. உடனே ராணியின் படிற்றொழுக்கம் அரசனுக்குப் புலப்பட்டுச் சிவவர்மனிடத்து பச்சாதாப[58] முண்டாயிற்று.

இதுநிற்க; சிவவர்மனையும் இரகசியமாகத் தூதோலை கொண்டுவந்த ஒற்றனையுங் கண்டு விஷயத்தைத் தெரிந்து கொண்ட போகவர்மன் சிவவர்மனைத் தனியிடத்திற் கழைத்துக்கொண்டுபோய் ஆதித்தியவர்மன் செய்த கபடத்தையவற்கு வெளியிட்டான். அதனைக்கேட்ட சிவவர்மன் ஓர் சிறிதும் மனந்தடுமாறாததுபோல் நடித்து அச்சிற்றரசனை நோக்கி 'நீர் காலந்தாழ்க்காது என்னைச் சிரச்சேதஞ் செய்துவிடு' மெனக் கூறினன். போகவர்மன் ஆச்சரியமடைந்து 'நீர் ஏன் மிக வெளிதாகச் சாகத் துணிந்தீ' ரென வுசாவினன். அதற்கம்மந்திரி 'என்னை எவ்விடத்திற் கொல்வார்களோ அத்தேயத்திற் பன்னீராண்டு வற்கடம்[59] உண்டாகு' மென்றான். உடனே போகவர்மன் அச்சமுற்று 'எனது நாட்டைப் பாழாக்கவன்றோ ஆதித்தியவர்மன் கொடிய பிரஹ்ம

---

[58] பச்சாதாபம்=பின் இரக்கம் (பதப்பொருள்); ஐயோ வென் செய்தோ மெனவெழும் இரக்கசிந்தனை; பின்புத்தியால் மனம்தவித்தல்.

[59] வற்கடம்=மழை பெய்யாமை, நீரறுகை, க்ஷாமம்.

பெரும்பாதகங்கள் பூமியில் நிகழின் கோள்கள் நிலைதிரிந்து வற்கடம் நிகழும்; வருணஜபம் பிராயச்சித்தம்.

கோவலவன் அநியாயமாய் வெட்டுண்டதால் பாண்டிநாடடைந்த க்ஷாமத்தைச் சிலப்பதிகாரத்திற் காண்க.

ஹத்தியைப் புரியும்படி எனக்குக் கட்டளையிட்டான்' எனச் சீற்றங்கொண்டான். ஆயினும் வலியான் மேற்செல்லலாகா வெகுளியை மனத்தடக்கிச் சிவவர்மனைத் தனது நாட்டிலிருத் திக்கொள்ளுதற்கு மஞ்சி சிவவர்மனுக்குத் தக்க காப்பமைத்து அவனை வேறோர் தேசத்திற் போய்ச் சஞ்சரிக்கும்படி யனுப்பி விட்டான். பார்த்தீரோ, சிவவர்மன் தனது சமயோசித புத்தி யால் தனது பிராணனைக் காப்பாற்றிக்கொண்டு மரணபயந் தீர்ந்தான். உமக்கும் சுத்தி கதிதிலுண்டாகும். இன்னுஞ் சிறிதுகாலம் மறைந்துறைதி 'ரென வேண்டிக்கொண்டான்.

அவ்வாறே யவனது கிரஹத்தில் சில நாட்களை யோட்டி வந்தேன்.

## சினேக வஞ்சகத்தால்
## நந்தகுமாரனுக்குப் பைத்தியம் பிடித்தல்

இவ்வாறு காலஞ்செல்லா நிற்புழி, யோர் நாள் யோகநந்தனது குமாரன் ஹிரண்யகுப்தன் என்பவன் வனத் தில் வேட்டையாடச் சென்றிருந்தான். பொழுது விழுந்து இருள் வந்து கவிந்து கொண்டமையால் அரசகுமாரன் தங்கி இரவைக் கழிக்க வேறு புகலிடமின்றி யோர் மரத்தி லேறினான். அப்பொழ்தோர் கரடி யோர் சிங்கத்தால் துரத்தப்பட்டுத் தான் அரண்கொண்டிருந்த மரத்தை நோக்கி யோடிவருவதைக் கண்டான். இவன் யாது நேருமோவெனத் திகிலுறுங்கால் அக்கரடியும் தனது உயிரைக் காப்பாற்றுதற்காக அம்மரத்தி லேயே ஆரோகணித்தது. அரசிளங்குமரன் இருதலைக் கொள்ளி எறும்புபோல் அச்சமுற்றான். தெய்வீகத்தால் அக்கரடி அவனை நோக்கி 'நீ என்னைப்பற்றி பயப்படாதே ;

உன்னை நான் சிங்கத்தினின்றும் பாதுகாப்பேன் ; நீ பயத்தை யொழித்து எனது மடியில் நித்திரை புரி ' யெனச் செப்பிற்று. ஹிரண்யகுப்தன் அச்சத்தை விட்டுக் கரடியின் மடியிற் கண் வளர்ந்தான். அப்போழ்து சிங்கம் கரடியை நோக்கி 'நான் உன்னையே நோக்கிப் பக்ஷிக்க வந்தேனாயினும், நீ யப்புருஷனை என்னிடம் தள்ளி விடுவையேல் யான் அவனை பக்ஷித்து உன்னை வாளா விட்டுவிட்டுப்போய்விடுகிறேன்' என்றது. கரடி மிருகேந்திரனை நோக்கி 'அபயமடைந்தவரைக் கைநழுவ விடுவது பெரும் பாதகம்'எனச் செப்பிற்று. பின்னர் பையன் விழித்துக் கொண்டான். அப்போழ்து கரடி யவனை நோக்கி 'எனக்குச் சிறிது நித்திரை வராநின்றது. யான் உனது மடியிற் றலைவைத்துக் கொஞ்சம் தூங்குகிறேன். நீ ஜாக்கிரதையாயிரு' வெனச் சொல்லி நித்திரைகொண்டது. அப்போழ்து சிங்கம் விழித்திருக்கும் ராஜகுமாரனை நோக்கி 'கரடி தூங்கியெழுமாயின் தனது பசியைத் தீர்க்க வுன்னைத் தின்றுவிடும். கரடியைக்கீழே தள்ளிவிடுவையாயின் உனதுயிரை நீ தப்பிக்கொள்ளலா' மெனக் கூறிற்று. பேதையன் சிங்கத்தினது துரோக வார்த்தையை உறுதி பயப்பதாகக்கொண்டு கரடியைக் கீழே தள்ள முயன்றான். [60] உடனே நல்வினைப்பயனால் கரடி விழித்

[60] பசியென்பது மக்கள்மாட்டும் விலங்குகள் மாட்டும் வயிற்றினிடத்தே யமைந்த தீயாகும். 'அன்னையிட்ட தீ யடிவயிற்றினி' லென்றாரன்றே! விலங்குகட்குப் பகுத்தறிவின்மையின் பாவபுண்ணியங் கிடையா. மாந்தர்க்கோ அவ்வறிவுண்மையின் அவர்கள் பாவ புண்ணியங்கட்குக் கட்டுப்பட்டிருக்கிறார்கள். 'அறம்பாவமென்னும் அருங்கயிற்றாற் கட்டி' யென்றனரடிகளும். பசி மூண்டெழின் நல்லாரையும் பாவத்திற்காளாக்கப் பார்க்கும். ஆதலின் பசிப்பிணியின்

துக்கொண்டு ஓர் கிளையைப்பற்றித் தன்னைக் கீழே விழாமற் காத்துக்கொண்டு நந்தகுமாரனை நோக்கி 'ஏ சிநேகத்துரோகி, நீ பைத்தியங் கொள்ளக்கடவாய்' எனச் சபித்தது. உடனே ஹிரண்யகுப்தனைப் பைத்தியம் பிடித்துக்கொண்டது.

---

உள்ளீட்டை யறிந்து அதனை யறத்தின்வழி நடாத்துவது மாந்தர்க்குச் சதுர்ப்பாடு.

பசியை யுள்ளவா றெரிந்துகொண்டவன் எல்லாம் வல்ல சிவனுகின்றான். ஆதலின் பசியை யோம்பி வாழ்க. பசியையாற்றுதற்கியன்ற வன்னம் பிரமசொரூபமே. ஆதலின் நமக்குணவாகி அறிவையும் ஆற்றலையும் பயத்தற்கேதுவாகிய அன்னத்தை வழுத்தவேண்டும். பிராண நிலையமான அன்னத்தின்பால் செய்ந்நன்றி மறவற்க.

அன்னத்தைப் புசிப்பதே கண்ணுகவிருக்கும் பசியென்னும் நமது தோழனை யுற்றுநோக்கின் அதுவே உயிராகும். பசிமயமே உயிர். சகல ஜீவராசிகளும் தம்முயிரை யோம்புதற்காக மறதியுற்ற உயிர்கள் பதுங்கிக்கிடக்கும் ஆகாரங்களை யருந்தாநிற்கும்.

இக்கதையில், கரடி தனதுயிரைப் பாதுகாக்க மரத்திலேறிற்று. ஹிரண்யகுப்தன் பயமெய்தினன். கரடி யபயங்கொடுத்தது. ஹிரண்யகுப்தனே பழிபாவங்கட் கஞ்சாது கரடியைச் சிங்கத்திற் குணவூட்டப் பார்த்தான். இவருள் தனது காரியமே கண்ணுயிருந்த சிங்கம் அருளின்மையாகிய மறத்தைக் குறிக்கும். கரடியோ அருள்மயமான அறத்தைக் குறிக்கும். ஹிரண்யகுப்தனே புண்ணிய பாவங்களை யறியும் பகுத்தறிவைச் சுயநலங் கருதிக் கைவிட்டுப் பாவியானன். தன்னுயிர்க்கு ஹானிவருங்கொலோவென வேறுயிரைக் கொன்று தன்னைக் காக்கநோக்குதல் அறமாமோ !

'தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை'

எனப் பொய்யாமொழியன் கூறினன்.

அவன் வீடுவந்து சேர்ந்தபோழ்து, யோகநந்தன் தனது மக னுக்கு நேர்ந்த இக்கட்டைக் கண்டு சோகக்கடலு ளாழ்ந்தான். மணிமந்திர ஔஷதங்களால்[61] நானுவித வுபாயங்கள் செய்தும் விபரீத புத்தி தொலையவில்லை. அப்போழ்து அரசன் சகடா லனை நோக்கி "ஐயோ இச்சமயம் நமது வாருசி யிருப்பா னாயின் எவ்வளவெளிதி லிவ்விக்கட்டு நீங்கும்!" என மிகவும் பச்சாதாபத்தோடு மொழிந்தான். சகடாலன் "இதுவே வாருசிக்கு நற்கால"மென மனத்திலுன்னி மிகவும் பரவசப்பட்டு யோகநந்தனது பாதங்களில் வீழ்ந்து 'அரச, திருவருளால் வாருசி யுயிரோடிருக்கின்றார். அவருக்கும் எனக் கும் அபயங் கொடுக்கவேண்டு' மெனப் பிரார்த்தித்தான். இம் மாற்றம் அரசனது செவியிற் புகவே சோகக்கடலு ளாழ்ந்து கிடந்த வரசன் மனம் ஆனந்த சாகரத்தில் மூழ்க வாரம்பித் தது. உடனே யரசன் "நமது காத்தியாயனைக் கடிதிற் கொணர்தி" யென வாக்ஞையிட்டான். சகடாலன் ஓடோடி யும் வந்து என்னை மகிழ்வித்து என்னை யரசனிடம் இட்டுக் கொண்டுபோய் விட்டான். அரசன் என்னை நல்வரவேற்ற பின் நான அவனது வியாகூலத்தைத் தணித்தற்காக நாமகளைச் சிறிதுநேரம் தியானித்தலும் அவள் எனது

[61] மணி யென்பது கண்ணினுள் நோக்கத்திற் கேதுவாயிருக் கும் ஜோதிமணியை யுணர்த்தும் ; "காகத் திருகண்ணிற் கொன்றே மணி கலந்தாங்" கென்பதா லுணர்க. சில நோய்கள் பார்வையாற் தீரும் ; அவ்வாறு முடியாதாயின் மந்திரத்தாற் றீரும் ; அதனானு முடியாதாயின் மருந்தாற் றீரும். மணிமந்திர ஔஷதங்களாற் றீரா தாயின் தெய்வமே தீர்க்கவேண்டும்.

நாவிலெழுந்தருளவே யான் நடந்த விர்த்தாந்தம் அனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கக் கண்டு அவற்றை யெடுத்துரைத்து இளவரசின் பைத்தியம் மித்துருதுரோகத்தால் விளைந்ததெனச் செப்பினேன். கலைமகள் கடாக்ஷத்தால் அவ் இளைஞனது விபரீதபுத்தி மாறி நல்லறிவு தோன்றிற்று. அரசன் மன முவந் தென்னைக் கொண்டாடிப் பின்னர் ' இவ் இரகசியம் உனக்கெவ்வாறு வெட்டவெளிச்சமாயிற்' றெனக் கேட்டான். நான் அவனை நோக்கி ' மறைவாயிருக்கும் இரகசியத்தை அறிஞர் மூன்றுவித பாட்டைகளாலுணரவல்லார். அவை லக்ஷணம், அனுமானம், பிரதிபா 62 வாகிய மூன்றும். பேரறிஞர் எதனையும் தமது ஞானதிருஷ்டியாற் கண்டு கூறக்கூடும். உனது தேவியின் இரகசியத்தானத்திருந்த மச்சத்தை அன்று எவ்வாறு காணுதே கண்டு படத்

---

62 சாமான்யருக்குப் புலப்படாத விரகசியங்களை அறிஞர் மூன்றுவித மார்க்கங்களா லுணரவல்லர். அவை இலக்ஷணமாகிய வெளிக்குறி அனுமானமாகிய ஊகம், பிரதிபாவாகிய உள்ளுணர்வு. [ These may be construed in English as Signs, Inference and Intuition.]

ஒருவனை யேதேனுமோர் விஷம் தீண்டி யவன் அவத்தை யுறுநிற்ப ' இஃது இன்ன விஷத்தால் நேர்ந்த' தெனச் செப்புதற்கு வாயில் சாத்திரங் காட்டும் லக்ஷணம்.

புதிதாய் ஆற்றிற் பிரவாகமுறுவதை நோக்கி ' மழை பெய்ததுண்' டெனக் கோடற்கு வாயில் அனுமானம்.

தான் ஓர் விஷயத்தை நேரிற் கண்டறியாதிருப்ப வோர் குறியேனும் ஊகத்திற்கோர் பிடியேனும் கிட்டாதிருப்பவும் அம்மறையை வெளிப்படுப்பதற்கு வாயில் பிரதிபாவாகிய அருளாம்.

தில் மருவை யமைத்தேனோ அவ்வாறே உனது மைந்தனுக்குப் பைத்தியம் வந்த காரணத்தை இன்றும் காணாதே கண்டு சொன்னேன். புத்திமான்கட்கு ஒழுக்கத்தின் மிக்க தன முளதோ [63] வென்றேன். யோகநந்தன் லஜ்ஜையையும் பச்சா தாபத்தையுங்கொண்டு என்னை மிக வுபசரித்து மரணதண்டனை யினின்றும் நீக்கினான். நான் அவனிடம் செலவுபெற்று வீடு வந்து சேராநின்றேன்.

## வரருசி துக்கசாகரத்திலாழ்ந்து கரையேறல்

நான் எனது கிரகத்திற்கு வந்தபோழ்து எனதுத்தம பத்தினியாகிய உபகோசை யான் மரணதண்டனையுற்று மாண்டு விட்டதாக வெண்ணி அக்னிப்பிரவேசஞ் செய்ததாகவும் என தன்னையாகிய வசுதத்தை ஏகபுத்திரனாகிய நான் அரசனாக்ஞை யால் சிரச்சேதமுற்றதாகக் கேள்விப்பட்டு ஹிருதயம் நொந் துடைந்து இறந்துபோய் விட்டதாகவுங் கேள்விப்பட்டேன். எனக்கப்போழ்துண்டான சோகம் அளவிட்டுரைக்கற் பால தாமோ! மிதமிஞ்சிய துக்கத்தால் மூர்ச்சித்து வீழ்ந்தேன். பின்னர் பிரக்ஞையுற்றெழுந்தேன். உபகோசையாகிய பெண் மணியை யிழந்த உபவருஷர் என்னை நோக்கி 'ஓ காத்தியாய னரே, நீர் ஒன்றுமறியாத பேதையரைப்போல் வீணே துக்க முறுகின்றீர். இம்மண்ணுலகில் எல்லாம் அநித்தியமன்றி நித்

[63] இவ்வாறு வாருசி கூறியது அரசன் தனது பேரறிவையும் தனது சீலத்தையும் நோக்காது வீண்பழிக்காளாய்த் தன்னை ஐயுற்றுத் தனக்கு மரணதண்டனை விதித்த மௌடீகத்தை யெடுத்துக் காட்டி யதனைக் களைதற்கென்க.

தியப்பொருளெஃது. ஈசனது மாயப்பிரபாவத்திற் சிக்குண்டு[64] சத்தை நோக்காது வீணே யேன் தவிக்கின்றீர். ஞானக்கண் கொண்டு நோக்கின் துக்கம் எங்கணுளது, எல்லாமாயமன்றோ. பிறர்மனம் தடுமாறின் அவர்க்குறுதி காட்டி யவரை நல்வழிப் படுத்த வல்ல பேறிஞராகிய நீர் அவ்வுறுதியை நோக்காது அலமருவது இறும்பூதே' யெனவெனக் கறிவைத் தூண்டி விட்டார்.

## வரருசி துறவு பூணல்

உடனே யென்மாட்டு தைரியமூற்றெடுப்ப நெஞ்சம் விரக்தி பூண்டது. சாந்தியே பெரும்பேறாகத் தோன்றலும் நான் அதனை நாடி பாடலிபுத்ரத்தைவிட்டு நீங்கிக் காட்டுவழிக் கொண்டு ஓர் தபோவனத்தை யடைந்து சாந்தியே கண்ணாகத் தவஞ்செய்ய லுற்றேன். அவண் நான் உறைதரா நிற்கையில் ஓரந்தணன் அயோத்திமா நகரினின்று அவ்வழியாக வந்தனன். உலகவிஷயம் எட்டாத தானத்திருந்தமையால் அப்பார்ப் பானைக் கேட்பின் லோக விஷயம் புலப்படுமென வெண்ணி பாடலிபுத்ர நகரவிர்த்தாந்தத்தை யவனிட முசாவினேன். அவன் யோகநந்தன் கதியை யுரைக்கலாயினன்—

---

[64] இப்பிரபஞ்சம் ஈசன் விளையாடும் களம். ஜீவர்கள் அவனால் ஆட்டுவிக்கப்படும் மாம்ச பொம்மைகள்; தம்மை மறந்து பாதந்திரரா யிருப்போர்.

'ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டில்
உய்வார்க ளுய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பா யினியேலோ ரெம்பாவாய்'

என்றெழுந்த வாக்கைக் காண்க.

## சாணீக்கியனது

## விரோதத்தால் யோகநந்தன் மரணமுறல்

'வரவர யோகநந்தன் சகடாலனது சூழ்ச்சி வயப்பட்டான். மந்திரியாகிய சகடாலன் யோகநந்தனைக் கொல்லுதற்குகந்த வழியை நாடி நின்றான். இந்நோக்கத்தோடு சகடாலன் காலத்தைத் தள்ளி வருங்கால் ஓர் நாள் ஓர் பிராமணன் ஓரிடத்திலிருந்து நிலத்தை வாளாதோண்டுவதைக் கண்டான். உற்று நோக்கிய போழ்து சாணீக்கியனாகிய அந்த விப்பிரன் ஓர் அறுகம்புல்லை வேரொடுங் களைந்து பொடியாக்கி நீரிற்கலந்து உட்கொள்ளுவதைக் கண்டான். 'ஈதென்ன காரியஞ் செய்கிறாய்' யென வவனைக் கேட்ட போழ்து, அவன் 'இவ்வறுகு நான் அதற்கோர் ஊறுபாடும் செய்யாதிருப்பவும் என்னை எவ்வளவு கடுமையாய்க் காலிற் குத்திற்று! வீணாக வெனக்குத் துன்பமூட்டிய அவ்வறுகம்புல்லை நான் சமூலமாய்க் களைந்து அதற்குச் சர்வ நாசத்தை யுண்டுபண்ணினேன்' என்றான். சாணீக்கியனது மனநிலையை யுணர்ந்த சகடாலன், சிந்திப்பான் 'இந்தப் பிராமணன் யார்மேலாயினும் வைரங்கொள்வானாயின் தனது க்ஷாத்திரத்தை எவ்வழியானும் முற்றுவிப்பன். இதற்கையமின்று.' இவ்வாறு சிந்தித்து யோகநந்தனது முடிவை யிவனாற் சாதிக்கலாமெனத் துணிவைக்கொண்டு சாணீக்கியனைத் தனது கிரகத்திற் கழைத்துக்கொண்டு சென்றான். சகடாலன் சாணீக்கியனை மிகவும் உபசரித்துப் பின்னர் அவனைநோக்கி 'வருகின்ற திரயோதசி யன்று அரசனது பிதாவிற்குச்சிரார்த்

தம்.[65] உமக்கு அக்கிராசனம்[66] கிடைக்கும்படி செய்கிறேன். லக்ஷம் பொன் தத்தம் கிடைக்கு' மென வவனுக்கு உவகை யூட்டி வைத்தான். சிரார்த்த தினத்தில் அவ்வாறே சாணீக்கியன் அக்கிராசனத்தை வகித்தபோழ்து சுபந்து வெனப் பெயரிய மற்றோர் பார்ப்பான் சாணீக்கியனோடு அந்தப் பிரதம ஸ்தானத்தைப்பற்றி வாதாடினன். இப்போராட்டத்தைச் சகடாலன் அரசனுக்குத் தெரிவித்தான். அரச னவண் குறுகி சாணீக்கியனை வெகுண்டு சுபந்துவிற்கு அக்கிராசனத்தைக் கொடுத்தான். அரசன் இவ்வாறு தன்னை அவமதித்ததைக் கண்ட சாணீக்கியன் பொறையிழந்து கோபாவேசத்தோ டரசனை நோக்கி 'இன்னம் ஏழுநாளையிலுன்னைத் தொலைத்துப் போடுகிறேன், பார்' என வெஞ்சினங் கூறினன். வெகுளி பொங்கிய வரசன் அவனை யூறு செய்யுமுன்னம் சாணீக்கியன் தப்பியோடிப் போய்விட்டான். சகடாலன் சாணீக்கியனுக்குத் தனது வீட்டில் மறைவிடம் தந்தான். சாணீக்கியன் ஓர் அபிசாரஹோமஞ்[66] செய்து ஓர் கிருத்தியத்தை (மாவாற் செய்த பொம்மையைச்) சாதனஞ்[67] செய்து

---

[65] இறந்துபோன மூதாதைகளான பிதுர்க்களுக்கு அவர்கட்குரிய தினத்தில் பலியூட்டுகை. இஃது சிரத்தையோடு செய்யப்பட வேண்டிய கர்மமாதலின் சிரார்த்தமெனப்படும்.

[66] அக்கிராசனம்=முதல் இடம்; பிரதமஸ்தானம்.

[66] அபிசார ஹோமம்=பிறரது கேட்டைக் கருதிச்செய்யும் அக்னி காரியம்.

[67] சாதனம் இவண் சக்தி யேற்றுவதை யுணர்த்தும். மாப்பொம்மையில் மாந்திரீகன் தான் கருதும் சக்தியை யேற்றித் தனது மனோரதத்தை முடிக்கப் பார்ப்பான்.

அதனை யரசன் பேரில் பிரயோகித்தான். அதனால் யோகநந்தனை நாவறட்சியோடு கடுமையான சுரம் தாக்கிற்று. வரவரக் காய்ச்சல் முதிர்ந்து சாணிக்கியன் கூறியபடி ஏழாம்நாள் யொகநந்தன் மண்ணோடு மண்ணானன். யோகநந்தன் மரண முற்றபின் சகடாலன் அவனது புத்திரனான ஹிரண்யகுப்தனை யும் கொல்வித்தான். வைரத்தை விடாது சகடாலன் தனது பழியைத் தீர்த்துக்கொண்டான். பின்னர் பூர்வ நந்தனு யிருந்தவனது குமாரனான சந்திரகுப்தனுக்குப் பட்டங் கிடைத்தது. சாணிக்கியனுக்கு மந்திரித்தானத்தைக் கொடுத்துவிட்டு சகடாலன் தனது பழிதீர்ந்தும் புத்திரசோகத்திற் காற்றாய்த் தவஞ்செய்ய வனஞ்சென்றான். இவ்வாறு அயோத்தியிலிருந்துவந்த பிராமணன் சொல்லக்கேட்டு எல்லாம் சஞ்சலத்திற்கே யிடமாகின்றதென வெண்ணி அந்தத் தபோவனத்தை விட்டு நீங்கி விந்தியவாசினியைத் தரிசிக்க விவண் வந்தேன். எனக்குப் பாஞானக்கண் திறந்து பூர்வ ஞானம் உதயமாகாநின்றது. எனது சாபமும் என்னைவிட்டு நீங்காநின்றது. நான் தேகத்தை விடப்போகிறேன்.

## வரருசி காணபூதிக் குறுதிகூறல்

நீ யிவண் சிறிதுகாலம் காத்திரு. குணாட்டியன் தனது சீஷர்களோடு மிவண் வருவன். அவன் ஓர் பிரதிக்ஞையால் சம்ஸ்கிருதம், பிராகிருதம், தேசபாஷைகளாகிய மூன்று பாஷைகளேயுந் துறந்தவன். அவன் பிரமத கணத்திலொருவன். பெயர் மாலியவான். தேவி சாபத்தால் மானிட யாக்கை கொண்டான். யான் உனக்குக் கூறிய மகா கதைகள் யாவற்

றையும் அவனுக்குக் கூறு. இருவீரும் சாபவிமோசனம் பெறுவீர். நான் பதரிக்குச் செல்லாநின்றேன் என வரருசி தனது கதையை முடித்தான்.

## வரருசி தங்நிலை யடைதல்.

பின்னர் வரருசி பதரியை [68] நோக்கிச் செல்லுங்கால் ஓர் பிராமணத் தவசி தர்ப்பை கொய்துகொண் டிருக்கும்போழ்து அஃது கையை யறுத்து இரத்தம் ஒழுகாநிற்ப, வரருசி அத் தவசி யகங்காரத்தை யொழித்தானோ வில்லையோ வென்பதை பரிக்ஷித்தற்காக அவனது கையினின்று பொழியும் குருதி யொழுக்கை மாற்றிச் சாகா விரச [69] மாகத் திரித்தான். அத

[68] பதரி: இஃதோர் புண்ணிய க்ஷேத்திரம் ; அளகநந்தம் ஹிமாசலத்தி லுற்பத்தியாகு மிடத்திற்குச் சமீபமாயுளது. இதுவே நாராயணன் மகேஸ்வரனது அனுக்கிரகத்தைப் பெற்ற விடமாகப் பாரதம் கூறும். இலந்தமரங்கள் மிக நிரம்பியதால் இத்தலத்திற் கிப்பெயர் போந்த தென்ப.

கங்கை ஹிமாசலத்தி லுதயமாகு மிடத்தின் சமீபத்தே யுள்ளது கேதாரம். பதரியும் கேதாரமும் சிவ நாராயணர்கட் குகந்த தலங்கள்.

[69] சாகாரசம் = சாகை + ரசம் ; இலைகிளைகளிற் பாயும் இரசம்.

விலங்குகள் மாட்டும் மாந்தர்மாட்டும் இரக்தமுள்ளதுபோல் விருக்ஷங்களில் அவற்றிற்குயிராய் ஜீவரசம் ஓடாநிற்கும். தேவர்களது சரீரத்தில் நமது சரீரங்களுட்போல் இரக்தம் பாயாது சாகாரசமே பாயும். இந்தச் சாகாரசமே தேவர்கள் சாகாமைக்குக் காரணம். இவ் விரதம் பொழியா நின்றதாலன்றே விருக்ஷாதிகள் துண்டிக்கப்படினும் உயிர் நீங்காது திரும்பவும் தளிர்க்கவல்லனவா யமைந்தன. இரக்தமாகிய இரதம் பாயும் ஜீவர்கள் துண்டிக்கப்படின் உயிரைத் தாங்கி நிற்கப்பாலனவோ !

கிரீக்கரும் தேவசரீரங்களில் சாகாரசம் பாயுமெனக் கொண்டார்கள்.

னைக் கண்ட தவசி தனக்குத் தனது தவவலியால் தெய்வீக சக்தி கைகூடியதென்று செருக்குற்றான். அவனை நல்வழிப் படுத்த வெண்ணங்கொண்ட வாருசி யவனைநோக்கிப் "பேதாய் பெருந்தவ முடிப்பவனுக்கு அகங்கார மெற்றிற்கு? அகங் காரமோ அற்பத்தின் மகிழுறும் பெற்றியது. அகங்காரம் நசி யாதவரை அகண்டாகார பிரஹ்மசொரூபம் எவ்வாறு விளங்கு' மென்றான். தவசி யுடனே செருக்கொழிந்து வாருசியைப் பணிந்து நின்றான். அவனுக் கருள்புரிந்து அவனை நல்வழிப் படுத்திவிட்டு வாருசி பதரிகாசிரமத்தை யடைந்து மனத் தைத் தாரணைசெய்து யோகாக்னியைத் தேகத்தி லெழுப்பி அவ் அக்னியாற் றனது ஜடத்தைத் தகித்து கைலாசத்திற் றனது பூர்வநிலையை வகித்தான்.

ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிட
ரான கெடுப்பன வஞ்செ ழுத்துமே.

ஓம் திருச்சிற்றம்பலம்.

## ஆறும் தரங்கம்

### குணாட்டியன் வரலாறு

தேவிசாபத்தால் பிரமத கணத்தனான மாலியவான் மனித வுடம்பெடுத்து குணாட்டியனெனும் நாமம் பூண்டு சாதவாகன பூபதிக்கு மந்திரியாகவிருந்து ஓர் பிரதிக்ஞையால் சம்ஸ்கிருதம் பிராகிருதம் தேசபாஷை மூன்றையுந் துறந்து வாட்டத்தோடு தேவியது கடாக்ஷத்தை நாடி விந்தியவாசினிக்கு வந்து துர்க்

கையைப் பிரார்த்தித்தகாலை தேவி பிரசன்னமாகி யவனை நோக்கி 'நீ காணபூதியைக் காணக்கடவாய்' என வாக்கை யிட்டாள். அவ்வாறே குணாட்டியன் அவ்வடவியிலிருந்த காணபூதியைக் கண்டதும் குணாட்டியனுக்கு ரிதம்பரப் பிரக்ஞை [70] உண்டாயிற்று. உடனே தனது பூர்வநிலை ஆதி யோடந்தமாகத் தனது ஞாபகத்திற்கு வந்தது. குணாட்டி யன் பைசாச பாஷை மூலமாகத்தான் இன்னானென்பதைக் காணபூதியாகிய பிசாசத்திற் குணர்த்திப்பின்னர் 'நீ புஷ்ப தந்தனிடம் கேட்ட மகா கதைகளை எல்லாம் விரைவில் எனக் குக் கூறு; அதனால் இருவருக்கும் சாபவிமோசன முண்டாகு' மென்றான். அதற்குக் காணபூதி மிகவும் மனமகிழ்ந்து சம் மதித்துக் குணாட்டியனை வணங்கி 'நான் நீர் கேட்டபடி கதை கள் அனைத்தையும் உமக்குக் கூறுமுன்னம் நீர் தயைசெய்து உமது வரலாற்றினை எனக்குணர்த்தும்படி பிரார்த்திக்கிறே' னென்றான். உடனே குணாட்டியன் தனது மண்ணுலக வாழ் வை விளக்கத் தொடங்கினான்,—

## குணாட்டியன் அவதாரம்

பிரதிஷ்டான தேசத்தில் [71] சுப்பிரதிஷ்டமெனும் நகரில்

---

[70] ரிதம்பர ப்பிரக்ஞை=நேரிதான மெய்யறிவு. ஒருவன் றனக்கெவ்வாறு அனாதியிலிருந்த அத்துவித நிலைவிண்டு பிறவி நேர்ந்ததெனும் காரணத்தை யுள்ளவா காண்கையே மெய்யறிவு.

அனாதி சிவரூப மாகிய ஆன்மா
தனாதி மலத்தாற் றடைப்பட்டு நின்றது
தனாதி மலமும் தடையற்ற போழ்து
அனாதி சிவரூப மாகிய வாறே. திருமந்திரம்

[71] இத்தேசம் கோதாவரியின் கிளைநதிகளிரண்டின் நடுவணை மைந்துள தேசமாகத் தோன்றுகின்றது. தத்காலம் பீரார் எனும் நாடு

சோமசர்மனெனும் அந்தணனுக்கு வத்சன் குல்மகன் எனும் புத்திரரிருவரும் சுருதார்த்தை(கேள்விச்செல்வி)எனும் புதல்வி யும் உதித்தார்கள். தாய்தந்தைய ரிறந்தபின் சகோதரரிரு வரும் தமது தங்கையாகிய சுருதார்த்தையைக் கன்னிப்பரு வத்திற் காத்துவாாநின்றனர். இவ்வா யிருப்பவும் தெய்வீகத் தால் சுருதார்த்தை சூலாயினள். சகோதரிருவரும் ஒருவர் மேலொருவர் சந்தேகங்கொண்டு கவலைக்கடலு ளாழ்ந்தனர் நிரபராதிகளாகிய தனது சகோதரர் வீணுக வொருவர்பே லொருவர் துவேஷமுற்று துக்கத்திலாழ்வதைக் கண்ட அக் கன்னிகை அவர்களைநோக்கி ‘ நீங்கள் துயருறவேண்டாம். நான் சொல்வதைக் கேண்மின் ; நாகராசனுகிய வாசுகிக்கு ஓர் சகோ தர னுளன் ; அவனது புத்திரனுன கீர்த்திசேனனெனும் நாக குமாரன் நான் தீர்த்தமாடும்போழ்து என்னைக்கண்டு மிகவுட காமங் கொண்டான். அவன் மிகவும் என்னை வேண்டிக்கொண்ட தால் யான் அவனது கருத்துக்கிசைந்து இருவரும் காந்தர்வ மாக மணந்துகொண்டோம். அவனே பிராமணன். இந்த கற்பம் அவனுல் விளைந்த’ தென்றுள்.

அண்ணன்மார் அவளது மாற்றத்தைக் கேட்டு ‘ நீ சொ லும் வசனத்தை எங்கட் குறுதிப்படுத்திக்காட்’ டென வேண் லும் அவள் மனத்தால் கீர்த்திசேனனை நாடினுள். உடனே

---

இதுவேபோலும். சுப்ரதிஷ்ட நகரம் சாலியவாகனன் காலத்தி மிகப் பிரசித்திபெற்ற விடமாக விருந்தது. இதன் சமீபத்தில் தே கிருத் எனும் தெய்வீக நந்தவனம் இருந்தது. மகமதீய அரசர்க லொருவனுன டோக்லாக் என்பவன் டில்லியைக் கைவிட்டு இவ்விட த்தையே தனக்குத் தலைநகராக்கக் கருதினுன்போலும்.

அவ் நாககுமாரன் அவர்கள்முன் தோன்றி யவர்களை நோக்கி 'நானே யிவளை வரித்துக்கொண்டேன். இவள் பூர்வம் ஓர் நீரரமகள் (அப்சரஸ்). சாபத்தாலுந்தப்பட்டு மண்ணுலகிற் பிறந்தாள். நீங்களும் சாபபிரஷ்டமுற்று இவளோடு மண்ணினுதித்தீர்கள். இவளது கற்பத்தினின்றுதிக்கும் புதல்வனால் நீங்கள் மூவரும் சாபவிமோசனம் பெறுவீர்க'ளெனச் செப்பித் தன்னிடத்திற்குச் சென்றான்.

கீர்த்திசேனன் செப்பியவாறே சுருதார்த்தை வயிற்றிலோர் புத்திரன் பிறந்தான். அக்குழந்தைதான் யான். நான் புவியிற் றோன்றியகாலை ஓர் அசரீரி பிறந்து 'இக்குழந்தை யோர் கண வவதாரம். இவனுக்குக் குணாட்டியனெனும் நாமத்தைச் சூட்டுக' வெனச் செப்பிற்று. பின்னர் சிறிது காலங் கடந்து எனதன்னையும் மாமன்மாரும் சாபவிமோசனம் பெற்றுத் தத்தங் கதியைக் கிட்டினர்.

## குணாட்டியன் தக்ஷணம் சென்று கல்வி பெற்றுத் திரும்புகை

நான் அவர்களை இழந்தபின் தனியனானேன். என்னைப் பற்றிய பாரம் முழுமையும் நானே தாங்கவேண்டியதாயிற்று. கல்விச்செல்வத்தை நிரம்ப பெறுதற் கவாகொண்டு, தக்ஷணம் சென்றேன். அவண் பயிலவேண்டிய கலைகளையெல்லாம் பயின்று, வித்தியாதனம் நிரம்பி, என்னைப் பல மாணவர்கள் புடைசூழ நான் திரும்பவும் ஜனன பூமியை நாடி சுப்ரதிஷ்டா நகரத்தை யடையாநின்றேன்.

## குணாட்டியன் சுப்ரதிஷ்டா நகரப் பிரவேசஞ் செய்தல்

அந்நகரத்தை நான் உட்புகுங்கால், அஃது பல்லாற்றானும் மிகச் சிறப்பாய்ப் பிரகாசியாநின்றது. ஓர்பால்

சாமகான வோசை செவிக்கமுதை யூட்டிற்று. ஓர்பால் ப
குழுவி, வேதத்திற்குப் பொருளுரைப்பாராயினர். ஓர்ப
சூதாடுவோரிலொருவன் 'சூதாடத் தெரிந்தவனே செல்
தைத் தன்பாலிழுக்கவல்லவ'னென வவ்வாட்டத்தின் பெ
மையைக் கழறாநின்றான். வணிகர் பலர் குழுவி, வாண
தந்திரத்தைப்பற்றி சம்பாஷித்து வருங்கால், அவருள் ஒ
வன் 'பணத்தைக்கொண்டே பணத்தைப் பெருக்குவதில் என்
வற்புதமுளது! நானோ மூலதனமின்றியே, தனவந்தனானே
எனக்கூறித் தானொரு செத்த பெருச்சாளியை [72] முதலா
கொண்டு, வாணிபஞ் செய்து பெருஞ் சம்பத்தைப் பெற்

---

[72] செத்த பெருச்சாளியை மூலதனமாகக்கொண்டு குபேர
யொத்த சம்பத்தைப் பெற்றான் சரிதத்தைச் சிறிது செவிக்கொ
மின்,—

இளமையிலேயே தகப்பனை யிழந்து வறுமை யுற்றவோர் வா
பச் சிறுவன் தனதன்னையாற்றூண்டப்பட்டு ஓர் தனவந்தனிடம் வி
பாரத்திற்காகச் சிறிது மூலதனம் பெற்று வரும்படியனுப்பப்பட்டா
அவ்வாறே, வேண்டியவர்க்கு மூலதனமுதவும் விசாகிலனென்னு
செட்டியாரைப் பையன் கிட்டியகாலை, மற்றோர் வாலிபன் தன
முன் கிடைத்த மூலதனத்தை யவலமாக்கிவிட்டு மற்றுமோர்தரம் மூ
தனம் பெறக்கருதி அச்செட்டியாரிடம் பேசிக்கொண்டிருக்கும்போ
அந்நிதிவந்தன் 'உனக்கு நல்ல புத்தியும் ஊக்கமுமிருப்பின் இந்
செத்த பெருச்சாளியை மூலதனமாகக்கொண்டு நீ நிதிக்கு வழிகா
வுங்கூடு'மென மொழியாநிற்ப, அம்மாற்றம் ஒருவற்குச் செய்த
தேசம் மற்றொருவற்குப் பயன்படுமாபோல் இச்சிறுவன் செவி
விழவே இவ்வரிஞன் 'செத்தவிப் பெருச்சாளியை எனக்குத் தரு
நான் ஏதோ வழிகாணப் பார்ப்பேனென்று சொல்லி யந்த மூஷி
தைப் பெற்றுக்கொண்டான். அதனை யெடுத்துக்கொண்டு விற்ப
கருதிச் செல்லுகையில் மற்றோர் வணிகன் தான் வளர்க்கும் பூனை
காகாரமாக வுதவுமென வதனை வாங்கிக்கொண்டு இரண்டு சிறங்
(சேரங்கை) கடலையை யள்ளி யவனிடம் போட்டான். அக்கட
லையைப் பக்குவம் பண்ணிச் சிறிது நன்னீரையும் கொண்டு காட்

தனக்குத் தக்க தருணத்தில், அப்பெருச்சாளியை மூலதன மாக வுதவிய விசாகிலன் என்ற வியாபாரிக்கு, ஓர் சொர்ணப் பெருச்சாளியைத் திரும்பக் கொடுத்து, முதலை வட்டியோடுஞ் செலுத்தி, அவனது புதல்வியை விவாகஞ் செய்து குபேர சம்பத்தோடும் தான் விளங்கும் அதிசயத்தைக் கேட்

---

விறகு வெட்டி ஊரிற்கொண்டு வந்து விற்றுப் பிழைப்பார்வரும் வழியில் ஓர் குளிர்ந்த மரத்தடியிலிருந்து அவர்கட்குச் சிறிது கடலையும் குடிக்கத் தண்ணீரும் கொடுத்து அவர்களது களைப்பைத் தீர்த்தான். அவர்கள் முகமலர்ச்சியோடும் ஒவ்வொருவனும் இரண்டு விறகுக்கட்டைகளை யவனுக்குக் கொடுத்தார்கள். அவ்வாறு கிட்டிய விறகையெல்லாம் ஒன்றுசேர்த்து வாலிபன் கடலைக்கு மாறினன். மறுநாள் முந்நாளினும் எத்தனையோ மடங்கு மிகுந்த இக்கடலையைப் பொரியாக்கி பக்குவப்படுத்திக்கொண்டு சென்று அந்நகர்க்குட் புகும் விறகுதலையர் யாவர்க்கும் கடலையும் தண்ணீருமுதவிச் சிரமப் பரிஹாரஞ் செய்து அவரொவ்வொருவரிடமும் இவ்விரண்டு விறகுகளைப் பெற்றுக்கொண்டு வீடு சென்றான். பின்னர் அவற்றுட் சிலவற்றை மட்டும் கடலைக்கு மாறி மற்றை நாளும் அவ்வாறே விறகைப் பெற்றுக் கொண்டான். இவ்வாறு பல தினங்கள் செய்து வராநிற்புழி பிரதி தினமும் சிறிதுசிறிதாய்ச் சேர்ந்த விறகெல்லாம் ஓர் பண்டாரமாயின. செல்வமோங்குங் காலங் கிட்டுவதுபோல் ஓர்நாள் பெருமழை பொழிய வாரம்பித்து எழுநாள்மட்டும் விடாது பெய்தது. அப்போழ்து விறகு மிக வருந்தலாக விருந்தமையின் இளைஞனிட்ட விலைக்கு அவனிடம் அந்தச் சுப்ரதிஷ்டா நகரவாசிகளெல்லாம் விறகை விலைக்குப் பெற்றுக்கொண்டனர். இதனாற் பெரிய முதலுண்டாயிற்று. பின்னர் செட்டியச் சிறுவன் விறகுதலையர் கொண்டுவரும் விறகையெல்லாம் தானே மொத்தத்தில் வாங்கி நகரத்தார்க்கெல்லாம் விற்று வந்தான். அப்பெரு நகருள் விறகு வேண்டியவர்க்கெல்லாம் இவனே வாயிலானான். சிறிது காலத்தில் இவனிடம் திரவியம் நிரம்பவுண்டாயிற்று. பின்னர் இச்சிறுவன் உயர்தரமான இரத்தின வியாபாரத் துறைக்கண் இறங்கினான். கடிதில் எவரும் சீமானென மெச்சும் வண்ணம் லக்ஷாதிபதியானான். அவ்வாறுதலும் தனக்குச் செத்த பெருச்சாளியை மூலதனமாக வுற்ற சமயத்திற் கொடுத்துதவி புரிந்த விசாகிலனுக்கு மூலதனத்தை உயர்தரமான வட்டியோடும் திரும்பச்

பார் இறும்பூதெய்த வோர்பால் உரையாநின்றான். மற்றோ
பால் ஓர் விப்பிரன் உளுந்தளவினதாய் எட்டுப் பொன்னை
தானம் பெற்றுவர, அவனை யோர்விடன் ' நீ யிதனைக்கொண்(
என் செய்யப் போகின்றாய் ' யெனலும், அவன் ' நீதான் சொ
லேன் பார்ப்போ 'மெனலும், அவ்விடன் ' நீ யிதனைக் கொண்(
போய் சதுரிகாவெனும் தாசியிடம் சமர்ப்பித்து அவளெதி
நின்று சாமகானத்தை [73] முறை பிறழாது கானஞ்செய்
யெனலும், அம்மூடன் அவ்வாறே யவளது கிரகத்தை
கிட்டி, அவள் உபசரிக்கவே, தன்னிடமிருந்த எட்டு
பொன்னையும் அவளிடங் கொடுத்துத் தனது விரல்களை
கோகர்ணம் [74] போலமைத்துக்கொண்டு கம்பீரமான கு
லால் சாமகானஞ் செய்தலும், அவண் விடபுருஷர் பல
கூட்டங்கூட,ப் பின்னர் அவருட் சிலர் 'இவனை அர்த்தசந்திர

---

செலுத்துவான்போல் சொர்னத்தா லொரு பெருச்சாளியைச் செ
வித்து அதனை யவனிடம் வினையமாகச் செலுத்தினான். இதனை
விசாகிலன் மிகவும் உவகை யெய்தித் தனதரும் புதல்வியை செட்டி
குமரனுக்குக் கல்யாணஞ் செய்வித்து அவனைத் தனக்கு மருகனாக்
னான். செட்டியச்சிறுவன் சிறிது காலத்திற் கோடீசுரனானான்.

ஊக்கத்தோடு தெய்வஸகாயத்தையும் நாடி எவ்வினை புரியினு
அஃது முட்டின்றி முடியுமெனத் தெளிக.

[73] சாமகானம்: சாமம் என்பது நான்கு வேதங்களுளொன்
எவர்க்கும் சமத்துவமாகிய இனிமையைக் கொடுத்தலால் அதற்
பெயரமைந்தது. சூரியன் எவர்க்கும் சமானமாய்த் தோன்றுவதா
சாமம் சூரியனையுமுணர்த்தும்.

[74] கோகர்னம்=பசுவின் காது. இஃதோர் முத்திரை. கோகர்
மெனப் பெயரிய ஓர் சிவக்ஷேத்திரமுமுளது. இராவணனால் த்
தலத்து இலிங்கம் அவ்வாறமைந்தமையின் அத்தலம் அப்பெயர் பெ
றது. மகாபலேஸ்வர மென்பதும் இதுவே.

பிரயோகம்[76] செய்தனுப்புங்கள்' எனலும், அப்பேதையன் 'எங்கே நமது தலைபோய்விடுமோ' வெனப் பயந்து அவ்வீட்டை விட்டோடி முன்கண்ட தூர்த்தனை[77]க்கிட்டித் தான் செய்த பணியைக் கூறலும், அவன் மிக நகைத்து அம்மூடப் பிராமணனை அத்தாசி வீட்டிற்குத் திரும்ப வழைத்துவந்து அவனை நோக்கி 'இந்த இரண்டுகாற் பசுவிற்கு அவ்வற்பத் தங்கப்பொடிகளைத் திரும்பக் கொடுத்தனுப்பிவி'டெனலும், அவளவ்வாறே புரிய அவ்வறிவிலி 'தலைபிழைத்தது தம்பிரான் பாக்கிய' மென்று தனது கிரகத்தை யடையாநின்றனன்.

## குணாட்டியன்
## சாதவாகனனிடம் மந்திரித்தானத்தைப் பூணுதல்

இவ்வாறு பல விநோதங்கள் நிறைந்த வந்நகர்க்கண் எனது மாணவர்களோடு பிரவேசித்து சாதவாகன பூபதியின் அரண்மனையைக் கிட்டினேன். எனது மாணவர்கள் அரசனிடஞ் சென்று எனது வரவை யவற்குணர்த்தினர். அரசன் வரும்படி அனுமதி செய்தலும், யான், அவனை யோர் அத்தாணி மண்டபத்தில் இரத்தின சிங்காசனத்தில் தேவேந்திரன் கொலோ வெனச், சர்வவர்மன் முதலாகிய மந்திரிகள் புடைசூழக்,

---

[76] 'அர்த்தசந்திரப்பிரயோகம்' என்பது இவண் 'கையை பாதி நிலாவைப் போலமைத்துப் பிடறியைப் பிடித்துத் தள்ளல்' என்பதை யுணர்த்தும். இக்கருத்தை யோராது அம்மூடன் அர்த்தசந்திரப்பாணப் பிரயோகஞ்செய்து தலையைக் கொய்துவிடுவார்களோவென நடுக்க முற்றான்.

[77] தூர்த்தன் = விடன், ஸ்திரிலோலன், பெண்டிர்வழிநிற்போன், காமனுக்கடிமை.

கொலுவீற்றிருக்கக் கண்டு 'சுவஸ்தி' என வாசி கூறி யடு தேன். மன்னர் பெருமான் உடனே என்னை நல்வரவேற்று எனக்கினிய வாசனமொன்றை யளித்தலும், யான் அதன்கண் வீற்றிருந்தேன். மந்திரிகளும் தந்திரிகளும் எனது குணத்தை யெடுத்தரசனுக்கு விளக்கி, இம்மகான் குணாட்டியனென் நாமத்திற்குத் தக்கவாறே பொருத்தமுடைய குணக்குன்றம்[78] எனப் புகழ்ந்தனர். அரசன் என்னைப் போன்போடு மிக கொண்டாடி என்னையுமோர் மந்திரித்தானத்தை வகிக்க செய்தான்.

எனது காலம் மூன்று பிரிவாய் நடையுற்றது. ராஜ காரியம், வித்தியா போதனை, குடும்ப விவகாரம் மூன்றும் செ வனே நடந்தன. ஓர் நாள் கோதாவரியின் கரையருகே இந்தி னது நந்தன வனம்போற் சிறப்புற்றவோர் உய்யான வனத்தை கிட்டினேன். தேவகிருதி[79] யெனப் பிரசித்திபெற்ற அ சிங்கார தோட்டத்தின் வாலாற்றினை யறிந்து கொள்த பொருட்டு அத்தோட்டக் காவலாளனை வினவியபோழ்து அவன் அஃதுண்டான சரித்திரத்தைக் கூறுவானாயினன்,—

## தேவகிருதியெனும் நந்தனவனத்தின் வரலாறு

பெரியவாள் (பெரியவர்கள்) ஏதோ சொல்கிறார்கள். ஒ தவசி மௌன விரதங்கொண்டு அன்னபானதிகளை நீத்து

---

[78] 'குணமென்னுங் குன்று' என்றான் பொய்யாமொழியனும்,—

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது!

[79] தேவகிருத் எனும் இதுவே Deogir எனவும் Daulataba எனவும் ஹிந்துசரித்திரத்திற் கூறப்படுகின்றது. முன்னர்ப் பார்க்க.

இவண் உறைந்தனராம். அவராலேயே இந்த உய்யானம் உண்டாயிற்றும். இதிலோர் ஆலயமுளது. இதன் கீர்த்தி எங்கணும் பரவவே பற்பல தேயத்திருந்தும் ஏராளமான பிராமணர் வந்தனராம். ஓர்நாள் இவண் வந்த அந்தணர் பலரும் அத்தவசியைக் கிட்டித் 'தங்களை இன்னாரென் றறிகின்றிலம்; தயைபுரிந்து தங்கள் வரலாற்றினைக் கூறவேண்டு' மென மிகப் பிரார்த்தித்துக் கேட்டபோழ்து அவ் மௌனி தனது மௌனத்தைத் துறந்து தனது சரித்தை யவர்கட்குச் சொன்னாராம். எவ்வாறெனில்,

## மௌனி

## தேவகிருதியுண்டான இரகசியத்தை வெளிப்படுத்தல்

நர்மதா தீரத்தை யடுத்து பர்கச்சு [80] எனும் தேசமுளது. நான் அவண் பிறந்து வளர்ந்த பிராமணன். ஓர்நாள் நான் பிக்ஷைக்கு வெளிப்பட்டகாலை ஒருவன் தனது சோம்பேறித்தனத்தால் பிக்ஷைபிடாது வாளாவிருந்தான். அதனால் எனக்கு ஓர் விரக்தி தோன்றி தீர்த்தயாத்திரை செய்ய நிச்சயித்து ஊரைவிட்டு வெளியேறி வழிநடந்து விந்திய வாசினியை யடைந்தேன். அவ்வாலயத்துட் புகுந்து தேவியை வணங்கலும் எனக்கோர் எண்ணம் தோன்றிற்று. 'பிறர், தேவி கிருபையை அபேக்ஷித்து பற்பல ஜந்துக்களைப் பலிகொடுக்கா நின்றனர். அஃதவ்வளவு யுக்தமன்று; எனது

[80] பர்கச்சு என்பது தற்காலம் புரோச் (Broach) எனவும் பரோடா (Baroda) எனவும் பேர்பெறும். இஃது நருமதையின் வடகரையில் கடலையொட்டி நிற்கும் நாடாம்

தேகத்தையே நான் அம்பிகைக்குப் பலியூட்டி யவளது பி
சாதத்தைப் பெறுவதே எனக்கு மேம்பாடாகு'மென வுறு
கொண்டு கத்தியை யுருவி என்னையே வெட்டிப் பலிகொடு
வாரம்பித்தேன். எனது திடசங்கற்பத்தைக் கண்ட தே
விம்மிதத்தோடும் உடனே பிரசன்னமாகி என்னைநோக்கி '
யொப்பரிய சித்தனாய், நீ சிறிதுகாலம் என்பாலுறை
யென வாக்களித்திட்டாள். அவ்வாறே விந்தியவாசினியி
யான் உறையுங்கால், எனக்குத் தெய்வீகம் பிறந்தது. ப
தாகங்களாகிய தேக வைரிகள் என்னைவிட்டு நீங்கின. பின்
ஓர்நாள் தேவி யென்முன் தோன்றி, ஓர் பீஜத்தை (விதை
என் கையிற் கொடுத்து 'இதனைக் கொண்டுபோய் பிரதிஷ்டா
தேசத்தில் கோதாவரிக் கரையில் ஓர் நந்தவனத்தை யுண்
பண்' ணெனக் கட்டளையிட்டனள். அவள் உத்தரவைச் சி
மேற்கொண்டு இவண்போந்து இவ் உய்யான வனத்தை அ
சீக்கிரத்தி லுண்டுபண்ணினேன். என்பணி முடிந்தது. நீவி
இவ்வனத்தைப் போற்றுதிர்' எனக் கூறி மௌனி உருக்கரந்த
ராம். இதுவே நான் கேட்டபடி யிவ்வனத்தின் வரலாறும் என்
னன்.

இவ்வாறு தோட்டக்காரனிடம் அச்சிங்காரவனத்தி
மகாத்மியத்தைக் கேட்டுக்கொண்டு வீடுவந்து சேர்ந்தேன்.

## சாதவாகனப் பெயர்க் காரணம்

இவ்வாறு குணாட்டியன் தனக்குற்ற மண்ணுலக வாழ்
கையைக் காணபூதிக்குக் கூறிவருங்கால், காணபூதி, யவனை
நோக்கி " உமதரசனுக்குச் சாதவாகனனென்ற நாமம் எ

வாறு போந்தது. அதனை யெனக்குத் தெரியக் கூறி என்னை மகிழ்விக்க வேண்டு " மெனப் பிரார்த்தித்தான்.

குணாட்டியன் அதன் வரலாற்றைக் கழறுவானாயினன்,—

## சாதவாகனன் பிறப்பு

தீபகர்ணி என்ற வரசனுக்குச் சக்திமதி யென்ற தேவி யிருந்தாள். இருவரும் பரஸ்பரம் மிகக் காதலுடையவர்கள். இணையன்றிற்[81] போன்ற இவ்விருவரும் ஓரிரவு உய்யானத்தில் மெய்ம்மறந்து கண் வளர்கையில் தீவினைப்பயனால் அரசன் றேவி யோர் சர்ப்பத்தாற் றீண்டப்பெற்று உயிர் நீத்தாள். தபுதார நிலை[82]யை யடைந்த வரசன் தனது காதலியின் பாலுள்ள அன்பின் பெருக்கால் வேறு மாதை மணஞ்செய்யாது பிரம்மச் சரியத்தை யனுட்டித்து வந்தான். ஆயினும் தனக்குப்பின் தனதரசுரிமையைத் தாங்குதற்குத் தக்கவோர் புத்திரன் தனக்குச் சித்திக்க வேண்டுமென்ற அவா அவன் மனத்துட் குடிகொண்டிருந்தது. ஓர்நாள் அரசன் நித்திரை புரியாநிற்கை

[81] அன்றில் நாரைபோன்ற வோர் பறவை. ஆண் பெண் இணை பிரியாதன. பிரிவு நேரின் மரண முறும். கிரவுஞ்சம் எனும் புள் இதுவே.

ஓர் கிரவுஞ்சப்புள்ளை யோர் வேடன் அம்பெய்து கொன்றகாலை வான்மீகி பதைப்புற்ற வதன் பேட்டைக் கண்டு மனமுடைந்து அவ் வேடனைச் சொர்க்கம் புகாமற் சபித்த மொழி ஓர் சுலோகமாக வமைந்து பின்னர் ராமாயணத்தைப் பயந்ததன்றே!

[82] தபுதாரநிலை=கணவன் மனைவியை யிழந்த நிலை, widowerhood. மனைவி கணவனை யிழந்த நிலை தாபதநிலை, widowhood.

யில் ஓர் திவ்விய சொற்பனமுண்டாக, அதன்கண் சிவபெருமான் பிரசன்னமாகி யவனை நோக்கி 'நீ வேட்டையாட வனத்திற்குச் செல்வாய்; அவண் ஓர் சிங்கத்தின் முதுகில் ஓர் ஆண் குழந்தையைக் காண்பாய்; நீ யந்தக் குழந்தையை யெடுத்துக்கொண்டு வந்து உனக்குப்புத்திரனுகப் பாவித்துக்கொள்தி' யென வருளி உருக்கரந்தார். சொற்பனம் நீங்கவே அரசன் விழித்தெழுந்து சந்தோஷமுற்றான்.

பின்னர் ஓர் நாள் அரசன் வேட்டையாட வனஞ் சென்றகாலை ஓர் தாமரைத்தடாகம் கண்ணெதிர்ப்பட்டது. அப்போழ்து முன் கண்ட தெய்வ சொற்பனம் ஞாபகத்தி லுதித்தது. உடனே யோர் கோளரியும்[83] அதன் முதுகில் ஓர் குழந்தையு மவனுக்குத் தென்பட்டன. சிங்கம் அக்குழந்தையைப் பொய்கைக்கரையில் விட்டுவிட்டுத் தண்ணீர் பருக வத்தடாகத்து ளிறங்கிற்று. அத்தருணம் அரசன் குழந்தையைக் கைக்கொண்டு சிங்கத்தை யம்பாலெய்தான். மிருகேந்திரன் உயிர் துறந்து மண்ணில் விழுங்கால் ஓர் யக்ஷனுகத் தோன்ற, அரசன் அவ் யக்ஷனை நோக்கி 'உனக்கிச்சாபம் எவ்வாறு நேர்ந்த' தெனக் கேட்டான். அதற் கவ் வியக்கன் 'நான் குபேரனுக்கு[84] நண்பனுன வோர் யக்ஷன். எனது பெயர்

[83] கோளரி=கொலைத்தொழில் வல்ல சிங்கம். அடையெடுக்காது அரியெனினும சிங்கத்தை யுணர்த்தும்.

[84] குபேரன் நிதியின் கிழவனுய் எக்ஷர்களுக் கெல்லாம் அதிபதியா யுறையா நின்றுன். 'புதையலை பூதங் காத்துக்கொண்டிருக்கின்றுற்போல்' எனும் உலக வழக்கிற் கூறப்படும் பூதசப்தம் யக்ஷனை யுணர்த்தும்.

சாதன். நான் வினைவயத்தால் ஓர் முனி கன்னிகையைக் காமிக்க நேர்ந்தது. அவளும் என்பாற் காதலை வகித்தாள்.

இருவரும் காந்தர்வமாகக் கூடினோம். இதனை யவளது பந்துக்களும் இருடிகளும் கண்டு பெரியவர்களது அனுமதியின்றி நாங்களிருவரும் சுயேச்சையாய் மிருகங்களைப்போல் காமத்திற்காட்பட்டு ஒழுகியதைக் குற்றமாகக் கொண்டு எங்களிருவரையும் ஆணும்பெண்ணுமாய் இரண்டு சிங்கங்களாகப் பிறக்கும்படி சபித்தனர். நாங்கள் அவர்களைப் பணிந்து சாப விமோசனத்தை யிரந்து கேட்டபோழ்து அவர்கள் கன்னிகையை நோக்கி 'நீ யோர் மனுஷமகவை யீனுதலும் சபோ விமோசனமுண்டாகு' மெனை வாக்களித்து என்னை நோக்கி 'நீ யவ்வாறு பிறக்கும் குழந்தையை மற்றோர் சிங்கப் பேட்டின் பாலைக்கொடுத்து வளர்த்து வருவாய்; அக்காலம் ஓரரசன் வேட்டையாட வருவான்; அவன் அக்குழந்தையை எடுத்துக் கொண்டு உன்னை யெய்வான். அதனாலுனது சாபம் ஒழியு' மென்றனர். அவ்வாறே எனது சகி இக்குழந்தை பிறத்தலும் சாபம் நீங்கினள். பின்னர் நான் இக்குழந்தையைச் சிங்கப் பாலூட்டி வளர்த்து வந்தேன். உன்னா லெனது சாபம் ஒழிந்தது. யான் எனதிடத்திற்குச் செல்லாநின்றேன்' என்று சொல்லி மறைந்தான். அரசன் குழந்தையை எடுத்துக்கொண்டு தனது நகர் சென்று அம் மகவிற்குச் சாதவாகனனெனப் பெயர் புனைந்தான். தனது கோறிக்கை சிவனது அருளால் ஈடேறியதால் அரசன் தவஞ்செய்து பிறப்பொழிக்கக் கானகஞ் சென்றான். உடனே சாதவாகனன் பட்டத்திற்கு வந்தான். சாதனை வாகனமாகக் கொண்டமையால் எனதரசனுக்குச் சாதவாகன

னென்ற பெயர் கிட்டிற்று". என்று சாதவாகனனென்ற பெயர் வந்த காரணத்தைக் காணபூதிக்கு விளக்கி மற்றுந் தன் சரித்தைக் குணாட்டியன் கூறலுற்றான்,—

## சாதவாகனன் மானபங்க முறல்

ஓர் நாள் சாதவாகனன் தனதந்தப்புரத்து மகளிரோடு உல்லாசமாகத் தேவகிருதியெனும் சிங்காரத்தோட்டத்தை யடைந்து அவணிருந்த வோர் வாவியில் தனது ஸ்திரிகளோடு ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்தான். அப்போழ்து அவர்கள் லீலாவிநோதமாய் ஒருவர்மேலொருவர் உதகத்தை வாரியடித்தார்கள். நீர்விளையாட்டு மிக நீடித்ததால் அரசன் தேவியருள் ஒருத்தி மிகவும் களைப்பெய்தி அரசனைநோக்கி சம்ஸ்கிருத மொழியால் மோதகைஃ பரிதாடயமாம் [85](என்னைத் தண்ணீரால் அடியற்க) வென்றாள். அரசன் அவளது கருத்தை யாராயாது கொழுக்கட்டையை (மோதகத்தை) யவண் வரவழைத்து அவற்றைக் கொண்டு அவளை மோதினான். உடனே யம்மாது துன்பம் பொறுக்கலாற்றாதோ, வேறு காரணங்கொண்டோ, பேதமை யென்பது மாதர்க்கணிகல [86]னென்பதை யோராது, சினங்

[85] இவ்வாக்கியம், மோதகைஃ என்பது மா உதகைஃ யென சந்தி பிரிந்து என்னை நீராலடியற்கவென்றும், சந்திபிரியாது நின்று என்னை மோதகத்தாலடி யென்றும் பொருள் பயக்கும். அரசன் சந்தியையும், சந்தர்ப்பத்தையும், காலபொருத்தத்தையு மாராயாது தவறான பொருளைக்கொண்டான்.

[86] மாதர் அறிவுடைமையை உள்ளடக்கி அறியாமையை அலங்காரப் போர்வையாகக்கொண்டு தமதறிவைத் தங் கணவரது அறிவிற் கடங்கி யொடுங்கி நடக்கும்படி செய்வதவர்க்கழகு. இவள் செய்கையோ அதற்கு மாறுபட்டு எதிர்பாராத ரசாபாசத்தைக் கொடுத்தது.

கொண்டு சாதவாகனனை நோக்கி 'நீ சந்தியை யறியாய் போலும், சந்தர்ப்பத்தையும் நாடாய், சமயோசிதத்தையுந் தெளியாய். இவ்வற்ப வாக்கியத்தின் யுக்தமான பொருளை யறியா மூடனு யிருக்கின்றாய்' யென்று கடிந்து ஜலக்கிரீடையின் சுகத்தை ரசாபாசமாக்கினள்.[87] இவ்விதப் பரிகாசத்தைக் கண்ட மற்றை மாதரும் பரிஜனங்களும் வேடிக்கையா லுந்தப்பட்டவராய் வெடித்த குரலோடும் கொல்லென நகைத்தனர். உடனே சாதவாகன பூபதிக்குச் சகிக்கலாற்றாத லஜ்ஜையுண்டாகவே புனல் விளையாட்டை யுடனே துறந்து கரையேறி உற்சாகக் குறைவோடு அரண்மனை சேர்ந்து தனியிடத்திற் புகுந்து சோகக்கடலுளாழ்ந்து சிந்திப்பானாயினன்,

## சாதவாகனன் கொண்ட பிரதிக்ஞை

'எனக்கெவ்வளவு தேகவலியும் வீரமுமிருந்தென்னை? அஃது குருட்டு மிருகபலமன்றி மற்றென்னாம்? கல்வியாகிய கண்ணில்லானை அலங்கரித்தல் மரக்கட்டையைப் புனைவது போலாம். இனி யெனக்குப் பாண்டித்துவம் அல்லது மரணமே கதி' எனத் திடமான சங்கற்பத்தைக்கொண்டு ஒருவரையும் ஏறிட்டுப் பாராது மௌனத்தை வகித்து அன்னபானாதிகளை யொழித்துப் படிக்கையைவிட்டு நீங்காதுறைந்தான்.

---

[87] ரசாபாசம் என்பது சுவைக்கேடு. அச்சமயம் அரசனும் மகளிரும் சிங்காரச்சுவைக்கண் மூழ்கிநின்றனர். மோதகத்தாலடித்தது நகைச்சுவைக் கிடமாயிற்று. இது சிங்காரச்சுவையைக் கெடுக்காது. அரசன் தேவியது கடினவாசகம் சிங்காரச்சுவையைக் கெடுத்து சோக ரசமாகிய அழுகைச்சுவைக் கிடம்பண்ணி அரசனுக்கும் ஏனையோர்க்கும் தூக்கத்தை விளைவித்தது.

## சர்வவர்மனும் குணாட்டியனும் அரசனுக்குற்ற தென்னென வாலோசித்தல்

அரசன் அரசாக்ஷியில் சிரத்தை குன்றி வெளிப்படாமல் அரண்மனையினுள்ளேயே யிருந்தமையால் அவன் ஏதோ வோர் பெருநோயாற் றாக்குண்டு வருந்துவதாக வெண்ணி நகரவாசிகள் துக்கமுற்றனர்.

முதன் மந்திரியாகிய சர்வவர்மனும் நானும் அரசனுக்கு நேர்ந்த கஷ்டம் யாதென வாலோசிக்கலாயினோம். அரசனது சேவர்களிலொருவனான ராஜஹம்சனை விசாரித்தபோழ்து விஷ்ணு சக்தியினது பெண்ணால் அரசன் மிகவும் லஜ்ஜையுற்று வருந்திக்கொண்டிருப்பதாகத் தெரியவந்தது. அரசனது துன்பம் நோயால் விளைந்ததன்று மனோவியாதியாலேயே விளைந்ததெனக் கண்டோம். அரசன் தனது கல்விக்குறைவால் (மூர்க்கத்தால்) தாங்கவொண்ணா அநுதாபத்தை யுற்றிருப்பதாகச் சர்வவர்மன் உறுதிகொண்டான்.

## சாதவாகனன் முன்னிலையில் சர்வவர்மனும் குணாட்டியனும் செய்த பிரதிக்ஞை

நாங்களிருவேமும் அரசனை நேரிற்காண வெண்ணங்கொண்டு, அரசக்கிரகத்தை யடைந்தோம். நானே முன்னதாகச் சென்று அரசனைக் கண்டு 'உற்றதென்' னென வினவினேன். அவன் ஒன்றுங்கூறுது வாளா மௌனமாக விருந்தான். அதனை நோக்கி, சர்வவர்மன் 'அரச! யானொரு சொற்பனங் கண்டேன். விண்ணிலிருந்து ஓர் தாமரை வீழ அதனையோர் தெய்வகுமாரன் மலரச்செய்தான். அதனின்று வெள்ளைக்

கலையுடுத்த வோர் பெண் வெளிப்பட்டு, அரச, நினது நாவி லெழுந்தருளினள். ஆதலின், உமக்கு வித்யாநிதி இப்போழ்தே யும்மிடத்தில் விளைந்துகொண்டிருப்பதாக வெனக்குத் தோன்று நின்றது. நீர் கடிதிற் பாண்டித்துவத்தை நாவிற்காண்பீர்' என்றான். அசந்து கிடந்த வரசன், உடனே சிறிது தைரியத் தைக்கொண்டு, எங்களை நோக்கி'யான் பூரணபாண்டித்துவத்தை யடையவேண்டுமாயின், எவ்வளவு காலம் பிடிக்கும்' எனக் கேட்டான். அதற்கு யான் 'ஊக்கமாகக் கலைபயிலுவோருக்கு, தக்கபடி வியாகரண ஞானம் சித்தியாகக் குறைந்தது பன் னிரு வருஷம் செல்லும். ஆயினும், யான் உம்மை ஆறு வரு ஷத்திற் பூரண பண்டிதனாக வாக்கி வைக்கக்கூடு' மென்றேன். அப்போழ்து, சர்வவர்மன் என்னை நோக்கி 'அரசரோ சுகஜீவி கள். நீர் நமதரசனை ஆறுவருஷகாலம் சிக்ஷையிலிருத்துவீரா யின், அவர் எங்ஙனம் சகிப்பர்! நீர் கூறுவது அழகியதன்று. நான், நமது கோமானை ஆறுமாசத்தில் பூரணவித்வானாக வாக்கி வைப்பேன்' என்றான். நான், சர்வவர்மன் அரசனை மகிழ்வித் தற்காகப் பொய்யாசை யூட்டக் கருதி ஏதோ வீண்வார்த்தை கூறுவதாக வெண்ணி, அவனைநோக்கி 'நீர் ஆறுமாத வெல்லை யுள், அரசனைப் பூரண வித்வானாகக் காட்ட வல்லீராயின், நான் எனது நாவினின்று சமஸ்கிருதம், பிராகிருதம், தேசபாஷை மூன்றையுந் துறப்பேன்' எனப் பிரதிக்ஞை செய்தேன். சர்வ வர்மனோ, வோர் சிறிதும் மனந்தாழாது என்னை நோக்கி 'நான் ஆறுமாத காலத்தில் நமதரசனைப் பூரண வித்வானாக வாக்கத் தவறுவேனாயின், உமது பாதபங்கயங்களைத் தலையிற் சுமக்கக் கடவேன்' என மிக வுக்ரமான பிரதிக்ஞை செய்தான்

அரசன் விம்மிதமெய்தி ஊக்கத்தைக் கைப்பற்றினன். இரு வரும் வீடுவந்து சேர்ந்தோம்.

## சர்வவர்மன்

## தனது பிரதிக்ஞையை எளிதே நிறைவேற்றும் உபாயத்தைத் தனது மனைவியின்பாற் றெரிந்துகோடல்

சர்வவர்மன், தனது இல்லத்தை யடைந்து, அரசன் முன் நிலையில் நேர்ந்த விஷயங்களையும் தான் முடிவிற் செய்த பிர திக்ஞையையும் தனது மனைவிக் கெடுத்துரைத்தகாலை, அவ் வுத்தமி, நெடுநேர மாழ்ந்து நோக்கித், தனது கணவனைப் பார் த்து 'சாதாரணத்தில் முடிவுற மாட்டாத பிரதிக்கினையைத் தாங்கள் வகித்துக்கொண்டீர்கள். ஆயினும் ஓர்வழி தோன்று கின்றது. சிவகுமாரனாகிய ஷண்முகக் கடவுளை நோக்கி வரங் கிடந்து, அவனது பிரசாதத்தைப் பெற வல்லீரேல், இவ்வரிய பிரதிக்கினையும் மிக வெளிதிற் கைகூடும். முன்னவனே முன் நின்றால், முடியாத தொன்றுளதோ! ஆதலின் குகப்பெரு மான்[88] பக்கல், சித்தத்தை யொரே முகமாகத் திருப்பு'மென வுறுதியான வழியைக் காட்டினள். உஷத்காலத்திற்கு முன் னரே, தனது மனைவியாற் றூண்டப்பட்டுத் தவத்தை மேற் கொண்டு, முருகவேளது ஆலயத்தை நாடிப் புறப்பட்டான் நிற்க.

---

[88] குகப்பெருமான்: மாந்தரது ஹிருதய தாமரையாகிய குகைக் குள் அழியா முதலாய்ப் பரமன் உறைதலால் கடவுள் குகன் எனப் படுவன். இளமை கெடாது உறைபவ னாதலின் முருகனென்று குமாரனென்றும் வாழ்த்தப்படுவன்.

## சாதவாகனன்
## சர்வவர்மனைக் காணாது தவித்துத்
## தனது புத்திரன்பால் ஊக்கம் பெறுகை

சூரியோதய மானபோழ்து, அரசன் வித்யாரம்பத்தைக் கருதி, சர்வவர்மனை எதிர்பார்த்து நாடிநின்றான். அவன் அவைக்களத்திற்கு வாராமையைக் கண்டு, அரசன் கவலையுற்று விசாரித்தபோழ்து, சர்வவர்மன் ஊரைவிட்டுப் போய்விட்டதாகத் தெரிந்தது. அரசன் கவலைக் கடலுளாழ்ந்தான். அரசனது புத்திரனை சிம்ஹகுப்தன், சில வொற்றரால் மந்திரி வெளியேறித் தவஞ் செய்வதாக வுணர்ந்துகொண்டான். ஓர் தினம் அரசன் மிகவும் முகம்வாடி துக்கத்திலாழ்ந்துகொண்டிருக்குந் தருணத்தில், சிம்ஹகுப்தன் தனது தந்தையைக் கிட்டி 'எந்தாய், அடியேன் தாங்கள் படும் மன வாதனையைச் சகிக்கலாற்றாது, துர்க்கையது ஆலயத்தை யடைந்து பிராணத்தியாகஞ் செய்யத் துணிந்து எனது உடைவாளை யுருவினேன். அப்போழ்து அம்பிகை யென்முன் பிரசன்னமாகி 'நீ கவலையை யொழி; உனது தந்தையின் எண்ணம் முட்டின்றிக் கைகூடும். அவன் முன் பிறப்பில் ஓர் இருடி' யென வருள்புரிந்து மறைந்தாள். ஆதலாற்றாங்கள் மனசிம்மதியை வகிக்கலாம்' என்றனன். இதனாலரசன் ஊக்கம் பெற்றுத் தனது மகனை வாழ்த்திக் கொண்டாடித் தானும் கவலையை யொழித்து தெய்வீகத்தை நாடிநின்றான்.

## சர்வவர்மன்
## சர்வ வித்யாகலையை [89] அரசனுக்கீதல்

சிலதினங்கள் சென்றபின், [90] சர்வவர்மன் சிவகுமாரனது அநுக்கிரகத்தை நேரிற் பெற்றுக்கொண்டு சுப்ரதிஷ்டநகரத்தை யடைந்தான். உடனே அரச சந்நிதானத்தை யடைந்து, ஈசனைத் தியானித்து, தன்பா லமைந்திருந்த பூரண வித்யாகலையை, நல்ல முகூர்த்தத்தில், அரசன் செவிவழி யவன மனதிற்குக் கொடுத்தான். உபதேசத்தைப் பெற்ற மாத்திரையானே, யரசன் பூரண பாண்டித்துவம் தன்பாலுள்ளவா வமைத்தை புணர்ந்து மனம் பூரித்தான்.

## அரசன்
## சர்வவர்மனுக்குச் சிறப்புச் செய்தல்

உடனே யரசன் சர்வவர்மனைப் பூஜ்யதை செய்து அவனுக்கு நர்மதா நதியை யடுத்த பர்கச்ச தேசத்தைத் தியாகஞ் செய்துவைத்தான். தான் பூரணவித்வா னாதற்குத் தூண்டுகோலாயிருந்த விஷ்ணுசக்தியின் மகளான தனது பா

---

[89] சர்வ வித்யாகலை யென்பது சத்தாகிய உபதேச கலை. எ தெரிந்தால் எல்லாம் தானே விளங்குமோ அவ்வுபதேசம். இதுவே ஒரு மொழியென்றும் ஒரு வார்த்தையென்றும் ஆன்றோராற் கூற படும். 'ஒரு மொழியே பலமொழிக்கும் இடங்கொடுக்கும்' என்று 'மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு, ஒரு வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்க்கும் பராபரமே' யென்றும் தாயுமான சுவாமிகள் கூறியதைக் காண்க.

[90] ஆறுமாதமென வரையறுத்துச் சென்றானாயினும் ஆறே நாளிற் சர்வவர்மன் பூரண வித்யாகலையை அரசனுக்கீந்தான்போலு

யையைப் பட்டமகிஷி யாக்கினன். மந்திரத்தாற் கட்டுண்ட நாகம் போல்நான் எனது பிரதிக்ஞையால் நாவை யசைக்காது மௌனத்தை வகித்து நின்றேன்.

## ஏழாந் தரங்கம்

### சாதவாகனன்
### தனது வித்தியா சாமர்த்தியத்தை வெளிக்காட்டல்

ஓர்நாள் யான் அரசன் அவைக்களத்தை மௌனமாகக் கிட்டினேன். அத்தருணம் ஓர் புலவன் அருமையான வோர் சுலோகத்தை யரசன் முன் இசைத்தான். அதனது அரும் பொருளை நோக்கி யரசன் அப்பாவை யேற்றுக்கொண்டு சபையி லுள்ளவர் யாவரும் வியப்பெய்துமாறு அதற்கு மெய்யுரை கண்டான்.[91] தன்பால் உள்ளவா மெய்ப்பாண்டித்துவம் அமைந் திருப்பதை வெளிப்படையாகக் கண்ட வரசன் சர்வவர்மனை மிகவும் வழிபட்டு "எந்தாய், எனக்கு ஓர் சிரமமும் விளைவிக் காது மிக வெளிதில் எனக்குப் பூரண வித்யாகலையை யுபதே சித்து என்னைச் சகல கலாவல்லவனுக்கிய சதுர்ப்பாட்டை எனக்குச் சிறிது விளக்கவேண்டு" மென்று குறையிரத்தலும், சர்வவர்மன் இரகசியத்தை விளக்கலுற்றான்.

### சர்வவர்மன்
### சுப்ரமண்யானுக்ரகம் பெற்ற வரலாறு

ஓ, அரச, உன் முன்னிலையில் பிரதிக்ஞை செய்து, இல் லத்தை யடைந்து இவண் நேர்ந்த விஷயங்களை என் மனைவிக்

---

[91] மெய்யுரை காணல் என்பது யுக்தமான அர்த்தத்தை மனக் கண் கொண்டு கண்டு வாக்கால் வெளிப்படுத்தல். காணுதல் படைத்

கெடுத்துரைத்து, அவளது யோசனையைக் கைக்கொண்டு மௌனத்தையும் பட்டினியையும் பூண்டு, புலர்வதஃ முன் புறப்பட்டு குகப் பெருமானை நாடி நெடுந்தூர வழிக்கொண்டு செல்லாநின்றேன். ஆலயம் கணன டுந் தூரத்திற் றென்படுமமையத்து, நான் மிகக் களைப்பெய்த் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்து ஒன்றுந்தோன்றாது கிட தேன். அப்போழ் தோர் திவ்விய புருஷன் வேலாயுதந் தாங்கி வந்து எனது உட்கண்முன் றோன்றி ' நீ யெழுந்திரு; உ நினைவு கைகூடு' மென வருள்சுரந்து மறைந்தான். என அந்தரங்கச் செவிக்கெட்டிய அவ்வாக்கு அமுதமாரி பொழி தாங்கு எனக்கின்பத்தை விளைத்தது. உடனே தேகத்தை வாதனை புரிவதாய பசியுந் தாகமும் நீங்கின; ஒப்பில்லா ஆக் மும் பிறந்தது. அதனால் நான் உடனே யெழுந்து குகனத ஆலயத்தைக் கிட்டி ஸ்நானஞ்செய்து சிவகுமாரன் உறை தரும் கற்பக்கிரகத்துட் புகுந்தேன். உடனே ஸ்கந்தன் பிரத்தி யக்ஷமானான். கலைமகளும் எனது நாவிற் பிரசன்னமா வெழுந்தருளினாள். ஷண்முகப்பெருமானது ஆறுமுக களினின்றும் 'சித்தோ வர்ன சமாம் னாயஃ' (அனைத்தெழு துங் கைகூடின) [92] வெனும் வியாகரண சூத்திரம் வெளி

---

தல் (வெளிப்படுத்தல்) எனும் பொருளைப் பயப்பதை 'முழுவதும் கஃ டவனைப் படைத்தான் எனும் ஆன்றோர் வாக்யாற் றெளிக.

[92] எழுத்தறிவித்தவ னிறைவனாகும்; அழியா முதலாகிய அக ரத்தைக் காட்டுவோனே பரம சற்குரு. இவ் அக்ஷரமே கந்த யென்றும், ஸ்போடமென்றும், ஊமை யெழுத்தென்றும் கூறப்படு இதனைப் பெற்றவன், தானே, ஒரு தானாகி யுலகெங்கும் நிற்கக் கா பன். தன்னையன்றி வேறென்று மின்றெனக் காண்கையே மோ க்ஷம் அல்லது வீடு.

கிளம்பிற்று. அச்சூத்திரம் எனது செவியிற் புகவே நான் எனது ஊகத்தால் அடுத்த சூத்திரத்தைக் கண்டு ஸ்கந்தன் முன்னிலையில் வெளியிட்டேன். அப்போழ்து குகப்பெருமான் என்னைநோக்கி 'நீ யிவ்விரண்டாஞ் சூத்திரத்தை இவ்வாறு வெளிப்படுத்தாது அடக்கி மனத்துள் வைத்திருப்பையாயின், உனது வியாகரணம் பாணினீயத்தையும் வென்றிருக்கும். நீ சிறிது படபடப்பைக் கொண்டதால் நீ வெளிப்படுத்தும் ஒலிநூல் (சப்த சாஸ்திரம்) நிரம்பாத சொற்ப தந்திரமாகும். அதுபற்றி அஃது காதந்திரம் எனப்பெயர் பெறும். அன்றியும் அஃது நமது வாகனமாகிய மயிலைப் பற்றி காலாபகம் எனவும் உலகத்தில் நடைபெறும்' என வருள்புரிந்தான். இவ்வாறோர் புதிய எளிய சப்தசாஸ்திரம் எனக்குக் குகப்பெருமானாற் காட்டிக் கொடுக்கப்பட்டது.

## சாதவாகனன் பூர்வம் ஓர் இருடி

இவ்வாறோர் வியாகரணத்தை அநுக்கிரகித்ததுமன்றி, சரவணபவன்[93] என்னை நோக்கி 'உனதரசன் முற்பிறவியில் பாரத்துவாஜ முனிவனிடம் மாணவனாக விருந்த கிருஷ்ணனெனப் பெயரிய வோர் இருடி. அவன் காமன்வயப்பட்டு ஓர் முனிகன்னிகையைக் காமுற்றான். அவளும் தனது அறிவை வினவயப்படுத்தி யவனைக் காமுற்றாள். மனநிலை யழிந்த அவ்விருவரையும் முனிவர் வெகுண்டு மண்ணிற் பிறக்

[93] சரவணம் என்பது தருப்பையாகிய நாணற்புல்லைக் குறிக்கும். அறுமுகக்கடவுள் உற்பவித்த சரவணப்பொய்கை, நீலப்பைஞ்சுனை யென நக்கீரராற் கூறப்படுகின்றது. இஃது, ஹிமாலயத்திற்கு வடபால் சிந்து நதி யுதயமாதற்கேதுவா யமைந்துள மானச வாவியேயாம்

கும்படி சபித்தார்.[94] இப்போழ் தவன் மனைவியருள் ஒருத்தி யாகிய விஷ்ணுசக்தியின் புதல்வி யவளேயாம். இருடியி னவ தாரமாயினமையின் உனதரசன், நீ யெண்ணுவையாயின், எளி தே பூரணபண்டிதனுவன். உத்தமமான விஷயங்கள் பெருங் குணவான்கட்கு எளிதே வாய்க்குமன்றே! ஜன்மாந்தரத்தில் ஒருவற் கோராற்ருற் கிட்டியும் எட்டாது தடைப்பட்ட சித்தி கள் இப்பிறவியிலெளிதே கைகூட வென்ன தடையுளது' என வெனக்கு உறுதிகாட்டி முருகவேள் உருக்கரந்தான்.

பின்னர் நான் கற்பக்கிரகத்தை விட்டு வெளிப்போந்த போழ்து அவண் குழுவியிருந்த பல நோன்பினரும் எனது கையில் அரிசியை பிக்ஷை பெய்தனர். அத்தெய்வப் பிரசா தத்தை வழியே புசித்துக்கொண்டு சென்றேனுயினும் அஃ தெள்ளளவுங் குறைவுருது அக்ஷயபாக விருந்தது.

எனச் சர்வவர்மன் சிவகுமாரன் தனக்குக் காட்டிய திரு வருள் விலாசத்தை விளங்கக்கூறினன்.

உடனே சாதவாகனன் ஸ்நானத்திற் கெழுந்தான்.

## குணட்டியன் சாதவாகனனை விட்டு நீங்கல்

நானே இத்தெய்வீக விர்த்தாந்தத்தைச் செவியாற் கேட் கப் பெற்றேனுயினும் சர்வவர்மனேடேனும் அரசனேடேனுப்

[94] காமம், முகிழ்க்கக்கூடாத தானத்தில் உதயமாயின், அஃது பெரியாருக்குச் செய்த அபராதமாம். இவ்வாறே சுந்தரமூர்த்திகளுப் அம்பிகையின் சேடியரும் மண்ணுலகிற் பிறந்து போகம் துய்த்து ஆசையைக் களைந்து கைலாசத்திற்குத் திரும்பி வரும்படி அம்மையப பர்களால் சாபம் பெற்ற சரித்திரத்தைப் பெரிய புராணத்திற் காண்க.

மற்றை வித்வான்களோடேனும் நாவாரப் பேசக் கூடாமையால் அரசனைச் சிறிது தலையால் வணங்கிச் செலவு பெற்றுக் கொண்டு சுப்ரதிஷ்டத்தை விட்டகன்றேன்.

## குணாட்டியன் விந்தியவாசினியைத் தரிசித்துப் பைசாசபாஷையைக் கற்றுக் காணபூதியைக் காணல்

பின்னர், விந்தியவாசினியைத் தரிசித்து அவளருளால் கதியை அறிந்து கொள்ளலாமென்று நருமதையைக் கடந்து விந்தியவாசினியின் சந்நிதியை யடைந்தேன். அவள் அம்பிகையைத் தரிசித்துப் பின்னர் அயர்ந்து கண்வளர்ந்தேன். அப்போழ்து தேவி எனது சொற்பனத்திற் பிரத்தியக்ஷமாகி 'நீ இவ்விந்தியாடவியிலிருக்கும் காணபூதியைக் காண்பாயாக' வென வாக்கை யிட்டாள். அவளது உத்தரவைத் தலைமேற் கொண்டு புலிந்தர்கள் (வேடர்கள்) பேச்சையும் தெய்வசகாயத்தையும் பற்றி யிவண் போந்தேன்.

இதோ விருக்கும் பேய்கள் ஒன்றோடொன்று சம்பாஷிப்பதை யுற்றுநோக்கி பைசாசபாஷையைக் கற்றுக்கொண்டேன்.[95] அன்றியும் நான் இவணுற்றபோழ்து நீ உஜ்ஜினி நகருக்குச் சென்றிருப்பதை இப்பேய்களது சம்பாஷணைத்தாற் றெரிந்துகொண்டு உனது வரவை யெதிர்பார்த்து இவண் காத்

[95] குணாட்டியன் சர்வ வித்யாமுகமான ஸ்போடத்தையுணர்ந்தவனாதலின், பைசாசபாஷையைச் செவியாலேற்றற்கும், அதனைக்கேட்டமாத்திரத்தே யதனை யறிந்து பேசுதற்கும் ஆற்றலைப் பெற்றான்.

ஸ்போடமென்பது அழியா முதலாகிய மௌனவாக்கு ; ஊமையெழுத்து.

திருந்தேன். நீயும் வந்தாய். உன்னைப் பைசாச பாஷையால் வரவேற்றேன். உன்னைக் கண்டு பேசிய மாத்திரையானே எனக்கு ஞானம் பிறந்து எனது பூர்வநிலை மனக்கண் உதயமாகா நின்றது. இதுவே இந்த ஜன்ம விருத்தாந்தம்

என்று குணாட்டியன் கூறினன்.

அதற்குக் காணபூதி 'நீர் இவண் வந்திருப்பதை நேற்றிரவே யறிந்துகொண்டேன். அஃதெவ்வாறெனில் கூறுவல்,—

## பூதப்பிரேத பைசாசங்களதியல்பு

உஜ்ஜினி நகரில், பூதிவர்மன் எனும் ராக்ஷதன் ஒருவனுளன். அவன் எனக்கு நண்பன். அவனுக்குத் திவ்விய திருஷ்டி யுண்டு. நேற்றவனிடமிருந்தேன். அவனை எனக்கெப்போழ்து சாபம் விலகுமெனக் கேட்டேன். அவன் என்னை நோக்கி இரவு வரும்வரை பொறு. அப்போழ்துதான் எங்கட்குரிய சக்தி எங்களுக்குத் தெளிவெய்தும், எனக் கூறி யென்னை யவணிருத்திக்கொண்டான். அப்போழ்து யான் 'பூதாதிகட்கு இரவில் எவ்வாறு ஆற்றல் விளைகின்ற'தெனக் கேட்டேன். அதற்கவன் 'முன்னர் சிவபெருமானுக்கும் பிரமதேவனுக்கும் ஓர் வாதம் நேர்ந்தது. அப்போழ்து சிவபெருமான் 'பகற்காலத்தில் இவைகளைச் சூரியகிரணம் ஊறு செய்யா

---

96 திவ்விய திருஷ்டி=தெய்வநோக்கம், ஞானப்பார்வை, இரகசியங்களைக் காணும் கண், இனி வரற்பாலவற்றை முன்னரே கண்டறிந்து கூறுமாற்றல்.

This is known as Clairvoyance; it includes also Clair-audience.

நிற்கும். [97] தேவாலயங்க ளில்லாவிடம், தேவர்கட்கும் பிராம ணர்கட்கும் மரியாதை யற்றவிடம், [98] அயுக்தமாகப் போகங் களைத் துய்க்குமிடம் இவைகளில் அவற்றிற்கு சக்தியதிகரிக் கும். மாம்சம் புசியா மாந்தர், களங்கமற்ற பெண்டீர், ஆசார வான்கள், சூரர், அறிஞர் முதலானோரைக் கண்டால் அவை பலங்குன்றி நடுங்கும்' என்று மொழிந்தன ரென்றான். பின் னர், சூரியனத்தமித்து இரவு வருதலும், அவன் என்னை நோக்கி 'உனது சாபவிமோசனத்திற் கேதுவாக, வின்று குணாட்டியன் வந்திருக்கிறான். நீ யவனிடஞ் செல்' லென வனுமதி கொடுத்தான். நான் வந்தும்மைக் கண்டுகொண் டேன். புஷ்பதந்தன் எனக்குரைத்த ஏழு மகாவித்தியாதரர் களது சரிதங்களையும் உமக்குச் சொல்லப் போகின்றேன். ஆயினும் மற்றோர் இரகசியத்தையும் யான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். உங்களுக்குப் புஷ்பதந்தன் மாலியவான் என்ற நாமங்கள் எவ்வாறமைந்தன? அவ்வரலாற்றை முதற் கண் எனக்குணர்த்த வேண்டும்,

என்றான் காணபூதி.

அதற்கிணங்கிக் குணாட்டியன் கூறலுற்றான்:—

[97] இதுபற்றியே பூதப்பிசாசங்கள் பகற்காலத்தில் வெளியே றாது பாழ்ங்கிணறு முதலிய இருண்ட விடங்களிற் பதுங்கியிருந்து இரவு வருதலும் வெளியேறி தம் பணிமேற் செல்லும். பகற்காலத் தில் பேய்களைக் காண்பதரிது.

[98] பிராமணனிடம் ஞானங்குன்றியிருப்பினும் வேதமோதுகையும் நித்திய கர்மானுஷ்டானமும் வழுவாதமையின் இவை அவற்கு மெய் யாகிய படையாம். ஞானக் குறுக்கத்தோடு ஒழுக்கக் குறைவும் நேரின் பிராமணன் ஒன்றுக்குமுதவான். அவனைப் பேய்பிசாசங்கள் அலக்ஷியஞ் செய்யும்.

## புஷ்பதந்தனெனும் பெயர்வந்த காரணம்

கங்காதீரத்தில், பகுசுவர்னகமெனும் அக்கிராரத்தில் கோவிந்ததத்தன் எனும் அந்தணர்க்கு அக்னிதத்தையெனும் மனைவியிடம் ஐந்து புத்திரர் உதயமாயினர். இவர்கள், பார்வைக்கு இலக்ஷணமுடையவர்களாயினும், சீலந்தெரியாத மூர்க்கராகவிருந்தனர். ஓர்நாள் வைசுவானரனெனப் பெயரியவோர் அதிதி, அவரது கிரகத்திற்கு வந்தனர். கோவிந்ததத்தரும் அக்னிதத்தையும் அவரை மிகவும் பிரார்த்தித்துத் தங்கள் கிரகத்தில் போஜனஞ் செய்து போகும்படி வேண்டிக் கொண்டனர். அதிதி யவர்களது வேண்டுகோளுக் கிணங்கினர். ஒழுக்கந் தெரியாத புத்திரர்களோ அவரை மதிக்காது மிகவும் அலக்ஷியஞ் செய்தனர். அதனால் அவர் எனது தாய் தந்தையர் செய்யப்புகுந்த அதிதி பூஜையை ஏற்றுக்கொள்ளச் சம்மதப்படவில்லை. ஆயினும், எனது பெற்றோர் அவரை மிக வினயமாக வேண்டிக்கொண்டு மிகவும் சிரத்தையோடு அவரை அமுதூட்டுவித்து அனுப்பினார்கள். அவ்வைந்து புத்திரருள் ஒருவனான தேவதத்தன், அதிதியை யுபசாரஞ் செய்யாத அபராதத்தையும், அதனாற் றனது தாய் தந்தையருற்ற மனோ சங்கடத்தையும், நல்லறிவால் நினைந்து நினைந்து, மனம் நைந்து, இல்லத்தைவிட்டு, பதரிகாச்சிரமத்தை யடைந்து, சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்தான். சருகுகளைத் தின்று, தூமபானஞ்[99] செய்து கடுந்தவ மியற்

[99] தூமபானம் இவண் வெண் புகை போன்ற நீராவியைப் பருகல் எனும் பொருள் பயக்கும். பதரி ஹிமாசலத்தை யொட்டிய திவ்விய க்ஷேத்திர மாதலின் அவண் வெண்புகை மயமான மஞ்சு எளிதே பானத்திற்குக் கிட்டும்.

றியதால் சம்பு பிரசன்னமானார். தேவதத்தன், கறைமிடற் றண்ணலைக் கண்குளிரத் தரிசித்துப், பின்னர் அவரை நோக்கி "எந்தாய்! தங்களது புகழையே கானம்பண்ணி இடைவிடாது தொண்டு புரியும் கணங்களிலொருவனாக [100] என்னையும் ஆகும்படி அருள்செய்க' வெனப் பிரார்த்தித்தான். அதற்கு மகேசன் 'நீ விரும்பும்வண்ணம் உன்னை நமது கணங்களிலொருவனாக வாக்கிக்கொள்வாம். ஆயினும் சிறிதுகாலம் நீ புவியிற் றுய்க்கவேண்டிய போகங்களைத் தக்க வித்தியாநிதியைப் பெற்றுத் துய்த்தொழித்து தேகாந்தத்தில் எனதுலகை யடைவாயாகவென வரமளித்து உருக்கரந்தார்.

அவ்வாறே தேவதத்தன் கல்வியபிலுதற்காகப் பாடலி புத்ரத்தை யடைந்து வேதகும்பனெனும் அந்தணனிடம்வித்தி யார்த்தியாக [101] க் கலைகளை யோதிவந்தான். இவ்வாறு நிகழுங் கால் அவ்வந்தணனது மனைவி இவன்பால் காமநோய்கொண்டு அடாத செய்கைக்குத் தன்னோடிணங்கும்படி யிவனை பலாத் காரஞ் செய்தாள். உடனே தேவதத்தன் அந்நகரில் வசிப்பது

---

[100] பிறவிக்கடலை விட்டுக் கரையேறிய அல்லது ஏறவல்ல பெரியோர்கட்குச் சிவகண நிலையே ஒப்பரிய நிலையாம். இதனை,

"இறுமாந் திருப்பன்கொலோ வீசன்பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமான் ஏந்திதன் சேவடிக்கீழ்ச் சென் றங்கிறுமாந் திருப்பன்
கொலோ" என்பதாலறிக.

[101] வித்தியார்த்தி = கல்வியைப் பொருளாகக் கொள்பவன் (பதப்பொருள்) ; மாணவகன்.

அயுக்தமெனக் கருதி பாடலிபுத்ரத்தை விட்டு நீங்கிக் கடிதில் பிரதிஷ்டானத்தை யடைந்தான்.

அவண், மந்திர சுவாமியென்ற பிராமணனிடம் வித்தையைப் பயின்று வந்தான். இவர் மனையாள் மிக வயோதிகம். ஓர்நாள் தேவதத்தன் அத்தேசத்தரசனாகிய சுசர்மாவினுடைய புதல்வி ஸ்ரீ என்பவளைக் கண்ணுறும்படி நேர்ந்தது. மாடியில் விளையாடிக்கொண்டிருந்த ஸ்ரீயும் அப்போழ்து அவனைப் பல கணிவழியாய் நோக்கினள். உடனே இருவரும் மாரன் தம்மை சங்கிலியிட்டுப் பூட்டிட்டாங்கு தம் வயமிழந்து தம்பித்து நின்றனர். ராஜகுமாரி யவனைக் கைச்சாடைக் காட்டித் தன்னருகே யழைத்தாள். அவனும் அவளைக் குறுகினன். அவள் ஓர் புஷ்பத்தை எடுத்துத்தனது வாயிற்பெய்து அதனை யவன்மேல் தனது பல்லாலெறிந்தாள். தேவதத்தன் இந்தப் புஷ்பதந்தக் குறியைப் பொருள் காணாது அவளைவிட்டு நீங்கித் தனது ஆசிரியரது வீடுவந்து சேர்ந்து ஏதோ வொன்றைப்பறிகொடுத்தவன்போல் மதிமயங்கிப் பூமியில் மிக்க விரகவேதனையால் உருளாநின்றான். அவன்படும் அவஸ்தைதையைக்கண்ட மந்திர சுவாமி அவன் காமத்தாற் றுக்குண்டானென வூகித்து மிக இனிய வசனத்தால் அவனிடமிருந்து நடந்த இரகசியத்தைத் தெரிந்துகொண்டு அரசிளங்குமரிசெய்த மன்மத சமிக்ஞையை யவனுக்கு விளக்கி யவனைநோக்கி, நீ புஷ்பதந்தமென்னும் ஆலயத்திற்குச் செல்தி ; அங்கே யவளைக் கண்டு சுகம்பெறுவாய் எனக் காமநோய்தீர வழிகாட்டினர். அவ்வாறே தேவதத்தன் அவ் ஆலயத்தையடைந்து கற்பக்கிரஹத்துட் புகுந்து கதவின் மறைவில் காத்திருந்தான். அவன் காதலித்த ஸ்ரீ எனப்பெயரி

பெண்ணும் அன்று அஷ்டமியெனச் சொல்லித் தான் ஏகாந்தமாய்க் கடவுளை வழிபடச் செல்வதாகச் சாக்குக்காட்டி அவ்வாலயத்தை யடைந்து கற்பக்கிரகத்துட் புகுந்தாள். இருவரும் சந்திக்கவே ஸ்ரீ அவனை இன்புற ஆலிங்கனஞ் செய்தாள். பின்னர் அப்பெண்மணி தேவதத்தனை நோக்கித் தான்செய்த சமிக்ஞையை எவ்வாறு அவன் பொருள் கண்டானென வினவலும் அவன் தனது ஆசிரியர் மூலமாக அர்த்தத்தைத் தெரிந்து கொண்ட இரகசியத்தை யவட்குப் புலப்படுத்தினான். உடனே அவள் அவனது மௌடீகத்தை யுணர்ந்து அவனை யுதறித் தள்ளிவிட்டுத் தனதாண்மனை சென்றாள். தேவதத்தன் காமாக்னியால் மூர்ச்சித்துக் கீழேகிடந்தான். சிவபெருமான் தனது பக்தனுக்குற்ற இவ் இக்கட்டைநோக்கித் தனது கணத்தலைவர்களிலொருவனை பஞ்சசிகனை [102] யவனிடமனுப்பி யவனது இஷ்டத்தைப் பூர்த்தி செய்விக்கும்படி ஆக்ஞை செய்தார்.

உடனே பஞ்சசிகன் அறிவைப் புறம்போக்கிக் கிடந்த தேவதத்தனை யெழுப்பித் தக்க வாற்றலை யவனுக்குக் கொடுத்தான். பின்னர் தேவதத்தனை மாயாசக்தியால் பெண்வேடம் பூண்வித்துத் தான் வயோதிகப் பிராமண வுருத்தாங்கி ஸ்ரீயின் தந்தையாகிய அங்கர்க்கரசனைக் கிட்டி 'இப்பெண் எனது மருமகள்; நான் ஓரூருக்குப் போய்த் திரும்பி வரவேண்டியதாயிருக்கிறது; அதுகாறும் இப்பெண் உமது அந்தப்புரத்தில் உமது மகளோடு வசிக்கட்டு'மென மொழிந்தான். அரசன்

[102] பஞ்சசிகன்.—இவன் கபில மகா விருஷியின் பரம்பரையிலுதித்து மிதிலை மன்னனாகிய ஜனகனுக்குச் சாங்கிய ஞானத்தின் மெய்ப்பொருளை யுபதேசித்தவன். சிவகணங்களிலொருவனுமாம்.

அவ்வேண்டுகோளை மறுத்தற்கஞ்சி அப்பெண்ணை யேற்றுக் கொண்டு அவளை அந்தப்புரத்திற் கனுப்புவித்தான். பஞ்சசிகன் செலவுபெற்று அரசனை விட்டு வெளியேறிச் சென்றான். பெண் வேஷம் பூண்டிருந்த தேவதத்தன் ராஜ குமாரத்திக்கு மிகவும் நேசம் வாய்ந்த சேடியானான். சமயம் பார்த்துத் தான் இன்னானென்பதை யவட்குணர்த்தவே அவட்குக் காமம் மீதூர இருவரும் காந்தர்வமாகக் கூடி யின்புறாநின்றனர். அரசிளங்குமரி கற்பவதியாயினள். இனி அவணுறைவது தகுதி யன்றெனக் கண்ட தேவதத்தன் தனது ஆப்த சகாயனாகிய பஞ்சசிகனை மனத்தால் நாடினான். உடனே அந்தக் கணநாதன் ஒருவருந் தெரியாவண்ணம் அந்தப்புரத்தை யடைந்து தேவதத்தனை யழைத்துக்கொண்டு மாயா ஜாலத்தால் அரண்மனையை விட்டகன்றான்.

பின்னர் பஞ்சசிகன் யௌவன புருஷனான தேவதத்தனைத் தன்னோடிட்டுக்கொண்டு அரசனை யடைந்து ' நான் எனது மகனைக் கண்டு அழைத்துக்கொண்டு வந்திருக்கிறேன். முன்னம் நான் உம்பாலொப்புவித்த எனது மருகியை என்னிடங் கடிதழைத்துத் தருக' வெனக் கேட்ப, வரசன் மிகவும் திகைப்பெய்தினான்.

பின்னர் தனியிடத்தில் மந்திரியை யழைத்து அவனை நோக்கி ' எனக்கிஃதோர் மாயமாகத் தோன்றாநின்றது. தேவர்கள் தமக்கு விநோதார்த்தமாக [103] மனிதரிடம் ஜாலம் செய்வதுண்டு. முன்னோர் காலத்தில் இந்திரனும் யமனும் பருந்தும்

[103] விநோதார்த்தமாக = விளையாடுதலையே பொருளாகக் கொண்டு, லீலையை உத்தேசித்து.

புறுவுமாக வருமாறிச் சிபிச்சக்கரவர்த்தியைப் பெருஞ்சோதனை செய்தானன்றோ! அவ்வாறே இஃதும் எற்கு ஓர் தேவமாயை யாய்த்தோன்றுகின்ற'தெனக் கூறிப் பின்னர் மனத்தைச் சிறிது திடஞ்செய்துகொண்டு அவ்வயோதிக வந்தணன்முன் குறுகி 'ஐயரே, என்பாலோர் வஞ்சகமுங் கிடையாது; ஏதோ காரணத்தால், நீர் என்னிட மொப்புவித்த பெண் இவ்வந்தப்புரத்தினின்றும் தவறிப்போய்விட்டாள். என்னை க்ஷமிக்கவேண்டும் என்றால் சாத்தியப்பட்டதைக் கேட்டால் நான் மறுக்காது செய்யக்கூடு'மென வேண்டிக்கொண்டான். இவ்வாறு விளையுமென முன்னதாகக் கண்ட வக்கிழட்டுப்பார்ப்பான் பரிவெய்தியவன்போல் நடித்து 'ஆனாலொன்று செய்மின். எனது மருகிக்குப் பதிலாக வுமது பெண்ணையேனும் எனது குமாரனுக்கு வதுவை செய்து வையு'மென்றான். வேறொன்றுஞ் செய்தற் கரசனுக்குத் தோன்றாமையின் அவன் சம்மதித்துத் தனது மகளாகிய ஸ்ரீ என்பவளைத் தேவதத்தனுக்குப் பாணிக்கிரஹணஞ் செய்வித்தான். பின்னர் இவர்க ளிருவருக்கும் ஓர் புத்திரன் பிறந்தான். சுசர்மா அப்புத்திரிகாபுத்திரனை[104]த் தனக்குப்பின் அரசனாகப் பட்டந் தரிப்பித்துத் தான் கதிநாடித் தவஞ்செய்ய ஆரண்ணியத்தை யடைந்தான்.[105]

---

[104] சொந்தமாகப் புத்திரனைப்பெறாத வரசர் இவ்வாறு தமது புத்திரிகா புத்திரனுக்குப் பட்டந்தரிப்பது மரபு. இவ்வாறே செல்வவந்தரும் ஆண்மகவு தமக்கில்லையாயின் தமது குமாரத்தியின்புத்திரனை சுவீகாரஞ் செய்வது மரபு.

[105] மூப்பு முதிர்ந்தகாலை அரசன் ராஜ்யபாரத்தைத் தக்கவனிட மொப்புவித்து ஆத்மலாபத்தைக் கருதிப் பற்றற்றுத் தவம்புரிதல் அவற்குச் சிறப்பு. இக்காலத்தோ ஆசையெவரையும் பணிகொள்ளும்

பின்னர் ஸ்ரீயும் தேவதத்தனும் பூலோக போகங்கள் யாவற்றையும் துய்த்து விரக்திபூண்டு வானப்பிரஸ்த ஆச்சிர மத்தை [106] மேற்கொண்டு கானகஞ் சென்று தவஞ்செய்து தமது பூர்வகதியைக்கண்டு தமது உடல்களைத் துறந்து விண் ணேறினர். உடனே இருவரும் ஒப்பரிய கைலாச வாழ்வைப் பெற்றனர். அவருள் தேவதத்தன் புஷ்பதந்தனெனும் காரணப் பெயர் கொண்டு பூதகணமானன். இப்பெயர் அவன் மண்ணுலக வாழ்விலுழலும் போழ்து அவனது காதலி அவன்பாற் செய்த மன்மத சமிக்ஞையால் விளைந்தது.

ஸ்ரீ என்பவளும் கைலாசத்தைக் கிட்டி ஜயை எனப் பெயர் புனைந்து அம்பிகைக்குச் சேடியாயும் புஷ்பதந்தனுக்கு உயிர்த் துணைவியாயு மமைந்தாள்.

இஃது புஷ்பதந்தனெனும் பெயர் வந்த காரணம். இனி யெனக்கு மாலியவானெனும் நாமம் வந்த காரணத்தையுங் கேள்.

---

வலியால் ஓரரசனும் உயிரோடே தனது பட்டத்தை வேறொருவற்குக் கட்டித் தான் சாந்தி நாடுவது மிகவுந் துர்லபமாயிருக்கிறது.

106 ஆச்சிரமமென்பது மாந்தர் படிப்படியாய் மேலேறுதற்கு அறத்தால் விதித்த வொழுக்கம்.

கலைபயிலுதலாகிய பிரமச்சரியம் முதல் ஆச்சிரமம்; பின்னர் வதுவை செய்துகொண்டு நடத்தும் இல்லறமாகிய கிரஹஸ்தம் இரண் டாம் ஆச்சிரமம்; இவ்வில்லறம் மக்கட் பேற்றைக் கருதியும் துறவிக ளைப் பேணுதற்பொருட்டும் ஏற்பட்டது. பின்னர் நிகழ்வது மனத்துற வாகிய வானப்பிரஸ்தம் அல்லது காட்டுவாழ்க்கை. இதுவே மூன்றும் ஆச்சிரமம். இத்துறவில் காமத்தை நீத்து மனைவியோடு வாழலாம். சர்வசங்கப் பரித்தியாகமாகிய சந்நியாசமே நான்காம் ஆச்சிரமம்.

The stages are studentship, husbandship, jung le-life, and mendicancy

## மாலியவான் எனும் பெயர்வந்த காரணம்.

நானும் பூர்வ மனுஷப்பிறப்பில் கோவிந்ததத்தரது ஐந்து புத்திரருள் ஒருவன். எனது பெயர் சோமதத்தன். எங்கள் கிரஹத்திற்கு அதிதியாய் வந்த வைசுவானரனெனும் அந்தணனை நானும் எனது பிராதாக்களோடு கூடிக் கேலிபண்ணி அலக்ஷியஞ்செய்த காரணத்தை நோக்கி பச்சாதாபங்கொண்டு அவ்வபராதத்தைப் போக்குதற்காக ஹிமாசலஞ் சென்று கறைமிடற்றண்ணலை நோக்கித் தவம்புரிந்தேன்.

அப்போழ்து, அநுதினமும் நறுமலர் கொய்து அவற்றைப் பற்பல பாணியாக மாலைகட்டி சிவபெருமானுக்குச் சாத்தி மிக விநயமாக அம்மையப்பரை வழிபட்டு வந்தேன். ஓர் நாள் சிவபெருமான் என்முன் பிரத்தியக்ஷப்பட்டு நான் கேட்டுக்கொண்டவண்ணம் என்னைத் தமது பூதகணத்திலொருவனாக வாக்கிக்கொண்டார். யான் அவரை அநுதினமும் பூமாலை சாத்தி வழிபட்டு வந்ததால் அப்பெருமான் எனக்கு மாலியவான் எனும் நாமத்தைச் சூட்டினார்.

இதுவே எனக்கு மாலியவானென்ற பெயர்வந்த காரணம் என்று குணாட்டியன் காணபூதிக்குக் கூறினன்.

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின்?

ஓம் திருச்சிற்றம்பலம்

---

## எட்டாந்தரங்கம்

### பெருங்கதை வெளிப்போந்த வரலாறு

### காணபூதி ஏழுமகா வித்தியாதர கதைகளைக் குணட்டியனுக்குக் கூறல்

இவ்வாறு குணட்டியன்பால் புஷ்பதந்தன். மாலியவானெனும் நாமங்களுண்டான வகையைக் காணபூதி கேட்டுக் கொண்டபின்,

காணபூதியாகிய பிசாசம் ஏழு மகா வித்தியாதர சரிதங்களையும் பைசாச பாஷையின் வாயிலாகக் குணட்டியனுக் கெடுத்துரைத்தது.

### குணட்டியன் அக்கதைகளைப் பாவாக்கல்

குணட்டியன் அவ்வேழு பெருங்கதைகளையும் ஏழு வருஷத்தில் பைசாச பாஷையில் ஏழு லக்ஷங் கிரந்தமாகப் பாவிசைத்தான். (ஓர் கிரந்தம்=32 எழுத்து)

### பெருங் கதைகள் எழுதப்பட்ட விநோதம்

மை கிடையாமையானும், வித்தியாதரர்கள் அபகரித்துக் கொள்ளாதிருப்பவும், குணட்டியன் தனது சரீர ரக்தத்தைக் குத்தியெடுத்து மையாகக்கொண்டு அவ்வேழு கதைகளையும் எழுதினான்.

### கதை யெழுதும்போழ்து நேர்ந்த விந்தை

குணட்டியன் இவ்வேழு மகா கதைகளையும் எழுதும் போழ்தே யவற்றைக் கேட்க வந்த விச்சாதரர்களால் ஆகாயமெங்கணும் விதானங்கட்டியாங்கு மறைக்கப்பட்டது.

## காணபூதி சாபவிமோசன மடைதல்

இவ்வாறு குணாட்டியனு விசைக்கப்பட்ட இவ் வேழு மகா கதைகளையும் உள்ளவா கண்கொண்டு பார்த்த மாத்திரையானே காணபூதி தனது சாபத்தின் முடிவிடத்தைக் கிட்டித் தனது மெய்க்கதியை யடைந்தான்.

## பிசாசங்கட்கு நேர்ந்த கதி

மற்றைப் பிசாசங்களும் இவ்வற்புதக் கதைகளைச் செவியுறக் கேட்ட புண்ணியத்தால் தத்தம் பிசாசத்தன்மை நீங்கப் பெற்றுத் தேவலோகத்தை யடைந்தன.

## உலகம் ஈடேறக் குணாட்டியன் கவலை யுறல்

பின்னர் குணாட்டியன் சிந்திப்பான்,—'என் சாபம் முடிவு பெறுங்காலத்து யானிக்கதைகளை மண்ணுலகில் நிலைபெற வைத்து வரும்படி எனக்கு ஆக்ஞை யிருந்ததே அக்கட்டளைப் படி எவ்வண்ணம் முற்றுவிப்பேன் ?'

## பெருங் கதைகள் உலகிற் பரவுறுதற் குகந்த வழியைக் குணாட்டியன் காண்கை

இவ்வாறு குணாட்டியன் கவலையுறுவதைக் கண்ட அவனது மாணவர்களாகிய குணதேவனும் நந்திதேவனும் அவனை நோக்கி, "இம்மண்ணுலகில் இக்கதைகளைக் கேட்டறிய வல்லவன் சாதவாகனனையன்றி வேறொருவருமில" ரென்றனர்.

அதற்குக் குணாட்டியன் அவர்களை நோக்கி 'அவ்வாறே யாகுக ; நீவிரிருவீரும் இக்கதைகளைக் கொண்டுபோய் சாத

வாகனனுக்கு வாசித்துக் காட்டக் கடவீ' ரென ஆக்ஞை செய்து அவ்விருவரையும் அவ்வரசனிடம் போக்கித் தான் தேவகிருதி யெனும் உய்யான வனத்தில் வதிந்தான்.

## சாதவாகனன் ஏழு மகாகதைகளையும் குணாட்டியனது மாணவர்களிடங் கேட்டல்

அம்மாணவர்கள் அவ்வாறே அவ்வரசனை யடைந்து தம தாசிரிய ரெழுதிய ஏழுலக்ஷங் கிரந்தங்களையும் அவனுக்குக் காட்டி, இவை யாவும் குணாட்டியனு லிசைக்கப்பட்டனவெனச் செப்பி யவனுக்கு அவற்றை வாசித்துக் காட்டினர்.

## சாதவாகனன் அக்கதைகளைப் பொருட்படுத்தாது சிறுமை செய்தல்

பைசாச பாஷையிற் பாவாக்கப்பட்ட அவ்வேழு மகா கதைகளையும் கேட்டுக்கொண்ட சாதவாகனன் அவற்றி னளவை (7 லக்ஷம் கிரந்தம்) நோக்கி வித்தியா கர்வங்கொண்டு அவற்றைப் பின்வருமாறு சிறுமைப் படுத்தினன்,—

'பிரமாணமோ ஏழுலக்ஷம், வாக்கோ ரசமற்ற பைசாசம், அக்ஷரங்களோ ரக்தமயம், சுடு சுடு இப்பைசாச கதையை?

## குணாட்டியன் அக்கதைகளை நெருப்பிலிடுதல்

இவ்வாறு கல்விச்செருக்கால் ஏளனஞ் செய்யப்பட்ட கிரந்தங்களை அம்மாணுக்கர் திரும்பவெடுத்துக்கொண்டு குணாட் டியனிடம் வந்து நடந்த விஷயத்தை மொழிந்தனர். அதைக் கேட்டுக் குணாட்டியன் மிகவும் வருத்தமுற்றான். எவன்தான் தானறிஞனாயிருப்பவும் மற்றோர் அறிஞனால் அவமதிக்கப் படின் அதனை யெளிதே சகிக்கவல்லவன்!

இவ்வாறு வாட்டத்தையுற்ற குணாட்டியன் தனது சீடர்களோடும் சமீபத்தேயிருந்த வோர் குன்றத்தை யடைந்து ஓர் மறைவிடத்திலோர் அக்னி குண்டத்தை யமைத்துத் தானிசைத்த கிரந்தங்களை ஒவ்வோரேடாக வாசித்து அக்னியில் எரியும்படி விட்டான்.

## விலங்குகளின் செய்கை

இவ்வாறு ஒவ்வோரேடாய் வாசித்துக் குணாட்டியன் தனது காவியத்தை நெருப்பிலிடுங்கால் பக்ஷிகளும் மிருகங்களும் அவ்வற்புத சரிதங்களைக் கேட்பதற்காகப் பலவிடத்திருந்தும் அவ் வோமகுண்டத்தை மொய்க்க வாரம்பித்தன.

## உதயணன் கதை அக்னிக்குத் தப்பல்

இவ்வாறு கிரந்தங்கள் யாவும் தீக்கிரையாகி யழிவுறுங்கால், அம்மாணாக்கரிருவரும் தமது ஆசிரியரை நோக்கி உதயண குமாரனை நரவாகன தத்தனுகிய மகா வித்தியாதரன் கதையையேனும் நெருப்பிற் காகுதி செய்யாதிருக்கும்படி வேண்டலும் குணாட்டியன் அவ்வாறே அவ்வொரு லக்ஷங் கிரந்தத்தையும் வன்னிக்குக் கொடாது காத்தான்.

## விலங்குகள் கதை கேட்டானந்தத்தழுந்தல்

மானினங்களும் பன்றிகளும் எருமைகளும் மற்றை மிருகங்களும் ஆகாராதிகளையும் ஜலபானத்தையும் துறந்து ஆனந்தக்கண்ணீர் பொழிதர ஸ்தம்பாகாரமாக, அங்கங்கே கூட்டங் கூட்டமாகக் கூடிச் செவியாகக் கேட்டுக்கொண்டிருந்தன.[107]

[107] 'செவிக்குணவில்லாத போழ்து சிறிது வயிற்றுக்கு மீயப்படும்' எனும் பொய்யாமொழி மிருகங்களுக்கு [மமைந்ததன்றே

## சாதவாகனன் நோயாற் பிடியுண்ணல்

இவ்வாறு கானகத்தை யடுத்த குன்றத்தில் விலங்குக ளெல்லாம் ஆகாராதிகளைத் துறந்து கதாமிர்தத்தைச் செவியார வுண்டு ஆனந்தத்தில் அழுந்தாநிற்புழி, சாதவாகனபூபதி நோயாற் பிடியுண்டான்.

## நோய் வந்த காரணம்

ஆயுள் நூல் வல்லார் அரசனது நோயைப் பரீக்ஷித்த காலை அவர்கள் வற்றிப்போன மாம்சபோஜனத்தை [108](சுஷ்க மாம்சபோஜனத்தை) அரசன் அருந்தியதால் அந்நோய் விளைந்ததெனக் கண்டார்கள்.

பின்னர் பரிஜாரகரைப் போஜனப்பிசகைப்பற்றிக் கேட்ட போழ்து அவர்கள் 'நாங்கள் என் செய்வோம்; அத்தகைய மாம்சத்தைத்தான் வேடர்கள் ராஜ போஜனத்திற்காகக் கொண்டுவந்து உதவுகிறுர்கள்' என்றனர்.

அப்பால், வேடர்களை வரவழைத்து விசாரித்தபோழ்து அவர்கள் 'இந்நகர்ப்புறத்தே யோர் குன்றுளது; அங்கே யோர் பிராமணன் ஓர் ஹோமகுண்டத்தில் ஏடேடாய் வாசித்து அவ் வேடுகளை ஹோமஞ்செய்கிறுன். விலங்குகள் யாவும் பசிதாகங் களைத் துறந்து அவனது வாசகத்தைக் கேட்காநின்றன; அத னுல் அவைகள் மிகவும் தேகமிளைத்துப் போயின. வேறு மிரு கங்களோ கிடையாது. ஆதலின் அம்மிருகங்களின் மாம்

[108] வற்றிய மாம்சம் அதனை யருந்துவோனது தேகசாரத்தைத் தன்பாலிழுத்துக்கொண்டு நோயை விளைவிக்குமன்றி அருந்துவோ னது தேகத்தை வளர்க்கத் தனது சாரத்தை யுதவாது.

சமே எங்கட்குக் கிட்டுகின்றது. யாங்கள் என் செய்வோம்' என்றனர்.

## அரசன் அதிசயத்தை யறியப்புகுதல்

இவ் அதிசயத்தைக் கேட்டலும் அரசனுக்கு இரகசியத்தை யறிந்துகொள்ள விருப்பமுண்டாயிற்று. உடனே யவன் புறப்பட்டு அக்குன்றத்தை யடையவே, அங்கே யோர் ஜடாபாரந் தாங்கிய தவசி, வேடர்கள் செப்பியவண்ணமே ஏடுகளை வாசித்து நெருப்பிலிடுவதையும், ஹோமகுண்டத்தைச் சூழ மிருகங்கள் வாடி வதங்கி மந்தை மந்தையாய் அசைவின்றி யானந்தத் தழுந்திக்கிடப்பதையும் கண்ணுற்றான். ஹோமஞ்செய்யும் அந்தணனது ஜடாபாரம் அக்னியொடுங்கித் தனது யதாஸ்தானத்தைக் குறுகுமுன் வெளிப்படுக்கும் புகையைப்போற் றோன்றிற்று. [109]

ஆனந்தக் கண்ணீரைத் தாரை தாரையாய் விட்டுக்கொண்டு அற்புதக்கதைகளைச் செவியுற்றுக் கேட்டுக்கொண்டிருக்கும் விலங்குகளின் மத்தியிலிருந்து ஹோமஞ் செய்யுமந்தணனை உற்றுநோக்கி அரசன் குணாட்டியனெனத் தெரிந்துகொண்டான்.

---

109 அழியாது மறைவாயுறையும் அக்னியிலிருந்தே அழிதன்மாலையதான பூதாக்னி தோன்றும். இவ்வாறு வெளித்தோன்றிய அக்னி மறைவெய்தித் தனதழியா நிலையைத் திரும்பக் கிட்டு முன்னம் புகையை வெளிப்படுக்குமன்றே! குணாட்டியன் தனதழியா நிலையாகிய மோக்ஷத்தைப் பற்றுந் தருவாயிலிருந்தானென்பது உட்பொருள்.

## சாதவாகனன் குணாட்டியன்பாற் பக்திபூணல்

உடனே சாதவாகனன் குணாட்டியனை நமஸ்காரஞ்செய்து 'சுவாமிகாள், இவண் யாது செய்கின்றீர்க' ளெனக் கேட்டான்.

மாலியவானாகிய குணாட்டியன் புஷ்பதந்தனது சரிதத்தையும் தனது சரிதத்தையும் பைசாச பாஷா முகத்தால் சாதவாகனனுக்குத் தெளிவித்தான்.

குணாட்டியனைச் சிவபெருமானது பூதகணத்தில் ஒருவனெனத் தெரிந்துகொண்ட சாதவாகனன் மற்றுமோர் தரம் குணாட்டியனை நமஸ்கரித்துச் சிவபெருமான் முத்தமிழ் நான்மறை முனைத்தருள் வாக்கால் [110] கைலாசத்தில் அம்பிகைக் குரைத்த, ஏழு மகா வித்தியாதர சரிதங்களையும் தனக்குக் கூறும்படி விண்ணப்பம் பண்ணிக்கொண்டான்.

## குணாட்டியன் உதயணன் கதையைச் சாதவாகனனுக்குக் கொடுத்தல்

அதற்குக் குணாட்டியன் 'அம் மகா கதைகள் ஏழனுள் உதயணன் கதையொன்றே அக்னிக்கு இரையாகாது மிஞ்சிற்று. வேண்டுமாயின் இவ்வொன்றைப் பெற்றுக்கொள்தி. எனது மாணுக்கர் இதற்குப் பொருள் காண்பார்கள்' என்று விடை யளித்தான்.

---

[110] முத்தமிழ் என்பது இயல் இசை நாடகமெனும் மூன்று வகை. நான்மறை என்பது இருக்கு, எஜுர், சாமம், அதர்வணம்.

## குணாட்டியன் தன்னிலை யடைதல்

உடனே குணாட்டியனது பணி முடிந்தது. அக்கணமே யவன் சிவகணமான தனது பதவியை யடைந்தான்.[111]

## சாதவாகனன்
## அக்கதையைப் பெருங்கதையெனப் பெயர்
## புனைந்து பிரதிஷ்டானத்திற் கெடுத்துக்கொண்டு போதல்

சாதவாகனன் எஞ்சி நின்ற அவ்வொரு கதையைப் பிரஹத்கதை (பெருங்கதை) யென நாமஞ் சூட்டி யதனை யெடுத்துக்கொண்டு தனதரண்மனை சென்றான். தன்னோடுடன் போந்த மாணவர்க ளிருவருக்கும் தக்க சம்பத்தை யளித்துச் சிறப்புச் செய்தான்.

## கதா பீடம்

கதாமுகத்தை வெளிப்படுத்த இவ்வாறு கதாபீடத்தைச் செய்வித்தான்.

## பெருங்கதை யுலகிற் பரவல்

இவ்வற்புதமான பெருங்கதை முதற்கண் சுப்ரதிஷ்டமாகிய அவனது நகரெல்லாம் பரவிப் பின்னர் நாடெங்கும் பரவிப் பின்னர் மூன்று லோகத்திலும் பிரசித்தி பெற்றது.

பிரஹத்கதாபீடம் முற்றும்.

ஓம் திருச்சிற்றம்பலம்

---

111 ஐம்பூதக்கலப்பாற் றேகமுண்டாவது அவரவர் விட்ட குறை தொட்ட குறைகளை முடித்தற்கென்க. அக்குறையை முடித்தற்கு வேண்டிய வினைவலியை மொண்டு வந்த தேகம் அவ்வினை முடிவில் ஆட்டமறும். இதனுண்மையை,

'வினைப்போகமே யொரு தேகங்கண்டாய் வினை தா னொழிந்தால்
தினைப்போ தளவும் நில்லாது கண்டாய்'

எனும் ஆன்றோர் கூற்றாற் றெளிக.

# உதயணன் கதை

## கதை வெளிப்பட்ட வரலாறு

---

### பரிக்ஷை வினக்கள்

I. சிவபெருமான் காபாலிக மகாவிரதம் பூண்ட காரணம் யாது ?

II. பின்வரும் வாக்கியங்களின் கதா சந்தர்ப்பத்தைக் காட்டுக :

(1). ஜன்மாந்தரத்தில் ஒருவற்குக் கிட்டியும் எட்டாது தடைப் பட்ட சித்திகள் இப்பிறவியில் எளிதே கைகூட வென்ன விடையூறுளது ?

(2). எல்லாம் சஞ்சலத்திற்கே யிடமாகாநின்றது.

(3). பேதாய், அழகென வோர்பொருள் வேறுளதோ? எதனை மனம் மிகக் காமிக்கின்றதோ அதுவே யம்மனத்திற்கு யாவற்றினுஞ் சிறந்த அழகிய பொருளாம்.

(4). பணத்தைக்கொண்டே பணத்தை விருத்தியாக்குவதில் என்ன அற்புதமுளது ? நானோ மூலதனமின்றியே தனவந்த னானேன்.

III. யோகநந்தன் யாவன் ? அவன் மேன்மையான கல்வியறிவுடைய னாயினும் ஏன் மதியிழந்து நடை கோணித் தனது வாழ்வைக் கெடுத்துக்கொண்டான் ?

IV. உதயண கதாபீடத்தில் கூறப்பட்டுள பதிவிரதைகள் தத்தங்கண வர்கட்குப் புரிந்த நன்மைகளை விவரமாய்க் காட்டுக.

V. வாருசி, தனது மனைவி அன்னையாகிய விருவரும் தன்பொருட்டு உயிர் நீத்தமையை, நினைந்து மனம் நொந்து துக்கத்திலாழா

நிற்புழி, அவனை யார் தேற்றியது? தேற்றிய மொழிகளைக கூறுக.

VI. புஷ்பதந்தன், மாலியவான், வரருசி, சாதவாகனன் என்பவர் கட்குத் தத்தமக்குற்ற பெயர்கட்குக் காரணமென்னை?

VII. சாணக்கியன் யாவன்? அவனது குணத்தைப்பற்றி யாது கூறலாம்?

VIII. வரருசி யோர் தவசியின் அகங்காரத்தை யொழித்து அவனை நல்வழிப்படுத்தினன். எவ்வாறு?

IX. பாடலிபுத்திரம் என்பதற் கப்பெயர் வந்த காரணத்தைக் காட்டுக. கதையைச் சுருக்கி மொழிக.

X. கனகலம், விந்தியவாசினி, பதரி, தேவகிருதி: இத்தலங்க ளிருக்குமிடங்களை விளக்கி ஒவ்வொரு தலத்தின் சிறப்பையும் எடுத்துரைக்க.

XI. ஐந்திரம், பாணினீயம், காதந்திரம், பிராதிசாக்கியம் என்பன யாவை? விளங்க விடை பகர்க.

XII. வரருசிக்கு எவ்வாறு ராக்ஷதனது உதவி கிடைத்தது?

XIII. செத்த மீன் சிரித்த அதிசயமான கதையை விளக்கஞ் செய்க.

XIV. பின்வரும் பதங்களை விளக்குக:

கறைமிடற்றண்ணல், ஆயுள்நூல் வல்லோர், ஏகச்சந்தக்கிராகி, சிறுவிதி, ரசாபாசம்.

XV. மோதகை ε பரிதாடயமாம்: இவ்வடமொழி வாசகம் பிறந்த சந்தர்ப்பத்தையும் அதனல் விளைந்த நன்மை தீமைகளையும் சுருக்கி விளங்கக் காட்டுக.

XVI. பிசாசங்கள் ஏன் பகலில் வெளிப்படுவதில்லை? அவற்றிற்கு எவ்விடங்களில் வலியோங்கும், எவ்விடங்களில் வலிகுன்றும்?

XVII. குணாட்டியன் மௌனவிரதங்கொண்ட காரணம் யாது?

XVIII. குணாட்டியன் சுப்ரதிஷ்டா நகர்ப்பிரவேசஞ் செய்யுங்காற் கண்ட காட்சிகளை வர்ணிக்க.

XIX. சாதவாகனன் பெருங்கதையைப் புவியிற் பரவ விட்டதற்குக் காரணம் என்ன? முதற்கண் அவன் ஏன் இக்கதையை அலக்ஷி யஞ் செய்தான்?

XX. 'பேதமையென்பது மாதர்க்கணிகலம்' என்பதன் யுக்தமான பொருளை எடுத்து நன்கு விளக்குக.

XXI. வரருசி, குணாட்டியன், சர்வவர்மன், சாதவாகனன்: இவர் கள் சரிதங்களால் முறையே மாந்தர் கற்றுக்கொள்ளக்கூடிய பேருறுதிகள் யாவை? ஆழ்ந்துநோக்கி யெழுதுக.

XXII. 'க்ஷணநேரத்தில் ஒன்றுமற்றுப்போகும் பெற்றியதான சரீரத் திடத்தும் சாரமற்ற சம்சார சாகரத்தினிடத்தும் அறிஞன் எவன்தான் குருட்டுத்தனமாய் மூழ்குவன்?'

இவ்வுறுதி வாக்கியம் எவரது? சந்தர்ப்பத்தைக் காட்டுக.

XXIII. 'பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுணம்'

இவ்வருள் வாக்கை விளக்குக.

XXIV. சாலாபகம் என்பது யாது? பெயர்ப் பொருத்தத்தையும் விளக்குக.

XXV. உதயண கதாபீடமாகிய இந்நூலை வாசித்தலால் உமக்கு உள்ளவா விளைந்த நன்மை யாது? ஆராய்ந்து விடை பகர்க.

---

# அரும்பத வகராதி

அ

அகந்தை = அக்ங்காரம், நானெனுஞ்செருக்கு.
அகழ்ந்து = தோண்டி.
அகோராத்ரம் = பகலும் இரவுமாக.
அக்கிராசனம் = முதல் ஸ்தானம்.
அந்தர்த்தானம் = அருவமாய் மறைதல்.
அபயம் = பயமின்மை, ரக்ஷிப்பு.
அம்மையப்பர் = சிவபெருமான்.
அர்த்தசந்திரப் பிரயோகம் = கைவிரல்களைப் பாதி நிலாப்போலமைத்து கழுத்தைப் பிடித்துத் தள்ளுதல்.
அவலம் = நிஷ்பிரயோஜனம்.
அவைக்களம் = சபை கூடிய விடம்.
அன்றில் = கிரவுஞ்சப்புள், ஓர் விதநாரை. இப்புள் ஆண் பெண் பிரியின் உயிர் தரித்திருக்க லாற்றாது. அதுபற்றியே அப்பெயர் இதற் கமைந்ததுபோலும்.
அக்ஷயம் = அ + க்ஷயம், குறைவற்றது.

ஆ

ஆற்றல் = பலம்.

இ

இக்கட்டு = பொல்லாங்கு.
இறும்பூது = அதிசயம்.

ஈ

ஈகை = கொடை.

உ

உசிதமான = தக்க, பொருத்தமான.
உயிரோவியம் = உயிரோடுகூடிய சித்திரம்.
உயிர்ப்பு = மூச்சு.
உவந்து = களிப்பெய்தி.
உழக்கிய = கலக்கிய.
உஷத்காலம் = விடியற்காலம்.

ஊ

ஊர்வசி = தொடையழகி (பதப்பொருள்), ஓர்தேவதாசி.

எ

எழில் = அழகு.
எழுமைக்கும் = எழுவிதப் பிறப்பின்கண்ணும்.

ஏ

ஏகசந்தகிராகி = கேட்பதை ஒரே தரத்தில் மனத்துட் பதிய வாங்கி வைக்க வல்லவன்.
ஏகாக்ரசித்தம் = ஏகம் + அக்ர + சித்தம், ஒருமுனைப்பட்ட மனம்.
ஏனம் = பன்றி.

ஐ

**ஐந்திரவியாகரணம்** : என்பது இந்திரனுலியற்றப்பட்ட இலக்கணமெனப் பொருள்படும். மற்றுஞ் சூக்குமப் பொருளுமுண்டு.

**ஐயுறு** = சந்தேகங்கொள்.

ஓ

**ஓவியம்** = சித்திரம்.

க

**கலாபகம்** = வங்காள தேசத்தில் வழங்கும் ஓர் வடமொழி வியாகரணம். பெயர்க்காரணத்தை நூலுட்காண்க.

**கழிபேருவகை** = கழி + பேர் + உவகை, கரைகடந்த பெரும் சந்தோஷம்.

**கறைமிடற்றண்ணல்** = ஸ்ரீ நீலகண்டன், சிவபெருமான்.

**கனல்சான்றாக** = அக்னி சாக்ஷியாக.

கா

**காந்தர்வமாக** = கந்தருவரைப் போல், யாழோர்போல், சுயேச்சையாக. அந்தணர் வேதம் எட்டுவிதமான மணங்களுளவெனக் கண்டது. அவற்றுள் காந்தர்வம் ஒன்று. இச்சையொத்த ஆடவனும் மாதும் பெண்ணைத் தத்தஞ் செய்தற்குரிய மாபினரின்றிக்கூடின் அதுவே காந்தர்வமாம். இம்மணம் தமிழில் களவெனக் கருதப்படும். ஆயினும் களவு காந்தர்வத்தினும் சிறப்புடைத்து.

அன்பி னைந்திணைக்
களவெனப் படுவது
அந்தண ரருமறை
மன்றல் எட்டனுள்
கந்தர்வ வழக்க
மென்மனார் புலவர்.

கி

**கிருத்தியம்** : கருத்தொழில் வல்ல மாந்தரீகன் நிர்மித்து ஏவும் தேவதை கிருத்தியா வெனப்படும்.

சு

**சுழுவி** = கூடி.

**சதா** = எப்போழ்தும்.

**சதுர்த்தன்** = சாமர்த்தியன்.

**சர்வக்ஞபீஜம்** = முற்றறிவாகிய விதை. இதன் உள்ளீட்டை யோகசூத்திரத்திற் காண்க.

ச

**சககமனம்** = உடன் செல்கை (பதப்பொருள்) உடன்கட்டையேறல், இறந்துபோன கணவன் உடல் நெருப்பிற்கிரையாகும் போழ்து தானும் தனது கட்டையை யதற்கு இரையாக்கல்.

சா

**சாகாரசம்**. சாகை = கிளை, ரசம் = சாரம். சாகாரச மென்பது ஔஷதிகளின் இரதம்.

**சாங்கோபாங்கமாக** = அங்கங்களையும் உபாங்கங்களையுங் கொ

ண்டு, சவிஸ்தாரமாக. கதைக ளின் பற்பலபாகங்கள் அங்கங் களெனப்படும்; கிளைக்கதை கள் உபாங்கங்களெனப்படும்.

சி

சிறுவிதி = குட்டிப் பிரமன், பிரம புத்திரனாகிய தக்ஷன்.

சீ

சீற்றம் = கோபம்.

சு

சுஷ்கமாம்சம் – உலர்ந்துபோன இறைச்சி.
சுஷ்க = சுக்குப்போன்ற.

சூ

சூழ்ச்சி = கபடம், தந்திரம்.

த

தபுதாரநிலை = மனைவியை யிழந்து நிற்கும்நிலை.

தா

தாரணை = மனம் ஒன்றில் ஊன்று கை, அட்டாங்க யோகத்தின் ஓர் கூறு.

தீ

தீவேட்டல் = அக்னி சாக்ஷியாக வதுவை செய்தல்.

து

துய்த்து = தின்று (பதப்பொருள்), அனுபவித்து.

தூ

தூர்த்தன் = விடபுருஷன்.

ந

நவவியாகரணம் என்பது ஒன் பதுவகை வியாகரணமெனவும், காலதர்மத்திற்குத் தக்க படி புதிதாயமைந்த இலக்கண மெனவும் பொருள்படும். புதி தாய் பாணினீயம் தோன்றிய பின்பழமையாய ஐந்திரம்நசிந்த தன்றே!

நா

நாமகள் = சரஸ்வதி, கலைமகள்.

நி

நிரபராதி = நிர் + அபராதி, அபரா தஞ் செய்யாதவன், குற்றமற் றவன்.

நீ

நீரரமகள் = அப்சரஸ், water-nymph.

நெ

நெற்றிக்கட்டீ = நெற்றி + கண் + தீ, லலாட நேத்திரத்திலிருந்து விளையும் நெருப்பு.

ப

பச்சாதாபம் = கழிவிரக்கம்.
பஞ்சா = ஐந்து விரலோடுங் கூடிய உள்ளங்கை.
படைத்தமொழி = பொய் வார்த் தை.
பட்டமகிஷி = இராணி, பட்டபு தேவி.

பா

பாணிக்கிரஹணம் = கைப் பிடித் தல் (பதப்பொருள்), வதுவை.

பாணினீயம் = பாணினி முனிவரால் வெளிப்பட்ட வடமொழி வியாகரணம்.

பி

பிரதிபா = உள்ளுணர்ச்சி, கவித்வம், அருள்.

பிரத்தியக்ஷம் = கண்ணெதிர் (பதப்பொருள்.)

பிராதா = சகோதரன்.

பிராதிசாக்கியம் = வேதாங்கங்களிலொன்று, வேதத்தின் சாகைகளைப்பற்றிக் கூறும் இலக்கணம்.

பு

புலிந்தன் = வேடன்.

புன்முறுவல் = குறுநகை, புன்சிரிப்பு.

பெ

பெற்றியர் = தன்மையர்.

பே

பேய்த்தேர் என்பது சூரிய வெப்பத்தால் பாலை நிலம் தடாகம் போற்றோன்றும் பொய்க்காட்சி; கானல்; mirage.

பொ

பொச்சாப்பு = பொறாமை.

ம

மடி = சோம்பல்.

மா

மாற்றம் = வார்த்தை.

மி

மித்துருத்துரோகம் = சிநேக வஞ்சகம்.

மீ

மீதூரல் = மேலே யேறுதல்.

மு

முகக்துறும் = விரும்புகின்ற.

யோ

யோகநித்திரை = அறிதுயில், தூங்காத்தூக்கம்.

ரி

ரிதம்ப்ரப்ரக்ஞை = நேரிதான மெய்யறிவு, சத்தியஞானம்.

ல

லஜ்ஜை = வெட்கம்.

வ

வகித்தல் = பூணுதல்.

வதுவை = விவாகம்.

வா

வாளா = வீணே, சும்மா.

வாகனம் = தாங்கும் பொருள், wagon.

வி

விண்டு = விஷ்ணு, திருமால்.

விந்தியாடவி = விந்திய + அடவி, விந்திய மலைக்காடு.

விப்பிரன் = பிராமணன்.

விமோசனம் = விடுகை, நீக்கம்.

விரகம் = காதல்.

விரக்தி = லௌகிகத்தில் வெறுப்பு, ஆசையொழிந்து பற்றறுகை.

விநயம் = செய்வதறிந்து செய்கை, பயபக்தி, சிரத்தை.

வே

வேதளித்தீ = கோபாக்னி.

வே

வேதோக்தமாக = வேதம் சரியென்று சொன்னவண்ணம்.

வை

வைரம் = பகை.

ஜ

ஜன்மாந்தரம் = கடந்த பிறப்பு, முற்பிறப்பு.

ஹ

ஹம்சம் = 1. அன்னம், பிரமன் வாகனம். 2. பிராண சொருபம், மேலுங்கீழுமாய் பிறழா நின்ற மூச்சு. இதன் உள்ளீட்டை பெரியாரிடங் கேட்டுத் தெளிக.

க்ஷ

க்ஷமிக்க = பொறுக்க.

க்ஷா

க்ஷாத்திரம் = பகை



Madras: The Guardian Press, Mount Road

மயர்வறவென்மனத்தே மன்னினான்றன்னை
உயர்வினையே தரு மொண்சுடர்க்கற்றையை
அயர்விலமரர்க ளாதிக்கொழுந்தையென்
இசைவினையென்சொல்லி யான்விடுவேனோ. (ச)

ப ;—அநந்தரம் இப்படி ஸாஸஞன விவனை நான் விடுகைக்கு விரகுண்டோவென்கிறார்.

| | |
|---|---|
| மயர்வு—அஜ்ஞாநம் | அயர்வு—மறப்பு |
| அற—அறும்படி | இல்—இல்லாத |
| என்மனத்தே—என்னெஞ்சுக்குள்ளே | அமரர்கள்—நித்யஸூரிகளுக்கு |
| மன்னினான் றன்னை — நித்யவாஸம் பண்ணுமவனாய் | ஆதிக்கொழுந்தை — ஸத்தாதிஹேது பூதனான தலைவனாய் |
| உயர் வினையே—(எனக்கு) ஜ்ஞாநபக்த்யாத்யபி வ்ருத்தியை | என்னிசை வினை — தன்னைக் கிட்டுகைக்கு என்னிசைவும் தானிட்ட வழக்காம்படியானவனை |
| தரும்—தருமவனாய் | என்சொல்லி—எதைச்சொல்லி |
| ஒண்—நிரதிஸயபோக்யமாம்படி | யான்—அவனடியறிந்த நான் |
| சுடர்க்கற்றையை—தேஜோராஸியான வடிவையுடையவனாய் | விடுவேன்—விடுவேன். |

அஜ்ஞாநத்தைப் போக்கிற்றிலனென்றுவிடவோ?, அஸந்நிஹிதனென்றுவிடவோ, உத்கர்ஷகானல்லனென்றுவிடவோ, உஜ்வலனல்லனென்றுவிடவோ? அவிலக்ஷணபோக்ய னென்றுவிடவோ, அநுமதிஸ்வாதீனை யென்றுவிடவோ என்று கருத்து. (ச)

ஆறு ; —(மயர்வற) இப்படி எம்பெருமானோடு வ்ருத்தமான ஸம்ஶ்லேஷத்துக்கு ஒருபடியாலும் மேலொழிவில்லை யென்கிறார். தன்திறத்தி லெனக்குள்ள வஜ்ஞாநமெல்லாம் போம்படி யென்னுள்ளே புகுந்தருளி, தன்னுடைய கல்யாணமான குணஸ்வரூபங்களை அத்யந்தவிஶதமாம்படி யெனக்குக்காட்டியருளி, தனக்கு ஸத்ருஶரான அயர்வறு மமரர்களோடு ஸம்ஶ்லேஷிக்குமா போலே என்னோடு ஸம்ஶ்லேஷித்தருளினவனை எங்ஙனே நான் விடும்படி யென்கிறார். ... ... ... ... (ச)

---

ஈடு ; அவ ;—(அஞ்சாம்பாட்டு) திருவாய்ப்பாடியி லிடைப்பெண்கள் க்ருஷ்ணனைவிட்டுப் பரமபதத்தை விரும்புமன்றன்றோ, நானிவனைவிட்டுப் புறம்பே போவதென்கிறார்.

விடுவேனோவென்விளக்கை யென்னுவியை
நடுவேவந் துய்யக்கொள்கின்ற நாதனைத்
தொடுவேசெய் திளவாய்ச்சியர்கண்ணினுள்
விடவேசெய்து விழிக்கும்பிரானையே. (ரு)

ப;— அநந்தரம் அவன் எனக்குப் பண்ணின வுபகாரத்தை யறிந்த நான் விடக்ஷமனல்லனென்கிறார்.

என்விளக்கை—என்னுடைய ஸ்வரூப விஷயமான ஜ்ஞாநதீபப்ரகாஸகனாய்
என்னுவியை—என்னாத்மாவை
நடுவே—(அவகாஸம்பார்த்து) நடுவே
வந்து—புகுந்து
உய்யக்கொள்கின்ற—அஹங்காராதிகளாலழியாதபடி பிழைப்பித்துக்கொண்ட
நாதனை—நாதனாய்
தொடுவே—க்ரித்ரிமசேஷ்டிதங்களை
செய்து—பண்ணி
இளம் — அநந்யயோக்யமான பருவத்தையுடைய
ஆய்ச்சியர்—இடைச்சியர்
கண்ணினுள்—கண்ணுக்குள்ளே
விடவேசெய்து—தானுமவர்களு மறிந்ததூர்த்த க்ருத்யத்தைப்பண்ணி
விழிக்கும்—கண்கலப்புச் செய்யும்
பிரானை—உபகாரகனை
விடுவேனோ—விடவல்லேனோ.

விடவு - தௌர்த்த்யம். பிரானென்று - தமக்கு ப்ரகாஸிப்பித்த வுபகாரந் தோற்றுகிறது. (ரு)

ஆறு ;—(விடுவேனோ) நிர்ஹேதுகமாக, திருவாய்ப்பாடியில் பெண்பிள்ளைகளுடைய கண்களிலே தோற்றி மற்றொருத்தருக்குந் தோற்றாதபடி களவிலே சில செயல்களைச் செய்தும், திருக்கண்களாலே பார்த்தருளியும் அவர்களை வஸீகரித்து அவர்களோடு ஸம்ஸ்லேஷித்தாற்போலே நிர்ஹேதுகமாகவந்து எனக்குத் தன்னுடைய குணசேஷ்டிதங்களைக் காட்டி இவற்றாலே யென்னை வஸீகரித்து எனக்கு தாரகனாய்,என்னோடேகலந்தருளின வக்கலவியாலே என்னை யுய்யக்கொள்கின்ற நாதனை நான் விடுவேனோ வென்கிறார். (ரு)

---

ஈடு ; அவ ;—(ஆறும்பாட்டு) இப்போது "விடோம்" என்கிறீரித்தனை போக்கிப் பின்னையும் நீரல்லீரோ? உம்முடைய வார்த்தையை விஸ்வஸிக்கப்போமோவென்ன, அவனாலே யங்கீக்ருதனான நான் அவனைவிடுவேனோ வென்றார் கீழிற்பாட்டில்; உம்மை அவன்றான்விடில் செய்வதென் னென்ன, தன்குணசேஷ்டிதங்களாலே

யென்னைத் தோற்பித்து என்னோடே கலந்தவனை நான்விட ஸம்வதிப்பேனோ வென்கிறாரிதில்.

பிரான் பெருநிலங்கீண்டவன் பின்னும்
விராய் மலர்த்துழாய் வேய்ந்தமுடியன்
மராமர மெய்தமாயவ னென்னுள்
இரானெனிற் பின்னையானொட்டுவேனோ. (சு)

ப ;—அநந்தரம் அவன்றான் அகலத்தேடிலும் நானிசையே னென்கிறார்.

பிரான்—உபகாரகனாய்க் கொண்டு
பெருநிலம்—மஹாப்ருதிவியை
கீண்டவன்—எடுத்தவனாய்
பின்னும்—தொடுக்கப்பட்டு
விராய்—விரவின
மலர்—மலரை யுடைத்தான
துழாய்—திருத்துழாயாலே
வேய்ந்த—செறியச் சூழப்பட்ட
முடியன்—திருமுடியை யுடையனாய்
மராமரமெய்த—மஹாராஜர் விஸ்வஸிக்கைக்காக மராமரத்தை யெய்த
மாயவன்—ஆஸ்சர்ய பூதனானவன்
என்—என்னுடைய
உள்—நெஞ்சுக்குள்
இரானெனில்-இரானென்னு மளவில்
பின்னை—பின்னை
யான்—அவனை யொழியச்செல்லாத நான்
ஒட்டுவேனோ—இசைவேனோ.

தொங்குவேனோ வென்றுமாம். மாயவனென்று - மாராமரமொன் றளவில் நில்லாதே, ஏழு மாமும், மலையும், பாதாளமுமுருவவெய்தவாஸ்சர்யம். விராய் மலர்த்துழாயென்று - பரிமளத்தையுடைய செவ்வித்துழா யென்றுமாம். (சு)

ஆறு ;—(பிரான்) அவன்றான் விடில்செய்வ தென்னென்னில் ; தன்னுடைய அதிமநோஹரமான திவ்ய சேஷ்டிதங்களாலும் அழகாலு மென்னைத்தோற்பித்து அடிமையாக்கினவன் "என்னைவிடுவேன்" என்றால் நான் அவனைவிடவொட்டுவேனோ வென்கிறார். (சு).

ஈடு; அவ ;—(ஏழாம்பாட்டு) குணத்ரயவஶ்யராய்ப் போந்தீர், காதாசித்கமாக "அவனைவிடேன்" என்கிறீர், உம்முடையவார்த்தையை விஶ்வஸிக்கப்போமோ வென்ன ? நானவனைவிட்டாலும், அவன்தானென்னை விடானென்கிறார்.

யானொட்டியென்னு ளிருத்துவமென்றிலன்
தானொட்டிவந்தென் தனிநெஞ்சைவஞ்சித்து
ஊனொட்டிநின் றென்னுயிரிற்கலந்தியல்
வானொட்டுமோ வினியென்னை நெகிழ்க்கவே. (எ)

ப ;—அநந்தரம் நான் நெகிழ்த்துக் கொடுபோகிலும் அவனிசையா னென்கிறார்.

யான்—நான்
ஒட்டி—இசைந்து
என்னுள்—என்னுள்ளே
இருத்துவம்—இருத்துவோம்
என்றிலன்—என்றுநினைத்திலேன்;
தான்—தானே
ஒட்டிவந்து—ப்ரதிஜ்ஞை பண்ணிவந்து
என்—என்னுடைய
தனி—ஸ்வதந்த்ரமான
நெஞ்சை—நெஞ்சை
வஞ்சித்து—நானறியாதபடி வஶீகரித்து (அதடியாகவே)
ஊன்—சரீரத்தில்
ஒட்டி—பொருந்தி
நின்று—புகுந்துநின்று
என்னுயிருள்—என்னாத்மாவிலே
கலந்து—கலந்து
இயல்வான்—அத்தாலேஸத்தை பெற்றானாய் நடக்கிறவன்
இனி—இனி
என்னை—என்னை
நெகிழ்க்க—நெகிழ்த்துக்கொள்ள
ஒட்டுமோ—ஒட்டுமோ?. (எ)

ஆறு ;—(யானொட்டி) என்னுடைய பாக்யஹாநியாலே அவனென்னைவிட்டு எனக்குமொருபுத்தி தன்னோடு பிறப்பிக்கில் செய்வதென்னென்னில்; என்னுடைய ஸம்வாதமின்றியே யிருக்கச்செய்தே தானே யொட்டிக்கொண்டு வந்து, தன்னுடைய குணசேஷ்டிதாவிஷ்காரத்தாலே என்னெஞ்சை வஞ்சித்தகப்படுத்தி, இந்தஹேயமான ப்ரக்ருதியோடே ஸம்பந்தித்திருக்கிற வாத்மாவோடேஸம்ஶ்லேஷித்து வர்த்திக்கிறவிவன், தன்னை, "விடுவேன்" என்றால் என்னை விடவொட்டுமோ! என்கிறார். ... (எ)

---

ஈடு ; அவ ;-(எட்டாம்பாட்டு) "நான்விடேன், அவன்விடான்" என்றாற்போலேசொல்லுகிறதென்? இனியவன்தான் "பிரிப்பேன்" என்னிலும் தன்னுடைய கல்யாண குணங்களிலேயகப்பட்ட வென்னெஞ்சை அவனாலும் பிரிக்கப்போகாதென்கிறார்.

என்னைநெகிழ்க்கிலு மென்னுடைநன்னெஞ்சந்
தன்னையகல்விக்கத் தானுங்கில்லானினிப்
பின்னைநெடும்பணைத் தோள்மகிழ்ப்பீடுடை
முன்னையமரர் முழுமுதலானே. (அ)

ப ;—அநந்தரம் இப்படிக்கொத்தவன் விடில்செய்வதென்னென்னில் என்னைப் பிரிக்கிலும் என்னெஞ்சை அவனாலும்பிரிக்கவரிதென்கிறார்.

என்னை — தான் தந்த ஜ்ஞாநப்ரேமங்களையுடையவனாய்த் தன்னையொழியச்செல்லாதவென்னை
நெகிழ்க்கிலும் — நெகிழ்க்கிலும்
நல் — தன்னால் வஞ்சிதமாய்த் தனக்கு நலப்பட்ட
என்னுடை — என்னுடைய
நெஞ்சந்தன்னை — நெஞ்சுதன்னை
அகல்விக்க — தனித்தகல்விக்க
தானும் — ஸர்வஶக்தியான தானும்
இனிக் கில்லான் — இனி மாட்டான்; (முன்புபோலேவிஷயாந்தரஸக்தமன்றே) (அவன்தாக)
பின்னை — நப்பின்னைப்பிராட்டியுடை
நெடும் — நெடியதாய்
பணை — சுற்றுடைத்தான
தோள் — தோளோடேசேர்ந்த
மகிழ் — மகிழ்ச்சியாகிற
பீடுடை — மேன்மையை யுடையனாய்
முன்னை — பூர்வரான
அமரர் — நித்யஸூரிகளுக்கு
முழு — தாரகாதிஸமஸ்தத்துக்கும்
முதலானே — தானேமுதல்வனானவனன்றோ

ஆதலால் அவர்களை விடிலன்றோ என்னையும் என்னெஞ்சையும் விடுமென்று கருத்து; பணைத்தோளென்று-வேய்போன்ற தோளென்றுமாம். (அ)

ஆறு;—(என்னை) ஆஶ்ரிதவத்ஸலனுகையாலே அவன்றானுமென்னைவிடான்; என்பக்கலுள்ள குணஹாநியாலே என்னைவிட நினைக்கிலும், ஸர்வேஶ்வரன்றன்னாலு மென்னுடைய நெஞ்சை விடமுடியாது; நெஞ்சோடுள்ள ஸம்பந்தத்தாலே யென்னையும் விடமுடியாது. நெஞ்சை விடமுடியாதொழிவானென் னென்னில்? அது நப்பின்னைப்பிராட்டியடிமையன்றோ வென்கிறார். ... (அ)

---

ஈடு; அவ;—(ஒன்பதாம்பாட்டு) "தானுங் கில்லான்" என்கிற ப்ரஸங்கந்தானென்? ஏகத்ரவ்யமென்னலாம்படியான வித்தை எங்ஙனே பிரிக்கும்படி யென்கிறார்.

> அமரர்முழுமுத லாகியவாதியை
> அமரர்க்கமுதீந்த வாயர்கொழுந்தை
> அமரவழும்பத் துழாவியென்னாவி
> அமரத்தழுவிற் றினியகலுமோ. (கூ)

ப;—அநந்தரம் ஸர்வப்ராகாரத்தாலும் அவனை ஸம்ஶ்லேஷித்த என்னாத்மா இனியகல ப்ரஸங்கமுண்டோவென்கிறார்.

அமரர் — நித்யஸூரிகளுடைய
முழு — ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திகளெல்லாவற்றுக்கும்
முதலாகிய — ஹேதுவாய்க்கொண்டு
ஆதியை — ப்ரதாநனானவனாய்
அமரர்க்கு — அமரர்க்கு
அமுது — அவராசைப்பட்ட வம்ருதத்தை
ஈந்த — கொடுத்தவனாய்

| | |
|---|---|
| ஆயர்—தன்னோடுறவுடையரான ஆயர்களுக்கு | துழாவி—ஸ்வரூபாதிஸமஸ்தவிஷயத்திலும்புக்கு ஸஞ்சரித்து |
| கொழுந்தை—தலைவனானவனை | அமர—இப்படி ப்ருதக்ஸ்த்தித்யாதிகளில்லாதபடி |
| என்னாவி—என்னாத்மாவானது | தழுவிற்று—உகந்துகலந்தது; |
| அமர—அநந்யார்ஹமான பொருத்தம் பிறக்கும்படியாகவும் | இனியகலுமோ—இனியகல ப்ரஸங்கமுண்டோ; |
| அழும்ப—ஸ்வாதந்த்ர்யாதிகளான இடைத்துரும்பு அறும்படி கலப்புப் பிறக்கவும் | அழும்புதல்—செறியக்கலத்தல். (கூ) |

ஆறு;—(அமரர்) அயர்வறு மமரர்களதிபதியாய், அர்த்திகல் பகனாய், நிரதிஶயஸௌந்தர்யத்தை யுடையனான வெம்பெருமானோடே ப்ருதங் நிர்த்தேஶாநர்ஹமாம்படி ஸம்ஶ்லேஷிக்கையாலே, இனியென்றுமவனை விடமுடியாதென்கிறார். (கூ)

---

ஈடு; அவ;—(பத்தாம்பாட்டு) என்னோடுகலந்த வெம்பெருமானுடைய குணங்களை காலதத்வமுள்ளதனையு மநுபவியாநின்றாலும் த்ருப்தனாகிறிலே னென்கிறார்.

அகலிலகலு மணுகிலணுகும்
புகலுமரியன் பொருவல்லனெம்மான்
நிகரிலவன்புகழ் பாடியிளைப்பிலம்
பகலுமிரவும் படிந்துகுடைந்தே. (க0)

ப;—அநந்தரம் இப்படிப்பட்டவனை நிரந்தராநுபவம் பண்ணினாலும் த்ருப்தி பிறவாமையாலே தவிரவரிதென்கிறார்.

| | |
|---|---|
| அகலில்—ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு அகலில் | எம்மான்—இந்தஶீலத்தாலே யெனக்கு ஸ்வாமியாய் |
| அகலும்—செய்யலாவதற்று அகலுமவனாய் | நிகரிலவன்—இப்படிக் கொப்பில்லாதவனுடைய |
| அணுகில்-அநந்யப்ரயோஜநராயணுகில் | புகழ்—புகழை |
| அணுகும்—அவர்களோடொரு நீராகக்கலக்குமவனாய் | பகலுமிரவும்—பலலுமிரவும் விடாமல் |
| புகலுமரியன்—அந்யபரர்க்குக்கிட்டவரியனாய் | படிந்து—உள்புக்கு |
| | குடைந்து—எங்குங்கலந்து |
| | பாடி—ப்ரேமயுக்தராய்ப்பாடி |
| பொருவல்லன்—அநந்யர்க்குத் தடையற்றவனாய் | இளைப்பிலம்-ஓவுதலுண்டாகிறிலோம். |

தவிர மாட்டுகிறிலோமென்று கருத்து. பொருவென்று - எதிராய். த டையைக்காட்டுகிறது அன்றியே, பொருவென்று - பொருத்தமாய், அநங்யச் சேரவல்லனென்றுமாம். (௰)

ஆறு ;—(அகலிகலும்) ப்ரயோஜநாந்தரார்த்தமாகத் தன்னையாஸ்ரயித்துத் தன்பக்கலிலே அந்த ப்ரயோஜநத்தைக் கொண்டு தன்னையகலில், தானிழவாளனாய்க்கொண்டு அவனை யகலும் ஸ்வபாவனாய், அவர்களே அந்தப்ரயோஜநத்தை விட்டுத் தன் திறத்தில் அல்பாபிமுக்யத்தைப் பண்ணினால், அவர்கள் பக்கல் நிரதிஸய ப்ரேமஸத்தோடே விழும் ஸ்வபாவனாய், ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ரபனாய், ஸமாஸ்ரயணோந்முகரா யிருப்பார்க்கொரு தடையின்றிப் புக்கு ஆஸ்ரயிக்கலாமபடியெளியனாய், எனக்கு ஸ்வாமியாயிருக்கு மெம்பெருமானுடைய வொப்பில்லாத கல்யாணகுணங்களிலே புகுந்து குடைந்துபாடி, பின்னையும் த்ருப்தனாகப்போருகிறிலேன் என்று கொண்டு தம்மோடு ஸம்ஸ்லேஷித்தருளின வெம்பெருமானுடைய குணங்களை யநுபவிக்கிறார். ... ... (௧௰)

ஈடு ; அவ ;—(பதினோராம்பாட்டு) நிகமத்தில், இத்திருவாய்மொழிதானே இதுகற்றவர்களுடைய ப்ராப்தி ப்ரதிபந்தகங்களையுந் மூலிதமாக்கு மென்கிறார்.

குடைந்து வண்டுண்ணுந்துழாய் முடியானை
அடைந்த தென்குருகூர்ச்சடகோபன்
மிடைந்த சொற்றொடையாயிரத்திப்பத்து
உடைந்து நோய்களை யோடுவிக்குமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ப;—அநந்தரம் இத்திருவாய்மொழிக்கு பலமாக ஸாம்ஸாரிக மஹாவ்யாதி நிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

வண்டு—வண்டுகள்
குடைந்து—புக்கு
உண்ணும்—மதுவையுண்கிற
துழாய்—திருத்துழாயை
முடியானை — திருமுடியிலே யுடைய ஸர்வேஸ்வரனை
அடைந்த—ஸர்வப்ரகாரத்தாலும் செறிந்த
தென்—பரமோதாரரான
குருகூர்ச்சடகோபன் } ஆழ்வாருடைய
மிடைந்த—நெருங்கின
சொல்—சொல்லின்
தொடை—தொடையையுடைய
ஆயிரத்திப்பத்து—ஆயிரத்திப்பத்து
நோய்களை — அஹங்காரார்த்த காமங்களின் செயல்களாகிய மஹாவ்யாதிகளை
உடைந்து—உருக்குலைந்து
ஓடுவிக்கும் — சடக்கெனப் போம்படி பண்ணும்.

இது கலிவிருத்தம். (கக)

வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

---

அரு ;—( குடைந்து ) இத்திருவாய்மொழி வல்லாருடைய ஸமஸ்தது:கங்களையும் இத்திருவாய்மொழிதானே யுடைந்தோடும் படி பண்ணுமென்கிறார். ... ... ... (கக)

திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

---

ஈடு ; நிக ;—முதற்பாட்டில், கேவலரை நிந்தித்தார் ; இரண்டாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்திறத்திலிருக்கும்படியைச் சொன்னார் ; மூன்றாம்பாட்டில், இவ்விரண்டு கோடியிலும் நீராரென்ன ? உன்னை யநுபவியாநிற்க விரோதி கழிந்தவன் நானென்றார்; நாலாம் பாட்டில், என்னை யிவ்வளவாகப்புகுர நிறுத்தினவனை யென்ன ஹேதுவாலே விடுவதென்றார்; அஞ்சாம்பாட்டில், திருவாய்ப்பாடியில் பெண்கள் க்ருஷ்ணனை விடுமன்றன்றோ, நானவனை விடுவதென்றார்; ஆறாம்பாட்டில், அவன்றான் விடிலோவென்ன, அவன்போக்கை யிசையேனென்றார் ; ஏழாம்பாட்டில், நீர்தாம் விடிலோவென்ன, அவனென்னைப் போகவொட்டானென்றார் ; எட்டாம்பாட்டில், இந்நாள்வரைப் போகவிட்டிலனோவென்ன, நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாகப் பற்றினவென்னை இனியவனாலும் விடவொண்ணாதென்றார் ; ஒன்பதாம்பாட்டில், இப்ரஸங்கந்தானென், ஒரு நீராகக் கலந்ததை யொருவராலும் பிரிக்கவொண்ணாதென்றார் ; பத்தாம் பாட்டில், அவனுடைய கல்யாணகுணங்களை ஸர்வகாலமு மநுபவித்து ப்ரமமுடையேனல்லேனென்றார் ; நிகமத்தில் இத்திருவாய்மொழியை யப்யஸித்தார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டினார். (கக)

வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஏழாம் திருவாய்மொழி

முற்றிற்று.

---



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

முதற்பத்து.

# எட்டாந் திருவாய்மொழி.

ஓடும்புள் ப்ரவேஶங்கள்.



ப ;—எட்டாந்திருவாய்மொழியில், இப்படிஸரஸனான ஸர்வேஶ்வ ன்,
நிர்த்தோஷரான நித்யாஶ்ரிதரோபாதி இன்றாஶ்ரயிக்கிற நிகிலாஶ்ரிதரு டைய
லீலா விபூதி ஸம்பந்தமடியான செவ்வைக்கேட்டைப்பார்த்து வைஷம்ய ரதி
பத்திபண்ணாதே, அவர்கள் செவ்வைக்கேட்டைச் செவ்வையாம்படி தங் னை
யொக்க இட்டுச்சேரும்படியான ஆர்ஜவகுணத்தையருளிச்செய்வதாக; அ க்கு
ப்ரதமபாவியான நித்யபுருஷ ஸம்ஶ்லேஷப்ரகாரத்தையும், நிகிலாஶ்ரித ஶ்
லேஷார்த்தமான அவதாரவைலக்ஷண்யத்தையும், உபயவிபூதி ஸாதாரண னை
அர்ச்சாவதாரஸ்த்திதியையும், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷார்த்தமான ஆபத்ஸக வத்
தையும், அந்த ஸம்ஶ்லேஷத்துக்கெல்லையான ஸ்வஸம்ஶ்லேஷத்தையும், து
ஸகலஸம்ஶ்லேஷஸாதாரண மென்னுமிடத்தையும், ஆஶ்ரிதர் நினைவே ன்
நினைவாம்படி கலக்குமென்னுமிடத்தையும், ஆஶ்ரிதஸங்கமடியான அவ தாரத்
துக்குஸங்க்யையில்லை யென்னுமிடத்தையும், அவதாரங்கள் ஆஶ்ரிதாநுப ய
மான அஸாதாரண சிஹ்நயுக்தங்களென்னுமிடத்தையும், ஏவம்விதஸ்வபா ன்
வேதைகஸமதிகம்யனென்னுமிடத்தையு மருளிச்செய்து, ஆஶ்ரிதார்த்த னை
வனுடைய ஆர்ஜவகுணத்தை ப்ரதிபாதித்தருளுகிறார். *

ஈடு ; அவ ;— கீழிற்றிருவாய்மொழியிலே நிரதிஶயபோ ய
னென்றார் ; இதில், அவனுடைய வார்ஜவகுணஞ் சொல்லுகி ர்.
ஸௌலப்யமாவதென்? ஆர்ஜவமாவ தென்னென்னில்? ஸௌல ய
மாவது - ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாகவுடையவன், அ ந
நின்றும் ஸம்ஸாரிசேதநர் நின்றவிடத்தே வந்தவதரித்தெளியனா க;
ஸௌஶீல்யமாவது - இப்படித் தாழவிட்டால், "சிறியாரளவில் ம்
மைத்தாழவிட்டோமே!" என்று தன்திருவுள்ளத்திலுமின்றிக் க
யிருக்கை; இனி, ஆர்ஜவகுணமாவது - இப்படிப் பொருந்தின ,
நினைவும் சொலவும் செயலு மொருபடிப்பட்டிராதே பலவகைப்பட்ட —
சேதநரோடு தான் பரிமாறுமிடத்தில், அவர்கள் போனவழி தனக் கு
வழியாம்படி தான் அவர்களுக்குச் செவ்வியனாய்ப்பரிமாறுகை. (௧)
" ஶுணவா ந் - குணவாந் " என்று - ஸௌசீல்யகுணத்தை ச்

(௧) ஶ்ரீரா - ரத்ந - க அ.

சொல்லாநிற்கச்செய்தே, (க) " ஊஜ-ீ - ருஜு-ீ " என்று ஆர்ஜவ குணத்தைப் பிரியவருளிச்செய்தாரிறே.

" இத்திருவாய்மொழிதான் - ஸர்வேஶ்வரனுடைய வைஶ்வர்யத்தைச்சொல்லுகிறது " என்பாருமுண்டு; அன்றிக்கே, " ஈஶ்வரத்வலக்ஷணம் சொல்லுகிறது " என்பாருமுண்டு; அன்றிக்கே, " கீழே, 'பாடியிளைப்பிலம்' என்றார், அப்படியே பாடியநுபவிக்கிறார் " என்பாருமுண்டு; " ஆர்ஜவகுணம் சொல்லுகிறது " என்று பட்டரருளிச்செய்யும்படி. பத்தர், முக்தர், நித்யர் என்று-சேதநர்க்கொரு த்ரைவித்யமுண்டிறே; த்ரிவிதசேதநரோடும் பரிமாறுமிடத்தில், அவர்கள் தன்னினைவிலே வரும்படி பண்ணுகையன்றிக்கே, நீரேறுமேடுகளிலே விரகாலே நீரேற்றுவாரைப்போலே தன்னை அவர்களுக்கீடாக வமைத்துப் பரிமாறுமென்னு மவ்வழியாலே இவனுடைய வார்ஜவகுணம் சொல்லுகிறார். *

ஆறு ;—(ஓடும்புள்) இப்படி தம்மோடு கலந்தருளின வெம்பெருமானுடைய திவ்யைஶ்வர்யஞ் சொல்லுகிறது.

---

ஈடு ; அவ ;—( முதற்பாட்டு ) நித்ய விபூதியிலுள்ளாரோடே செவ்வியனாய்ப் பரிமாறும்படி சொல்லுகிறது ; அவர்களுக்குச்செவ்வைக்கேடில்லையிறே; அவர்கள் பலராய்ருசிபேதமுண்டானால் அவர்கள் நினைவறிந்து பரிமாறவே அங்கு மார்ஜவ குணமேறுமிறே.

ஓடும்புள்ளேறி । சூடுந்தண்டுழாய் ।
நீடுநின்றவை । யாடுமம்மானே ॥ (க)

ப ;—முதற்பாட்டில், நித்யரோடு பரிமாறும்படியை யருளிச்செய்கிறார்.

அம்மான்—நிருபாதிகஸ்வாமியானவன்
புள்ளேறி—பெரியதிருவடி நினைவுக்கீடாகவவனை மேற்கொண்டு
ஓடும்—உலாவும்;
தண்—ப்ரமஹரமான
துழாய்—திருத்துழாயை
சூடும்—செவ்விகுலையாமல் தன் திவ்யாவயவங்களிலே சூடும்.
(இப்படி)
நீடுநின்றவை—காலதத்த்வமுள்ளளதனையும் நிலைநிற்கிற நித்ய வஸ்துக்களோடே
ஆடும்—பரிமாறும்.

"நெடுங்காலமவற்றோடே நின்று பரிமாறும்" என்று - "புள்ளு, துழாய்" என்று ப்ரஸ்துதத்தைச் சொல்லிற்றாகவுமாம். அங்குத்தை திர்யக்ஸ்தாவரஜந்மம் கர்மநிபந்தநமல்லாமையாலே ஈஶ்வரேச்சாதீநமென்று கருத்து. (க)

ஆறு ;—அதில் முதற்பாட்டில் திருநாட்டிலைஸ்வர்யஞ் சொல்லுகிறது. ... ... ... ... (க)

---

ஈடு ; அவ ;—(இரண்டாம்பாட்டு) இப்பாட்டு, நித்யவிபூதியில் நின்றும் வந்தவதரித்து விரோதிகளைப்போக்கி ஸம்ஸாரிகளுடன் செவ்வையனாய்ப் பரிமாறும்படி சொல்லுகிறது.

அம்மானாய்ப்பின்னும் | எம்மாண்புமானான் |
வெம்மாவாய்கீண்ட | செம்மாகண்ணனே || (உ)

ப ;—அநந்தரம் லீலாவிபூதியில் ஆஶ்ரிதஸம்ஶ்லேஷார்த்தமான வவதார வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார்.

| | |
|---|---|
| அம்மானாய்—ஸர்வஸ்மாத்பரனைஸ்வாமியாய்வைத்து | கண்ணன் — கண்ணையுடைய க்ருஷ்ணன் |
| வெம்—ஆஶ்ரிதார்த்தமாக வெவ்விய | பின்னும்—(அவ்வளவன்றியே) டானம் |
| மா—குதிரையை | |
| வாய்கீண்ட—வாயைப் பிளந்த | எம்மாண்பும்—எல்லா மாட்சிமையுடையவர் |
| செம்—சிவந்த | |
| மா—பெரிய | ஆனான்—ஆனான். |

எவ்வவதாரங்களி லழகுமுடையனானானென்றபடி. அன்றியே, க்ருஷ்ணாவதாரந்தன்னிலேயாய், மாட்சிமையென்று - தர்ஶநீயசேஷ்டிதங்களாகவுமாம்.

ஆறு ;—(அம்மானாய்) நித்யஸித்தமான அந்தவைஶ்வர்யத்தின் மேலே அஸங்க்யேயதிவ்யாவதாரரூபமான நிரவதிகைஶ்வர்யத்தையுடையவனானானென்கிறார். ... ... (உ)

---

ஈடு ; அவ ;—(மூன்றாம்பாட்டு) இரட்டைப்ரஜைபெற்ற மாதாவானவள் இருவர்க்கும் முலைகொடுக்கப்பாங்காக நடுவேகிடக்குமாபோலே, நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்குமொக்க முகங்கொடுக்கைக்காகத் திருமலையிலே நின்றருளின நீர்மையை யருளிச்செய்கிறார்.

கண்ணாவானென்றும் | மண்ணோர்விண்ணோர்க்குத் |
தண்ணார்வேங்கட | விண்ணோர்வெற்பனே || (ந)

ப ;—அநந்தரம் உபயவிபூதிஸாதாரணமான திருமலையில் ஸ்த்திதியை யருளிச்செய்கிறார்.

(க) " வக்ஷ ... நா ... த ... நா ... - சக்ஷுர்த்தேவாநாமுதமர்த்யாநாம் " என்கிறபடியே.

---

(க) யஜு - ௪ - காண்ட - ௬ - ப்ர.

| | |
|---|---|
| மண்ணோர்—மண்ணோர்க்கும் | ஆர்—மிஞ்சியிருப்பதாய் |
| விண்ணோர்க்கு—விண்ணோர்க்கும் | வேங்கடம்—திருவேங்கட மென்றுபேரான |
| என்றும்—என்றுமொக்க | விண்ணோர்—ஸூரிஸேவ்யமான |
| கண்ணுவான்—கண்ணுமவன் ; | வெற்பன்—திருமலையை யுடையவன். |
| தண்—குளிர்த்தியால் | |

ஆறு ;—(கண்ணுவான்) அந்தவைஸ்வர்யத்தின்மேலே அயர் வறுமமரர்க்கும் இந்தலோகத்திலுள்ளவாத்மாக்களுக்கு மொக்கத்ருஷ்டிபூதனைக்கொண்டு, அயர்வறுமமரர்களுக்கும் ப்ராப்யமான திருமலையிலேநிற்கையாகிற மஹாஸம்பத்தையுடையனை யிருக்குமென்கிறார். ... ... ... ... (௩)

---

ஈடு ; அவ ;—(நான்காம்பாட்டு) அவனுடைய ஆர்ஜவகுணம் தம்மளவிலே பலித்தபடியை யருளிச்செய்கிறார்.

வெற்பையொன்றெடுத்து । ஒற்கமின்றியே ।
நிற்குமம்மான்சீர் । கற்பன்வைகலே ॥ (௪)

ப ;—அநந்தரம் ஆஸ்ரிதவிஷயத்தி லாபத்ஸகத்வத்தை யருளிச்செய்கிறார்.

இந்த்ரன்ப்ரவர்த்திப்பித்த அஸ்மவர்ஷத்தில் ரக்ஷ்யவர்க்கமிடர்ப்படாதபடி;

| | |
|---|---|
| ஒன்று—ஒரு | நிற்கும்—நிற்கிற |
| வெற்பை—மலையை | அம்மான்—ஸ்வாமியினுடைய |
| எடுத்து—எடுத்து | சீர்—ஆபத்ஸகத்வ கீர்த்தியை |
| ஒற்கம்—ஒடுக்கம் | வைகல்—காலதத்வமுள்ளதனையும் |
| இன்றியே—இன்றியிலே | கற்பன்—அப்யஸியாநிற்பன். |

ஒற்கம் ஒல்குதலாய், ப(லு)லஸங்கோசத்தைக் காட்டுகிறது. (௪)

ஆறு ;—(வெற்பை) ஏவம்விதமானவைஸ்வர்ய பரம்பரைகளையுடையனை யெம்பெருமான் தன்னுடைய காருண்யாதி கல்யாணகுணங்களைக் காட்டியருள, நானுமவற்றைக்கண்டநுபவித்து, அவ்வநுபவஜநித ப்ரீத்யதிஸயம் என்னைக்கற்பிக்க, ஸர்வகாலமும் இந்தக் குணங்களைக்கற்கப்பெற்றேனென்கிறார். ... (௪)

---

ஈடு ; அவ ;—(ஐந்தாம்பாட்டு) நீர்அவன்குணங்களை யப்யஸியாநின்றீராகில், அவன்றான் செய்கிறதென்னென்னில்? நானவனைவிட்டு அவன்குணங்களை விரும்புகிறாப்போலே, அவனுமென்னைவிட்டு என்னுடைய தேஹத்தை விரும்பாநின்றானென்கிறார்.

வைகலும்வெண்ணெய் । கைகலந்துண்டான் ।
பொய்கலவாதென் । மெய்கலந்தானே ॥ ரு)

ப;—அநந்தரம் ஏவம்பூதனான க்ருஷ்ணன் தம்மோடு ஸம்ச்லேஷித்த படியை யருளிச் செய்கிறார்.

வைகலும்—என்றுமொக்க
வெண்ணெய்—வெண்ணெயை
கைகலந்து—கையுள்ளளவும் நீட்டி
உண்டான்—உண்டவன்
பொய்கலவாது—காரியப்பாடான பாய்கலவாதபடிவிட ம்பி
என்—என்னுடைய
மெய்—ஹேயமானசரீரத்திலே
கலந்தான்—ஒன்றுபடக்கலந்தான்.

கைகலந்தென்று - இரண்டுகையுங்கலந்தென்னவுமாம். ரு)

ஆறு;—(வைகலும்)* தாரார்தடந்தோள்களுள்ளளவுங் கை[illegible] டியாராதவெண்ணெய் விழுங்கினவன், வெண்ணெயளைந்த தி[illegible] டம்போடேகூட வந்து தன்னுடைய வாத்ஸல்யகுண ரக்ஷ[illegible]ர் த்தமாக கார்யபுத்யா என்னோடு ஸம்ச்லேஷிக்கையன்றியே, எ[illegible]ன் னோடு ஸம்ச்லேஷித்தல்லது தரிக்க மாட்டாத ஸ்வபாவனு க் கொண்டு என்னுடைய இந்தவுடம்போடே ஸம்ச்லேஷித்தருளி ற னென்கிறார். ... ... ... ([illegible])

---

ஈடு; அவ;—(ஆறும்பாட்டு) இப்படிக்கலந்து செய்ததெ ன் னென்ன? தேஹத்தளவிலே விரும்பிவிட்டிலன்; என்னுவிநலத்[illegible] யுங்கொண்டானென்கிறார்.

கலந்தென்னுவி । நலங்கொள்நாதன் ।
புலன்கொண்மாணாய் । நிலங்கொண்டானே ॥ ([illegible])

ப;—அநந்தரம் லோகத்தையநந்யார்ஹ மாக்கினாற்போலே என்னுத் வையும் அநந்யார்ஹமாக்கினா னென்கிறார்.

கலந்து—ஒருநீராகக்கலந்து
என்னுவி—என்னுத்மஸ்வ ரூபத்தினு டைய
நலம்—ஸ்வாஸாதாரண ச்ரேஷ்த்வமா கிற நன்மையை
கொள்—தனக்குப்ரயோஜநமாகக்கொ ண்ட
நாதன்—சேஷியானவன்
புலன்—இந்த்ரியங்களுக்கு
கொள்—ஆகர்ஷகமான
மாணாய் — வாமந ப்ரஹ்மசாரிவேஷ த்தையுடையவனு
நிலம்—பூமியை
கொண்டான்—தன்னதாக்கிக் கொ[illegible] டவன்

நிலமென்று - லோகாந்தரங்களுக்கு முபலக்ஷணம். (க

ஆறு ;—(கலந்தேன்னுவி) இப்படி என்னோடே கலந்த கலவி யாலே தோற்பித்தடிமையாக்கின விவன் எனக்கு போக்யமாகைக் காக, ஸகலஜநமனோநயநஹாரியான தன்னுடைய வழகியதிருவடி வைக்காட்டி மஹாபலியை வசீகரித்து இந்தலோகத்தையும் கொண் டானென்கிறார். ... ... ... (சு)

ஈடு ; அவ ;—(ஏழாம்பாட்டு) ஆவிநலங்கொண்டு விட்டவள வேயோ, நித்யவிபூதியில் பண்ணு மாதரத்தையும் என்பக்கலிலே பண்ணினனென்கிறார்.

கொண்டானேழ்விடை । உண்டானேழ்வையம் ।
தண்டாமஞ்செய்தென் । எண்டானுனே ॥ (எ)

ப ;—அநந்தரம் என்னினைவே தனக்குநினைவானு னென்கிறார்.

| | |
|---|---|
| ஏழ்விடை—அபிமதவிரோதியான ஏழ் விடைகளையும் | தண்—ஸாம்ஸாரிகதாப ஶாந்திகரமான |
| கொண்டான்—ப்ராணனைக் கொண்ட வனாய் | தாமம்—பரமபதத்தில்விருப்பத்தை |
| ஏழ்வையம்—ஆபத்திலே ஸர்வலோகத் தையும் | செய்து—என்பக்கலிலேபண்ணி |
| உண்டான்—வயிற்றிலேவைத்து ரக்ஷி த்தவன் | என்—என்னுடைய |
| | எண்—மனோரதத்தின்படியே |
| | தான்—தான் |
| | ஆனன்-மனோரதிக்கத்தொடங்கினன். |

அதாவது - நான் பரமபதத்திலே தன்னை யநுபவிக்கவெண்ணுமாபோலே தானிங்கே யென்னையநுபவிக்க வெண்ணு நின்றானென்றபடி. என்னெண் ணிலே தான்கைப்புகுந்தானென்றுமாம். (எ)

ஆறு ;—(கொண்டான்) திருநாட்டிற் பண்ணும் ப்ரேமத்தை யென்பக்கலிலேபண்ணி, தன்னோடுஸௌஷத்வேந ஸம்ஶ்லேஷிக்க வேணுமென்றுள்ள வென்னுடைய மனோரதத்தைத்தான் கைக் கொண்டு என்னோடு ஸம்ஶ்லேஷித்தருளினவிவன், எனக்குபோக்ய மாகைக்காக, இன்னம் எருதேழடர்த்தது தொடக்கமாக அபர்யந்த திவ்ய சேஷ்டிதங்களைப் பண்ணியருளா நின்றானென்கிறார். (எ)

---

ஈடு ; அவ ;—(எட்டாம்பாட்டு) என்னைச்சுட்டி அவன் பிறந்த பிறவிகளுக் கொருமுடிவில்லை யென்கிறார்.

ஆனாயன் । மீனோடேனமும் ।
தானானானென்னில் । தாயனசங்கே ॥

ப ;—அநந்தரம் ஆஸ்ரிதார்த்தமான வவதாரத்துக்கு எல்லை யில்லை யன்
கிறார்.

ஆனாயன்—கோரக்ஷண ஸ்வபாவமான கோபஜாதியையுடைய
தான்—தான்
மீனோடேனமும்—ஆபத் ரக்ஷணார்த்தமாக மத்ஸ்யாவதாரா திரூபேண
ஆனான்—அவதீர்ணனானான் ;
என்னில்—என்று சொல்லுமள ல்
தானாய—விலக்ஷணஸ்வரூபனை தன் னுடையவரான அவதார கள்
சங்கு — சங்கென்கிற ஸங்க்யை குப் பே நும்.

அன்றியே, என்னில்தானாயசங்கென்று - என்பக்கல்தான் பண்ணின
ஸங்கத்தாலே ஆனாயனைதான் மீனோடேனமுமானானென்றுமாம்; அன்றியே,
என்னிலென்று - அஞ்சாம்வேற்றுமையாய், என்னிமித்தமாகப் பண்ணின வை
அஸங்க்யாதங்க ளென்றுமாம். சங்கு - பேரிலக்கம், ஸங்கமுமாம். (கூ)

ஆறு ;—(ஆனான்) தன்னுடைய திவ்ய சேஷ்டிதமாத்ரமே யா
எனக்கு போக்யமாகச் செய்தருளிற்று; தன்னுடைய திவ்யாவ தா
ரங்க ளெல்லாம் என்பக்கலுள்ள ஸங்கத்தாலே எனக்கு போ ்ய
மாகச் செய்தருளினானென்கிறார். ... ... அ)

---

ஈடு ; அவ ;—(ஒன்பதாம்பாட்டு) இப்படியவதரிக்கு மிடத் ில்
ஐஸ்வரமான சிஹ்நங்களோடே வந்தவதரிக்கு மென்கிறார்.

சங்குசக்கரம் । அங்கையிற்கொண்டான் ।
எங்குந்தானாய । நங்கள்நாதனே ॥ கூ)

ப ;—அநந்தரம் அவதாரங்களெல்லாவிடத்திலும் அஸாதாரணசிஹ்நங ்த
னென்கிறார்.

எங்கும்—எல்லாப்ரதேசத்திலும்
தானாய — அவதாரமுகத்தாலே தான் ஸந்நிஹிதனை
நங்கள்—நம்முடைய
நாதன்—நாதன்
அம்—வெறும்புறத்திலே யழகிய
கையில்—திருக்கையிலே
சங்குசக்கரம்—ஆஸ்ரிதர் க்கநுபாவ் மான சங்கசக்ரங்க ள
கொண்டான்—கொண்டான். ( )

ஆறு ;—(சங்குசக்கரம்) இப்படி யெனக்காக ஸர்வயோநிக ளி
லும் வந்து பிறந்தருளுகிறான், தன்னுடைய திருக்கைகளிலழகி ய
திருவாழியுந் திருச்சங்கமுமேந்தி, அவ்வழகோடுகூட வந்துபிறந் ா
னென்கிறார். ... ... ... ... ( )

ஈடு ; அவ ;—(பத்தாம்பாட்டு) அவன் நீர்மையைப் பேசப்புக்கு நம்மால் பேசப்போமோ ! கடல்கிளர்ந்தாப்போலே வேதமே பேச வேண்டாவோ வென்கிறார்.

நாதன்ஞாலங்கொள் । பாதனென்னம்மான் ।
ஓதம்போல்கிளர் । வேதநீரனே ॥ (க0)

ப ;—அநந்தரம் ஏவம் விதஸ்வபாவன் வேதைகஸமதிகம்யனென்கிறார்.

நாதன்—நிருபாதிக ஸர்வஶேஷியாய்
ஞாலம்—அந்தஶேஷித்வநிர்வஹணத்துக்காக ஸமஸ்தஜகத்தோடும்
கொள்—தாரதம்யம் பாராமல்செறிந்த
பாதன்—திருவடிகளையுடையனாய்
என்னம்மான்—அத்தாலேயெனக்கஸாதாரண ஶேஷியானவன்
ஓதம்போல்—ஸமுத்ரம்போலே
கிளர்—கிளர்ந்து ஸ்தோத்ரம் பண்ணி ஸ்வஹ்ருதயத்தை வெளியிடுகிற
வேதம் — வேதங்களாலே சொல்லப்பட்ட
நீரன்—நீர்மையையுடையவன். (க0)

ஆறு ;—(நாதன்) இப்படியெனக்காக ஸஙக்யேயமான திருவவதாரங்களைப் பண்ணியருளின விவனுடைய விந்தநிரவதிகமான வாஸ்ரிதவ்யாமோஹத்தைப் பேசுமிடத்தில், கடலோதங் கிளர்ந்தாற்போலே கிளர்ந்துகொண்டு அவனைப்பேசக்கடவிய வேதங்களே பேசவேண்டாவோ வென்கிறார். ... ... (க0)

---

ஈடு ; அவ ;—நிகமத்தில், இத்திருவாய்மொழி எல்லாத் திருவாய்மொழியிலும் அவனுடைய வார்ஜவகுணத்தை யாராய்ந்து சொன்ன பத்தென்கிறார்.

நீர்புரைவண்ணன் । சீர்சடகோபன் ।
நேர்தலாயிரத்து । ஓர்தலிவையே ॥ (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ப ;—அநந்தரம் இத்திருவாய்மொழி ஆர்ஜவகுணத்தினுடைய நிரூபணரூபமென்றருளிச் செய்கிறார்.

நீர்புரை—ஒருக்கினவிடத்திலேசென்றுபாயும்நீரின்செவ்வைபோலேயிருக்கிற
வண்ணன்—ஸ்வபாவத்தை யுடையவனுடைய
சீர்—ஆர்ஜவகுணத்தை
சடகோபன்—ஆழ்வார்
நேர்தல்—நேர்ந்தருளிச்செய்த
ஆயிரத்து—ஆயிரத்தில்
இவை—இவை
ஓர்தல்—ஓர்தலைவடிவாக வுடைத்தாயிருக்கும்.

வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

---

ஆறு ;—(நீர்புரை) அதிஶீதளமாய் ஸர்வபோக்யமான திருமேனி
றத்தையுடையனாயிருந்த வெம்பெருமானுடைய ஆஶ்ரிதவாத்ஸல்ய
மாகிற மஹாகுணத்தையுள்ளபடி பேசிற்று இத்திருவாய்மொழி
யென்கிறார். ... ... ... (கக

திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

---

ஈடு ; நிக ;—முதற்பாட்டில், நித்யவிபூதியிலுள்ளாரோடு செவ்வையனாய்ப் பரிமாறும்படியை யருளிச்செய்தார் ; இரண்டாம்பாட்டில், லீலாவிபூதியிலுள்ளாருடன் செவ்வையனாய்ப்பரிமாறும்படியை யருளிச்செய்தார் ; மூன்றாம்பாட்டில், இரண்டு விபூதியுலுள்ளார்க்கும் முகங்கொடுக்கைக்காக, திருமலையிலே நிற்கிறபடியை யருளிச்செய்தார் ; நாலாம்பாட்டில், இவ்வார்ஜவகுணம் தம்மளவிலே பலித்தபடியை யருளிச்செய்தார் ; அஞ்சாம்பாட்டில், நானவன்குணங்களை விரும்புமாப்போலே அவனுமென்தேஹத்தை விரும்பாநின்றானென்றார் ; ஆறாம்பாட்டில், என்னுடைய தேஹத்தினளவன்றிக்கே, என்னுடையவாத்மாவையும் கைக்கொண்டானென்றார் ; ஏழாம்பாட்டில், அவ்வளவுமல்ல, நித்யவிபூதியில் பண்ணுமாதரத்தை என்பக்கலிலே பண்ணினானென்கிறார் ; எட்டாம்பாட்டில், என்னைச்சுட்டி அவன் பிறந்த பிறவிகளுக்கு முடிவில்லையென்றார் ; ஒன்பதாம்பாட்டில், இப்படி பிறந்த பிறவிகள்தோறும் தன்னைஶ்வர்யத்தோடேவந்தவதரித்தானென்றார் ; பத்தாம்பாட்டில், அவனுடைய ஆர்ஜவகுணத்தைப்பேசும்போது வேதமேபேசவேணுமென்றார் ; நிகமத்தில் இத்திருவாய்மொழி ஸம்ஸாரிகளுக்கெப்போதுமொக்க வநுஸந்திக்கப்படுமென்கிறார்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

எட்டாந் திருவாய்மொழி

முற்றிற்று.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

முதற்பத்து

# ஒன்பதாந் திருவாய்மொழி.

இவையும் - ப்ரவேஶங்கள்.

ப;—ஒன்பதாந்திருவாய்மொழியில், இப்படி ஆர்ஜவகுணத்தையுடைய ஸர்வேஶ்வரன் "பொய்கலவாதென்மெய்கலந்தான்" என்றும், "என்னெண்டானுன்" என்றும், கீழிவர்சொன்னக்ரமத்திலே தன்னுடையகுணவிக்ரஹ மஹிஷீ பரிஜநவிபூதிசேஷ்டிதங்களோடேகூட இவரோடே பரிபூர்ணமாக ஸம்ஶ்லேஷித் தநுபவிக்கப்பாரித்து. "இவர்வெள்ளக்கேடாயுடை குலையப் படிற்செய்வதென்?" என்றுபார்த்து, ஸாத்மிக்கஸாத்மிக்க புஜிப்பிப்பானாக, இவர்பரிஸரத்திலேவர்த்திப்பது, இவருக்கந்திகஸ்த்தனாவது, கூடநிற்பது, இவர்ஶரீரத்திலொரு பக்கத்திலேயாவது, ஹ்ருதயப்ரதேஶத்திலேயாவது, தோள்களிலே சேர்வது, நாவிலேநிற்பது, கண்ணுக்குள்ளேயாவது, நெற்றியிலேயாவது, உச்சியிலேயாவதாகக்கொண்டு, க்ரமத்திலே போகம் தலைமண்டையிடும்படி ஸாத்மிக்கஸாத்மிக்க ஸம்ஶ்லேஷித்தபடியை யருளிச்செய்கிறார்.

ஈடு; அவ;—கீழிற்றிருவாய்மொழியிலே அவனுடைய ஆர்ஜவ குணாநுஸந்தாநம் பண்ணினார்; இப்படியநுஸந்தித்தார் விஷயத்தில் ஸர்வேஶ்வரனிருக்கும் படியையருளிச்செய்கிறாரிதில்.

ஸர்வேஶ்வரனாய் ஶ்ரிய:பதியாய் பரமரஸிகனாயிருக்கிறவன், ஆழ்வார்பக்கிலே துவக்குண்டு இவரோடே ஏகரஸனாயிருந்தான்; ஆழ்வாராகிறார், கீழில் ஆர்ஜவகுணாநுஸந்தாநத்தாலே அவன்பக்கலிலே பெரியவிடாயை யுடையரானார்; "இது நமக்கு நல்லவாய்ப்பாயிருந்தது" என்று பார்த்து, அர்ஜுநன் விபூதிஶ்ரவணத்தாலே "விபூதிமானானவனைக்காணவேணும்" என்றபேக்ஷிக்க, அதுக்குறுப்பாக (க) "दिव्यं ददामि ते चक्षुः - திவ்யம்ததாமிதேசக்ஷு:" என்கிறபடியே - திவ்யசக்ஷுஸ்ஸைக்கொடுத்து வைஶ்வரூப்யத்தைக் காட்டினாற்போலே, இவர்க்கும் தன்னை யநுபவிக்கைக் கீடான விடாயைப் பிறப்பித்துத் தன்னையநுபவிப்பிக்கிறான்.

நித்யவிபூதியி லுள்ளாரோடு பரிமாறுமாபோலே பரிமாறக் கோலி, அதாவது - பிராட்டிமாரோடு பரிமாறுவது - மஹிஷிகளான முறையாலே; திருவடியோடு பரிமாறுவது - வாஹநமானமுறை

(க) கீதை - கக - அ.

யாலே; திருவநந்தாழ்வானோடு பரிமாறுவது - படுக்கையானமுறை யாலே; இப்படியவர்களோடு ஓரோமுறையாலே பரிமாறும்பரிமாற் மெல்லாம் இவரொருவரோடு பரிமாறுகிறுனாய், அது தன்னை, குள படியிலே கடலைமடுத்தாற்போலே யன்றிக்கே, பொறுக்கப்பொற கப்பரிமாற, இவரும் அவனை ஸர்வேஶ்வரத்தாலும் ஸர்வகாத்ர தாலும் யதாமநோரத மநுபவித்து, அவ்வநுபவ ஜநிதப்ரீதியாலே அவனைப்பேசி யநுபவிக்கிறார்.

ஈடு; அவ;—(முதற்பாட்டு) ஸ்ருஷ்ட்யாதி ஹேதுபூதனுமா ஸர்வாந்தராத்மாவுமான க்ருஷ்ணனவன் என்னுடைய பார்ஶ்வ தத்தை விட்டுப் போகமாட்டாதபடியானுனென்கிறார். அவனுடை குணாநுபவத்தோடு விக்ரஹாநுபவத்தோடு வாசியில்லையிறே இவ க்கு; முதற்றிருவாய்மொழியிலே பரக்க வநுபவித்தவித்தை விஶ மாயிருக்கையாலே திரளவநுபவிக்கிறார்.

இவையுமவையுமுவையு மிவருமவருமுவரும்
யவையும்யவருந் தன்னுள்ளேயாகியுமாக்கியுங்காக்கும்
அவையுள் தனிமுதலெம்மான் கண்ணபிரானென்னமுதம்
சுவையன் திருவின்மணுள னென்னுடைச் சூழலுளானே. (க

ப;—முதற்பாட்டில், ஸர்வகாரணத்வ ஸர்வாந்தராத்மத்வத்தாலே ஸர்வ ஸ்மாத் பரனாய் ஸர்வஸுலபனை ஶ்ரிய:பதி என்னுடைய பரிஸரத்திலே அதூரவர்த்தியாகநின்றுனென்கிறார்.

இவையுமவையு முவையும் } அந்திகஸ்த்தமாயும் தூரஸ்தமாயும் அதூரவிப்ரக்ருஷ்டமாயுமுள்ள அசேதநங்களும்
இவருமவரு முவரும் } ஏவம்விதசேதநரும்
யவையும்யவரும்—எல்லாம்
தன்னுள்ளே—ஸம்ஹ்ருதிஸமயத்திலே தன்னுள்ளே
ஆகியும்—ஆம்படியாயும்
ஆக்கியும்—ஸ்ருஷ்டிஸமயத்திலே யுண்டாக்கியும்
காக்கும்—ஸ்ருஷ்டமானவற்றுக்கு ஆபத்துக்களைப்போக்கி அபிமதங்களைக் கொடுத்து ரக்ஷிக்குமவனுமாய்
அவையுள்—அவற்றினுள்ளே அந்தராத்மாவாயு
தனிமுதல்—உள்ளேஸஹாயாந்தர நிரபேக்ஷகாரணமுமாய
அம்மான்—ஸ்வாமியுமாய்
கண்ணபிரான்—க்ருஷ்ணனை ஸௌலப்யத்தைக்காட்டி
என்னமுதம்—எனக்குபோக்யபூதனாய்
சுவையன்—அத்தாலே தானும் ரஸிகனானவன்
திருவின் மணுளன் } லக்ஷ்மியோடேகூட
என்னுடைய—என்னுடைய
சூழலுளான்—சூழலிலேயானுன்.

ஆறு ;—(இவையுமவையும்) இப்படி எம்பெருமான் என்னோடு ஸம்ஶ்லேஷித்தருளினு னென்கிறார். ஸ்வஸங்கல்பக்ருத நிகில ஜகது தயவிபவலயலீலனுய், ஸர்வஜகதாத்மபூதனுனவன் என்னோடு ஸம்ஶ்லேஷிக்கையிலுள்ள வபிநிவேஶத்தாலே என்னைவஶீகரிக்கைக்காக என்னுடைய சூழலிலே வந்து புகுந்தானென்கிறார். (க)

---

ஈடு ; அவ ;—(இரண்டாம்பாட்டு) என்பரிஸரத்திலே வர்த்தித் தவன், அதுஸாத்மித்தவாறே என்னருகேவந்து நின்றானென்கிறார்.

சூழல்பலபலவல்லான் தொல்லையங்காலத்துலகைக்
கேழலொன்றாகியிடந்த கேசவனென்னுடையம்மான்
வேழமருப்பையொசித்தான் விண்ணவர்க்கெண்ணலரியான்
ஆழநெடுங்கடல்சேர்ந்தா னவனென்னருகலிலானே. (உ)

ப ;—அநந்தரம் அவதாரமுகத்தாலே ஆஶ்ரிதோபகாரகனுனவன், என்னருகேயானுனென்கிறார்.

சூழல்—ஆஶ்ரிதரை வசீகரிக்கைக்கீடானசூழ்ச்சியையுடைய அவதாரங்களை
பலபல—பலவும்
வல்லான்—தன்னிச்சையாலேபண்ண வல்லனுய்
தொல்லை—பழையதாய்
அம்—அவதாரோபயுக்த மாகையாலே யழகியதான
காலத்து — வாராஹகல்பத்தின் முதலிலே
உலகை—ப்ரளயார்ணவமக்நமான லோகத்தை
கேழலொன்றாகி — அத்விதீயவாராஹமாய்க்கொண்டு
இடந்த—இடந்தெடுத்து
கேசவன்—ப்ரளயஜலத்திலே நனைந்த மயிரழகையுடைய
என்னுடையம்மான் — என் ஸ்வாமியாய்
வேழம்-(க்ருஷ்ணனுய்வந் தவதரித்து) ப்ரதிபந்தகமான குவலயாபீடத்தை
மருப்பையொசித்தான் — ஶ்ருங்கபங்கம்பண்ணினவனுய்
விண்ணவர்க்கு-(இவ்வுபகாரம்) அதிஶயித்ஜ்ஞாநரான தேவர்களுக்கும்
எண்ணல்—நினைக்க
அரியான்—அரியனுய்
ஆழம்—(பின்னையு மாஶ்ரிதர்க்குதவுகைக்காக) அகாதமாய்
நெடும்—பெருத்த
கடல்—க்ஷீரார்ணவத்திலே
சேர்ந்தானவன்—கண் வளர்ந்தருளினவன்
என்னருகலிலான் — என்னருகான விடத்திலேயானுன்.

அருகலிலென்று - ஏழாம் வேற்றுமை. (உ)

ஆறு ;—(சூழல்பலபல) இப்படி என்னுடைய சூழலிலே புகுந்து, தன்னுடைய திவ்யசேஷ்டிதங்களையும் ப்ரஹ்மாதி வாங்மநஸாபரிச்சேத்யமான தன்னுடைய கல்யாண குணங்களையும் எனக்குக்காட்டி என்னைவசீகரித்து, பின்னை யென்னருகே யெழுந்தருளினனென்கிறார். ... ... ... ... (உ)

---

ஈடு; அவ ;—(மூன்றும்பாட்டு) திருவடி, திருவநந்தாழ்வான், பிராட்டிமார் தொடக்கமானாரோடு ஓரோவகையாலே பரிமாறுமவன், என்னளவிலோரோவகையில் பரிமாறி விடமாட்டுகிறிலனென்கிறார்.

அருகலிலாய பெருஞ்சீ ரமரர்களாதி முதல்வன்
கருகிய நீலநன்மேனிவண்ணன் செந்தாமரைக் கண்ணன்
பொருசிறைப் புள்ளுவந்தேறும் பூமகளார் தனிக்கேள்வன்
ஒருகதியின் சுவைதந்திட் டொழிவில னென்னோடுடனே. (ங)

ப ;—அநந்தரம் என்னோடே கூடிநின்று பஹுமுகமாக ரஸிப்பியாநின்றானென்கிறார்.

அருகலில்—அபக்ஷயாதி தோஷரஹிதமாய்
ஆய—ஸதாஸ்தித்வத்தாலே நித்யமாய்
பெரும்—அபரிச்சிந்நமான
சீர்—குணங்களையுடையனாய்
அமரர்கள்—நித்யஸூரிகளுக்கு
ஆதி—ஸத்தாதிஹேதுபூதனான
முதல்வன்—ப்ரதாநனாய்
கருகிய—மிக்வுங்கருகின
நீலம்—நீலரத்நம்போலே
நல்—நன்றான
மேனிவண்ணன்—திருமேனிநிறத்தையுடையனாய்
செம்—அவ்வடிவுக்குப் பரபாகமாம்படி சிவந்த
தாமரை—தாமரைபோன்ற
கண்ணன்-திருக்கண்களையுடையனாய்
பொரு—செறிந்த
சிறை—சிறகையுடையனான
புள்—பெரியதிருவடியை
உவந்து—மிகவும்விரும்பி
ஏறும்—மேற்கொள்ளக்கடவனாய்
பூமகளார்—பூவில்மணம் வடிவுகொண்டாற்போலே போக்யபூதையான லக்ஷ்மிக்கு
தனிக்கேள்வன் — அத்விதீயபோக்தாவானவன்
என்னோடுடனே — என்னோடு கூடநின்று
ஒருகதியின்—ஒருவழியாலுள்ள
சுவை—இனிமையை
தந்திட்டு—தந்து
ஒழிவிலன்—தவிருகிறிலன்.

ஹேயப்ரத்யநீகமாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகமான ஸ்வரூபவைலக்ஷண்யமும், நித்யஸூரிநிர்வாஹகத்வரூபமான மேன்மையும், விலக்ஷணவிக்ரஹ

கமும், புண்டரீகாக்ஷத்வமும்; கருடவாஹநத்வமும், ஶ்ரிய:பதித்வமுமாகிற பாரத்வசிஹ்நங்களாயுள்ள வறுசுவையும் தாராநின்றானென்றுகருத்து. அருகலென்று - குறையாய், க்ஷயமென்றபடி. (௩)

ஆறு ;—(அருகலில்) ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநவதிகாஸங்க்யேய குணவிஶிஷ்டனாய், அயர்வறுமமரர்களதிபதியாய், நிரதிஶய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்ய பரிமிதகல்யாணகுண பரிபூர்ணனாய், பெரியதிருவடியை திவ்யவாஹநமாகவுடையனாய், 'ஶ்ரிய:பதியாயிருந்தவெம்பெருமான்' என்னருகே வந்து பின்னையொருபடியால் என்னோடு ஸம்ஶ்லேஷித்துவிட்டிலன்; ஸர்வப்ரகாரத்தாலும் ஸம்ஶ்லேஷியா நின்றானென்கிறார். (௩)

---

ஈடு ; அவ ;—(நான்காம்பாட்டு) மேன்மையது, அகடிதகடநா ஸாமர்த்யமது ; இப்படி யிருக்கிறவன், யஶோதைப்பிராட்டிமருங்கிலேயிருக்குமாபோலே என்மருங்கிலே வந்திருக்கை தனக்குப் பெறாப்பேறாக நினைத்திராநின்றானென்கிறார்.

உடனமர்காதல்மகளிர் திருமகள்மண்மகளாயர்
மடமகளென்றிவர்மூவராளு முலகமுமூன்றே
உடனவையொக்கவிழுங்கி யாலிலைச்சேர்ந்தவனெம்மான்
கடல்மலிமாயப்பெருமான் கண்ணனென்னொக்கலையானே. (௪)

ப ;—அநந்தரம் பூர்ணனாய்ஸர்வரக்ஷகனானவன் என்மருங்கிலேயிராநின்றானென்கிறார்.

உடன்—கூடியிருந்து
அமர்—தரிக்கும்படியான
காதல்—காதலையுடைய
மகளிர்—பிராட்டிமார் [யான லக்ஷ்மி
திருமகள் — அதிஶயிதஸம்பத்ரூபை
மண்மகள்—க்ஷமாதத்த்வமானபூமி
ஆயர்மடமகள்—அநுரூபமான ஆபிஜாத்யந்தன்னையும் ஆத்மகுணத்தையுமுடைய நப்பின்னை
என்று—என்று ப்ரதாநதயாப்ரஸித்தை
இவர்—இவர்கள் [களான

மூவர்—மூவர்
ஆளும்—ரக்ஷணீயமான
உலகமும்—ஜகத்தும்
மூன்றே—ஸ்வர்க்கலோகபர்யந்தமான க்ருதகலோகமும், ஜநஸ்தபஸ்ஸத்யரூபமான அக்ருதகலோகமும், மஹர்லோகமாகிற க்ருதகாக்ருதகலோகமுமாகிற மூன்றாயிருக்கும்;
அவை—ப்ரளயகாலத்திலே அவற்றை
உடன்—தாரதம்யவிபாகரஹிதமாக
ஒக்க—ஏகோத்யோகத்திலே

விழுங்கி—விழுங்கி
ஆலிலை—ஆலிலையிலே
சேர்ந்தவன்—கண்வளர்ந்து
எம்மான் — இவ்வபதாநத்தாலேயென்னையடிமைகொண்டஸ்வாமியாய்
கடல்—க்ஷீரார்ணவத்திலே [யனாய்
மலி—கண்வளருமபிவ்ருத்தியையுடை

மாயம் — ஆஶ்சர்யகுண சேஷ்டிதங்களாலே
பெருமான்—அநவதிகஸ்வபாவனான
கண்ணன்—க்ருஷ்ணனானவன்
என்னொக்கலையான் } யஶோதைதபக்கல்போலேயென்னொக்கலையிலேயானான்

கடலின் மிகுத்தமாய மென்றுமாம். (ச

ஆறு ;— (உடனமர்) இனிமேல் அவன் கலந்தருளின க்ரமத்தைச்சொல்லுகிறார்.

பெரியபிராட்டியாரும் ஸ்ரீபூமிப்பிராட்டியும் நப்பின்னைப்பிராட்டியும் அவனுக்குதிவ்யமஹிஷிகள் ; ப்ருதிவ்யந்தரிக்ஷாதிஸர்வலோகங்களும் அவனுக்குலீலோபகரணம் ; இந்தலோகங்களினுடைய ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாராதிகள் அவனுக்கு லீலை ; இன்னம் அபரியந்தமாய் ஆஶ்சர்யமான கல்யாணகுணங்களை யுடையனாயிருந்த கண்ணன் யசோதைப் பிராட்டியொக்கலையிலே யிருந்தருளுமாபோலே, என்னுடைய வொக்கலையிலே யேறியருளினா னென்கிறார்

---

ஈடு ; அவ ;—(அஞ்சாம்பாட்டு) விரோதிநிரஸநசீலனாய் ஸர்வஸ்ரஷ்டாவானவன்வந்து என்னுடையஹ்ருதயஸ்தனானா னென்கிறார்.

ஒக்கலைவைத்து முலைப்பா லுண்ணென்று தந்திடவாங்கிச்
செக்கஞ்செகவன் றவள்பா லுயிர்செக வுண்டபெருமான்
நக்கபிரானோடயனு மிந்திர னும்முதலாக
ஒக்கவுந்தோற்றியவீசன் மாயனென்னெஞ்சினுளானே. (ரு

ப ;—அநந்தரம் ஸர்வாதிகனாய் விரோதிநிவர்த்தகனான க்ருஷ்ணன், என் ஹ்ருதய ப்ரதேஶத்திலே யடங்கியிருந்தா னென்கிறார்.

நக்கபிரானோடு — திகம்பரனாய் ஈஶ்வரனாக ப்ரஸித்தனான ருத்ரனும்
அயனும் — யோநிஜந்ம மில்லாமையாலே அஜனென்று ப்ரஸித்தனான ப்ரஹ்மாவும்

இந்திரனும்—பரமைஸ்வர்ய விசிஷ்டனாக பாவித்திருக்கிற இந்த்ரனும்
முதலாகவும்-முதலான ஸமஸ்தபதார்த்தங்களையும்
ஒக்க—ஏகோத்யோகேந
தோற்றிய—உத்பாதித்த
ஈசன்—ஸர்வேஸ்வரனுய்வைத்து
ஒக்கலைவைத்து—அவதார தசையிலே யசோதையைப்போலே யெடுத்துவைத்து
முலைப்பாலுண்ணென்று—ப்ரேமபாவனையாலே முலைப்பாலை யுண்ணென்று
தந்திட—ஸத்வரமாகத்தர,
வாங்கி—அத்தை யசங்கிதமாக ஸ்வீகரித்து
செக்கம்-அந்தப்பூதனையானவள் "முடிக்கவேணும்" என்று வந்த நினைவு
செக—அவள்தன்னோடே முடியும்படி
அன்று—அவள் நலிவதாக வந்தவன்று
அவள்பால்—அவளிடத்து
உயிர்—ப்ராணனை
செக—முடியும்படி
உண்ட — அவள் தந்தபாலை யமுது செய்து
பெருமான்—ஜகத்துக்கீஸ்வரனை யுண்டாக்கின ஸர்வாதிகனை
மாயன்—ஆஸ்சர்யபூதன்,
என்—என்னுடைய அவயவைகதேசமான
நெஞ்சினுளான்—ஹ்ருதய ப்ரதேசத்துக்குள்ளே யடங்கினான்.

செக்கம் செகுத்தல் - முடிதல். (ரு)

ஆறு ;—(ஒக்கலை) ப்ரஹ்மாதிஸ்த்தாவராந்தமான ஸர்வஜகத்துக்கும் ஸ்ரஷ்டாவாய், ஸர்வஜகந்நியந்தாவாய், ஆஸ்சர்யபூதனுமாய், விரோதிநிரஸநஸ்வபாவனுமாயிருந்தவன், என்னொக்கலையிலேதானிருந்தவிருப்பு எனக்கு ஸாத்மித்தவாறே, என்மார்விலே வந்திருந்தருளினானென்கிறார். ... ... ... (ரு)

---

ஈடு ; அவ ;—(ஆறாம்பாட்டு) ஸர்வாந்தராத்மாவானவன் என் தோளைப்பற்றி வர்த்தியாநின்றானென்கிறார்.

மாயனென்னெஞ்சினுள்ளான் மற்றும்யவர்க்குமதுவே
காயமுஞ்சீவனுந்தானே காலுமெரியுமவனே
சேயனணியன்யவர்க்குஞ் சிந்தைக்குங்கோசரமல்லன்
தூயன்துயக்கன்மயக்க னென்னுடைத்தோளிணையானே. (கூ)

ப ;—அநந்தரம் அநுகூலர்க் கெளியனாய் ப்ரதிகூலர்க் கரியனானவன் என்னுடைய தோள்களை விடுகிறிலனென்கிறார்.

என்—என்னுடைய
நெஞ்சினுள்ளான் — நெஞ்சிலே வர்த்திக்கிற
மாயன்—ஆஶ்சர்யபூதனானவன்
மற்றும்யவர்க்கும்-மற்றுமெல்லார்க்கும்
அதுவே-அப்படிசெய்யுமோ. இப்படி யென்னளவிலே யெளியனாய், ஸர்வாத்மபூதனாய்க் கொண்டு
காயமும்—சரீரமும்
சீவனும்—ஆத்மாவும்
தானே—தானென்னலாம்படி தனக்கு ப்ரகாரமாக வுடையனாய்
காலும்—வாயுவும்
எரியும்—அக்நியும்
அவனே—அப்படி தனக்கு ப்ரகாரமாய்
சேயன்—இந்நிலை அநாஶ்ரிதர்க்கறிய வொண்ணாதபடி தூரஸ்தனாய்
அணியன் — ஆஶ்ரிதர்க்கறியலாம்படி ஆஸந்நனாய்
யவர்க்கும்—எத்தனையேனு மதிகர்க்கும் ஸ்வயத்நத்தால்காணு மளவில்
சிந்தைக்கும்—நினைக்கவும்
கோசரமல்லன்—விஷயமல்லாதவனாய்
தூயன் துயக்கன் மயக்கன் } ஆஶ்ரிதர்க் கணியனானைக் கீடான பரிசுத்தியை யுடையனாய் அநாஶ்ரிதர்க்கு தூரஸ்த்தனாம்படி ஸம்ஶய விபர்யயஜ்ஞாந ஜநகனானவன்
என்னுடைய—(பெரிய திருவடியை மேற்கொள்ளுமா போலே) என்னுடைய
தோளிணையான்—இரண்டு தோளிலு மிராநின்றான்.

மற்றும்யவர்க்கும் அதுவே யென்றந்வயமுமாம்; துயக்கு-விபரீதஜ்ஞாநம்; மயக்கு - ஸம்ஶயஜ்ஞாநம். (௬)

ஆறு ;—(மாயன்) தேவாதிசரீராதிகளுக்கும் ததந்தர்வர்த்திகளான ஜீவர்களுக்கும் ப்ருதிவ்யாதி பூதங்களுக்கு மாத்மாவாய், ஆஶ்ரிதஸுலபனாய் அநாஶ்ரிதருக்கு அபூமியாய், அபூமியாமிடத்து அவர்களெத்தனையேனு முத்க்ருஷ்டரேயாகிலும் அவர்கள் மநஸ்ஸுக்குங்கூட அபூமியாயிருந்தவன் தான் என்மார்விலேயெழுந்தருளியிருந்தவிருப்பு ஸாத்மித்தவாறே, ஸம்ஶ்லேஷைகப்ரயோஜநனாய்த் தன்னுடைய குணங்களாலும் செயல்களாலும் என்னை நைவித்து என்னை யறிவழித்துக்கொண்டு பெரியதிருவடி திருத்தோளிலே யிருந்தருளுமாபோலே யென்னுடையதோளிலே யேறியிருந்தருளினான் ; இப்படிமற்றுமாரேனு மொருவருக்குச் செய்தருளினானோ ! இவனுக்கென்பக்கலுள்ள அபிநிவேஶமிருக்கும்படியே! என்கிறார்

ஈடு ; அவ ;—(ஏழாம்பாட்டு) நானுகந்தபடியே யலங்கரித்துக் கொண்டுவந்து என்னுவிலேகலந்தானென்கிருர்.

*தோளிணைமேலும் நன்மார்பின்மேலுஞ் சுடர்முடிமேலும்*
*தாளிணைமேலும்புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்*
*கேளிணையொன்றுமிலாதான் கிளருஞ்சுடரொளிமூர்த்தி*
*நாளணைந்தொன்றுமகலா னென்னுடைநாவினுளானே.* (எ)

ப ;—அநந்தரம் நிரதிஶயபோக்யபூதனானவன் நிரந்தரமாக என்னுவினுள்ளே யானுனென்கிருர்

| | |
|---|---|
| தோளிணைமேலும்—ரக்ஷகமான திருத்தோள்களிலும் | இணை—உவமை |
| நல்—அபிமதவிஷய மிருக்கும் | ஒன்றும்—ஒருபடியாலும் |
| மார்பின்மேலும்—திருமார்பிலும் | இலாதான்—இல்லாதவனுய் |
| சுடர் — ஶேஷித்வௌ ஜ்வல்யத்தையுடைய | கிளரும்சுடர் — ஸ்வாபாவிக தேஜஸ்ஸோடே திருத்துழாயினுளியுங்கலந்து அபிவ்ருத்தமான சுடர்விடுகிற |
| முடிமேலும்—திருமுடியிலும் | |
| தாளிணைமேலும்—ஶேஷபூதர் பற்றும் திருவடிகளிலும் | ஒளிமூர்த்தி—தேஜோமய திவ்யவிக்ரஹத்தை யுடையனுனவன் |
| புனைந்த—அணியப்பட்ட | நாள்—நாடோறும் |
| தண்ணந்துழாயுடை - செவ்வித்திருத்திருத்துழாயை யுடைய | அணைந்து—கிட்டி |
| | ஒன்றும்—சிறிதும் |
| அம்மான்—ஸ்வாமியாய் | அகலான்—அகலாதவனுய்க்கொண்டு |
| கேள் — இவ்வொப்பனை யழகுக்குப் பொருந்தின | என்னுடை நாவினுளான் } என்ஜிஹ்வாஸ்த்தானத்திலே யானுன் |

கேள் - பொருத்தம். (எ)

ஆறு ; —(தோளிணை) தம்மோடு கலந்தருளுகைக்காக எம்பெருமான் தன்னுடைய நிரவதிகமாய் நிருபமமாய் ஸ்வாபாவிகமான அழகுக்குமேலே என்னோடே ஸம்ஶ்லேஷிக்கைக்காக தண்ணந்துழாய்க்கொண்டணிந்து, ஒருக்ஷணமாத்ர மென்னைவிடில் தரிக்கமாட்டாதஸ்வபாவனுய்க்கொண்டு என்னுடைய நாவிலே வந்து புகுந்தருளினுனென்கிருர். (எ)

ஈடு ; அவ ;—(எட்டாம்பாட்டு) ஸகலவித்யாவேத்யனான ஸர்வேஸ்வரன், ப்ரமாணங்களாலே காணக்கடவவடிவை என்கண்ணுக்கு விஷயமாக்கினானென்கிறார்.

நாவினுள்நின்றுமலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம்
ஆவியுமாக்கையுந்தானே யழிப்போடளிப்பவன்றானே
பூவியல்நாற்றடந்தோளன் பொருபடையாழி சங்கேந்தும்
காவிநன்மேனிக் கமலக்கண்ணனென் கண்ணினுளானே. (அ)

ப ;—அநந்தரம் தர்ஶநீய விக்ரஹத்தோடே (க) "வசக்ஷுஷி திஷ்டஞ் சக்ஷுஷி திஷ்டந்" என்கிறபடியே யென்கண்ணுக்குள்ளே யானானென்கிறார்.

நாவினுள்நின்று—நாவினிடத்தி னின்று
மலரும்—பரவும்
ஞானம்—ஜ்ஞாநஸாதநமான
கலைகளுக்கெல்லாம்-வித்யாஸ்த்தாநங்களுடைய
ஆவியும்—உயிரான அர்த்தமும்
ஆக்கையும்—உடம்பான ஶப்தமும்
தானே—தானிட்டவழக்காய்
அளிப்போடழிப்பவன்றானே—அவற்றினுடைய வுத்பத்தி விநாஶங்களுந் தானிட்ட வழக்கான
பூவியல்—பூமாறாத
நாற்றடந்தோளன்—நாலு பெரியதோள்களையுடையனாய் (தோள்களிலே)
பொரு-ஆஶ்ரிதவிரோதிகளைப்போக்கைக்கு
படை—ஆயுதமான
ஆழி—திருவாழியையும்
சங்கு—திருச்சங்கையும்
ஏந்தும்—ஏந்துமவனாய்,
காவி—செங்கல்போலே
நல்—நன்றான
மேனி—திருநிறத்தையும்
கமலம்—கமலம்போன்ற
கண்ணன்—கண்களையுமுடையவன்
என்கண்ணினுளான்—இவ்வழகோடே யென்கண்ணுக்குள்ளே யானான்.

பூவியலென்று-பூவின்ஸ்வபாவமான மார்த்தவத்தைச் சொல்லவுமாம். (அ)

ஆறு ;—(நாவினுள்) ஸாங்கஸகலவேத ப்ரதிபாத்யனாய், தன் ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திஹேதுபூதனாய், நிகிலஜகதுதயவிபவலீலனாய், புஷ்பஹாஸஸுகுமாரனாய், சதுர்ப்புஜனாய், சங்கசக்ரகதாதரனாய், இந்தீவரதளஶ்யாமனாய், கமலபத்ராக்ஷனா யிருந்தவன் என்கண்ணுக்குள்ளே புகுந்தருளினானென்கிறார். (அ)

(க) ப்ருஹ - ரு - எ.

ஈடு ; அவ ;—(ஒன்பதாம்பாட்டு) கண்ணில்நின்றநிலை ஸாத்மித்தவாறே என்னெற்றியிலேவந்து நில்லாநின்றானென்கிறார்.

கமலக்கண்ணனென்கண்ணினுள்ளான் காண்பனவன்கண்களாலே
அமலங்களாகவிழிக்கு மைம்புலனுமவன்மூர்த்தி
கமலத்தயனம்பிதன்னைக் கண்ணுதலானொடுந்தோற்றி
அமலத்தெய்வத்தோ டுலகமாக்கி யென்னெற்றியுளானே. (௯)

ப ;—அநந்தரம் என்கண்களிலேநின்று ப்ரகாசியாநிற்கச்செய்தே, ஸகலஜகத் ஸ்ரஷ்டாவானவன் என்னுடைய லலாடமத்யத்திலே யானென்கிறார்.

கமலக்கண்ணன்—கமலக்கண்ணனானவன்

என்கண்ணினுள்ளான் } என்கண்ணுக்கு விஷயமாகாநிற்கும்; (அத்தாலே (க) "நசக்ஷுஷா பஶ்யதி - நசக்ஷுஷாபஶ்யதி" என்கிறநிலைதவிர்ந்து)

காண்பன் — நானுமவனைக்காணாநின்றேன்; அதுக்கடி

அவன்—அக்கமலக்கண்ணன்

கண்களாலே—தன்கண்களாலே

அமலங்களாக — அஜ்ஞாநாதி மலம் போம்படி

விழிக்கும்—பார்த்தருளாநிற்கும்;

ஐம்புலனும்—அத்தாலே சக்ஷுரிந்த்ரியமுமிந்த்ரியாந்தரங்களோடு வாசியற

அவன் மூர்த்தி — அவனுக்கு ப்ரகாரதயாஶேஷமாயிற்று;

இப்படி செய்தவனாரென்னில் ;

கமலத்து— கமலஸம்பவனாகையாலே

அயன்—அஜனென்றுபேராய்

நம்பிதன்னை—ஸ்ருஷ்ட்யாத்யுபயுக்தஜ்ஞாநாதி பூர்ணனான ப்ரஹ்மாவை

கண்ணுதலானொடும் } லலாட நேத்ரத்வத்தாலே வ்யக்தஶக்திகனான ருத்ரனோடே

தோற்றி—தோற்றுவித்து

அவர்கள் முதலாக

அமலம்—ஸத்வோத்தரைகளான

தெய்வத்தோடு—தேவதைகளோடே

உலகம்—லோகங்களையும்

ஆக்கி ஸ்ருஷ்டிக்கும் ஸ்வபாவனானவன்

இந்நிலைகுலையாதே

என்—என்னவயவைகதேஶமான

நெற்றியுளான்—நெற்றியிலேயானன்.

உலகமாக்கியென்று - பேர். கண்ணுதலானொடுமென்று - ருத்ரனுடைய அப்ராதாந்யம் தோற்றுகிறது. (௯)

ஆறு ;—( கமலக்கண்ணன் ) ப்ரஹ்மாதிஸ்த்தாவராந்தமான ஸகலஜகத்தையும் படைத்தருளினகமலக்கண்ணன், என்கண்ணினுள்ளே புகுந்தருளினான் ; நானுமவனை யென்கண்களால் காணப்பெற்றேன் ; அவனும் தன்னுடைய சீதளமான வழகியதிருக்கண்களாலே யென்னுடைய ஸமஸ்தஸந்தாபங்களும் போம்படி யென்னைக்

(க) தை - நா - க.

குளிரப்பார்த்தருளாநின்றான்; இப்படிமற்றுமுள்ள ஸ்ரோத்ராதி ஸகலகரணங்களாலு மவனையே புஜிக்கப்பெற்றேன்; நிரவதிகமா நிர்வ்ருதியெனக்குஸாத்மித்தவாறே, பின்னையென்னெற்றியுள் நின்றருளினானென்கிறார். ... ... ... (௯)

---

ஈடு; அவ;—(பத்தாம்பாட்டு) ப்ரஹ்மாதிகள் தன்னைப்பெறுகைக்கு அவஸர ப்ரதீக்ஷராய்த் தடுமாறும்படி யிருக்கிறவன்று என்னைப் பெறுகைக் கவஸரம்பார்த்துவந்து என்னுச்சியுளானென்கிறார்.

நெற்றியுள்நின்றென்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள் சூடிக்
கற்றைத்துழாய்முடிக்கோலக் கண்ணபிரானைத்தொழுவார்
ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும்
மற்றையமரருமெல்லாம் வந்தெனதுச்சியுளானே. (௰)

ப;—அநந்தரம் ப்ரஹ்மாதிகளுக்கும் ஆஸ்ரயணீயனானவன் என்னுடைய உத்தமாங்கத்திலேயானா னென்கிறார்.

நெற்றியுள்நின்று—அபிமுகனாய்நின்று
என்னை—என்னை
ஆளும்—அடிமைகொள்வதாய்
நிரைமலர்—ஆஸ்ரிதரிட்ட பூநிரையை யுடைத்தான
பாதங்கள்—திருவடிகளை
சூடி—தங்கள் தலையிலே சூடி,
கற்றை—செறிந்த
துழாய்—திருத்துழாயாகிற
முடிக்கோலம்—திருமுடி யலங்காரத்தை யுடையனாய்
கண்ணபிரானை—ஆஸ்ரிதபவ்யனா யுபகரிக்கும் க்ருஷ்ணனை
தொழுவார் — அஞ்ஜலிபந்தாதி முகத்தாலே ஆஸ்ரயிப்பார்,
ஒற்றைப்பிறை — ஏககலாரூபமான பிறையை
அணிந்தானும் — சிரோபூஷணமாவுடைய ருத்ரனும்
நான்முகனும்—சதுர்முகனும்
இந்திரனும்—இந்த்ரனும்
மற்றை—மற்றுமுள்ள
அமரருமெல்லாம் — தேவர்களெல்லாரும் இப்படி யவர்களாலே தொழப்பட்டவன்
வந்து — அந்த நெற்றியுள் நின்றுவந்து
எனதுச்சியுளான் — என் தலையின்மேலேயானான்

ஆறு;—(நெற்றியுள்) ப்ரஹ்மேஸாநாதி ஸகலதேவதைகளும் நெற்றியுள் நின்றென்னை யடிமைகொண்டருளுகிற இந்தத் திருவடி மலர்களைச் சூடிக்கொண்டு, கற்றைத்துழாய் முடிக்கோலக் கண்ணபிரானைத்தொழுவார்; அவனே ஸர்வேஸ்வரனாய் அவாப்த ஸமஸ்த

காடனை வெம்பெருமான், என்னெற்றியுள் நின்றருளினபிலே யெனக்கு ஸாத்மித்தவாறே, பின்னை யென்னுச்சியுள்ளேவந்து புகுந்தருளினனென்கிறார். ... ... ... (கo)

ஈடு ;— நிகமத்தில், இத்திருவாய்மொழியை எம்பெருமானுக்கு விண்ணப்பஞ்செய்ய, அவர்கள் தலையிலே எம்பெருமான் திருவடிகள் நாடோறும் சேருமென்கிறார்.

உச்சியுள்ளேநிற்குந் தேவதேவற்குக் கண்ணபிராற்கு
இச்சையுட்செல்லவுணர்த்தி வண்குருகூர்ச்சடகோபன்
இச்சொன்னவாயிரத்து ளிவையுமோர்பத்தெம்பிராற்கு
நிச்சலும்விண்ணப்பஞ்செய்ய நீள்கழல்சென்னிபொருமே.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ப ;—அநந்தரம் இத்திருவாய்மொழிக்கு பலமாக நித்யமான பகவத் ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

உச்சியுள்ளே நிற்கும் — இப்படியே உச்சியிலே நிற்குமவனாய்
தேவதேவற்கு—தேவதேவனுமாய்
கண்ணபிராற்கு – கண்ணபிரானுமான பரத்வ ஸௌலப்யங்களை யுடையவனுக்கு
இச்சை — தம்பக்கலவன் பண்ணின அபிநிவேஶம்
உள்—தம்முடையவுள்ளே
செல்ல—நடக்க
உணர்த்தி—அத்தை யவனுக்கறிவித்து
வண்குருகூர்ச் சடகோபன் — ஆழ்வார்,
இச்சொன்ன வாயிரத்துள் — அருளிச்செய்த இந்த வாயிரத்துள்
அவனுடைய ஸம்ஶ்லேஷ க்ரம ஸூசகமான
இவை—இந்த
ஓர்—அத்விதீயமாயுள்ள
பத்து—பத்தையும்
எம்பிராற்கு—எம்பெருமானுக்கு
விண்ணப்பஞ் செய்ய — விண்ணப்பஞ் செய்ய,
நீள் — ஆஶ்ரிதரிருந்த விடத்தளவும் வருவதான,
கழல்—அவன் திருவடிகள்
சென்னி—இவர்கள் தலையிலே
நிச்சலும்—நிச்சலும்
பொரும்—பொருந்தும்.

இத்திருவாய்மொழி அறுசீராசிரிய விருத்தம். (கக)

வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

ஆறு ;—(உச்சியுள்ளே) இப்படியுச்சியுள்ளேநிற்கையாலே ஸர்வேஶ்வரனானவனுக்கு இப்படிச்சொன்ன இத்திருவாய்மொழியை

யெம்பெருமானுக்குநிச்சலும்விண்ணப்பஞ்செய்ய,நீள்கழல்சென்னி பொருமென்கிறார். ... ... ... (க)

திருக்குருகைப் பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஈடு; நிக;— முதற்பாட்டில், என்னுடையபர்யந்தத்திலேவந்து நின்றானென்றார்; இரண்டாம்பாட்டில், அது ஸாத்மித்தவாறு யருகேநின்றானென்றார்; மூன்றாம்பாட்டில், தம்முடனே கூடநின்றானென்றார்; நாலாம்பாட்டில், ஒக்கலையிலே வந்திருந்தானென்றார்; அஞ்சாம்பாட்டில், நெஞ்சிலேவந்து புகுந்தானென்றார்; ஆறாம்பாட்டில், தோளிலே வந்திருந்தானென்றார்; ஏழாம்பாட்டில், நாவிலேவந்து புகுந்தானென்றார்; எட்டாம்பாட்டில், கண்ணுள்ளே நின்றானென்றார்; ஒன்பதாம்பாட்டில், நெற்றியிலே நின்றானென்றார்; பத்தாம்பாட்டில், திருமுடியிலே நின்றானென்றார்; நிகமத்தில், ஆக, இத்தால் - தம்முடனே ஸாத்மிக்கும்படி கலக்கையாலே அவன் ப்ரீதியை ஸாவஹித்தார்; பலஞ்சொல்லித் தலைக்கட்டினார். (க)

வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஒன்பதாம் திருவாய்மொழி

முற்றிற்று.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

முதற்பத்து.

# பத்தாம் திருவாய்மொழி.

பொருமாநீள் - ப்ரவேஶங்கள்.

ப ;- பத்தாந்திருவாய்மொழியில், “ இப்படி ஸர்வப்ரகார ஸம்ஶ்லேஷம் பண்ணுகைக்கடி - அவனுடைய நிர்ஹேதுக மஹோபகாரகத்வமிறே ” என்றநுஸந்தித்து, அதுக்குபபாதகமாக, அவன் தன்வடிவைத் தம்முடையகண்ணுக்கிலக்காக்கினபடியையும், க்ஷணமாத்ரத்திலும் ஸகலபனென்னுமிடத்தையும், அவனுடைய அநுபாவ்யஸ்வபாவத்தையும், நிரந்தராநுபாவ்யதையையும், அர்த்தித்வமும் வேண்டாத அதிஶயிதோபகாரகத்வத்தையும், அதுக்கடியான பந்தவிஶேஷத்தையும், இதுக்கடிப்படிமாவான ஸௌரிபோக்யதையையும், உபகாரகத்வோபயுக்தமான பூர்ணதையையும், இவ்வுபகாரக்ரமம் மறக்கவரிதென்னுமிடத்தையும், மறவாமைக்கவன் பண்ணின யத்நவிஶேஷத்தையு மருளிச்செய்து, அவனுடைய மஹோபகாரகத்வத்தை யநுபவித்துக்களிக்கிறார். *

ஆறு ;—(பொருமாநீள்படை) இப்படி யெம்பெருமான் தம்மோடே கலந்தகலவியால் தமக்குப்பிறந்த நிரவதிகமான நிர்வ்ருதியாலே அக்கலவியைப்பேசுகிறார்.

ஈடு ;—“ கீழ்த்திருவாய்மொழியில் பிறந்த ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தை யநுஸந்தித்து நிர்வ்ருதராகிறார் ” என்று முன்புள்ளமுதலிகள் நிர்வஹிக்கும்படி. அதாவது நிர்வ்ருதியென்று - ஸுகமாய், ஸுகிக்கிறாரென்றபடி.

கீழ்ப்பிறந்த ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தை யநுஸந்தித்து பட்டரருளிச்செய்வதோரேற்றமுண்டு. அதாவது-“உச்சியுள்ளே நிற்கும்” என்றிறே கீழ்நின்றது, பேற்றிலினியிதுக்கவ்வருகேற்றமாகச் செய்துகொடுக்கலாவதொன்றுமில்லை, இனி இதினுடைய அவிச்சேதத்தைப் பண்ணிக்கொடுக்கையேயுள்ளது ; பேறு கனத்திருந்தது, இதுவந்த வழியென்ன ? என்றாராய்ந்தார், இப்பேற்றின்கனத்துக்கீடாயிருப்பதொருநன்மை தந்தலையிலின்றிக்கேயிருந்தது ; இத்தலையிலுமேதேனுமுண்டாகப்பார்த்தாலும், அத்வேஷமாதல், ஆபிமுக்யமாத

லிறேயுள்ளது, அத்தைஸாதநமாகச் சொல்லப்போராதே; இ தலை யிலே பரமபக்தி பர்யந்தமாகப் பிறந்தாலும் பேற்றின்கன துக் கித்தை யொருஸாதநமாகச் சொல்லப்போராதே. ஒருவனோ ரனு மிச்சம்பழங்கொடுத்து ராஜ்யத்தைப்பெற்றால் அது விலையாயிரா தே; ஸர்வேஶ்வரனடியாகவரும் பேற்றுக்கு இத்தலையிலோரடி நி பிக் கலாயிராதே; (க) "வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால்" என் னும்படியிறே யிருப்பது; இவனை முதலிலே ஸ்ருஷ்டிக்கிறபோது "இவன் தீயவழியைத்தப்பி நல்லவழிபோகவேணும்" என்று உப கரணங்களைக் கொடுத்துவிடுகையாலே, இவன் தலையால் பிறந்த நன் மைக்குமடி அவனாயிருக்குமே; "இனி புத்த்யாதி ஸகலபதார்த் ங்க ளுக்கும் நிர்வாஹகனாகையாலே, அத்வேஷந்தொடக்கமாக, பரி கணனை நடுவாக, பரமபக்திபர்யந்தமாகத்தானே பிறப்பிப்பா ெருவன், நித்யஸூரிகள்பேற்றை, அநாதிகாலம் ஸம்ஸரித்துப் போந்த நமக்குத்தந்தான். ஒரு விஷயீகாரமிருக்கும்படி யென்?" என்று, கீழில் திருவாய்மொழியி லுங்மஸ்தகமாகப் பிறந்த ஸம்ஶ்லேஷ ரஸத்தை யநுஸந்தித்து நிர்வ்ருதராகிறார்" என்று.

ஈடு; அவ;—இத்திருவாய்மொழியில் சொல்லுகிற வர்த்தத் தைத் திரளவருளிச்செய்கிறார் முதற்பாட்டில். மஹாபலி, ன் வரவை நினையாதேயிருக்க அவன் பக்கலிலேதானே யிரப்பாளனாய்ச் சென்று தன்னுடைமையைத் தன்னதாக்கினாற்போலே, என்னு நினைவின்றிக்கேயிருக்கத்தானே வந்து தன்வடிவழகை என்கண்ணுக் கிலக்காக்கினானென்று அவன்படியை யநுஸந்தித்தினியராகிறார்.

மூ;—பொருமாநீள்படை யாழிசங்கத்தொடு
திருமாநீள்கழ லேழுலகுந்தொழ
ஒருமாணிக் குறளாகிநிமிர்ந்தவக்
கருமாணிக்க மென்கண்ணுளதாகுமே. (க)

ப;— (முதற்பாட்டில்) த்ரைவிக்ரமாவதாரத்தாலே ஸர்வலோகத்து முபகரித்தாற்போலே, அவ்வடிவை யென்கண்ணுக்கிலக்காக்கினானென்கிறார்.

(க) பெரியதிருவ-டுசு.

பொரு—விரோதிநிரஸந ஶீலமாய்
மா—அத்தாலே அதிஶயிதோத்க்ருஷ்டமாய்
நீள்— வடிவோடொக்க வளரக்கடவதாயுள்ள
படை—ஆயுதமான
ஆழிசங்கத் தொடு — சங்க சக்ரங்களோடே கூட
திரு — ஶ்ரியஃபதித்வ சிந்ஹநங்களையுடைத்தான
மா—உத்கர்ஷயுக்தமாய்
நீள்—ஆஶ்ரிதாளவுஞ் செல்வதான
கழல்—திருவடிகளை
ஏழுலகும்—ஜ்ஞாநாஜ்ஞாந விபாகமற ஸகல லோகமும்
தொழு—ஶேஷத்வாநுரூப ப்ரவ்ருத்தியைப்பண்ணி அநுபவிக்கும்படியாக
ஒரு—அத்வி தீயமான
மாணிக்குறளாய் — அர்த்தித்வாநுரூப ப்ரஹ்மசாரியான வாமநத்வத்தை யுடையனாய்க்கொண்டு
நிமிர்ந்த-கார்யஸித்தி ஸமநந்தரம் வளர்ந்தருளின
அ—அந்த வைபவத்தை யுடைய
கருமாணிக்கம்-நீலரத்நம்போலே தர்ஶநீய விக்ரஹனானவன்,
என்கண்ணுளது — என் கண்ணுக்கு விஷயம்
ஆகும்—ஆகாநிற்கும்.

என்கண்ணென்று-என்னிடத்தென்றுமாம். உளதாகுமென்ற அஃறிணை, மாணிக்க மென்கையாலே. (க)

ஆறு ;—விரோதிநிரஸநஸமயத்தில் அவர்களுக்குத் தக்கபடியன்றியே, அதிகமாகக்கிளர்ந்துகொண்டு செல்லும்ஸ்வபாவமான திருவாழி திருச்சங்குமுதலான திவ்யாயுதங்களையேந்தின அவ்வழகையும், அளவிறந்த வழகையுடைத்தான தன்திருவடியையும் ஸர்வாத்மாக்களுங்கண்டு தொழும்படியாக ஒரு மாணிக்குறளாகி நிமிர்ந்த அக்கருமாணிக்கம், அவ்வழகோடே என்கண்ணுள்ளே யிருந்ததென்கிறார். ... ... ... ... (க)

---

ஈடு ;—(இரண்டாம் பாட்டு) பரமபக்திக்கும் பரிகணனைக்கு மொக்க முகங்காட்டுமென்கிறார்.

மூ ;—கண்ணுள்ளேநிற்குங் காதன்மையாற்றொழில்
எண்ணிலுமவரு மெண்ணினிவேண்டுவம்
மண்ணும்நீருமெரியு நல்வாயுவும்
விண்ணுமாய்விரியு மெம்பிரானையே. (உ)

ப ;—அநந்தரம், ஸர்வகாரணபூதனை ஸர்வேஶ்வரன், ஸர்வாத்மகபஜநத்தோடு ஸத்பாவாபிஸந்தியோடு வாசியற ஸந்நிஹிதனுமென்கிறார்.

மண்ணுநீரெரியு நல்வாயுவும் விண்ணுமாய் — ப்ருதிவ்யாதி பூதங்களையும்ப்ரகாரமாகவுடையனாய்க்கொண்டு

விரியும் — ஜகதாகாரேண விஸ்த்ருதனாகிற

எம்பிரானை—என்னுடைய ஸ்வாமியை

காதன்மையால் — அபிநிவேஶாத்மக பக்தியாலே

தொழில் — ப்ரணாமார்ச்சநாதிகளைப் பண்ணில்

கண்ணுள்ளே-(க) "தாஂஸ்தேஷு ... ... - தாம் ஸ்தைவ பஜாம்யஹம்" என்று அவர்கள் கண்வட்டத்தை விடாமல்

நிற்கும்—நித்யஸந்நிதிபண்ணும்;

எண்ணிலும்—(உ) "அஸந்நேவ ... ... - அஸந்ப்ரஹ்மேதி வேத" என்றுஸங்கல்பமாத்ரத்திலும்

வரும்—அவன் வஶத்திலேவரும்படியாயிருக்கும்

இனி — இப்படி ஸுகரங்களான உபாயத்வயத்திலும் ஸுலபனானபின்பு

என்வேண்டுவம் — அநந்யகதிகளான நமக்குச் செய்யவேண்டுவதுண்டோ?

காரணத்வம்-உபயோபாயஸாதாரணம். எண்-சிந்திப்பு, (ங) "சிந்திப்பே யமையும்" என்கிற ப்ரபதநஸௌகர்யம். எண்ணிலும் வருமென்று - நினைவிற்காட்டில் மிகவுங் கைவருமென்றுமாம். நல்வாயு - தாரகத்வவைலக்ஷண்யம்

ஆறு; — (கண்ணுள்ளே நிற்கும்) ஸர்வஜகதீஶ்வரனான எம்பெருமான், தன்னுடைய அபிநிவேஶத்தாலே யென்னுடைய மநோரதத்தை விஞ்சும்படி யென்னுடைய கண்கள் தொடக்கமாகவுள்ள ஸர்வகரணங்களுக்கும் போக்யமாக, இனிநமக்கு வேண்டுவதுண்டோ வென்கிறார். ... ... ... ... (உ)

---

ஈடு ;—(மூன்றாம்பாட்டு) கண்டாயே அவன் ஸ்வரூபமிருந்தபடி, நீயுமுன் ஸ்வரூபத்துக்குச் சேரநிற்கப்பாராய் நெஞ்சே என்கிறார்.

மூ ;—எம்பிரானை யெந்தைதந்தை தந்தைக்கும்
தம்பிரானைத் தண்டாமரைக் கண்ணனைக்
கொம்பராவு நுண்ணேரிடை மார்பனை
எம்பிரானைத் தொழாய் மடநெஞ்சமே. (ங)

ப ;— அநந்தரம், ஶ்ரிய:பதித்வாதிகளான அநுபாவ்ய ஸ்வபாவங்களையுடையவனை யநுபவியென்று நெஞ்சை நியோகிக்கிறார்.

(க) கீதை-ௐ-கக. (உ) தை-ஆ-ஙு. (ங) கூ-ங-எ.

| | |
|---|---|
| மடம்—சொல்வழிவரும் பவ்யதையை யுடைய | தாமரைக்கண்ணனே— புண்டரீகாக்ஷத்வத்தையுடையனாய் |
| நெஞ்சமே—நெஞ்சே | கொம்பு—வஞ்சிக்கொம்பிலும் |
| எம்—எமக்கு | அராவு—அரவிலும் |
| பிரானை—தன்பக்கலிலேஅத்வேஷாதி முக்யாதிகளைத்தருமுபகாரகனாய் | நுண்—நுண்ணிதான |
| எந்தைதந்தை தந்தைக்கும் } நம்மளவில் நில்லாதே நங்குலத்துக்கெல்லாம் | நேர்—நேர்மையையுடைய |
| தம்பிரானை—நாதனாய் | இடை—இடையையுடையளான லக்ஷ்மியை |
| தண் — இஸ்ஸம்பந்தமடியாகக் குளிர நோக்கும் | மார்பனை—மார்பிலேயுடையனானை |
| | எம்பிரானை—ஸ்வாமியை |
| | தொழாய்—தொழும்படிபார். |

ஶ்ரிய:பதித்வம் - இதிற்சொன்ன ஸ்வபாவங்களுக்கெல்லாம் மூலமென்று கருத்து. அராவு - அரவு. அராவுதல் - குறைத்தலாய், கொம்பையிழைத்ததாகவுமாம் (௩)

ஆறு ;—(எம்பிரானை) இப்படி தம்மோடு கலந்தருளின இவ்வெம்பெருமான், பிராட்டியுந்தானுமாக வெழுந்தருளியிருக்கிற விருப்பையும், தன்திருக்கண்களாலே தம்மைக் குளிரப்பார்த்தருளுகிறபடியையும்கண்டு ப்ரீதராய், "எம்பிரான்" என்றும், "எந்தைதந்தை தந்தைக்குந் தம்பிரான்" என்றும் அவனையேத்திக்கொண்டு தமக்குத்துணையாக, எம்பெருமானைத்தொழாய் மடநெஞ்சமே யென்று தம்முடைய திருவுள்ளத்தைக் குறித்தருளிச்செய்கிறார். (௩)



ஈடு ;— (நாலாம்பாட்டு) தாம்சொன்னபோதே மேல்விழுந்து தொழுதவாறே நெஞ்சைக்கொண்டாடி, நிகர்ஷாநுஸந்தானம்பண்ணி நான் விஶ்லேஷித்த ஸமயத்திலும் நீவிடாதேகொள்ளென்கிறார்.

மூ ;—நெஞ்சமேநல்லைநல்லை யுன்னைப்பெற்றால்
என்செய்யோமினி யென்னகுறைவினம்
மைந்தனைமலராள் மணவாளனைத்
துஞ்சும்போதும்விடாது தொடர்கண்டாய். (௪)

ப ;—அநந்தரம், தம்முடைய நியோகத்துக்கீடாக நெஞ்சிசைந்தவாறே யுகந்து, இனியொருகாலும் விடாதே யநுபவிக்கப்பாரென்கிறார்.

நெஞ்சமே — அறிவுக்காஶ்ரயமானநெஞ்சே
நல்லேநல்லை—நீசெய்தபடி நன்றுநன்று;
உன்னைப்பெற்றால்— உன்னைப்பெற்றால்
என் —எக்காரியம்
செய்யோம்—செய்து தலைக்கட்டோம்;
இனி—உன்னிசைவுபெற்றபின்பு
என்னகுறை விளம் } அஸாத்யமாய்க்குறை கிடப்பதொன்றையு

டையோமோ?, ஆனபின்பு
மைந்தனை—நித்யயௌவநஸ்வபாவனும்
மலராள் — நிரதிஶயபோக்யபூதையான லக்ஷ்மிக்கு
மணவாளனை—போக்தாவானவனை
துஞ்சும்போதும்—நாம்முடியுமளவிலும்
விடாது— விடாதே
தொடர்கண்டாய்—நிரந்தராநுவ்ருத்தி பண்ணப்பார்

துஞ்சுதலாவது - நிகர்ஷாநுஸந்தாநத்தாலே வந்த விஶ்லேஷமென்று கருத்து. (௪)

ஆறு;—(நெஞ்சமே) இப்படி தாமருளிச்செய்வதற்குமுன்பே தம்முடைய திருவுள்ளம் அவனுடைய திருவடிகளிலே விழுந்தபடியைக் கண்டுகந்து, நல்லைநல்லை, உன்னைப்பெற்றால் நமக்கு முடியாததென்? இனி நமக்கென்ன குறையுண்டு, என்று தம்முடைய திருவுள்ளத்தைக்கொண்டாடி, இனியொரு நசையிலும் அவனைவிடாதேகிடாயென்கிறார். ... ... ... (௪)

---

ஈடு;—(அஞ்சாம்பாட்டு) கீழ், "எண்ணிலும்வரும்" என்ற எண்தானும் மிகையானபடிகண்டாயே என்று அவன்படியை நெஞ்சுக்கு மூதலிக்கிறார்.

மூ;—கண்டாயேநெஞ்சே கருமங்கள்வாய்க்கின்று
ஓரெண்டானுமின்றியே வந்தியலுமாறு
உண்டானையுலகேழு மோர்மூவடி
கொண்டானைக் கண்டுகொண்டனை நீயுமே. (௫)

ப;—அநந்தரம், நம்நினைவற நமக்குக்கார்யம் பலிக்கிறபடி, நீயுமவனைக் கிட்டும்படியாயிற்றிறே யென்கிறார்.

நெஞ்சே—மநஸ்ஸே
கருமங்கள்—அத்வேஷம், ஆபிமுக்யம், ஆஶ்ரயணம், அறிவு, நலந்தொடக்கமான காரியங்கள்
வாய்க்கின்று—பலிக்கிறவை

ஓர்—ஒரு
எண்டானுமின்றியே } நினைவுதானுமின்றியிலே
வந்தியலும்--நமக்குக்கைவந்துநடக்கிற
ஆறு—ப்ரகாரம்
கண்டாயே—கண்டாயே;

(எங்களையென்னில் அபேக்ஷாநிரபே க்ஷமாக)
உலகேழும்--லோகமெல்லாவற்றையும்
உண்டானை — ப்ரளயாபத்திலேவயிற் றிலேவைத்து
ஓர்—அத்விதீயமான
மூவடிகொண்டானை } த்ரிவிக்ரமாபதாநத்தாலே அநந்யார்ஹமாக்கிக்கொண்டவனை
நீயும்--ஆபிமுக்யப்ரஸங்கமில்லாத நீயும்
கண்டுகொண்டனை—லபிக்கப்பெற்றாயிறே. (ரு)

ஆறு ;—(கண்டாயே) உண்டானையுலகேழுமோர் மூவடிகொண்டானை நீயும் நானுங்காணப்பெற்றோம்; நெஞ்சமே, நமக்கசிந்திதமாக வந்து ஸம்ருத்திகள் விளைகிறபடி கண்டாயேயென்று தம்முடைய திருவுள்ளத்தோடே கூடவநுபவிக்கிறார். (ரு)

---

ஈடு ; அவ ;—(ஆறும்பாட்டு) இப்படி ஸுலபனானவன் நம்மை விடானிறே? என்ன, நம்ம யோக்யதையை யநுஸந்தித்தகலாதொழியில் நம்மையொருநாளும் விடானென்று திருவுள்ளத்துக்கருளிச் செய்கிறார்.

மூ ;—நீயும்நானுமிந்நேர்நிற்கில் மேல்மற்றோர்
நோயுஞ்சார்கொடான் நெஞ்சமேசொன்னேன்
தாயுந்தந்தையுமா யிவ்வுலகினில்
வாயுமீசன் மணிவண்ண னெந்தையே. (சு)

ப ;—அநந்தரம் இப்படி ஏககண்டராய்நிற்கில், அஸாதாரணபந்த விஶிஷ்டனானவன் ஒருக்லேஶப்படக்கொடானென்கிறார்.

தாயாயும்—மாத்ருவத் ப்ரியபரனாயும்
தந்தையாயும்—பித்ருவத் ஹிதபரனாயும்
இவ்வுலகினில்—தன்வரிசை யறியாத இந்தலோகத்திலே
வாயும்—அவதரித்து வந்து
ஈசன்—தன் நிருபாதிகஸ்வாமித்வமேயடியாக
மணிவண்ணன் — நீலரத்நம்போலே யிருக்கிறவடிவை யெனக்குபகரித்து
எந்தை—அவ்வழியாலே யென்னையடிமைகொண்டஸ்வாமியானவன்
நெஞ்சமே—நெஞ்சமே
நீயும்—“நெஞ்சமே” என்றுநியமிக்கலாம்படிபவ்யமான நீயும்
நானும் — உன்னைக் கரணமாகவுடைய நானும்
இ — கீழ்ச்சொன்னப்ரக்ரியையாலே
நேர் — விஜாதீயவ்யாவ்ருத்தியையுடையோமாய்
நிற்கில்—நிற்கில்
மேல்—மேலுள்ளகாலமெல்லாம்
மற்று—ஸ்வாநுபவத்தை யொழியமற்றும்
ஓர்நோயும் — நோவாயிருப்பதொன்றையும்
சார்கொடான்—அணுகக்கொடான்;
சொன்னேன் — இப்பரமார்த்தத்தை யுனக்குச்சொன்னேன்.

நோயென்று - அஹங்காரார்த்தகாமங்கள், அதுக்கடியான ஶரீரஸம்பந்தம் கர்மஸம்பந்தந்தொடக்கமானவை. ஸ்வநிகர்ஷாநுஸந்தாநமடியான விஶ்லேஷமுமாம். (சு

ஆறு ;—(நீயு) இப்படியிருவருமொருவண்ண மெம்பெருமானைக்காணப்பெற்றோம் ; இனி அவன் நம்மைவிடிற்செய்வதென்னென்னில் ; நீயும் நானுமிப்படியவனைவிடாதேநிற்கில், ஸர்வாத்மாக்களுக்குந் தாயுந்தந்தையுமாய், ஸர்வஸ்வாமியாய் ஆஶ்ரிதஸுலபனும் இப்படி ஸம்ஶ்லிஷ்டனுமிருந்தவன் ஒருநாளும் நம்மைவிடான் ; நெஞ்சமே யென்னை விஶ்வஸித்திருவென்கிறார். ... (சு)

---

எ ; அ ;—(ஏழாம்பாட்டு) கீழிவரஞ்சினாற்போலே விடுந்தது; " அயோக்யன் " என்றகலுகிறார்.

எந்தையேயென்று மெம்பெருமானென்றும்
சிந்தையுள்வைப்பன் சொல்லுவன்பாவியேன்
எந்தையெம்பெருமா னென்றுவானவர்
சிந்தையுள்வைத்துச் சொல்லுஞ்செல்வனையே. (எ)

ப ;—அநந்தரம் ஏவம்விதனுடைய ஸௌரிபோக்யத்வ வைலக்ஷண்யத்தையநுஸந்தித்து, ஸ்வநிகர்ஷமடியாக அகலத்தேடுகிறார்.

வானவர்—பரமபத வாஸிகளானவர்கள்
எந்தை—எங்கள் ஸத்தாதிஹேதுபூதனை
எம்பெருமானென்று—எங்களுக்குப் பரமசேஷியென்று
சிந்தையுள் வைத்து—அநுஸந்தாநம்பண்ணி
சொல்லும்—சொல்லும்படியான
செல்வனை-ஐஶ்வர்யத்தையுடையவனை
பாவியேன்—பாபிஷ்டனானநான்
எந்தையே யென்றும்—எனக்குஹிதபரனேயென்றும்
எம்பெருமானென்றும்—என்னுடையசேஷியானவனேயென்றும்
சிந்தையுள்—நெஞ்சுக்குள்ளேயும்
வைப்பன்—வைத்து
சொல்லுவன் — சொல்லுவதுஞ்செய்யாநின்றேன். (எ)

ஆறு ;— (எந்தையே) இப்படி தம்முடைய திருவுள்ளத்தோடே எம்பெருமானையநுபவிக்கிற ஆழ்வார், அவனுடைய வுத்கர்ஷத்தையும் தம்முடைய நிகர்ஷத்தையும்பார்த்து, * அயர்வறுமமரர்கள் தங்கள்சிந்தையுள்ளே வைத்துச்சொல்லுமந்த ஶ்ரீமானை, நான் தரித்திருக்கினேனித்தனை ; என்ன நிக்ருஷ்டனோ ? என்று தம்மை கர்ஹிக்கிறார். ... ... ... ... (எ)

ஈடு ; அவ ;—(எட்டாம்பாட்டு) "நாமிதுக்கு முன்பு நினைத்தும் பேசியும் தப்பச் செய்தோம், இனித்தவிருமித்தனை" என்று "அவன் குணங்கள் நடையாடாததோரிடத்திலே கிடக்கவேணும்" என்றுபோய், ஒருகுட்டிச் சுவரிலே முட்டாக்கிட்டுக்கொண்டு கிடந்தார்; அங்கே, வழிபோகிறானொருவன், சுமைகனத்து "ஸ்ரீமந்நாராயணன்" என்றான்; அச்சொல்லைக்கேட்டுத் தம்முடைய கரணங்கள் அங்கே ப்ரவணமாகிற படியைக்கண்டு விஸ்மிதராகிறார்.

செல்வநாரணனென்ற சொற்கேட்டலும்
மல்குங்கண்பனி நாடுவன்மாயமே
அல்லுநன்பகலு மிடைவீடின்றி
நல்கியென்னைவிடான் நம்பிநம்பியே. (அ)

ப ;—அநந்தரம் இப்படியகல நினைத்திருக்கச்செய்தேயும், திருநாமஶ்ரவணத்தாலே மேல்விழும்படியென்னைப் பரிபூர்ணனானவன் விடுகிறிலனென்கிறார்.

| | |
|---|---|
| செல்வநாரணனென்ற — ஸ்ரீமந்நாராயணனென்கிற | நம்பி—பரிபூர்ணனானநம்பியானவன் |
| சொல்—திருநாமத்தை | நல்—தன்னைக்கிட்டு கைக்கடியான நன்மையையுடைய |
| கேட்டலும்—கேட்டவளவிலே | அல்லும்—இரவும் |
| கண்—கண்ணானது | பகலும்—பகலும் |
| பனி—நீர் | இடைவீடின்றி—விச்சேதரஹிதமாக |
| மல்கும்—மல்காநின்றது; | நல்கி—ஸ்நேஹித்து |
| நாடுவன்—"எங்ஙனே" என்று தேடாநின்றேன்; | என்னை—என்னை |
| மாயமே—இதொரு ஆஶ்சர்யமாயிருக்கிறதே; | நம்பி—ஸ்வகீயத்வப்ரதிபத்திபண்ணி |
| | விடான்—விடுகிறிலன் |

நம்புதல் - தன்னுடையவனாகவிஶ்வஸித்தல். (அ)

ஆறு ;—(செல்வநாரணனென்ற) இப்படியென்னுடைய அயோக்யதையைப்பார்த்து "அவன்திறத்துப் படுவேனல்லேன், என்றிருக்கச் செய்தேயும், செல்வநாரணனென்ற சொல்லைக் கேட்குமளவில் என்னுடைய ஸர்வகரணங்களுமென்வசமன்றியே யிழுத்துக்கொண்டு அவன் பக்கலிலே விழாநின்றன ; நானுமதிசபலனாய் "எங்குற்றாயெம்பெருமான்" என்று அவனை நாடுவன் ; இதென்ன ஆஶ்சர்யம் ; இப்படிநான் அதிசபலனாய்த்தன்னை விடமாட்டா

தொழிந்தால் அவனென்னை விடலாமிறே. அவனென்னிற் காட்டிலு மபிநிவிஷ்டனாய் என்பக்கலிலே அதிபஹுமாநத்தைப் பண்ணிக் கொண்டு என்னை விடுகிறிலன்; நானென்செய்வனென்று நோகிறார்.

---

ஈடு; அவ;—(ஒன்பதாம்பாட்டு) நீர்தாமிங்ஙனேகிடந்து படா நில்லாதே, அவ்விஷயத்தைமறந்து ஸம்ஸாரிகளோபாதி புண்டுடுத்து த்திரியமாட்டீரோவென்ன? நானெத்தைச்சொல்லி அவனை மறப்ப தென்கிறார்.

நம்பியைத் தென்குறுங்குடி நின்றவச்
செம்பொனே திகழுந் திருமூர்த்தியை
உம்பர் வானவராதி யஞ்சோதியை
எம்பிரானை யென்சொல்லி மறப்பனோ. (௬)

**ப**;—அநந்தரம் அவனுடையவுபகாரகத்வம் மறக்கப்போமோவென்கிறார்.

தென்குறுங்குடி—திருக்குறுங்குடியிலே
நின்ற—நிற்கையாலே
நம்பியை—ஸமஸ்தகல்யாணகுண பூர்ணனாய் பரமபதத்தில் வடிவிலுங்காட்டில்
அ—ஒப்பமிட்ட
செம்பொன்—செம்பொன்போலே
திகழும்—உஜ்வலமான
திருமூர்த்தியை—திருமேனியையுடையனாய்
உம்பர்—மேலான
வானவர்—நித்யஸூரிகளுக்கு
ஆதி—ஸத்தாதிஹேதுபூதனாய்
அம்—ஸதாதர்ஶநீயமான
சோதியை - பரஞ்ஜ்யோதிஶ்ஶப்தவாச்யனாய்
எம்பிரானை — சாத்ருஶமானவடிவை யென்னையநுபவிப்பித்தடிமை கொண்டவனை
என்சொல்லி—எத்தைச்சொல்லி
மறப்பன்—மறப்பது.

அபூர்ணனென்று மறக்கவோ, அஸுலபனென்று மறக்கவோ, அநுஜ்வல விக்ரஹனென்று மறக்கவோ, அவிலக்ஷண போக்யனென்று மறக்கவோ, ஸுஶீலனல்லனென்று மறக்கவோ வென்று கருத்து. (௬)

ஆறு;—(நம்பியை.) தன்னுடைய சாபலத்தாலே நம்மைவிடா தொழிந்தால், அவனுடைய குண ஶ்ரவணாதிகளைப்பண்ணாதே அந்யபரனாயவனை மறந்திருந்தாலோவென்னில்?

தத்குண ஶ்ரவணமாத்ரத்தாலேசபலனாய்த்தன் பக்கலிலேவிழா நிற்கச்செய்தே, அதின்மேலே, அயர்வறுமமரர்களோடேகூடத்திருக் குறுங்குடியிலேநின்றருளி, தன்னுடைய நிரவதிகமான அழகைக்

காட்டி என்னைத்தோற்பித்துத் தன்பக்கலிலே விழவிட்டுக்கொண்டான்; இனி யெங்ஙனேநானவனைமறக்கும்படியென்கிறார். (கூ)

---

ஈடு; அவ;—(யத்தாம்பாட்டு) ஆறு லும் வருந்தியாகிலும் மறந்தாலோவென்ன? நெஞ்சிலிருளை யறுத்துக்கொண்டுநிரந்தரவாஸம் பண்ணுகிறவனை மறக்கவிரகுண்டோ வென்கிறார்.

மறப்பும்ஞானமும் நானொன்றுணர்ந்திலன்
மறக்குமென்று செந்தாமரைக்கண்ணொடு
மறப்பறவென்னுள்ளே மன்னினான்றன்னை
மறப்பனோவினி யானென்மணியையே. (கo)

ப;—அநந்தரம் மறவாதபடி அவனேயத்நம்பண்ணுநிற்க, மறக்கவிரகுண்டோவென்கிறார்.

| | |
|---|---|
| மறப்பும்—மறப்பென்றும் | கண்ணொடு—கண்ணோடே |
| ஞானமும்—அறிவென்றும் | மறப்பற—மறப்புப்புகுராதபடி |
| ஒன்று—ஒன்றை | என்னுள்ளே— என்னெஞ்சுக்குள்ளே |
| உணர்ந்திலன்—அறிந்திலேனாயிருக்க தன்விஷயத்திலறிவையுண்டாக்கி | மன்னினான்றன்னை — நிரந்தரவாஸம் பண்ணி |
| மறக்கும்—இத்தையிவன்மறக்கும் | என்மணியை--நீலரத்நம்போலே முடிந்தாளலாம்படியெனக் குஸுலபனானவனை |
| என்று--என்றுநினைத்து (கடாக்ஷிக்கைக்கடியான | இனி—இனி |
| செம்—சிவந்த | யான்—நான் |
| தாமரை— தாமரைபோன்ற | மறப்பனோ—மறக்கும்படியென்?. (கo) |

ஆறு;—(மறப்பும்) வருந்தியாகிலும் அவன்பக்கலில் நின்றும் நெஞ்சை நிவர்த்திப்பித்து, அவனை மறந்திருந்தாலோ வென்னில்?

இப்படி தன்னழகை எனக்குக் காட்டியருளி; "ஒருகால்தன்னைக்காட்டிப்போகில், ஜ்ஞாநாஜ்ஞாநங்களிரண்டுக்கு மாஶ்ரயமல்லாமையாலே அசித்கல்பனான இவன் நம்மைமறக்கும்" என்று பார்த்தருளி, தன்னை நான்மறவாமைக்காக, அசேதநத்தைச் சேதநமாக்க வல்ல தன்னுடைய அழகிய திருக்கண்களோடேகூட என்னுள்ளே புகுந்து, எனக்குப் பரமஸுலபனாய்க்கொண்டு "இனிப்பேரேன்" என்றிருந்தருளினான்; இவனை நான் "மறப்பேன்" என்றுவருந்தினால் மறக்கமுடியுமோ வென்கிறார். ... ... (கo)

ஈடு ; அவ ;—(பதினோராம்பாட்டு) நிகமத்தில், இப்பத்தைக் கற்றவர்கள் நிரதிசய புருஷார்த்தமானபகவத் கைங்கர்யத்தைப் பெறுவரென்கிறார்.

மணியை வானவர்கண்ணனைத் தன்னதோர்
அணியைத் தென்குருகூர்ச் சடகோபன்சொல்
பணிசெயாயிரத்துள் ளிவைபத்துடன்
தணிவிலர் கற்பரேல் கல்விவாயுமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ப ;—இத்திருவாய்மொழிக்கு பலம் - இதினுடைய கல்வியே கைங்கர்யமென்றருளிச்செய்கிறார்.

மணியை — உஜ்வலமான மாணிக்கம் போன்ற வடிவையுடையனாய்
வானவர்—அந்தவடிவாலே பரமபதவாஸிகளுக்கு
கண்ணனை—நிர்வாஹகனாய், அவ்வழகுக்கொப்பில்லாமையாலே
தன்னதோரணியை — தனக்குத்தானலங்காரமாம்படி அத்விதீயனானவனை
தென்—கட்டளைப்பட்ட
குருகூர்—திருநகரிக்குநிர்வாஹகரான
சடகோபன்—ஆழ்வார்
சொல்—சொல்லாலே
பணிசெய்—பணிசெய்த
ஆயிரத்துள்—ஆயிரத்துள்
இவைபத்து—இவைபத்தையும்
உடன் — அபிப்ராயத்தோடே யுடன்பட்டு
தணிவிலர்—ஆறுதலற்று
கற்பரேல்—அபிநிவேசத்தோடேயோ ராசார்யமுகத்தாலே யப்யஸிப்பார்களாகில்
கல்வி—அந்தக்கல்வி
வாயும் — கைங்கர்யரூபபலத் தோடே சேரும்.

"சொற்பணிசெய்" என்றது - சொல்லெடுத்துக் கைநீட்டினவென்றுமாம். அன்றியே, "சடகோபன் - சொல்" என்றுகூட்டி, பணிசெயாயிரமென்றது - கைங்கர்யரூபமான ஆயிரமென்றுமாம். இதுகலிவிருத்தம். (கக)

வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் திருவடிகளே சரணம்.

---

ஆறு ;—(மணியை) வானவர்கண்ணனாயிருந்துவைத்து எனக்கெளியனாய்த் தனக்குத்தானே பூஷணமாயிருந்த வெம்பெருமானுக்கு மோக்ஷவ்ருத்திரூபமாகச்சொன்ன இத்திருவாய்மொழியைக் கற்றாரா திருக்கு மவர்களுக்கு அக்கல்விதானே வாயுமென்கிறார்.(கக)

திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஈடு ; நிக ;—இத்திருவாய்மொழியில், மேல்பரக்கவருளிச்செய்யப்புகுகிற வர்த்தத்தை ஸங்க்ரஹேண முதற்பாட்டிலே யருளிச்செய்தார்; இரண்டாம்பாட்டில், பரமபக்திக்கும் பரிகணனைக்கு மொக்க முகங்காட்டுமென்றார்; மூன்றாம்பாட்டில், கண்டாயே அவன் ஸ்வரூபமிருந்தபடி, நீயுமுன்ஸ்வரூபத்துக்குச் சேரநிற்கப்பாராயென்றார் ; நாலாம்பாட்டில், ஸ்வரூபாநுரூபமாக நெஞ்சுதொழுவாறே நெஞ்சைக்கொண்டாடினார் ; ஐந்தாம்பாட்டில், கீழ் " எண்ணிலும் வரும்" என்றதுபலத்தோடே வ்யாப்தமானபடியை நெஞ்சுக்கருளிச்செய்தார் ; ஆறாம்பாட்டில், நாமிருவருமிப்படியேநிற்கப்பெறில் நமக்கொரு அநர்த்தமும் வாராதென்றார் ; ஏழாம்பாட்டில், கீழ் இவரநினைபடியே விடிந்தபடிசொன்னார் ; எட்டாம்பாட்டில், திருநாமஶ்ரவணத்தாலே தம்முடைய கரணங்களுக்குப் பிறந்தவிக்ருதியைச் சொன்னார் ; ஒன்பதாம்பாட்டில், விக்ருதராகாதே மறந்தாலோ வென்ன, மறக்கவொண்ணாதென்றார் ; பத்தாம்பாட்டில், வருந்தியாகிலும் மறந்தாலோவென்ன, என்ஹ்ருதயத்திலே யிருக்கிறவனை மறக்கப்போமோவென்றார்; நிகமத்தில், கற்றார்க்குப்பலஞ்சொன்னார்.

ஸர்வஸ்மாத்பரனென்றார், பஜநீயனென்றார், அவன்றான்ஸுலபனென்றார், ஸுலபனானவன் அபராதஸஹனென்றார், அவன் ஶீலவானென்றார், ஸ்வாராதனென்றார், நிரதிஶயபோக்யனென்றார், அவனுடைய ஆர்ஜவகுணம்சொன்னார், ஸாத்ம்யபோக ப்ரதனென்றார் ; இப்படி ஏவம்பூதனானவன் நிர்ஹேதுகமாக விஷயீகரிப்பானொருவனென்றார் ; ஆகையாலே " அவன் துயரறுசுடரடிதொழுதெழென் மனனே " என்றுதந்திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்து தலைக்கட்டினார்.

முதற்பத்தால் - பகவத்கைங்கர்யம் புருஷார்த்தமென்றறுதியிட்டார், இரண்டாம் பத்தால் - அந்தக்கைங்கர்யத்தில் களையறுத்தார் ; மூன்றாம் பத்தால் - விரோதிகழிந்த கைங்கர்யவேஷம்-பாகவதஶேஷத்வபர்யந்தமான பகவத்கைங்கர்யமென்றார் ; நாலாம்பத்தால் இப்படிப்பட்ட கைங்கர்யத்துக்கு விரோதி ஐஶ்வர்ய கைவல்யமென்றார் ; ஐந்தாம் பத்தால் - அந்தவிரோதியைப் போக்குவானுமவனேயென்றார் ; ஆறாம் பத்தால் - விரோதிநிரஸநஶீலனானவன் திருவடிகளிலே சரணம் புக்கார் ; ஏழாம் பத்தால் - இப்படிபெரிய

பிராட்டியார் முன்னிலையாக சரணம்புக்க விடத்திலும், தக்தபடங் யாயம்போலே ஸம்ஸாரமநுவர்த்திக்கிறபடியைக்கண்டு விஷண்ணராகிறார்; எட்டாம் பத்தால் - " இப்படிப்ரபந்நராயிருக்கச்செய்தேயும்தக்தபடந்யாயம்போலே நம்மைவிடாதே யநுவர்த்திக்கிறது நம்முடைய ஆத்மாத்மீயங்களில் நசையறாதபடியாலே" என்றுபார்த்து அவற்றிலொருநசையில்லையென்கிறார்; ஒன்பதாம் பத்தால் - "இப்படிநசையற்றபின்பும்ரக்ஷியாதொழிவானென்" என்று அதிசங்கை பண்ண, " நான்நாராயணன், ஸர்வசக்தியுக்தன், உம்முடையஸர்வாபேக்ஷிதங்களையும் செய்து முடிக்கிறோம்" என்றருளிச்செய்ய, அவனுடைய சீலகுணத்திலே யாழங்காறப்படுகிறார்; பத்தாம் பத்தால்- ஆழ்வாருடைய பதற்றத்தைக்கண்டு, திருமோகூரிலேதங்குவேட்டையாக வந்துதங்கி இவர்க்கர்ச்சிராதிகதியையுங்காட்டி, இவருடைய அபேக்ஷிதஸம்விதாநம் பண்ணினபடியை யருளிச்செய்தார்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

பத்தாம் திருவாய்மொழி

முற்றிற்று.

முதற்பத்து ஸம்பூர்ணம்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார்

திருவாய் மலர்ந்தருளிய

# திருவாய்மொழி

## இரண்டாம்பத்து.

இதற்கு

தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப்பிரான் பிள்ளான்

அருளிச்செய்த ஆறாயிரப்படியும்,

அன்போடழகிய மணவாளச்சீயரருளிச் செய்த

பன்னீராயிரப்படி உரையும்

தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறிதன்னை

வள்ளல் வடக்குத்திருவீதிப் பிள்ளை அருளிச்செய்த

ஈடு ப்ரதி திருவாய்

மொழியின் ப்ரவேசங்களும் நிகமநங்களும்

ப்ரதி பாசுரங்களின் அவதாரிகைகளும்

ஸபாபண்டிதரான

ஸ்ரீமான், புதுப்பட்டு-திருவேங்கடாசார்யரால்

பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீவைஷ்ணவ கிரந்த முத்ராபக சபையாரால்

சென்னை:

ஸ்ரீநிகேதன முத்ராக்ஷர சாலையில்

அச்சிட்டு ப்ரசுரம் செய்யப்பட்டது.

குரோதன ௵

1925.

# இச்சபையில் தமிழ் லிபியில் அச்சிட்ட க்ரந்தங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | பராசரவிசிஷ்ட பரமதர்ம சாஸ்த்ரம் தாத்பர்யஸஹிதம் ... | 0 | 2 | 6 |
| 2 | துஷ்கரஸ்லோக டிப்பணி ... | 0 | 1 | 0 |
| 3 | ஷண்மததர்ஸிநி ... | 0 | 0 | 6 |
| 4 | யதிதர்மஸமுச்சயம் ... | 0 | 3 | 0 |
| 5 | இராமாநுச நூற்றந்தாதி (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 6 | முதல் திருவந்தாதி வ்யாக்யாநம் (அரும்பத ப்ரதிபதஸஹிதம் | 0 | 4 | 0 |
| 7 | இரண்டாம் திருவந்தாதி வ்யாக்யாநம் ... | 0 | 3 | 0 |
| 8 | மூன்றாம் திருவந்தாதி வ்யாக்யாநம் ... | 0 | 3 | 0 |
| 9 | நான்முகன் திருவந்தாதி வ்யாக்யாநம் ... | 0 | 3 | 6 |
| 10 | திருவிருத்தம் வ்யாக்யாநம் (அரும்பத ப்ரதிபத தாத்பர்யம் ... | 0 | 15 | 0 |
| 11 | திருவாசிரியம் வ்யாக்யாநம் ... | 0 | 1 | 6 |
| 12 | பெரியதிருவந்தாதி வ்யாக்யாநம் (ப்ரதிபத ஸஹிதம்) .. | 0 | 3 | 0 |
| 13 | சிறியதிருமாடல் வ்யாக்யாநம் ... | 0 | 2 | 3 |
| 14 | பெரியதிருமாடல் வ்யாக்யாநம் ... | 0 | 2 | 6 |
| 15 | திருவெழுகூற்றிருக்கை வ்யாக்யாநம் ... | 0 | 1 | 6 |
| 16 | திருக்குறுந்தாண்டகம் வ்யாக்யாநம் ... | 0 | 1 | 3 |
| 17 | திருநெடுந்தாண்டகம் வ்யாக்யாநம் ... | 0 | 8 | 0 |
| 18 | பெரியதிருமொழி வ்யாக்யாநம் 1முதல் 11 பத்துக்கள் ... | 4 | 0 | 0 |
| 19 | ராமசரஸ்லோகம் ... | 0 | 1 | 6 |
| 20 | பாரகாதி தனிஸ்லோகம் ... | 0 | 2 | 6 |
| 21 | திருச்சந்தவிருத்தம் வ்யாக்யாநம் ... | 1 | 6 | 0 |
| 22 | திருப்பல்லாண்டு ... | 0 | 7 | 0 |
| 23 | ஸ்ரீவைஷ்ணவ ஸமயாசார நிஷ்கர்ஷம் ... | 2 | 5 | 0 |
| 24 | பெரியாழ்வார் திருமொழி ஸவ்யாக்யாநம் 1 முதல் 5 பத்துகள் | 5 | 5 | 6 |
| 25 | * திருமாலை ஸவ்யாக்யாநம் ... | 0 | 14 | 0 |
| 26 | அமலனாதிபிரான் .. | 0 | 7 | 6 |
| 27 | திருப்பள்ளியெழுச்சி ... | 0 | 3 | 0 |
| 28 | உபதேசரத்தினமாலை ... | 1 | 0 | 0 |
| 29 | ஞானசாரம் ப்ரமேயஸாரம் ஸவ்யாக்யாநம் ... | 0 | 8 | 0 |
| 30 | திருவாய்மொழி நூற்றந்தாதி ... | 0 | 15 | 0 |
| 31 | ஸப்தகாதை ... | 0 | 3 | 6 |
| 32 | ரகஸ்யார்த்த ப்ரதீபிகையென்கிற பாகாலநல்லான்ரகஸ்யம் | 1 | 3 | 6 |
| 33 | * ஆர்த்திபிரபந்த வ்யாக்யாநம் ... | 0 | 6 | 0 |
| 34 | தத்வத்ரய வ்யாக்யாநம் ... | 0 | 12 | 0 |
| 35 | நாச்சியார் திருமொழி ... | 1 | 6 | 0 |
| 36 | கண்ணிநுண்சிறுத்தாம்பு ... | 0 | 15 | 0 |
| 37 | பெருமாள்திருமொழி ... | 0 | 10 | 0 |
| 38 | திருவாய்மொழி 1 பத்து ... | 0 | 13 | 0 |
| 39 | ,, 2 பத்து ... | 0 | 9 | 0 |

N. B. பயிண்டு சார்ஜ் பிரத்தியேகம்.

* இந்த க்ரந்தங்கள் இல்லை.



ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

### முதற்றிருவாய்மொழியின் ப்ரவேசம்.



ஆறு ;—( வாயுந்திரை ) இப்படி நிரவதிக ஸௌந்தர்யாதி கல்யாணகுணகண பரிபூர்ணனாயிருந்த வெம்பெருமானை ப்ரத்யக்ஷித்தாப்போலே தம்முடைய திருவுள்ளத்தாலே யநுபவித்து, பாஹ்ய ஸம்ஶ்லேஷத்திலுள்ள வபேக்ஷையாலே அதிலே ப்ரவ்ருத்தராய், அது கைவாராமையாலே அத்யந்தமவஸந்நராய் அந்யாபதேஶத்தாலே ஸ்வதஶையைப் பேசுகிறார்.

பகவத்ஸம்ஶ்லேஷ வியோகைக ஸுகது:கையாய், தத்விஶ்லேஷத்தாலே அத்யந்த மவஸந்நையா யிருந்தா ளொருபிராட்டி, ஸ்வத்ருஷ்டிகோசரமான பதார்த்தங்களினுடைய ப்ரவ்ருத்திவிஶேஷங்களை பகவத்விஶ்லேஷஜநித து:கஹேதுகமாக ஸ்வாத்மாநுஸந்தாநத்தாலே யநுஸந்தித்து, அந்த சேதநாசேதந பதார்த்தங்களைக்குறித்து, நீங்களும் நான் பட்டது பட்டீர்களாகாதே யென்கிறாள். *

ப ;—இரண்டாம்பத்தில். இப்படி பரத்வாதிகுணங்களாலே பரஶேஷியான ஸர்வேஶ்வரனுடைய ஸர்வரக்ஷகத்வ ப்ரயுக்தமான உபாயத்வத்தை ப்ரதிபாதித்து, அநந்தரம் இப்பத்தாலே - உபேயத்வோபயுக்தமான அவனுடைய நிரதிசயபோக்யதையை யருளிச்செய்வதாக, அந்த போக்யதாதிசய ஸூசகமான, அல்பகாலவிஶ்லேஷத்திலு மதிக்லேஶா வஹத்வத்தையும், ஆஶ்சர்யரூபமான உத்துங்க லலிதத்வத்தையும், ஸர்வஸாரஸ்ய ஸமவாயரூப திவ்ய போக்யதையையும், போகாலாபத்தில்வந்த ஆர்த்தியைப்போக்கி ரக்ஷிப்பானவனே யென்னுமிடத்தையும், ஆர்த்திதீரும்படி கிட்டினவனுடைய ஹர்ஷகாரிதமான ஸௌந்தர்யாதிஶயத்தையும், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷ ப்ரீதனுடைய தத்விஶ்லேஷ பீருத்வத்தையும், ஸம்ஶ்ரித ஸம்பந்தி குலஸந்தாநபர்யந்த ஸம்ரக்ஷ

ணத்தையும், ரக்ஷணகாஷ்டையான மோக்ஷப்ரதத்வத்தையும், மோக்ஷதாத்பர்யமான பாரதந்த்ர்யத்தையும், போகப்ரதிஸம்பந்திதயா ஸாந்நித்யத்தையுமருளிச்செய்து போக்யதையை உபபாதித்தருளுகிறார்.

அதில், முதல்திருவாய்மொழியில் க்ஷணவிளம்பத்திலும் க்லேசாதிசய ஜநகமான ஈச்வரனுடைய போக்யதையை அருளிச்செய்வதாக, ததுபபாதகமான அவனுடைய ச்ரிய:பதித்வத்தையும், சேஷசாயித்வத்தையும், அநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், நிவர்த்தந பரிகரவத்வத்தையும், சக்தியோகத்தையும், ஸத்யவாதித்வத்தையும், ஸம்பந்தவிசேஷவத்வத்தையும், காருணிகத்வத்தையும், கமநீயவிக்ரஹயோகத்தையும், காரணத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விதபோக்யபூதனுடைய அல்பகாலவிளம்பத்தி லாற்றாமையாலே அசேஷபதார்த்தங்களும் தம்மைப்போலே அவனைப்பிரிந்து நோவுபடுகிறனவாக அபிஸந்திபண்ணும்படி கலங்கினப்ரகாரத்தை, நாயகனான ஈச்வரனைப் பிரிந்தாளொருநாயகி, ஸகலபதார்த்தங்களும் தன்னைப்போலே தத்விரஹதுக்கத்தாலே யீடுபடுகிறனவாக நினைத்துப் போலிமைக்கிரங்கி யுரைத்தபாசுரத்தாலே யருளிச்செய்கிறார். "இது தன்னுட்கையா றெய்திடுகிளவி" என்பர். *

ஈடு ; அவ ;—கீழ்திற்றிருவாய்மொழியிலே "மணியைவானவர் கண்ணனைத்தன்னதோரணியை" என்று - ஸௌலப்யத்தையும் மேன்மையையும், வடிவழகையும் சொல்லிற்று; இவையோரொன்றே போருமிறே மேல்விழப்பண்ணுகைக்கு; இங்ஙனன்றிக்கே, இவை மூன்றும் குறைவற்றவிஷயமானால் அநுபவியாதிருக்கப்போகாதிறே; "இவ்விஷயத்தை யிப்போதே யநுபவிக்கவேணும்" என்று பாஹ்ய ஸம்ச்லேஷாபேக்ஷை பிறந்தது ; அப்போதே நினைத்த பரிமாற்றம் பெறாமையாலே பிறந்த அவஸாதாதிசயத்தை; எம்பெருமானோடே கலந்து பிரிந்து ஆற்றாமையாலே நோவுபடுகிறாளொருபிராட்டி' ஆற்றாமை கைகொடுக்க லீலோத்யாநத்திலே புறப்பட்டு, அங்கே வர்த்திக்கிற பதார்த்தங்களைக்கண்டு, அவையுமெல்லாம் பகவதலாபத்தாலே நோவுபடுகிறனவாகக்கொண்டு, அவற்றுக்குமாகத் தான் நோவுபடுகிற பாசுரத்தாலே பேசுகிறார்.

* அஞ்சிறையமடநாரையிலும் இதுக்காற்றாமை கரைபுரண்டிருக்கும். அதுக்கடியென்னென்னில் ; "பெருநிலங்கடந்தநல்லடிப் போதயர்ப்பிலனலற்றுவன்" என்று-அவதாரத்திலே யநுபவிக்கக் கோலிப் பெறாததாகையாலே, "அதொருகாலத்திலே, நாம்பிற்பாடராகை" என்றுறலாம் ; இதங்ஙனன்றிக்கே, அவதாரத்தில் பிற்பாடர்க்கு மிழக்கவேண்டாதபடி முகங்கொடுக்கைக்கு நிற்கிற

விடமிறே உகந்தருளின நிலங்கள் ; "நம்பியைத்தென்குறுங்குடி நின்ற" என்று - உகந்தருளினநிலத்திலே அநுபவிக்க ஆசைப் பட்டுப் பெருமையாலே வந்த ஆற்றாமையாகையாலே இது கனத் திருக்கும். அஞ்சிறைய மடநாரையில் - தூதுவிடுகைக்குத் தரிப் புண்டாயிற்று ; இதில் - அங்குத் தூதுவிட்டவையும் நோவுபடுகிற னவாக அவற்றுக்குமாகத்தாம் நோவுபடுகிறார். அநுபவிக்கிற இவர் தம்படியாலும் இத்திருவாய்மொழிக் காற்றாமை கனத்திருக்கும் ; பத்துடையடியவர்க்குமுன்பு அவ்விஷயத்தை யநுபவித்துப் பிரிந்த வளவாலுள்ள ஆற்றாமையிறே அதிலுள்ளது ; அஞ்சிறையமடநா ரைக்குப் பின்பிவ்வளவும்வர அவனுடையகுணங்களை யநுபவித்துப் பிரிந்த பிரிவாகையாலே ஆற்றாமை மிகவுங் கனத்திருக்குமிதில் ; * பயிலப்பயிலவிறே இனிதாயிருப்பது இவ்விஷயம்.

நாரையாகில் வெளுத்திருக்கையும், அன்றிலாகில் வாயலகு நெகிழ்த்தவாறே கதறுகையும், கடலாகில் எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி கூப்பிடுகையும், காற்றாகில் ஸதககதியாய்த் திரிகையும், மேகமாகில் நீராயிற்றிற்றுவிழுகையும், சந்த்ரனாகில் தேய்வதுவளருவதாகக்கடவதென்றும், தமஸ்ஸாகில் பதார்த்ததர் ஶநம்பண்ணவொட்டாதென்றும், கழியாகில் அலைவாய்முகமாய் ஏறுவது வடிவதாகக்கடவதென்றும், விளக்காகில் இற்றிற்றெரியக் கடவதென்றும், இவற்றுக்கிவை நியதஸ்வபாவமென்றறியாதே, இவையெல்லாம் தம்மைப்போலே பகவத்விஶ்லேஷத்தாலே வ்யஸ நப்படுகிறன வாகக்கொண்டு, அவற்றுக்கு மாகத்தாமநுஶோகிக் கிறார்.

இத்திருவாய்மொழியால் - இளையபெருமாளிற்காட்டில் இவர்க் குண்டான வ்யாவ்ருத்திசொல்லுகிறது. எங்ஙனே யென்னில் ; மத்ஸ்யத்துக்கு ஜலம் தாரகமாகவறுதியிட்டாரவர்; இவர் அந்த மத்ஸ்யத்தோடு ஜலத்தோடு தம்மோடு வாசியற பகவத்குணங்களே தாரகமென்றிருக்கிறார். ஆகையாலே, து:கிகளாயிருப்பார் தங்க ளோடு ஸமது:கிகளைக்கழுத்தைக் கட்டிக்கொண்டு கிடந்துகூப்பிட்டு ஆற்றாமைக்குப் போக்குவிட்டு தரிக்குமாபோலே, இவரும் கண் ணுக்கிலக்கான பதார்த்தங்களெல்லாவற்றோடும் கழுத்தைக் கட்டிக் கொண்டுகிடந்து "நீபட்டதோ, நான் பட்டதோ" என்று கூப்பிடு

கிருளா யிருக்கிறது; (௧) "𑌅𑌪𑌿 𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌃 𑌪𑌰𑌿𑌮𑍍𑌲𑌾𑌨𑌾𑌃 - அபிவ்ருக்ஷா:பரிம்லாநா:" என்னுமாபோலே - சேதநாசேதந விபாகமற நோவுபடுத்தவற்றயிறே இவள் பிரிந்தவிஷயந்தா னிருப்பது.

(௨) [𑌉𑌪𑌤𑌪𑍍𑌤𑍋𑌦𑌕𑌾 𑌨𑌦𑍍𑌯𑌃 𑌪𑌲𑍍𑌵𑌲𑌾𑌨𑌿 𑌸𑌰𑌾𑌂𑌸𑌿 𑌚 - உபதப்தோதகாநத்ய:பல்வலாநிஸராம்ஸிச] என்று - ஆறுகளோடு சிறுகுழிகளோடு பெருங்குழிகளோடு வாசியற கரையருகுஞ் சென்று கிட்டவொண்ணுதபடி ராமவிரஹத்தாலே கொதித்ததிறே. (௨) [𑌪𑌰𑌿𑌶𑍁𑌷𑍍𑌕𑌪𑌲𑌾𑌶𑌾𑌨𑌿 𑌵𑌨𑌾𑌨𑍍𑌯𑍁𑌪𑌵𑌨𑌾𑌨𑌿 𑌚 - பரிஶுஷ்கபலாஶாநிவநாந்யுபவநாநிச] என்று சிறுகாட்டோடு பெருங்காட்டோடு வாசியற விரஹாக்நி கொள்ளுத்திற்று. பெருமாள் (௩) "𑌸𑍀𑌤𑍇 𑌮𑍃𑌤𑌸𑍍𑌤𑍇 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌃 𑌪𑌿𑌤𑍍𑌰𑌾 𑌹𑍀𑌨𑍋𑌽𑌸𑌿 𑌲𑌕𑍍𑌷𑌣 - ஸீதேம்ருதஸ்தேஶ்வஶுர:பித்ராஹீநோஸிலக்ஷ்மண" என்று ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு கிடந்து கூப்பிட்டாற்போலே கூப்பிடுகிறுரிங்கு.



(௧) ரா - அயோ - ௫௯ - ௪. (௨) ரா - அயோ - ௫௯ - ௫.
(௩) ரா - அயோ - ௧௦௩ - ௧௫.



ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

# திருவாய்மொழி.

## இரண்டாம்பத்து.

### முதற்றிருவாய்மொழி முதற்பாட்டு



ஈடு ; அவ ;—(முதற்பாட்டு) பிரிந்தாரிரங்குவது நெய்தல்நிலத்திலேயாகையாலே, கடற்கரைச்சோலையைப்பற்ற இவள் பிரிவுக்கிரங்கி யிருக்கச்செய்தே, அங்கே ஆமிஷார்த்தமாக அவதாநம்பண்ணிக்கொண்டிருக்கிற தொருநாரை கண்ணுக்கிலக்காக, அதினுடம்பில் வெளுப்பைக்கண்டு, அதுவும் தன்னைப்போலே பிரிவாற்றாமையாலே வந்த வைவர்ண்யத்தோடே யிருக்கிறதாகக்கொண்டு, பாவியேன், நீயும்நானகப்பட்ட விஷயத்திலே யகப்பட்டு நெஞ்சுபறியுண்டாயாகாதே யென்கிறாள்.

வாயுந்திரையுகளுங் கானல்மடநாராய்
ஆயுமமருலகுந் துஞ்சிலும்நீ துஞ்சாயால்
நோயும்பயலைமையும் மீதூரவெம்மேபோல்
நீயுந்திருமாலால் நெஞ்சங்கோட்பட்டாயே. (க)

ப ;—முதற்பாட்டில், "மணியைவானவர் கண்ணனை" என்று - கீழ்ப்ரஸ்துதமான போக்யதாதிசயத்துக்கு வர்த்தகமாயுள்ள லக்ஷ்மீஸம்ப்லேஷத்தை யநுஸந்தித்தீடுபட்டநாயகி, கடற்கரைக்கருகான தன்னுத்யாநத்திலே யிருந்ததொரு நாரையைப்பார்த்து, நீயுமவனாலே நெஞ்சு பறியுண்டாயோ வென்கிறாள்.

வாயும்—மேல்மேலுங்கிட்டுகிற
திரை—திரையிலே
உகளும்—அமுக்கிடப்பதாய்
கானல்—கடற்கரையிலே
மடம் — உன்னினைவு கைவருந்தனையு மோங்கியிருக்கிற
நாராய்—நாராய்!

ஆயும்—உறக்கமில்லாததாயும்
அமருலகும் — உறங்காமை நித்யமான தேவலோகமும்
துஞ்சிலும்—உறங்கிலும்
நீ—நீ
துஞ்சாய்—உறங்குகிறிலை;
ஆல்—ஃ

நோயும்—உள்ளே நோவுமுண்டாய்
பயலைமையும்-அதின்கார்யமான பயலை மையாகிற உடம்பில் வெளுப்பும்
மீதூர—மேலிட்டுவர,
எம்மேபோல்—அபிமதவிஷயமா யகப்பட்ட வெங்களைப்போலே
நீயும்—அதுக்கடைவற்றிருக்கிற நீயும் (ஆஸக்திமாத்ரமே ஹேதுவாக)
திருமாலால்—ஸ்ரியஃபதியாலே
நெஞ்சம்—நெஞ்சு
கோட்பட்டாயே – பறித்துக்கொள்ளப் பட்டாயே.

ஏ என்னுமசை - வினு, இத்தால் - ஸாம்ஸாரிக கல்லோலத்தை மதியா திருப்பார்க்கு முறங்காமையும் ரூபவிபர்யாஸமும் பகவத்விஸ்லேஷ ஜநித மென்றிருக்கை. (க)

ஆறு ;—(வாயும்) வாயும்திரைகளுகளுகிற கழியிலே வர்த்திக் கிறமடநாராய், நீயுறங்கிலு முறங்காத வுன்னுடைய தாய்மாரும் ஸ்வபாவத ஏவ உறங்காத தேவலோகமுமுறங்கிலும் நீயுறங்கு கிறிலை; ஆதலால், விரஹவ்யஸந வைவர்ண்யத்தாலே அபிபூதையான வென்னைப்போலே நீயுமெம்பெருமானை யாசைப்பட்டா யாகாதே யென்கிறுள். ... ... ... ... (க)

---

ஈடு; அவ ;—(இரண்டாம் பாட்டு) இப்படி நாரையைப்பார்த்து வார்த்தை சொல்லாநிற்கச்செய்தே, அருகே நின்றபனையிலேதங்கின அன்றிலானது வாயலகு நெகிழ்த்தவாறே கூப்பிட்டது; இதினு டைய ஆர்த்தத்வநியைக் கேட்டு, பாவியேன், நீயுமென்னைப்போலே யகப்பட்டா யாகாதேயென்கிறுள்.

கோட்பட்டசிந்தையையாய்க் கூர்வாயவன்றிலே
சேட்பட்டயாமங்கள் சேராதிரங்குதிபால்
ஆட்பட்டவெம்மேபோல் நீயுமரவணையான்
தாள்பட்டதண்டுழாய்த் தாமங்காமுற்றாயே. (உ)

ப ;—அநந்தரம், ஓன்றிலைப்பார்த்து, நீயும் ஸேஷஸாயியான அவன் திருவடிகளில் திருத்துழாயை யாசைப்பட்டாயோ வென்கிறுள்.

கோட்பட்ட—பறியுண்ட
சிந்தையையாய்—நெஞ்சை யுடையை யாய்க்கொண்டு
கூர்வாய—அந்தவார்த்தியடியாக கத்கத மாகையாலே செறிந்தகுரலை யுடைத்தான
அன்றிலே—அன்றிலே!
சேட்பட்ட—நெடிதான
யாமங்கள்—யாமங்கள்
சேராது—சேக்கையிற்சேராதே
இரங்குதி—துஃகியாநின்றாய்;
ஆல்—ஆதலால்

ஆட்பட்ட—அடிமைப்பட்ட
எம்மேபோல்—எங்களைப்போலே
நீயும் — பிரிவாற்றாமை தோற்றியிருக்கிற நீயும்
அரவணையான் — திருவரவணையைத் தனக்கு நிரூபகமாக வுடையவனுடைய
தாள்—திருவடிகளிலே
பட்ட—போகத்தையிலே மிதியுண்ட
தண்—செவ்வியையுடைய
துழாய்த்தாமம்—திருத்துழாய் மாலையை
காமுற்றாயே—ஆசைப்பட்டாயோ.

வாயென்று - வாய்மையாய், குரலைச்சொல்லுகிறது. கூர்தல் - செறிவு. அன்றியே, கூர்த்தவாயென்று - பிரிந்தாரை யீருங்குரலென்றுமாம். இத்தால் - ஆர்த்தத்வநியுடையார் அவனைப்பிரிந்து கூப்பிடுகிறார்களென்றிருக்கை. (உ)

ஆறு ;—(கோட்பட்ட) கூர்வாயவன்றிலே, அபஹ்ருதமான நெஞ்சையுடையையாய் நீளியவானராத்ரிகளிலுறங்காதே யிரங்காநின்றாய்; நீயுமென்னைப்போலே பெரியபெருமாள் திருவடிகளில் திருத்துழாயை யாசைப்பட்டாயாகாதே யென்கிறாள். (உ)

---

ஈடு ; அவ ;—(மூன்றாம்பாட்டு) அன்றிலினுடைய த்வநிக்கு இடைந்திருக்கிற வளவிலே; கடலென்றொரு மஹாதத்த்வமாய் அது தன் காம்பீர்யமெல்லா மிழந்து கரையிலே வருவது கரையேறமாட்டாதேயுள்ளே விழுவதாய், எழுத்துஞ்சொல்லும் பொருளுந் தெரியாதபடி ஊமைக்கூறனைக் கூப்பிடுவதாகிறபடியைக்கண்டு, பாவியேன், நீயும் ராமகுணத்திலகப்பட்டு நான்பட்டது பட்டாயாகாதே யென்கிறாள்.

காமுற்றகையறவோ டெல்லேயிராப்பகல்
நீமுற்றக்கண்டுயிலாய் நெஞ்சுருகியேங்குதியால்
தீமுற்றத்தென்னிலங்கையூட்டினான் தாள்நயந்த
யாமுற்றதுற்றாயோ வாழிகனைகடலே. (௩)

அநந்தரம், சத்துகிற கடலைப்பார்த்து, விரோதிநிவர்த்தகனை அவனுடைய திருவடிகளை யாசைப்பட்ட வென்னைப்போலானாயோ வென்று சொல்லுகிறாள்.

காமுற்ற—காமிக்கப்பட்டபோகங்கள்
கையறவோடு—கைப்படாத விழவோடே கூடினாற்போலே
நீ—நீ
இராப்பகல்—இராப்பகல்
முற்ற—முழுக்க
கண்டுயிலாய்—கண்ணுறங்குகிறிலை;
நெஞ்சு—அகவாயும்
உருகி—நீராய்
ஏங்குதி—ஏங்கினகுரலிரங்காமல் முழுக்கக்கூப்பிடாநின்றாய்;
ஆல்—ஆதலால்

| | |
|---|---|
| தென்னிலங்கை—தென்னிலங்கையை | உற்றது—பட்டது |
| முற்ற—முற்ற | உற்றாயோ—பட்டாயோ? |
| தீயூட்டினான்—தீயூட்டினவன் | கனை—இரைக்கிற |
| தாள்—திருவடிகளை | கடலே—கடலே! |
| நயந்த—ஆசைப்பட்ட | வாழி — உன்க்லேஶந்தீர்ந்து வாழ்வாயாக |
| யாம்—நாங்கள் | |

எல்லே என்று - கடலுக்கு ஸம்புத்தியாதல், என்னே என்னும் வெறுப்பாதல். இத்தால் - மஹத்தையையுடையார் வாய்விட்டலறுவது அவனைப் பிரிந்தாலென்றிருக்கை. (௩)

ஆறா ;—(காமுற்ற) எம்பெருமானை யாசைப்பட்டுப்பெருமையாலே நீயிரவுபகலெல்லாங்கண்டுயிலாதே நெஞ்சுருகியேங்காநின்றாய் ; தீமுற்றத்தென்னிலங்கையூட்டினவன் திருவடிகளை யாசைப்பட்ட நான் பட்டது பட்டாயாகாதே, ஐயோ ! கடலேயென்கிறாள்

---

ஈடு ; அவ ;—(நாலாம்பாட்டு) காற்றென்று ஒருவ்யாபகதத்வமாய், அதுதான் அபிமதவிரஹவ்யஸநத்தாலே யிருந்தவிடத்திலிருக்கமாட்டாதே, மடலூருவாரைப்போலே யுடம்பிலேபுழுதியையேறிட்டுக்கொண்டு வடிவுதெரியாதபடியாய், ஜ்வரஸந்நிபதிதரைப்போலே குளிர்ந்திருந்தது ; அத்தைப்பார்த்து, நீயும் நான்பட்டது பட்டாயாகாதே யென்கிறாள்.

கடலும்மலையும்விசும்புந் துழாயெம்போல்
சுடர்கொளிராப்பகல் துஞ்சாயால்தண்வாடாய்
அடல்கொள்படையாழி யம்மானைக்காண்பான்நீ
உடலம்நோயுற்றாயோ வூழிதோறாழியே. (௪)

ப ;— அநந்தரம் "விரோதிநிரஸநபரிகரத்தை யுடையவனைக்காணவேணும்" என்னும் வ்யஸநத்தை நீயுற்றனையோவென்று ஒருவாடையைப்பார்த்துச்சொல்லுகிறாள்.

| | |
|---|---|
| தண்—ஸந்நிபதித ஶரீரம்போலே குளிர்ந்திருக்கிற | மலையும்—மலையும் |
| வாடாய்—வாடாய்! | விசும்பும்—விசும்பும் |
| கடலும்—கடலும் | துழாய்—தடவிக்கொண்டு |

எம்போல்—(க) "அஜஸ்ரவார ஸுவநஸ்ய நா கஸ்யவ்யாப்ஷ - அம்ப ஸ்யபாரே புவநஸ்யமத்த்யே நாகஸ்யப்ருஷ்ட்டே" என்று க்ஷீராப்தியிலும் திருமலையிலும்பரமபதத்திலுமவனை யாராய்கிறவெங்களைப் போலே

சுடர்—சந்த்ராதித்யதேஜஸ்ஸுகளை

கொள்—நிரூபகமாகவுடைய

இரா—இரவும்

பகல்—பகலும்

துஞ்சாய்—ஓரிடத்தில் பர்யவஸித்துறங்குகிறிலை;

ஆல்—ஆதலால்

அடல்—மஹாபாரதயுத்தத்திலே

கொள்—"ஆயுதமெடேன்" என்று வைத்து எடுத்த

படையாழி—திருவாழியையுடைய

அம்மானை—ஸர்வேஸ்வரனை

காண்பான்—அந்த பீஷ்மன் கண்டாப்போலே காணநினைத்து

நீ—ஸர்வோபகாரகமான நீ

ஊழிதோறூழி-கல்பபேதங்கள் பிறந்து நடந்தாலும் காலமுள்ளதனையும் அவனையொருப்பட்டு

உடலம்—ஶரீரமுள்ளதனையும் வ்யாப்தமான

நோய்—வ்யாதியை

உற்றாயோ—கொண்டாயோ.

உபகாரஶீலர்க்கு முடம்பில் வரும் விகாரங்கள் அவனைக்காணப் பெறுமமென்றுகருத்து. (ச)

ஆறு ;—(கடலும்) என்னைப்போலே(உ) "எங்குற்றாயெம்பெருமான்" என்றுகடலும் மலையும் விசும்புந்துழாவி யிராப்பகலுறங்குகிறிலை; நீயுமெம்பெருமானுடைய திருவாழியுங்கையுங் காணவாசைப்பட்டுப் பெறாமையாலே காலதத்வமெல்லாம்உடலம்நோயுற்றாயாகாதே தண்வாடாயென்கிறாள். ... ... (ச)

---

ஈடு ; அவ ;—(அஞ்சாம்பாட்டு) அவ்வளவிலே ஒருமேகமானதுகரைந்து நீராய் விழப்புக்கது. நீயும் அவனுடைய விரோதி நிரஸநஶீலதையிலே அகப்பட்டாயாகாதே யென்கிறாள்.

ஊழிதோறூழி யுலகுக்குநீர்கொண்டு
தோழியரும்யாமும்போல் நீராய்நெகிழ்கின்ற
வாழியவானமே நீயும்மதுசூதன்
பாழிமையிற்பட்டவன்கட்பாசத்தால்நைவாயே. (ரு)

ப ;—அநந்தரம் நீயுமவன் ஶக்தியோகத்திலே யகப்பட்டு ஶிதிலமாகிறாயோவென்று ஒருமேகத்தைக்கண்டுரைக்கிறாள்

(க) தை-நா-க. (உ) திருநெ-கூ.

தோழியரும் — ஸமானது:கைகளான தோழிமாரும்
யாமும்போல் — து:கோத்தரைகளான நாங்களும்போலே
உலகுக்கு—லோகம் நிரம்பவேண்டும்
நீர்கொண்டு—நீரைக்கொண்டு
ஊழிதோறூழி—காலமுள்ளதனையும்
நீராய்—ஜலமயமாய்
நெகிழ்கின்ற—இற்றுவிழுகிற
வானமே—மேகமே!
நீயும்—உதாரசீலமான நீயும்
மதுசூதன்—மதுமர்த்தநனுடைய
பாழிமையில்—பெருமிடுக்கிலே
பட்டு—அகப்பட்டு
அவன்கண்—அவன்பக்கல்
பாசத்தால்—ஸ்நேஹத்தாலே
நைவாயே—சிதிலமாகிறாயே;
வாழிய—இந்த சைதில்யந்தீர்ந்துவாழ்வாயாக.
உதாரஸ்வபாவர்க்கு சைதில்யம் பகவத்விரஹ ஜநிதமென்கை. (௫)

ஆறு ;—(ஊழிதோறூழி) லோகமெல்லாம் நிறையும்படி இக்காலமெல்லாம்நின்று நீராயுருகுகிற வாழியவானமே, நீயுமெங்களைப் போலே எம்பெருமானுடைய குணசேஷ்டிதங்களிலே யகப்பட்டு அவன் பக்கலுள்ள ஸங்கத்தாலே இப்படிநைந்தாயாகாதேயென்கிறாள். ... ... ... ... (௫)

---

ஈடு ; அவ ;—( ஆறாம்பாட்டு ) மேகத்தினருகே கலாமாத்ரமானசந்த்ரன் தோற்றினான் ; அவனைப்பார்த்து, உன்வடிவிலெழிவிழுந்தாயாகாதேயென்கிறாள்.

நைவாயவெம்மேபோல் நாண்மதியேநீயிந்நாள்
மைவானிருளகற்றாய் மாழாந்துதேம்புதியால்
ஐவாயரவணைமே லாழிப்பெருமானார்
மெய்வாசகங்கேட்டுன் மெய்ந்நீர்மைதோற்றாயே. (௬)

ப ;—அநந்தரம் எங்களைப்போலே அவன் ஸத்யவாதித்வத்திலே நீயகப்பட்டாயோவென்று க்ஷீணனான சந்த்ரனைக்குறித்துச் சொல்லுகிறாள்.

நைவு — நைகையே
ஆய—ஸ்வபாவமான
எம்மேபோல்—எங்களைப்போலே
நாள்—கலாமாத்ரமான
மதியே—சந்த்ரனே!
நீ—தேஜோரூபனான நீ
இந்நாள்—இக்காலத்திலே
மை—மைபோலேயிருக்கிற
வான்—ஆகாசத்தில்
இருள்—இருளை
அகற்றாய்—போக்குகிறிலை;
மாழாந்து—மழுங்கி
தேம்புதி—குறையாநின்றாயே;
ஆல்—ஆதலால்

| | |
|---|---|
| ஐவாய்—பொய்ம்மைக்குப் பலமுகமு மிரண்டுநாவுமுடைய | மெய்—பெரும்பொய்யான |
| அரவணைமேல் — திருவாவணைமேற் கொண்டு | வாசகம்—வார்த்தையை |
| ஆழி — பொய்க்குப்பெருநிலைநிற்கும் திருவாழியை யுடையராய் | கேட்டு—கேட்டு |
| பெருமானார் — இவர்களைப் பொய்கற் பிக்கும்பெருமையை யுடையவருடைய | உன்—உன் |
| | மெய்—வடிவில் |
| | நீர்மை—உஜ்ஜ்வலஸ்வபாவத்தை |
| | தோற்றாயே—இழந்தாயோ. |

நாண்மதி - புதுமதி. மைவானிருள் - கறுத்த பெரியவிருளென்றுமாம். மாழாந்து - மழுங்கி. இத்தால் - உஜ்ஜ்வலஸ்வபாவருடைய வொளிமழுக்கம் அவனுடைய உக்திவையர்த்த்யஸங்காவஹமான விளம்பமென்று கருத்து. (சு)

ஆறு ;—(நைவாய) நாண்மதியே நீயின்நாள் வலிதானவிருளை யகற்றுகிறிலை ; மழுங்கித்தேயாநின்றாய் ; நைவுந்தானாயிருந்த என்னைப்போலே நீயும், (க) "பேதைநினைப்பிரியேன்" என்றும், (உ) "ஊ கத்து - கஜூ-ஏதத்வ்ரதம்மம" என்றும், (௩) "ௗா ஸ-ஷஂ - மாஶுசஃ" என்றும் எம்பெருமானருளிச்செய்த வார்த்தையைக் கேட்டு, "திருவநந்தாழ்வான் தொடக்கமாகவுள்ள திவ்யபுருஷர்க ளோடே பழகிவர்த்திக்கிற இவன் மெய்யல்லது சொல்லான்" என்று கொண்டு அவ்வார்த்தையை விஶ்வஸித்து, அகப்பட்டாயாகாதே யென்கிறாள். ... ... ... ... (சு)

ஈடு ; அவ ;—( ஏழாம்பாட்டு ) மதிகெட்டவாறே அந்தகாரம் வந்து மேலிட்டதென்கிறாள்(தோற்றோமித்யாதி)கீழும்மேலும்போரு கிறபடியொழிய, ஸப்தஸ்வாரஸ்யத்தைப்பற்ற எம்பெருமானாரு ளிச்செய்து போருவதொன்றுண்டு: அம்மங்கியம்மாளும்அத்தையே நிர்ப்பந்தித்துப்போரும். அதாகிறது தான், பிரிவாற்றுதாரநேகர் கூடக்கட்டிக்கொண்டு கூப்பிடாநிற்க, இருள்வந்துமுகத்தைமறைக்க அத்தைப்பார்த்து, ஆற்றாமைக்குப் போக்குவிட்டு தரிக்கவொட் டாதே நீவந்துநலியக்கடவையோ வென்கிறாள்.

தோற்றோம்மடநெஞ்ச மெம்பெருமான் நாரணற்கெம்
ஆற்றாமைசொல்லி யழுவோமைநீநடுவே
வேற்றோர்வகையிற் கொடிதாயெனையூழி
மாற்றாண்மைநிற்றியோ வாழிகனையிருளே. (எ)

(க) தி-மொ-க. (உ) ரா-யு-கஅ-ந.அ. (௩) கீ-கஅ-சுசு.

ப ;—அநந்தரம் நிருபாதிக ஸம்பந்தயுக்தனானவனைப் பிரிந்தார்த்தையான வென்னை உன்னீடுபாட்டைக் காட்டி நலிவதேயென்று இருளைக்கண்டுபெட்டுரைக்கிறாள்,

எம்—எங்கள்
பெருமான்—ஸ்வாமியான
நாரணற்கு—நாராயணனுக்கு
மடம்—எங்களுக்கு விதேயமான
நெஞ்சம்—நெஞ்சை
தோற்றோம்—இழந்தோமாய்
எம்மாற்றமை—அது அடியானவெங்களாற்றமையை
சொல்லி—வாய்விட்டுச்சொல்லி
அழுவோமை — அழுகிறவெங்களைப்
நீ—நீ பற்ற
நடுவே — பாத்யபாதகஸம்பந்தமற்றிருக்க, நடுவேபுகுந்து
வேற்றோர்வகையில்—ஶத்ருக்கள் படியிலும்
கொடிதாய்—கொடிதாம்படி
எனையூழி —காலமுள்ள தனையும்
மாற்றாண்மை —எங்கள்நோவுக்கு மறுதலையான ஆளாகையிலே
நிற்றியோ—நிலைநிற்கிறாயோ
கனை—திணுங்கின
இருளே—இருளே !
வாழி—உன்ஸந்நிதியைக் காட்டி நலியாதேக்லேஶந்தீர்ந்து வாழவேணும்.

கனையிருள் - திணுங்கினவிருள். இவள்நோவுக்கு மறுதலையான ஆளாகையாவது-இருள் தானுமீடுபடுகை. இதின்கருகுதல் விரஹத்தாலேயென்றுநினைத்து பொறுக்கமாட்டாமலுரைத்தாளாயிற்று. இத்தால் - தம:ப்ரக்ருதிகளுடைய மாலிந்யமும் ஸர்வேஶ்வரனைப்பிரிந்ததென்றிருக்கை. (எ)

ஆறு ;—(தோற்றோம்) எம்பெருமானுடைய ஆஶ்ரிதஸௌலபத்வாதி குணங்களாலே அவனுக்குத்தோற்றடிமையானோம்; ஆதலால், "அவனைப்பிரிந்த வ்யஸநத்தையொன்றும் பொறுக்கமாட்டுகிறிலோம்" என்றுசொல்லிக்கொண்டழுகிறவெங்களை நீநடுவே சத்ருக்களிலும் கொடியையாய் நின்று எத்தனைகாலம் பாதிக்கக்கடவை கனையிருளேயென்கிறாள். ... ... ... (எ)

---

ஈடு ; அவ ;—(எட்டாம்பாட்டு) அவ்விருளுக்கிறாய்த்து அங்கே இங்கே ஸஞ்சரியாநிற்க, இருள்செறிந்தாற்போலே யிருப்பதொரு கழியிலே சென்றிழிந்தாள் ; அதுமடலெடுப்பாரைப்போலே கெட்டோடாநிற்குமே; பாவியேன், சகடாஸுர நிரஸநம் பண்ணின அச்செயலிலே நீயுமகப்பட்டாயாகாதே யென்கிறாள்.

இருளின் திணிவண்ணம் மாநீர்க்கழியேபோய்
மருளுற்றிராப்பகல் துஞ்சிலுநீதுஞ்சாயால்
உருளுஞ்சகட முதைத்தபெருமானார்
அருளின்பெருநசையா லாழாந்துநொந்தாயே. (அ)

ப ;—அநந்தரம் அவன்காருணிகத்வத்திலே நசைபண்ணி யாழங்காற்பட்டாயோவென்று கழியைப்பார்த்துக் கலங்கியுரைக்கிறாள்.

| | |
|---|---|
| இருளின்—இருளினுடைய | துஞ்சாய்—உறங்குகிறிலே; |
| திணி—செறிந்த | ஆல்—ஆதலால் |
| வண்ணம்—நிறத்தையுடைத்தான | உருளும்—உருளுதலையுடைத்தான |
| மா—பெரிய | சகடம்—சகடத்தை |
| நீர்—நீரையுடைய | உதைத்த—திருவடிகளாலேயுதைத்த |
| கழியே—கழியே! | பெருமானார்—பெரியவருடைய |
| போய்—மிகவும் | அருளின்—க்ருபாகுணத்திலுண்டான |
| மருளுற்று—அறிவுகெட்டு | பெரு—பெரிய |
| இராப்பகல்—அஹோராத்ரரூபமானகாலமும் | நசையால்—ஆசையாலே |
| துஞ்சிலும்—முடியிலும் | ஆழாந்து—ஆழங்காற்பட்டு |
| நீ—நீ | நொந்தாயே—நொந்தாயோ. |

மாநீரென்றது - கறுத்தநீரென்றுமாம். இத்தால் - ஜலப்ரக்ருதிகளும் அவன் க்ருபாகுணத்திலே யகப்பட்டால் கால்தாழ்வரென்றுகருத்து. (அ)

ஆறு ;—( இருளின் ) இருளின்திணிவண்ணம்மா நீர்க்கழியே, போயறிவழிந்திராப்பகல்முடியிலும் நீயுறங்குகிறிலே ; நீயுமென்னைப்போலே உருளுஞ்சகடமுதைத்த பெருமானாரோடே ஸம்ஶ்லேஷிக்கையிலுள்ள அபிநிவேசத்தாலே யாழாந்து நொந்தாயாகாதேயென்கிறாள். ... ... ... ... (அ)

ஈடு ; அவ ;—(ஒன்பதாம்பாட்டு) அக்கழிக்கொருகரை காணமாட்டாதே மீண்டுவந்துபடுக்கையிலே விழுந்தாள் ; அங்கெரிகிற விளக்கைக்கண்டாள் ; அது " உடம்பில்கைவைக்கவொண்ணாதபடி விரஹஜ்வரம்பற்றி யெரியாநின்றது " என்று அத்தைப்பார்த்து, நீயும் நோவுபட்டாயாகாதே யென்கிறாள்.

நொந்தாராக்காதல்நோய் மெல்லாவியுள்ளுலர்த்த
நந்தாவிளக்கமே நீயுமளியத்தாய்
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாயெம்பெருமான்
அந்தாமத்தண்டுழா யாசையால்வேவாயே. (கூ)

ப;—அநந்தரம் கமநீய விக்ரஹனானவனுடைய போக்யதாவிஷயமான ஆசையாலே வெதும்புகிறாயோ வென்று ஒருவிளக்கையுரைக்கிறாள்.

நந்தா—ஒன்றாய்வீவற்ற
விளக்கமே—விளக்கே!
அளியத்தாய்—இப்படி விலக்ஷணமான
நீயும்—நீயும்
நொந்தாரா—ஈடுபட்டிருக்கச்செய்தேயு மீடுபடுத்துகிறதால்வயிறு நிறையாத
காதல்—காதலாகிற
நோய்—நோயானது
மெல்-உன்மேனிபோலேமெல்லிதான
ஆவி—ப்ராணனையும்
உள்—உள்ளே
உலர்த்த—உலர்த்தும்படியாக
செம்—சிவந்த
தாமரை—தாமரைபோன்ற
தடம்—பெரிய
கண்—கண்களையும்
செம்—சிவந்த
கனி—கனிபோன்ற
வாய்—வாயையுமுடையனான
எம்பெருமான்—என்ஸ்வாமியானவனுடைய
அம்—அழகிய
தண்டுழாய்த்தாமம்—திருத்துழாய்மாலையிலுண்டான
ஆசையால்—ஆசையாலே
வேவாயே—பரிதபிக்கிறாயோ,

அளியத்தாயென்று - "அருமந்த" என்னுமாபோலே, நன்மையைக்காட்டுகிறது. இத்தால் - அவன்வடிவழகிலாசை தேஜஸ்விகளையும் பரிதபிக்குமென்கை. (கூ)

ஆறு;—(நொந்தாரா) நந்தாவிளக்கே, இப்பாடுபடுகைக் கீடன்றியேயிருந்தநீயு மென்னைப்போலே, காலதத்வமெல்லா மநுபவித்தாலும் ஆராதகாதல் நோயானது உன்னுடைய மெல்லாவியையுள்ளுலர்த்த, செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாயெம்பெருமானந்தாமத் தண்டுழாயினுள்ளே ஆசையாகிறமஹாக்நியாலே வேவாநின்றாயாகாதே யென்கிறாள். ... ... (கூ)

---

ஈடு; அவ;—(பத்தாம்பாட்டு) இவளவஸாதமெல்லாந்தீரவந்து ஸம்ச்லேஷித்த எம்பெருமானைக்குறித்து, இனியொருநாளுமென்னைவிடாதொழியவேணுமென்கிறாள்.

வேவாராவேட்கைநோய் மெல்லாவியுள்ளுலர்த்த
ஓவாதிராப்பகலுன்பாலே வீழ்த்தொழிந்தாய்
மாவாய்பிளந்து மருதிடைபோய்மண்ணளந்த
மூவாமுதல்வாவினி யெம்மைச்சோரேலே. (கo)

ப ;—அநந்தரம் இவ்வார்த்தியைக்கண்டு ஸங்கிஹிதஞன ஸர்வகாரண பூதனுயுள்ள ஈஸ்வரனை, நீயென்னை நழுவாதொழியவேணுமென் றபேக்ஷிக் கிருர்.

| | |
|---|---|
| வேவாரா—வேவித்துத்ருப்தமாகாத | வாய்—வாயை |
| வேட்கை—ஆசையாகிற | பிளந்து—பிளந்து |
| நோய்—நோயானது | மருது—த்வந்த்வமான மருதுமுறியும்படி |
| மெல்—விரஹத்தாலேபலஹீநமான | இடை—நடுவே |
| ஆவி—ஆத்மாவை | போய்—போய் (அநங்யார்ஹமாம்படி) |
| உள்—குருத்துவற்ருக | மண்—பூமியை |
| உலர்த்த—வற்றுவிக்க | அளந்த—அளந்துகொண்டு |
| இராப்பகல்—இராப்பகல் | மூவா—அத்தாலேயிளகிப்பதித்த |
| ஓவாது—இடைவிடாதே | முதல்வா—ஸர்வகாரணபூதனே |
| உன்பாலே—உன்ஸ்வபாவங்களிலே | இனி—இனியொருகாலமும் |
| வீழ்த்தொழிந்தாய் — தாழ்ந்தகப்படும் படிபண்ணினவனுய் | எம்மை—எங்களை |
| மா — உன்னைக்கிட்டுவார்க்கு விரோதியான கேஶியாகிற குதிரையின் | சோரேல்-நழுவவிடாதொழியவேணும். |

மூவாமுதல்வா என்றது - நித்யயௌவநஸ்வபாவனுன உத்பாதகனென் றுமாம். இத்தால் - தம்முடைய அநிஷ்டங்களைப்போக்கி ஸத்தையையுண்டாக் கினபடியை யநுஸந்தித்தாராயிற்று. இதில் ஏகாரம் - தேற்றம். (கo)

ஆரு ;—(வேவாரா) அதாஹ்பமான என்னுடையமெல்லாவி முடிந்தாலும் தவிராதேநின்று வேட்கைநோயானது தஹிக்கும்படி உன்னுடைய குணசேஷ்டிதங்களாலே யென்னையோவாதே யிராப் பகலுன் பக்கலிலே விழுந்து கிடக்கும்படி பண்ணினுய் ; இனியடி யேனைச் சோரவிடாதொழியவேணு மென்கிருர். ... (கo)

---

ஈடு ; அவ ;—(பதிஞேராம்பாட்டு) நிகமத்தில், இத்திருவாய் மொழிகற்ருர், கண்ணுற்கண்டதெல்லாம் பகவதலாபத்தாலேநோவு படுகிற ஸம்ஸாரத்திலேயிருந்து நோவுபடாதே, கண்டாரெல்லாம் பகவல்லாபத்தாலே களித்துவர்த்திக்கும் நாட்டிலே புகப்பெறுவ ரென்கிருர்.

சோராதவெப்பொருட்கு மாதியாஞ்சோதிக்கே
ஆராதகாதற் குருகூர்ச்சடகோபன்
ஓராயிரஞ்சொன்ன வவற்றுளிவைபத்தும்
சோரார்விடார்கண்டீர் வைகுந்தந்திண்ணனவே. (கக)

ப ;—அநந்தரம் இத்திருவாய்மொழிக்கு பலம் பரமபதப்ராப்தியென்றருளிச்செய்கிறார்.

சோராத—ஒன்றுஞ்சோராதபடி
எப்பொருட்கும்—எல்லாப்பொருளுக்கும்
ஆதியாம்—காரணபூதனை
சோதிக்கே—பரஞ்ஜ்யோதி ஶப்தவாச்யனுக்கே
ஆராத—ஒருகாலும்த்ருப்திபிறவாத
காதல்—அபிநிவேசத்தையுடைய
குருகூர்ச்சடகோபன்—ஆழ்வார்
ஓர்—அத்விதீயமான
ஆயிரம்—ஆயிரமாக
சொன்னவவற்றுள் – சொன்னவற்றுக்குள்ளே
இவைபத்தும் — அதிப்ரேம ப்ரகாசகமான இவைபத்தையும்
சோரார்—நழுவநில்லாதவர்கள்
வைகுந்தம்—பரமபதத்தை
திண்ணன—அறுதியாக
விடார்கண்டீர்—விடாதவர்கள்கிடீர்.

இது - கலிவிருத்தம். நாலடித்தாழிசையுமாம். (கக)

ஆறு ;—(சோராத) இப்படி எம்பெருமானைப் பிரிந்தவ்யஸநத்தாலேமுடியப்புகுகிற தம்மையுஜ்ஜீவிப்பிக்கைக்காக வந்துதோற்றியருளின எம்பெருமானைக்கண்டு தாமுஜ்ஜீவித்து, ஸ்வோஜ்ஜீவநத்தாலே யெம்பெருமான் ஸர்வேஶ்வரத்வ மவிகலமானபடியைக்கண்டு ப்ரீதராய், "அடியேனிவனுடைய ஸர்வேஶ்வரத்வமவிகலமாகப் பெற்றேனாகாதே" என்று கந்துகொண்டெம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வத்தை யநுபவித்து, இப்படி ஸர்வேஶ்வரனாயிருந்த எம்பெருமான்பக்கலுள்ள நிரவதிகமான ஆசையாலே சொன்ன இத்திருவாய்மொழியை விடாதார் ஒருநாளுமெம்பெருமானைப்பிரியார்; இது நிஶ்சிதமென்கிறார். ... ... ... (கக)

---

ஈடு ; நிக ;—முதற்பாட்டிலேதொடங்கி, நாரைதொடக்கமாக, அன்றில், கடல், காற்று, மேகம், சந்த்ரன், இருள், கழி, விளக்கு, இப்பதார்த்தங்களைக் குறித்தநுசோகித்து மிகவுந்தளர்ந்தவளவிலே அவன்வந்து முகங்காட்ட "இனியென்னைவிடாதொழியவேணும்" என்று, இத்திருவாய்மொழிகற்றார்க்குப் பலத்தைச்சொல்லித் தலைக்கட்டினார்.

இரண்டாம்பத்தில் முதற்றிருவாய்மொழி
முற்றிற்று.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## இரண்டாம்பத்து

# இரண்டாந் திருவாய்மொழி

### திண்ணன்வீடு ப்ரவேசங்கள்.

---

ப:—இரண்டாந்திருவாய்மொழியில்,கீழுக்தமான போக்யத்வத்தினுடைய நிரதிசயத்வாபாதகராய், "மாவாய்பிளந்து" என்று தொடங்கிக் கீழ்ப்ரக்ருதமான ஸௌலப்யத்துக்கும் ஸ்வாமித்வத்துக்கும் ப்ரகாசகமான மநுஷ்யத்வேபரத்வத்துக் குபபாதகமான, அவதார தசையிலு மவனுடைய ஸர்வநிர்வாஹகத்வத்தையும், அநிஷ்டநிவ்ருத்தீஷ்டப்ராப்தி ஹேதுத்வத்தையும், ஸர்வாதிகத்வத்தையும், ஸர்வப்ரகாரஸமாராத்யதையையும், ஆதித்யஸூசகமான புண்டரீகாக்ஷத்வத்தையும், ஆஸ்ரிதாக்ஷுண்ணார்த்தமான அர்ணவஸாயித்வத்தையும், அகடிதகடநாஸாமர்த்யத்தையும், ஸர்வப்ரகாரரக்ஷகத்வத்தையும், ஜகஜ்ஜந்மாதி ஹேதுத்வத்தையும், ஸர்வதேவதாஸமாஸ்ரயணீயத்வத்தையு மருளிச்செய்து, ஸர்வஸ்மாத்பரனாய் ஸர்வஸுலபனான ஈஸ்வரனுடைய போக்யத்வவர்த்தகமான உத்துங்கலலிதத்வத்தை யுபபாதிக்கிறார். *

ஆறு ;—(திண்ணன்வீடு) இப்படி ப்ரஸ்துதமானஸர்வேஸ்வரத்வத்தை, தம்முடைய ப்ரீத்யதிசயத்தாலே ஸஹேதுகமாகவுபபாதிக்கிறார். *

---

ஈடு ;—கீழிற்றிருவாய்மொழியில் இவர்க்குப்பிறந்த ஆற்றாமை பேச்சுக்கு நிலமன்றிறே; "கடல்வெதும்பினால் விளாவநீரில்லை" என்னுமாபோலே "ஆற்றாமையோடேமுடிந்துபோமித்தனை" என்றிருந்தார்; அநந்தரம் அவன்வந்து முகங்காட்டினவாறே ஆற்றாமை புக்கவிடங்கண்டிலர்; "இதுக்கடி என்" என்று பார்த்தாராய்த்து வாறே, இதரவிஷயங்களினுடைய லாபாலாபத்தளவல்லாத விஷயவைலக்ஷண்யமாயிருந்தது;பிரிந்தபோது தன்னையொழிய வேறொன்று தோற்றாதபடியாய், கலந்தபோதும் தன்னையொழிய மற்றொன்று தோற்றாதபடியான விஷயவைலக்ஷண்யமாயிருந்தது; "இதுக்கடி என்" என்றுபார்த்தார், ஸமஸ்தகல்யாண குணாத்மகனுகைபாலே யாயிருந்தது; "இதுதனக்கடிஎன்" என்று பார்த்தவாறே, ஸர்வேஸ்வரனுகையாலேயாயிருந்தது; "உயர்வறவுயர்நலமுடையவன்"

A 2

என்றால், “அயர்வறுமமரர்களதிபதி” என்றிறேதோற்றுவது; ஆக, இங்ஙனே ப்ராஸங்கிகமாக ப்ரஸ்துதமான ஈஶ்வரத்வத்தை யநுஸந்தித்து, அத்தை யருளிச்செய்கிறார்.

“ இதிலே ‘மூவாமுதல்வா’ என்றுகாரணத்வம் ப்ரஸ்துதமாகை யாலே, அந்தக்காரணத்வத்தை யுபபாதிக்கிறார்” என்றுபணிக்கும் பிள்ளான். முதற்றிருவாய்மொழியிலுஞ் சொல்லிற்றில்லையோ ஈஶ்வரத்வமென்னில்; “ஒருகாற்சொன்னோம்” என்று கைவாங்கியிருக்கவல்லரல்லரிவர்; ஒருகாற்சொல்லிற்றென்று கைவாங்கலாம்விஷயமன்று அது. இனித்தான் பகவத்விஷயத்தில் புநருக்தி தோஷாயவாகாது; ஒருகுணத்தையே எல்லாக்காலமுமநுபவிக்கவல்லாரொருவரிவர்; ஒருகுணந்தன்னையே “இதுக்குமுன்பநுபவிப்பித்தது இக்குணம்” என்றுதோற்றாதபடி க்ஷணந்தோறும்புதுமை பிறப்பித்தநுபவிப்பிக்கவல்லானொருவன் அவன்; * பயிலாநிற்கச்செய்தேயிறே (க) * பண்டிவரைக்கண்டறிவதெவ்வூரில் யாமென்பது; ஆகையிறே ஏகவிஷயமே நித்யப்ராப்யமாகிறது;

இவர்தாமும், “எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழிதொறு மப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதம்” என்றே நின்றார். ஆனாலு மிதுக்கு வாசியுண்டு; முதற்றிருவாய்மொழியிலே பரத்வஞ்சொல்லாநிற்கச்செய்தே, அது ஸ்வாநுபவமாயிருக்கும்; அந்தப்பரத்வந்தன்னையெல்லாருக்கு மநுபவிக்கலாம்படி பிறர்நெஞ்சிலே படுத்துகிறாராகையால் பரோபதேஶத்தாலே பரத்வாநுபவம் பண்ணுகிறார்; அங்கு - அந்வயமுகத்தாலே பரத்வஞ்சொன்னார்; அந்வயவ்யதிரேகங்க ளிரண்டாலும் பரத்வஞ்சொல்லுகிறாரிங்கு; அங்கு - ஶ்ருதிச்சாயையாலே சொன்னார்; இங்கு - இதிஹாஸபுராணப்ரக்ரியையாலே சொல்லுகிறார்; அங்கு-பரத்வத்திலேபரத்வம்; இங்கு - அவதாரத்திலே பரத்வம். *

ஈடு; அவ;—(முதற்பாட்டு) இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற பரத்வத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்,

(க) தி-மொ-அ-க.

திண்ணன்வீடு முதல்முழுதுமாய்
எண்ணின்மீதிய னெம்பெருமான்
மண்ணும்விண்ணு மெல்லாமுட னுண்டநம்
கண்ணன்கண்ணல்ல தில்லைபோர்கண்ணே. (க)

ப ;—முதற்பாட்டில், க்ருஷ்ணனே ஸர்வநிர்வாஹக னென்கிறார்.

திண்—திண்மையையுடைத்தாய்
நல்—விலக்ஷணமான
வீடு—மோக்ஷம்
முதல்—முதல்
முழுதுமாய் — ஸகலப்ரயோஜநநிர்வாஹகனாய்
எண்ணின்மீதியன்—நினைவுக் கவ்வருகான அபரிச்சிந்நஸ்வபாவனாய்
எம்பெருமான்—இம்மேன்மையைக்காட்டியென்னையடிமை கொண்டஸ்வாமியாய்
மண்ணும்—பூமியும்
விண்ணும்—ஊர்த்வலோகமும்
எல்லாம்—ஒன்றொழியாமல்
உடன்—தாரதம்யமில்லாதபடி ஏகோத்யோகத்திலே
உண்ட—வயிற்றிலேவைத்துநோக்கின
நங்கண்ணன்—க்ருஷ்ணனுயவதரித்து நமக்கே தன்னைத்தந்த ஸுலபனே
கண்—ஜகத்துக்குநிர்வாஹகன்;
அல்லது—அல்லது
ஓர்—ஒரு
கண்—நிர்வாஹகவஸ்து
இல்லை—இல்லை.

கண்-களைகண். திண்ணனென்றது-நிஶ்சிதமென்றுமாம். (க)

ஆறு ;—மோக்ஷாத்யஶேஷ புருஷார்த்தப்ரதனாய், வாங்மநஸாபரிச்சேத்ய கல்யாணகுணங்களை யுடையனாய், எனக்கு ஸ்வாமியாய், ஸர்வாத்ம ஸம்ரக்ஷகனாயிருந்த வண்டுவரைப்பெருமாளே இஜ்ஜகத்தி லீஶ்வரன் ; மற்றீஶ்வரனில்லை ; இதிலொரு ஸம்ஶய மில்லை யென்கிறார். (க)

---

ஈடு ; அவ ;—(இரண்டாம்பாட்டு) "அல்லதில்லை" என்று நீர்சொல்லுவானென்? ; ப்ரஹ்மருத்ரர்களு மீஶ்வரர்களாக அவர்களுக்கும் சிலப்ரமாணங்களுண்டாயன்றோ போருகிறதென்னில் ; அவர்கள்நிலைகளை யாராய்ந்துபார்த்தால், தலையறுப்பார் சிலரும், அறுப்புண்டுநிற்பார் சிலரு மாகாநின்றார்கள் ; அவர்களாபத்தைப் போக்கி ரக்ஷியாநின்றானிவன் ; அவர்களோ இவனே ஈஶ்வரனென்கிறார். *

ஏபாவம்பரமே யேழுலகும்
ஈபாவஞ்செய் தருளாலளிப்பாரார்
மாபாவம்விட வரற்குப்பிச்சைபெய்
கோபாலகோளரி யேறன்றியே. (உ)

ப ;—அநந்தரம் அநிஷ்ட நிவ்ருத்திக்கு மிஷ்டப்ராப்திக்கும் ஹேது க்ருஷ்ணனென்கிறார்

மா—அரப்பெரியதான
பாவம்—குருபாதகம்
விட—விட்டுப்போம்படி
அரற்கு—ருத்ரனுக்கு
பிச்சைபெய்—பிக்ஷாப்ரதாநம் பண்ணினவனாய்
கோபாலகோள் — கோபகுலத்திற்பிறந்தார்க்கள்
அரியேறு — ஸிம்ஹஸ்ரேஷ்ட்டமான க்ருஷ்ணன்
அன்றியே—அன்றி,
ஏழுலகும்—ஸர்வலோகத்தையும்
ஈபாவஞ்செய்து—நஶித்தபாபத்தையுடைத்தாம்படிபண்ணி
அருளால்—தன்க்ருபையாலே
அளிப்பார்— அபிமதங்களைக்கொடுத்து [ரக்ஷிப்பார
ஆர்—ஆர்;
ஏபாவம்—என்னபாவமிருந்தபடி;
பரமே—இவனுடைய ஸர்வாதிகத்வஞ் சொல்லுதல் நமக்குபரமாவதே.

ஏ என்று - வெறுப்பைக்காட்டுகிறது. (உ)

ஆறு ;—(ஏபாவம்) இஜ்ஜகத்துக்கு வேறுரக்ஷகனில்லையோ வென்னில்;(க)"நஹிபாலநஸாமர்த்ய ... ஸர்வேஶ்வரம்ஹரிம்" என்றுகொண்டு ருத்ரனுடைய மஹாபாபத்தைப்போக்கி அவனை ரக்ஷித்தருளின பரமகாருணிகனாயிருந்தகோபாலகோளரியேறன்றி, இந்தஸர்வலோகங்களினுடையபாபத்தைப்போக்கி ரக்ஷிப்பாருளரோ ; ரக்ஷிக்கவல்லார்தானுளரோ ; இது உபபாதிக்கவேணுமோ வென்கிறார். (உ)

---

ஈடு; அவ ;—(மூன்றாம்பாட்டு) ஸௌஶீல்யத்தாலும், த்ரைவிக்ரமக்ரமணமாகிற அதிமாநுஷசேஷ்டிதத்தாலு மிவனே யீஶ்வரனென்கிறார்.

ஏறனைப்பூவனைப் பூமகள்தன்னை
வேறின்றிவிண்தொழத் தன்னுள்வைத்து
மேறன்னைமீதிட நிமிர்ந்துமண்கொண்ட
மாறனின்மிக்கு மோர்தேவுமுளதே. (ந)

(க) வி-பு-க-உஉ-உக.

ப ;—அநந்தரம் இவனே ஸர்வஸ்மாத்பரனென்கிறார்.

| | |
|---|---|
| ஏறனை-ருஷபவாஹநனைருத்ரனையும் | வைத்து—வைத்து |
| பூவனை—கமலாஸநனை ப்ரஹ்மாவையும் | மேல்தன்னை—ஊர்த்வலோகத்தை |
| பூமகள்தன்னை — பத்மவாஸிநியாய்த்தனக்கஸாதாரணையான பிராட்டியையும் | மீதிட—கீழ்க்கும்படி |
| வேறின்றி — தன்திருமார்பில் வைத்ததிற்காட்டில் வேறு தோன்றாதபடி | நிமிர்ந்து—வளர்ந்து |
| தன்னுள்—தன் திருமேனிக்குள்ளே | மண்—பூமியை |
| விண்—இந்த ஸ்ரீலமறிந்தபரமபதவாஸிகள் | கொண்ட—அளந்துகொண்ட |
| தொழ - தன்னைத்தொழும்படி | மால்தனில்—பெரியவனை |
| | மிக்கும்—மிகுந்திருப்பது |
| | ஓர்—ஒரு |
| | தேவும்—தேவதாதத்வமும் |
| | உளதே—உண்டோ. |

ஏகாரம் - உண்டோ. (ரு)

ஆறு ; —(ஏறனை) * அபர்வறுமமரர்கள் தன்னுடைய ஸௌஸீல்யகுணத்தைக்கண்டு தொழுகைக்காக, ஸர்வேஸ்வரியானபெரிய பிராட்டியாரோடொக்க, அத்யந்தமபக்ருஷ்டரான ப்ரஹ்மருத்ராதிகளுக்கும் தன்னையாஸ்ரயமாகக்கொடுத்துக்கொண்டிருக்கையாலும், ஸர்வலோகங்களும் திருவடிகளினுள்ளே யடங்கும்படி அளந்தருளுகையாலும் இவனே ஸர்வேஸ்வரன் ; மற்றில்லையென்கிறார். (ரு)

---

ஈடு ; அவ ;—(நான்காம்பாட்டு) ஸௌகுமார்யத்தாலும் முதன்மையாலு மிவனே யீஸ்வரனென்கிறார்.

தேவு மெப்பொருளும் படைக்கப்
பூவில் நான்முகனைப் படைத்த
தேவ னெம்பெருமானுக் கல்லால்
பூவும் பூசனையுந் தகுமே. (ச)

ப ;—அநந்தரம் ஆராதனைக்கீடான ஆதிக்யமவனுக்கொழிய மற்றொருவர்க்கில்லையென்கிறார்.

| | |
|---|---|
| தேவும்—தேவஜாதியையும் | பூவில்—திருநாபிகமலத்திலே |
| எப்பொருளும்—மநுஷ்யாதிஸகலபதார்த்தங்களையும் | நான்முகனை — சதுர்முகனை ப்ரஹ்மாவை |
| படைக்க—ஸ்ருஷ்டிக்கைக்காக | படைத்த—படைத்த |

தேவன்—பரதேவதையான
எம்பெருமானுக்கு—என்னையனுக்கு
அல்லால்—அல்லது
பூவும்—புஷ்பாத்யுபஹாரமும்
பூசனையும்—ஆராதநோபசாரமும்
தகுமே—வேறு சிலர்க்குத்தகுமோ.

தகாதென்று கருத்து. (ச)

ஆறு ;—(தேவும்) சதுர்முகாதி ஸகலபதார்த்த ஸ்ருஷ்டிலீலனைப், தன்னுடைய ஸௌந்தர்யகுணத்தாலே எனக்கு ஸ்வாமியாயிருந்த வெம்பெருமானல்லது ஸர்வேஶ்வரனு மழகியாருமுளரோ வென்கிறார். ... ... ... ... (ச)

---

ஈடு ; அவ ; (அஞ்சாம்பாட்டு) புண்டரீகாக்ஷனையாலு மிவனே யீஶ்வரனென்கிறார்.

தகுஞ்சீர்த் தன்றனி முதலினுள்ளே
மிகுந்தேவு மெப்பொருளும் படைக்கத்
தகுங்கோலத் தாமரைக்கண்ண னெம்மான்
மிகுஞ்சோதி மேலறிவார் யவரே. (ரு)

ப ;—அநந்தரம் இப்பரத்வஸூசகமான புண்டரீகாக்ஷத்வத்தை யருளிச்செய்கிறார்.

தகும்—ஸ்ருஷ்ட்யாதிகளுக்குத் தகுதியான
சீர்—ஜ்ஞாநஶக்த்யாதிகளையுடையனான
தன்—தன்னுடைய
தனி—அத்விதீயமாய்
முதலினுள்ளே—ஜகத்துக்குமூலமான ஸங்கல்பத்துக்குள்ளே
மிகும்—"ஈஶ்வரன்" என்று ஶங்கிக்கலாம்படி மிக்க
தேவும்—ப்ரஹ்மருத்ராதி தேவஜாதியையும்
எப்பொருளும்—மநுஷ்யாதிஸகலபதார்த்தங்களையும்
படைக்க—ஸ்ருஷ்டிக்க
தகும்—"இவன் றனக்குத்தகும்" என்னஸூசகமான
கோலம்—அழகிய
தாமரை—தாமரைபோன்ற
கண்ணன்—கண்களையுடைய
எம்மான்—என்ஸ்வாமியானவனைக்காட்டிலும்
மிகுஞ்சோதி—பரஞ்ஜ்யோதிஸ்ஸு
மேல்—இதுக்குமேலொருதத்த்வமுண்டென்று, (வைதிகரில்)
அறிவார்—அறிவார்
யவர்—ஆர்.

உண்டென்றறிவார் - அவைதிகரென்று கருத்து. (ரு)

ஆறு ;—(தகுஞ்சீர்) தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்துக்குசிதமான கல்யாணகுணங்களை யுடையனைப், ஸ்வஸங்கல்பகல்பித

நிகிலஜகத்தையுடையனாய், தன்னுடைய ஸர்வேஸ்வர த்வோசித மான அழகிய திருக்கண்களை யுடையனாயிருந்த வெம்பெருமானு டைய திருமேனியினழகு ஒருவர்க்கு நினைக்கநிலமோ வென்கிறார்.(ரு)

---

ஈடு; அவ;—(ஆறும்பாட்டு) ஆபத்ஸகனுகையாலு மிவனே யீஶ்வரனென்கிறார்.

யவரும்யாவையு மெல்லாப்பொருளும்
கவர்வின்றித்தன்னுள்ளொடுங்கநின்ற
பவர்கொள் ஞானவெள்ளச் சுடர்மூர்த்தி
அவரெம்மாழி யம்பள்ளியாரே. (சு)

ப;—அநந்தரம் ஆஶ்ரிதாக்ஷணார்த்தமாக க்ஷீரார்ணவத்திலே கண்வளர்ந் தருளினானென்கிறார்.

யவரும்—எல்லாச்சேதநரும்
யாவையும்—எல்லாவசேதநங்களுமாகிற
எல்லாப்பொருளும்—ஸமஸ்தபதார்த்த ங்களும்
கவர்வின்றி—சோர்வின்றி
தன்னுள் — தன்ஸ்வரூபைக தேஶத் திலே
ஒடுங்க—அடங்கும்படியாக
நின்ற—நின்ற
பவர்கொள்—பரப்பையுடைத்தான
ஞானவெள்ளம்—ஞானவெள்ளத்தை
சுடர்—தனக்கு ப்ரபையாகவுடைய
மூர்த்தி—ஸ்வாமிகளான
அவர்—ஸர்வாதிகாரனவர்
எம்—நமக்குபோக்யமாய்
அம்—தர்ஶநீயமான
ஆழி—க்ஷீரார்ணவத்திலே
பள்ளியார்—கண்வளர்ந்தருளுகிறார்.

கவாவு-சோர்வு. பவர்வு-பரப்பு; சுடர்மூர்த்தி-விக்ரஹமாகவுமாம். (சு)

ஆறு;—(யவரும்) அஸம்பாதமாகத்தன்னுள்ளே வைக்கப் பட்ட ஸர்வஜகத்தையுமுடையனாய், ஸ்வாபாவிகஸார்வஜ்ஞத்தை யுடையனாய், *க்ஷீரார்ணவநிகேதநனான வண்டுவரைப்பெருமாளே ஸர்வேஶ்வரனென்கிறார். ... ... ... (சு)

---

ஈடு; அவ;—(ஏழாம்பாட்டு) அகடிதகடநாஸாமர்த்யத்தாலு மிவனே யீஶ்வரனென்கிறார்.

பள்ளியாலிலை யேழுலகுங் கொள்ளும்
வள்ளல் வல்வயிற்றுப் பெருமான்
உள்ளுள்ளா ரறிவாரவன்றன்
கள்ளமாய மனக்கருத்தே. (எ)

ப ;—அநந்தரம் வடதளஶாயித்வரூபமான அகடிதகடநா ஸாமர்த்யத்தாலே அவன்பரத்வம் துரவபோதமென்கிறார்.

பள்ளி—படுக்கை
ஆலிலை—ஆலிலையாக
எழுலகும்—எல்லாலோகத்தையும்
கொள்ளும்—கொள்ளுகைக் கிடங்கொடுக்கும்
வள்ளல்—ஔதார்யத்தையும்
வல்—ஶக்தியையுமுடைத்தான
வயிறு—வயிற்றையுடைய
பெருமான்-ஸர்வாதிகனை
அவன்தன்—அவனுடைய
கள்ளம்—ஒருவர்க்குந்தோன்றாதே
மாயம்—ஆஶ்சர்யமான
மனக்கருத்து—மாநஸவ்யாபாரம்-ஜகதர்த்தமான ரக்ஷணசிந்தாவ்யாபாரம்
உள்ளுள்—மாநஸவ்யாபாரத்தாலே
அறிவார்—அறியுமவர்கள்
ஆர்—ஆர்.

எவர்க்குமறியவரிதென்று கருத்து. (எ)

ஆறு ; (பள்ளியாலிலை) ஸர்வலோகாவகாஶப்ரதத்வபரமௌதார்யத்தையுடைத்தாய், ஸர்வலோகபரண ஸமர்த்தமாயிருந்ததன் வயிற்றிலே ஸர்வலோகத்தையும் வைத்துக்கொண்டு ஆலிலையிலே கண்வளர்ந்தருளுகிற இவனுடைய ஸர்வேஶ்வரத்வ சிஹ்நபூததிவ்ய சேஷ்டிதங்களுக்கொரு முடிவுண்டோ வென்கிறார். (எ)

---

ஈடு ; அவ ;—(எட்டாம்பாட்டு) ஸ்ருஷ்டியும் பாலநமும் ஸ்வாதீநமாகவுடையவனாகையாலே யிவனே யீஶ்வரனென்கிறார்.

கருத்தில்தேவு மெல்லாப்பொருளும்
வருத்தித்த மாயப்பிரானை யன்றியாரே
திருத்தித்திண்ணிலை மூவுலகுந்தம்முள்
இருத்திக்காக்கு மியல்வினரே. (அ)

ப ;—அநந்தரம் ஸர்வப்ரகாரரக்ஷகன் அவனேயென்கிறார்.

கருத்தில்—தன்னினைவாலே
தேவும்—தேவவர்க்கமும்
எல்லாப்பொருளும்—மநுஷ்யாதி ஸகலபதார்த்தங்களும்
வருத்தித்த—ஸத்தைபெற்று அபிவ்ருத்தமாம்படியுண்டாக்கின
மாயம்—ஆஶ்சர்யஶக்த்யாதிகளையுடைய
பிரானை—ஈஶ்வரனை
அன்றி—ஒழிய
ஆரே—ஆர்தான்
மூவுலகும்—ஸமஸ்தலோகத்தையும்
திண்—திண்ணிதான
நிலை—நிலையையுடைத்தாம்படி
திருத்தி—அநிஷ்டநிவ்ருத்யாதிகளாலேதிருந்தச்செய்து
தம்முள்—தன்னினைவுக்குள்ளே

| | |
|---|---|
| இருத்தி—அவற்றை ப்ரதிஷ்டிதமாக்கி | இயல்வினர்—ஸ்வபாவத்தையுடையார். ரக்ஷணைக ஸ்வபாவனவனென்று கருத்து. (அ) |
| காக்கும்—ரக்ஷிக்கும் | |

ஆறு ;—(கருத்தில்) ஸ்ருஷ்டிரக்ஷணங்கள் பிந்நகர்த்த்ருகமல்லவோ, இவற்றைப்பரமபுருஷைக கர்த்த்ருகமாகச் சொல்லுவாருண்டோவென்னில் ; பெற்றமாதாவே புத்ரரக்ஷணம்பண்ணுகிறப்போலே ஸ்ருஷ்ட்டித்தவனே ரக்ஷிக்கப்ராப்தம் ; ஆதலால் ரக்ஷிக்கிறான் பரமபுருஷனே. ஸ்ருஷ்டிரக்ஷணங்களிரண்டும் பரமபுருஷைக கர்த்த்ருகமென்கிறார். ... ... ... (அ)

ஈடு ; அவ ;—(ஒன்பதாம்பாட்டு) ஸ்ருஷ்டிஸ்த்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் ஸ்வாதீநமாம்படியிருக்கையாலு மிவனே யீப்ஸ்வரனென்கிறார்.

காக்குமியல்வினன் கண்ணபெருமான்
சேர்க்கைசெய்து தன்னுந்தியுள்ளே
வாய்த்ததிசைமுக னிந்திரன்வானவர்
ஆக்கினான் தெய்வவுலகுகளே. (கூ)

ப ;—அநந்தரம் இந்தாக்ஷணத்தோபாதி ஜகதுத்பத்தி ஸம்ஹாரங்களும் ததீநமென்கிறார்.

| | |
|---|---|
| காக்குமியல்வினன்—ரக்ஷணத்தைஸ்வபாவமாகவுடைய | தன்னுந்தியுள்ளே — தன் திருநாபிக்குள்ளே |
| கண்ணன்—க்ருஷ்ணனான | வாய்த்த—ஸ்ருஷ்ட்டிக்குவாய்த்த |
| பெருமான்—ஸர்வேஸ்வரன் | திசைமுகன்—சதுர்முகன் |
| சேர்க்கைசெய்து—ஸம்ஹ்ருதிஸமயத்திலே நாமரூபவிபாகரஹிதமாய் (க) "தஉவஊகீஊவதி-தமஉகீபவதி" என்கிறபடியேசேரும்படிபண்ணி | இந்திரன்—இந்த்ரன் |
| | வானவர்—தேவர்கள் |
| | தெய்வவுலகுகள்—அவர்களுக்கு வாஸஸ்த்தாநமான திவ்யலோகங்கள் |
| | ஆக்கினான்-இவற்றையுண்டாக்கினான் உந்தியுள்ளேபிறந்த திசைமுகனென்றுமாம். (கூ) |

ஆறு ;—(காக்கும்) கேவலம்ஸ்ருஷ்ட்டிமாத்ரமேயன்று பரமபுருஷகர்த்த்ருகம் ; ப்ரஹ்மாதிஸ்தம்பபர்யந்த ஸர்வஜகத்ஸ்ருஷ்ட்டிஸ்த்திதிஸம்ஹாரங்கள் மூன்றும் பரமபுருஷகர்த்த்ருகம் ; ஆதலாலவனே ஸர்வேஸ்வரனென்கிறார். ... ... (கூ)

---

(க) ஸுபால - உ.

Λ A.

ஈடு ; அவ ;—(பத்தாம்பாட்டு) இவ்வளவும்வர நான் ப்ரதிபாதித்த பரத்வத்தை, நீங்களாஶ்ரயணீயராக நினைத்திருக்கிறவர்கள் மேலெழுத்தைக்கொண்டு விஶ்வஸியுங்கோளென்கிறார்.

கள்வாவெம்மையு மேழுலகும்நின்
உள்ளேதோற்றிய விறைவவென்று
வெள்ளேறன்நான்முக னிந்திரன்வானவர்
புள்ளூர்திகழல் பணிந்தேத்துவரே. (கo)

ப ;—அநந்தரம் ஸர்வஸ்மாத்பரனுகையாலே ஸர்வதேவதாஸமாஶ்ரயணீயனவனேயென்கிறார்.

| | |
|---|---|
| கள்வா — அவதாரமுகத்தாலே யாதிக்யத்தைமறைக்கும்க்ருத்ரிமனே | வெள்—வெளுத்த |
| எம்மையும்—எம்மையும் | ஏறன்—ஏற்றையுடைய ருத்ரனும் |
| ஏழுலகும்—ஸமஸ்தலோகங்களையும் | நான்முகன்—சதுர்முகனும் |
| நின்னுள்ளே - உன்னுடைய ஸங்கல்பத்துக்குள்ளே | இந்திரன்—இந்த்ரனும் |
| தோற்றிய—தோற்றுவித்த | வானவர்—ஸ்வர்க்கவாஸிகளும் |
| இறைவ—ஸ்வாமியே | புள்ளூர்தி—கருடவாஹநனுடைய |
| என்று—என்றுகொண்டு! | கழல்—திருவடிகளை |
| | பணிந்து—ப்ரணமம்பண்ணி |
| | ஏத்துவர்—ஸ்துதியாநிற்பார்கள். |

இத்தால் - தர்மபர்யாய வ்ருஷபவாஹநத்வத்தாலே ருத்ரனுடைய கர்மவஶ்யதையும், வேதமயனனகருடன் வாஹநமாகையாலே ஈஶ்வரனுடைய வேதாந்தவேத்யத்வமுந் தோற்றுகிறது. (கo)

ஆறு ;—(கள்வா) இப்படி சதுர்முக பசுபதி ப்ரமுகப்ரப்ருதி தேவர்களுக்கு மெம்பெருமானே காரணபூதனுமாயீஶ்வரனுமாயிருக்குமென்னுமிடத்தில் ப்ரமாணமென்னென்னில் ; அவர்கள் தங்களுடைய வாக்யமே ப்ரமாணமென்கிறார். ... (கo)

---

ஈடு ; அவ ;—(பதினோராம் பாட்டு) நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவர்களுக்கு, தேவதாந்தரங்கள்பக்கலீஶ்வரத்வபுத்தி பண்ணுகையாகிற ஊனமில்லை யென்கிறார்.

ஏத்தவேழுலகுங் கொண்டகோலக்
கூத்தனைக் குருகூர்ச் சடகோபன்சொல்
வாய்த்த வாயிரத்துள் ளிவைபத்துடன்
ஏத்தவல்லவர்க் கில்லையோரூனமே. (கக)

ப ;—அநந்தரம் இத்திருவாய்மொழிக்கு பலமாக ஸர்வப்ரகார வைகல்யாராஹித்யத்தை யருளிச்செய்கிறார்.

ஏத்த—வெளகிகரேத்துகிற விதுவே விளைநாக
ஏழுலகம்—ஸமஸ்த லோகத்தையும்
கொண்ட—அளந்துகொண்ட
கோலம்—வடிவழகையும்
கூத்தனை — வல்லாராடினாற்போலே அளந்து, அநாயஸத்தையுமுடையவனை
குருகூர்ச்சடகோபன்—ஆழ்வார்
சொல்—அருளிச்செய்த
வாய்த்த—லோகத்துக்கலப்யலாபமான
ஆயிரத்துள்—ஆயிரத்துள்
இவைபத்து—இவைபத்தையும்
உடன்—அர்த்தத்தோடே யுடன்பட்டு
ஏத்த—ஸ்துதிரூபமாகச்சொல்ல
வல்லவர்க்கு—வல்லவர்க்கு
ஓரூனம்—தேவதாந்த்ரங்களினுடைய வுத்கர்ஷபுத்தியும், அவர்களோடுண்டான ஸாம்ய புத்தியும், அவர்களில் நிகர்ஷ புத்தியுமாகிற குறைவுகளொன்றும்
இல்லை—இல்லை.

ஊனம் - குறைவு. சொல்வாய்த்தவென்று - அர்த்தப்ரதிபாதநஸாமர்த்ய மாகவுமாம். ஏழுலகென்று - கீழும்மேலுங்கூட்டுகிறது. இது கலிவிருத்தம். (கக)

ஆறு ;—(ஏத்தவேழுலகும்) ஸர்வலோகங்களுந் தன்னுடைய விஜயத்தைச் சொல்லிக்கொண்டு நின்றேத்த ஏழுலகுங் கொண்டருளினவிது தொடக்கமாகவுள்ள திவ்யசேஷ்டிதங்களாலே யெம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வத்தை ப்ரதிபாதிக்கிற இந்தத்திருவாய்மொழியை இந்தபாவனையோடேகூட ஏத்தவல்லார்க்கினியொருநாளு மெம்பெருமானோடு விஶ்லேஷமில்லை யென்கிறார். (கக)

ஈடு ; நிக ;—முதற்பாட்டில், மேல்பரக்கவருளிச்செய்கிற இத்திருவாய்மொழியிலர்த்தத்தை ஸங்க்ரஹேண வருளிச்செய்தார். இரண்டாம்பாட்டு முதல்-துஃக்கநிவர்த்தகனுகையாலும், ஶீலவானுகையாலும், ஸுகுமாரனுகையாலும், புண்டரீகாக்ஷனுகையாலும், ஆபத்ஸகனுகையாலும், அகடிதகடநாஸமர்த்தனுகையாலும், ஸ்ருஷ்டிஸ்த்திதிகளைப்பண்ணுகையாலும், ஸம்ஹாரமாகிற செயலைச்செய்கையாலும், ஈஶ்வராபிமாநிகளாயிருக்கிறவர்களுடைய ஸ்தோத்ராதிகளாலும், இப்படி பஹுப்ரகாரங்களாலே அவனுடைய பரத்வத்தை யருளிச்செய்து, இதுகற்றார்க்குப்பலஞ்சொல்லித் தலைக்கட்டினார்.

இரண்டாம்பத்தில் இரண்டாந் திருவாய்மொழி முற்றிற்று.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## இரண்டாம்பத்து.

# மூன்றாந் திருவாய்மொழி.

## ஊனில்வாழ் - ப்ரவேசங்கள்.

ப ;—மூன்றாந்திருவாய்மொழியில், இப்படி யுத்துங்கலலிதனான இவனுடையஸர்வவித ஸாரஸ்யாதிஶய ப்ரயுக்தமான திவ்யபோக்யதையையருளிச்செய்வதாக; அவனுடைய ஸர்வரஸாத்மகத்வத்தையும், ஸாரஸ்யயுக்தனான அவன் விஷயத்தில் தம்முடைய வுபகாரஸ்ம்ருதியையும், ஸ்வவிஷயத்தில் தம்மை அவனபிநிவேஶிப்பித்தபடியையும், அவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லாதபடியையும், தன்னுடைய அப்ராக்ருதபோக்யதையையும் ப்ரகாஶிப்பித்துச் சேர்த்துக்கொண்டபடியையும், இந்த ஸம்ஶ்லேஷம் ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே அநாதிஸித்தமானபடியையும், போக்யதாதிஶயத்தாலே வ்யதிரேகத்தில் தரிக்கவருமையையும், அவ்வநுபவம் தமக்குக் கைப்புகுந்தமையையும், ஸர்வப்ரகாராநுபவத்தால் பிறந்த ஆநந்தவிசேஷத்தையும், இப்படியநுபவித்து ஆநந்திகளானஸூரிகளோடு தாங்கூடியநுவிக்கையிலுண்டான ஆசையையுமருளிச்செய்து, கீழ்ச்சொன்ன ஸர்வப்ரகாரஸாரஸ்யம் ஸூரிபோக்யமென்னுமிடத்தையு முபபாதித்தருளுகிறார். *

ஆறு ;—(ஊனில்வாழுயிரே) இப்படி ஸ்வோஜ்ஜீவநார்த்தமாக வந்துதோற்றியருளினவன் தம்மோடேகலந்தருளினபடியைச் சொல்லுகிறார்.

---

ஈடு ;—*வாயுந்திரையுகளி லார்த்திதீரவந்து ஸம்ஶ்லேஷித்த ஸம்ஶ்லேஷத்தைச் சொல்லுகிறது இத்திருவாய்மொழியில் ; நடுவு ப்ராஸங்கிகமாகப்ரஸ்துதமானஙித்தனே யீஶ்வரத்வம். தாம்பெற்ற பேற்றின் கனத்தைப்பார்த்தார் ; அதுதாமடியாக வந்ததாகிலிறே அளவுபட்டிருப்பது; ஸர்வேஶ்வரனடியாகவந்ததாகையாலே கனத்திருக்குமிறே. தாமநுபவித்தவநுபவத்துக்குள்ளே யெல்லாரஸங்களுமுண்டாய், அதுதான் ஸமாப்யதிகவர்ஜிதமுமாயிருந்தது; "இப்படிப்பட்டபேற்றுக்கு உசாத்துணையாவாரார்" என்று பார்த்தவிடத்தில் ஸம்ஸாரத்திலாளில்லாமையாலே, "அவன்றன்னோடொக்க ப்ராப்யருமாய், அவனை நித்யாநுபவம்பண்ணுநிற்பாருமாய், பகவதநுபவத்துக்கு தேசிகருமாயிருக்கிற நித்யஸூரிகள் திரளிலேபோய்ப்புக்கு (க) * மொயயஙே: வாஷூரு - போதயந்த: பரஸ்பரம் பண்ணி

---

(க) கீதை - ௧௦ - ௯.

யநுபவிக்கப்பெறுவதெப்போதோ" என்னுமநவாப்தியோடே தலைக் கட்டுகிறார்.

* வாயுந்திரையுகளிலாற்றாமைக்கு அறிவுநடையாடாத திர்யக்குகளையு மசேதநங்களையும் சேர்த்தாரங்கு; இங்கு, ஸம்ஶ்லேஷத்தால் வந்த ப்ரீதிக்கு, அறிவுநைஸர்க்கிகமான நித்யஸூரிகளைத் தேடுகிறார். (க) [ராமஸ்து - ராமஸ்து] பெருமாளும் பிராட்டியும் (உ) "ஏகதத்த்வம் - ஏகதத்த்வம்" என்னலாம்படி கலந்தகலவியைச் சொல்லுகிறது. "பித்ருஶுஶ்ரூஷண பராஞர், தர்மங்களை ப்ரவர்த்திப்பித்தார், தேவதாஸமாராதநம் பண்ணினர்" என்றாயிற்றுச் சொல்லிக்கொண்டு போந்தது; இப்படிப் போந்த இவரிப்போது "வாத்ஸ்யாயநங்கற்றுக் காமதந்த்ரமேயோ நடத்திப்போந்தது" என்னும்படி வேறுபட்டார். [ஸீதயாஸார்த்தம் - ஸீதயாஸார்த்தம்] பரமபதத்தில் செவ்வியோடே வந்தவளும் பிற்பாடை யாம்படி போகஸ்ரோதஸ்ஸிலே முற்பாடரானர். [விஜஹார - விஜஹார] இப்படி பரிமாறச்செய்தேயும் போகோபோத்காதத்துக் கவ்வருகு பட்டிலர். [பஹூந்ருதூந் - பஹூந்ருதூந்] பஹூந்ஸம்வத்ஸராந் என்னுதேயொழிந்தது - "அவ்வோகால விசேஷங்களுக் கடுத்த போகோபகரணங்களைக்கொண்டு புஜித்தார்" என்னுமிடந் தோற்றுகைக்காக. [மநஸ்வீ - மநஸ்வீ] ஸம்ஶ்லேஷத்தில் பிராட்டி கோலினவளவுக் கவ்வருகுபட்டுப் பரிமாறினர். [தத்கத: - தத்கத:] தஸ்யாங்கத: - ஜாதிகுணங்கள் த்ரவ்யத்துக்கு ப்ரகாரமாய்ப் பிரிக்கவொண்ணுதபடியா யிருக்குமாபோலே, பிரிக்கவொண்ணுதபடி யொருநீராகக்கலந்தபடி. [தஸ்யா நித்யம் ஹ்ருதிஸமர்ப்பித: - தஸ்யா நித்யம்ஹ்ருதிஸமர்ப்பித:] இவருபார்த்தியையறிந்திருப்பாளொருத்தியாகையாலே "அப்பெரியவணிப்படித் தாழவிடுவதே" என்று அச்செயலிலே தன்னெஞ்சு அவக்குப்பட்டு "அதுவது" என்று கிடக்குமாயிற்று. அப்படியாயிற்று இங்குக்கலந்தகலவிதான். *

---

ஈடு; அவ;—(முதற்பாட்டு) இதில் முதற்பாட்டில்-ராஜ்யத்தை யிழந்தராஜபுத்ரனை ஒருவன், ராஜ்யத்திலே ப்ரவேசிப்பித்தால், "இவனாலே நாமிப்பேறுபெற்றோம்" என்று அவனைக் கொண்டாடுமாபோலே, "கைங்கர்யஸாம்ராஜ்யத்துக்கிட்டுப்பிறந்துவைத்து

---

(க) ரா - பா - எஎ - உரு. (உ) ரா -

நெடுநாளிழந்துகிடக்க இந்நெஞ்சிறே யித்தைத்தந்தது" என்று திருவுள்ளத்தைக்கொண்டாடுகிறார்.

ஊனில்வாழுயிரேநல்லைபோ வுன்னைப்பெற்று
வானுளார்பெருமான் மதுசூதனென்னம்மான்
தானும்யானுமெல்லாம் தன்னுள்ளேகலந்தொழிந்தோம்
தேனும்பாலும்நெய்யும் கன்னலுமமுதுமொத்தே. (க)

ப ;—முதற்பாட்டில், ஸர்வரஸமானவஸ்துவோடு தமக்குண்டான ஸம்ஶ்லேஷம் தம்முடைய திருவுள்ளமடியாகவாதலால் நெஞ்சைப்பார்த்துஉகக்கிறார்.

ஊனில்— மாம்ஸமயமான சரீரத்திலே
வாழ் — இந்தளத்தில் தாமரைபோலே பகவதநுபவத்தைப்பெற்று
உயிரே—நெஞ்சே! வாழ்கிற
நல்லைபோ— நல்லைகாண் ;
(எங்ஙனேயென்னில்)
உன்னை—உன்னை
பெற்று—எனக்கு விதேயமாகப்பெறுகையாலே
வானுளார்—பரமபத வாஸிகளான நித்யஸூரிகளுக்கும்
பெருமான்—மேலான மேன்மையையுடையனாய்
மதுசூதன்—தன்னை யநுபவிக்கப்பாரித்த என்னுடையப்ரதிபந்தகத்தை மதுவைமுடித்தாற்போலேமுடித்து
என்னம்மான்றானும் —என்னையடிமைகொண்டருளின தன்மையையுடையஅவனும்
யானும்—அவனை யநுபவிக்கவாசைப்பட்டு அடிமைபுக்கநானும்
தன்னுள்ளே — தனக்குள்ளே
எல்லாம்—எல்லாவினிமையுமாம்படி
தேனும்—தேனும் தேனும்
பாலும்—பாலும் பாலும்
நெய்யும்—நெய்யும் நெய்யும்
கன்னலும்—கன்னலும் கன்னலும்
அமுதுமொத்து—அமுதமுமமுதமும் போல
கலந்தொழிந்தோம்—கலந்துவிட்டோம்.

இத்தால் - ஏகஜாதித்ரவ்யங்கலந்தாற்போலே யென்கிறபடி. அநேகத்ருஷ்டாந்ததாத்பர்யம் - ஸர்வவிதஸாரஸ்யமுந் தோற்றுகைக்காக. தேனென்று-ஸர்வரஸஸமவாயம். பாலென்று - ஸ்வாபாவிகரஸம். நெய்யென்று - ப்ரும்ஹணரஸம். கன்னலென்று-கரும்பாய், அதினுடைய பாகஜரஸத்தைநினைக்கிறது. அமுதென்று - நித்யரஸம். உயிரென்று - ப்ராணாஶ்ரயமான நெஞ்சைச்சொல்லுகிறது. போவென்று - ஸாதரமான ஸம்புத்திஸூசகம். (க)

ஆறு ;— ஆஶ்ரிதஸம்ஶ்லேஷைகபோகனாய், ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனாய், எனக்கு ஸ்வாமியாயிருந்த எம்பெருமான்றானும்யானும் எல்லாப்படியாலு மிந்தக்கலவியினுள்ளே யெல்லாரஸங்

களுமுண்டாம்படி கலந்தொழிந்தோம்; திருநாட்டிலே சென்றால் ரஸிக்கக்கடவபகவத்தேக போகத்வத்தை, இந்தப்ரக்ருதியிலேயிருந்துவைத்தே பெற்று வாழ்கிறநெஞ்சே, உன்னைப்பெற்றே இந்தஸம்ருத்தியெல்லாம் விளைந்தது; நல்லைநல்லையென்று நெஞ்சைக்கொண்டாடுகிறார். ... ... ... ... (க)

ஈடு; அவ;—(இரண்டாம்பாட்டு) இப்பாட்டு ப்ரஸ்துதமான வளவிலே எம்பார் கோஷ்டியிலே "இவ்வாத்மாவுக்குப்ரதமகுருவார்" என்றுபிறந்ததாய், இருந்த முதலிகளில்சிலர், "ஆசார்யனன்றோ" என்றார்கள்; சிலர் "ஆசார்யன் ஸ்ரீபாதத்திலே ஆஸ்ரயிக்கப்போரு என்று அழைத்துக் கொண்டுபோய்ச் சேரவிட்ட ஸ்ரீவைஷ்ணவன்ப்ரதமகுரு" என்றார்கள்; "அங்ஙனன்றுகாண், அவனிவனை யழைத்தாலும் இவன் 'அல்லேன்' என்னும்படி (க) 'இசைவித்தென்னை' என்கிறபடியே அகவாயிலேயிருந்து இசைவித்த ஸர்வேஶ்வரன்காண் ப்ரதமகுரு" என்றருளிச்செய்தார்.

"அகன்றநம்மை அவன்திருவடிகளிலே சேரவிட்டதுநெஞ்சிறே" என்று இவர் திருவுள்ளத்தைக் கொண்டாடப்புக்கவாறே, "நீர்வழிபோவாரைக்கொண்டாடுகிறதென்? அடியறியாதே" என்ன; ஆராய்ந்தவாறே, அதுக்குமடி அவனாயிருந்தது; "நடுவே நெஞ்சைக்கொண்டாடினோ மித்தனையாகாதே" என்று, அத்தைவிட்டு - "என்னையுமிசைவித்த ஸர்வேஶ்வரனைக்கொண்டாடீர்" என்ன; தந்திருவுள்ளத்தைவிட்டு, ஸர்வேஶ்வரனைக் கொண்டாடுகிறார்.

ஒத்தார்மிக்காரை யிலையாயமாமாய
ஒத்தாயெப்பொருட்கு*முயிராயென்னைப்பெற்ற
அத்தாயாய்த்தந்தையா யறியாதனவறிவித்து
அத்தாநீசெய்தன வடியேனறியேனே. (உ)

ப;—அநந்தரம் ஏவம்விதஸாரஸ்யயுக்தன் தம்விஷயத்தில் பண்ணினவுபகாரமபரிச்சேத்யமென்கிறார்.

ஒத்தார்மிக்காரையிலையாய—இந்தஸாரஸ்யாதிசயத்துக்கு ஸமாப்யதிகரஹிதனாய் மாமாய—ப்ரதிக்ஷணமநுபவியாநின்றாலும் அபூர்வவத்விஸ்மயாவஹமானமஹாஶ்சர்யயுக்தனாய் ஒத்தாயெப்பொருட்கும் } ஸர்வபதார்த்த ஸஜாதீயனாய்வந்தவதரித்து அநுபவிப்பிக்குமவனாய்

உயிராய்—ஆத்மாசரீரத்துக்கு தாரகனுமோபாதி, ஸர்வபதார்த்த
என்னை—என்னை தாரகனாய்
பெற்ற—உத்பாதித்த
அ—அந்த வஸாதாரணஸம் பந்தத்தையுடைய
தாயாய்—தாயாம்படிப்ரியபரனாய்
அ—தகாவிதோத்பத்திஹேதுவான
தந்தையாய்—பிதாவாம்படி ஹிதபரனு(ஆசார்யனுபாதி) மாய்
அறியாதன—அஜ்ஞாதமான அபவாதிகளை
அறிவித்து—அறிவிப்பதுஞ்செய்து
அத்தா—இவ்வுபகாரங்களுக் கடியான ஸம்பந்தத்தையுமுடையவனே
நீ—ஸோபாதிகரானவவர்களைப் போலன்றியே நிருபாதிகஸம்பந்தயுக்தனனநீ
செய்தன—செய்தவுபகாரங்கள்
அடியேன் — அடியேனனவுறவாலேயென்றிருக்குமதொழிய
அறியேன்—அளவிட்டறியமாட்டுகிறிலேன்.

ஸர்வவிதபந்துவான நாராயணனிறே மாதாவும் பிதாவும் குருவுமென்று கருத்து. (உ)

ஆறு ;—(ஒத்தார்) இப்படி நெஞ்சைக்கொண்டாடி, எம்பெருமான் தமக்குச்செய்தருளின ஸம்ருத்தியை அவன்றனக்குச்சொல்லிக்கொண்டநுபவிக்கிறார்.

நிரஸ்தஸமாப்யதிகனாய், ஆஶ்சர்யபூதனாயிருந்துவைத்து, ஆஶ்ரித ஜநங்களெல்லாரோடும் ஸஜாதீயனாய்வந்து பிறந்தருளி, அவர்களுக்கத்யந்தஸுலபனாயிருந்து, எனக்கவ்வளவன்றிக்கே ஒருவன் தான்தனக்குச்செய்யும் நன்மையும், மாதா புத்ரனுக்குச்செய்யும் நன்மையும், பிதா புத்ரனுக்குச்செய்யும் நன்மையும், ஆசார்யன் ஶிஷ்யனுக்குச் செய்யும் நன்மையும் செய்தருளினாய் ; இன்னமடியேன் திறத்து நீசெய்தருளினவற்றுக்கொரு முடிவுகாண்கிறிலேனென்கிறார். ... ... ... (உ)

---

ஈடு ; அவ ;—(மூன்றாம்பாட்டு) ஆளவந்தாரருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி - "அறிவுநடையாடாததசையிலே ஸம்பந்தஜ்ஞாநத்தைப்பிறப்பித்து, பிறந்தஜ்ஞாநத்தையழிக்கக்கடவதான தேஹஸம்பந்தத்தோடே பின்னையும்வைத்தாய், என்கிற இழவாலே சொல்லுகிறார்" என்றாம். இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "முன்னிற்பாட்டுக்களும் பின்னிற்பாட்டுக்களும் ப்ரீதியோடேநடவாநிற்க, நடுவே அப்ரீதிதோற்றச்சொல்லுமதுசேராது, ஆனபின்பிங்ஙனேயாமித்தனை;"அறியாமாமாயத்தடியேனை அறியாக்

காலத்துள்ளே யடிமைக்கணன்புசெய்வித்து - வைத்தாயால் - என்கிறார்" என்று இத்தையும் ஒருவுபகாரமாக்கி யருளிச்செய்தார். "அத்தாநீசெய்தன" என்று-நாம்பண்ணினவுபகாரங்களைச்சொல்லாநின்றீர்; அவற்றிலே நீர்மதித்திருப்பதொரு வுபகாரத்தைச்சொல்லிக்காணீரென்ன; அத்தைச்சொல்லுகிறார்.

அறியாக்காலத்துள்ளே யடிமைக்கணன்புசெய்வித்து
அறியாமாமாயத்தடியேனை வைத்தாயால்
அறியாமைக்குறளாய் நிலம்மாவலிமூவடியென்று
அறியாமைவஞ்சித்தா யெனதாவியுள்கலந்தே. (௩)

ப;—அநந்தரம் தன்பக்கலிலே அவன் தம்மையபிநிவேசிப்பித்தபடியை யருளிச்செய்கிறார்.

அறியாமை—பிறர் தன்னையுள்ளபடியறியாதபடிவடிவழகாலே மதிமயக்கின

குறளாய்—வாமநனானவனாய்

நிலம்மாவலிமூவடியென்று—நிலம்மாவலிமூவடியென்று அநந்விதபதமாய் அபரிஸமாப்தமானவாக்யத்தாலே

அறியாமை—"இவனீச்வரன்" என்றறிவிக்கிற ஶங்க்ராதிகள் பாசுரமும்நெஞ்சில்படாதபடியாக

வஞ்சித்தாய் — அவன் "தன்னது" என்றிருந்த ஜகத்தை வஞ்சித்துக்கொண்டவனே!

எனதாவியுள் கலந்து—இவ்வபதாநத்தையெனக்கு ப்ரகாசிப்பித்துஎன்னெஞ்சுக்குள்ளேகலந்துஅக்கணக்கிலே

அறியா—அறியாமையை விளைப்பதாய்

மா—துஸ்தரமான பெருமையையுடைத்தாய்

மாயத்து—மாயாகார்யமான ஸம்ஸாரத்திலே

அடியேனை-ஸ்வதஸ்ஸித்தமான சேஷத்வஸம்பந்தம் பற்றாசாக என்னை

அறியாக்காலத்துள்ளே—அந்த சேஷத்வமறிகைக்கு ஸம்பாவனையில்லாக்காலத்திலே

அடிமைக்கண்—தத்பலமான சேஷவ்ருத்தியிலே

அன்பு—ஆதரத்தை

செய்வித்துவைத்தாயால்—பிறப்பித்து வைத்தாயிறே.

இது, உன்னுடைமை நழுவவிடாமைக்கிறே யென்று கருத்து. (௩)

ஆறு;—(அறியா) தம்திறத்திலெம்பெருமான் செய்தருளின நன்மைகளைப்பேசுகிறார். ... ... (௩)

ஈடு ; அவ ;—(நான்காம்பாட்டு) "வைத்தாயால்" என்று அவன் பண்ணினவுபகாரத்தையநுஸந்தித்து, இங்ஙனேகிடந்து நெஞ்சாறல் படாநில்லாதே, ப்ரத்யுபகாரமாக உம்மதாயிருப்பதொரு வஸ்து வைக்கொடுத்து நெஞ்சாறல் தீரமாட்டீரோவென்ன ; "அப்படியே யிதேசெய்வது" என்று அவன் திருவடிகளிலே ஆத்மஸமர்ப்பணத் தைப்பண்ணி யநுஸயிக்கிறார்.

எனதாவியுள்கலந்த பெருநல்லுதவிக்கைம்மாறு
எனதாவிதந்தொழிந்தே னினிமீள்வதென்பதுண்டே
எனதாவியாவியும்நீ பொழிலேழுமுண்டவெந்தாய்
எனதாவியார்யானார் தந்தநீகொண்டாக்கினையே. (ச)

ப ;—அநந்தரம் இவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

பொழிலேழும்—ஸமஸ்தலோகங்களும் ப்ரளயத்திலேயழியப்புக
உண்ட—வயிற்றிலேவைத்துநோக்கின
எந்தாய்—ஸ்வாமியே !
(அப்படிநானுமழிந்துபோகாதபடி)
எனதாவியுள்-அத்யந்தஹேயமான என்னுத்மாவுக்குள்ளே
கலந்த—ஒருநீராகக்கலந்த
பெரு— அதுதன்பேறும்படிபெருத்து
நல்—நிர்ஹேதுகமாகையாலே நன்றான
உதவி—உதவிக்கு
கைம்மாறு—ப்ரத்யுபகாரமாக
எனதாவி—என்னுத்மாவை
தந்தொழிந்தேன்—உனக்குத் தந்தேவிட்டேன்;
இனி—இனி
மீள்வதென்பது—அதுக்குமீட்சி யென்பதொன்று
உண்டே—இல்லை;

(இது தானுரதென்றாயில்)
எனதாவியும்—என்னுத்மாவுக்கும்
ஆவி—ஆத்மா
நீ—நீ; (ஆதலால்)
எனதாவியார்—தரப்படுகிறவென் ஸ்வரூபத்தினுடைய கர்மத்வமும் நானிட்டவழக்கல்ல;
யானார்—தருகிற என்னுடைய கர்த்ருத்வமும் நானிட்டவழக்கல்ல;
தந்த — தாத்ருத்வகர்த்ருத்வாதிவிஸிஷ்டமான விவ்வஸ்துவினுடையஸத்தையையடியிலே யுண்டாக்கித்தந்த
நீயே—நீதானே
கொண்டாக்கினை—பின்னையும் ஸ்வீகரித்தாய்;

ஆதலால், உனக்கே ஶேஷமென்றிட்டு, எனக்கு ஸமர்ப்பணத்தில் கர்மத்வமில்லை, கர்த்ருத்வமுமில்லை. கைம்மாறு - ப்ரத்யுபகாரம். (ச)

ஆறு ;—(எனதாவி) இப்படி எம்பெருமானோடுகலந்த கலவியாலுள்ள நிரவதிகப்ரீதியாலே யறிவழிந்து, "இவ்வாத்மா தம்முடை

யதன்று" என்று நிரூபிக்கமாட்டாராய், அவன் தம்மோடுகலந்த விப்பெருநல்லுதவிக்குக் கைம்மாறாகத் தம்முடைய ஆத்மாவை அவனுக்கு மீளாவடிமையாகக்கொடுத்து, பின்னையுந் தம்முடையஸ்வரூபத்தையுள்ளபடி விவேகித்து, தருகிற நானார், தரப்புகுகிறவிவ்வாத்மாவார், பண்டே உனக்குச்சேஷமாயிருக்கிற விவ்வாத்மாவை நீகொண்டருளின யத்நனையிறே யென்கிறார். ... (௪)

ஈடு ; அவ ;—( ஐந்தாம்பாட்டு ) ஜ்ஞாநலாபமே அமையுமோ, ப்ராப்திவேண்டாவோவென்ன ; எனக்கு ப்ரதமஸுக்ருதமும் நீயேயாய், என்னை ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தனாக்கினவன்றே பெற்றேனேயன்றோவென்கிறார்.

இனியார்ஞானங்களா லெடுக்கலெழாதவெந்தாய்
கனிவார்வீட்டின்பமே யென்கடற்படாவமுதே
தனியேன்வாழ்முதலே பொழிலேழுமேனமொன்றாய்
நுனியார்கோட்டில்வைத்தா யுனபாதஞ்சேர்ந்தேனே. (௫)

**ப** ;—அநந்தரம் உன்னுடைய அப்ராக்ருதபோக்யதையைக்காட்டி ருசிஜநகனானபடியாலே உன் திருவடிகளைப் பெற்றேனல்லேனோ வென்கிறார்.

யார்—எத்தனையேனுமதிப்ரயிதரானவர்களுடைய
ஞானங்களால்—ஜ்ஞாநங்களால்
எடுக்கல்—எடுக்கைக்கு
எழாத—எடுப்புண்ணாத
எந்தாய்—ஸ்வாமியாய்
கனிவார்—உன்பக்கல் ஸ்நேஹத்தாலே பரிபக்வஹ்ருதயரானவர்களுக்கு
வீட்டின்பமே—மோக்ஷாநந்தபூதனாய்
என்—உபயவ்யாவ்ருத்தனானவெனக்கு (மந்நாதியத்நத்தால்)
கடல்—கடலிலே
படா—உண்டாகாத
அமுதே—அப்ராக்ருதமானவம்ருதமாய்
தனியேன்—ஸம்ஸாரத்திற்பொருந்தாமையாலே தனியனானவென்னுடைய
வாழ்—த்வதநுபவரூபமான வாழ்வுக்கு
முதலே—ருசிஜநகத்வாதியாலே ப்ரதமஹேதுபூதனாய் (என்னைஸம்ஸாரார்ணவத்தினின்றுமெடுக்கைக்கு ஸூசகமாக)
பொழிலேழும்—ஸப்தத்வீபயுக்தமான ஜகத்தை
ஒன்று—அத்விதீயமான
ஏனமாய்—மஹாவராஹமாய்க்கொண்டு
நுனியார்—கூர்மைமிக்க
கோட்டில்—கொம்பிலே
வைத்தாய்—வைத்தவனே!
இனி—இனிநீயேஹேதுபூதனாய் நிர்வஹிக்கிறபின்பு
உனபாதம—உனதிருவடிகளை
சேர்ந்தேனே-ப்ராபித்தேனே யன்றோ.

ஏகாரம் - தேற்றம். எடுக்கல் - தம்வசமாக்குதல்.

ஆறு ;—(இனியார்) அநாஶ்ரிதரெத்தனையேனு முத்க்ருஷ்டரேயாகிலும் அவர்களுடைய ஜ்ஞாநங்களுக்ககோசரனாய், அநந்யபக்திகளாயிருப்பார்க்குப்பரமஸுலபனாய், தாத்ருஶபக்திஹீநனாயிருக்கச்செய்தே எனக்கயத்நஸித்தபோக்யனாய், ஸமுத்ரத்திலேயழுந்திக்கிடக்கிற வாத்மவர்க்கத்தை நிர்ஹேதுகமாகவெடுத்து உஜ்ஜீவிப்பித்தாற்போலே, உன்னுடையக்ருபையாலே, அநந்யகதியாயிருந்த வென்னுடைய வுஜ்ஜீவநஹேதுபூதனானவனே, உன்திருவடிகளை இனியொருநாளும் பிரியாதொருபடி சேர்ந்தேனேயென்கிறார்.

---

ஈடு ; அவ ;—(ஆறும்பாட்டு) "இனியுனபாதஞ்சேர்ந்தேனே" என்றார் ; "இனி" என்று விஶேஷிக்கவேணுமோ, *பொய்ந்நின்றஞானத்திலே நீவிஶேஷகடாக்ஷம்பண்ணினபோதே கிட்டிற்றிலேனோவென்னுதல் ; அன்றிக்கே, ஸ்வரூபத்தையநுஸந்தித்தவாறே ஸ்வாபாவிகஶேஷத்வமேயாய் நிலைநின்றவாகாரம், நடுவுள்ளது வந்தேறியாய்த்தோற்றுகையாலே சொல்லுகிறாராகவுமாம்.

சேர்ந்தார்தீவினைகட் கருநஞ்சைத்திண்மதியைத்
தீர்ந்தார்தம்மனத்துப் பிரியாதவருயிரைச்
சோர்ந்தேபோகல்கொடாச் சுடரையரக்கியைமூக்
கீர்ந்தாயையடியே னடைந்தேன்முதன்முன்னமே. (௬)

ப ;—அநந்தரம் இந்தப்ராப்தி, ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே அநாதிஸித்தமன்றோ வென்கிறார்.

சேர்ந்தார் — உன்னையடைந்த வர்களுடைய
தீ—க்ரூரமான
வினைகட்கு—பாபங்களுக்கு
அரு—ஆற்றவரிய
நஞ்சை—நஞ்சாய்
திண்மதியை—திண்ணிதான மதியாகிற-வ்யவஸாயம்தானாய் நிற்கிறானென்னலாம்படியதுக்குத்பாதகனாய்
தீர்ந்தார்தம்—அந்த வ்யவஸாயத்தையுடையவர்களுடைய
மனத்து—மநஸ்ஸிலே
பிரியாது—விடாதே
அவருயிரை—அவர்களாத்மவஸ்துவை
சோர்ந்தே-என்றும் விஷயாந்தரங்களிலேபுக்குச்சோர்ந்து
போகல்கொடா—போகக்கொடாதே
சுடரை—தன்வடிவையே யவர்களுக்கு விஷயமாக்கு முஜ்ஜ்வல ஸ்வபாவனாய்
(அவர்கள்விஷயருசியை)
அரக்கியை—சூர்ப்பணகியை

| | |
|---|---|
| மூக்கீர்ந்தாயை — அழித்தாற்போலே யழித்துக்கொடுக்க வல்லவுன்னை | ஸ்வரூபத்தையுடைய நான் |
| அடியேன் — உனக்குசேஷபூதமான | முதன்முன்னமே—முதலுக்குமுன்னே அடைந்தேனே- அடைந்தேனல்லவோ |

* மயர்வறமதிநலமருளுவதற்குமுன்னே ப்ராப்தியுண்டல்லவோவென்று கருத்து. (௪)

ஆறு ;—(சேர்ந்தார்) "போனகாலமும் ஸம்ஶ்லேஷித்தோம்" என்று தமக்குத்தோற்றும்படி யெம்பெருமானோடே தாம்ஸம்ஶ்லேஷிக்கையாலே, ஆஶ்ரிதருடைய ஸ்வவிஷயதிவ்ய ஜ்ஞாநவிரோதி பாபங்களுக்கு நஞ்சாய், அவர்களுக்கு ஸ்வவிஷயத்ருடஜ்ஞாநப்ரதனாய், இப்படி தன்னுடையப்ரஸாதத்தாலே லப்தஜ்ஞாநராகையாலே * ஸம்யக்வ்யவஸிதராயிருந்தவர்களை ஸம்ஸாரத்தில்புகவிடாதே அவர்களோடுபிரியாதே ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனுமாய், ஆஶ்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவனுமாயிருந்தவுன்னோடு இன்றோ அடியேன் ஸம்ஶ்லேஷிக்கப் பெற்றது, இவ்வாத்மாவுள்ளவன்றே பெற்றேனன்றோவென்கிறார். ... ... (௬)

ஈடு ; அவ ;—(ஏழாம்பாட்டு) இப்படி தாம்பெற்ற பேற்றின் கனத்தையுமநுஸந்தித்து, இவ்விஷயத்தினுடைய போக்யதையையுமநுஸந்தித்து, "இதிருந்தபடிகண்டோமுக்குத் தொங்காதுபோலேயிருந்தது" என்றதிஶங்கை பண்ணி, தேவரென்னைக்கைவிடில் நானுளேனாகேன், என்னைக்கைவிடாதொழிய வேணுமென்கிறார்.

முன்னல்யாழ்பயில் நூல்நரம்பின்முதிர்சுவையே
பன்னலார்பயிலும் பரனேபவித்திரனே
கன்னலேயமுதே கார்முகிலேயென்கண்ணா
நின்னலாலிலேன்காணென்னைநீகுறிக்கொள்ளே. (எ)

ப ;—அநந்தரம் இப்படி யுபகரித்த நிரதிஶயபோக்யனை வுன்னை யொழிந்தால் எனக்கு ஸத்தையுண்டோவென்கிறார்.

| | |
|---|---|
| முன்—அநாதியாய் | நூல்—கீதஶாஸ்த்ரத்தில் லக்ஷணாந்தப் |
| நல்—விலக்ஷணமாய் | நரம்பில்—நரம்பிலேகிளர்ந்த பாத |
| யாழ்—யாழைப்பற்றியிருப்பதாய் | முதிர்—முதிர்ந்த |
| பயில்—வ்யுத்பித்ஸுக்களாலே பயிலப்படுவதான | சுவையே—கீதரஸம்போலே நிரதிஶய போக்யபூதனாய் |

பல்—இந்த்ரஸஜ்ஞராய் பஹுவிதரா யிருக்கிற
நலார்—அஸ்கலிதஜ்ஞாநாதி வைலக்ஷண்யத்தை யுடையார்
பயிலும் — நித்யாநுபவம் பண்ணுவதற்கு
பரனே—மேலாயிருக்குமவனாய் [ற்கு
பவித்திரனே— இந்த்ரஸஜ்ஞரல்லாதார்க்கு மஜ்ஞாநாதி தோஷங்களைப்போக்கிபுஜிப்பிக்கும்பாவநபூதனாய்
கன்னலே—இக்ஷுரஸம்போலே பர்வந்தோறும் நிரதிஶயபோக்யபூதனாய்
அமுதே—அழிந்தாரையுமாக் குவதான அம்ருதரஸமாய்
கார்முகிலே—ஏவம் விதஸாரஸ்யத்துக் காஶ்ரயமான கார்காலத்தில்மேகம்போலேஉதாரவிக்ரஹயுக்தனாய்
என்—அவ்வடிவழகோடே யெனக்கு பாவ்யனானைக்கு
கண்ணா—க்ருஷ்ணனானவனே
நின்னலால்—இப்படி நிரதிஶயபோக்யபூதனானவுன்னையொழிந்தால்
இலேன்காண்—எனக்குஸத்தையில்லைகாண்;
என்னை—வ்யதிரேகத்திலழியும் படியானவென்னை
நீ — வ்யதிரேகத்திலழிக்கும்படி யான போக்யதையையுடையநீ
குறிக்கொள்—இரண்டுதலையையுமறிந்து திருவுள்ளம்பற்றவேணும்.(எ)

ஆறு;—(முன்னல்) ஸர்வ கரணங்களுக்கும் நிரவதிக போக்யபூதனாய், உன்திருவடிகளுக்கு நல்லராயிருப்பாரெல்லாருக்கும் உன்னைக்கொடுக்கும் ஸ்வபாவனாய், அவர்களுடைய த்வதநுபவவிரோதி ஸர்வதோஷநிரஸநஸ்வபாவனாயிருந்த வுன்னை யெனக்கு நிர்ஹேதுகமாகத் தந்தருளினாய்; நீயல்லது எனக்கொரு தாரகமில்லை; இனியென்னைக் கைவிடாதே கிடாய் என்று கொண்டு, "எம்பெருமானோடு தமக்கு ப்ரவ்ருத்தமான ஸம்ஶ்லேஷத்துக்கு பங்கம்வருகிறதோ" என்னுமதிஶங்கையாலே யெம்பெருமானையபேக்ஷிக்கிறார்.

---

ஈடு; அவ;—(எட்டாம்பாட்டு) "என்னைநீகுறிக்கொளே" என்றவாறே அவன்குளிரக்கடாக்ஷித்தான், அத்தாலே ஸகலவ்யஸநங்களும்போய் அவனை யநுபவிக்கிறார்.

குறிக்கொள்ஞானங்களா லெனையூழிசெய் தவமும்
கிறிக்கொண்டிப்பிறப்பே சிலநாளிலெய் தினன்யான்
உறிக்கொண்டவெண்ணெய்பா லொளித்துண்ணுமம்மான்பின்
நெறிக்கொண்டநெஞ்சனாய்ப் பிறவித்துயர்கடிந்தே. (அ)

ப;—அநந்தரம் இவ்வநுபவம் தமக்குக்கைவந்தபடியை யருளிச்செய்கிறார்.

உறி—உறியிலே
கொண்ட—சேமித்துவைத்துகொண்ட
வெண்ணெய்—வெண்ணெயையும்
பால்—பாலையும்
ஒளித்து—உடையவர்களறியாமல் க்ருத்ரிமத்தாலேபுக்கு
உண்ணும்—அமுதுசெய்த செயலாலே
அம்மான்—அடிமைகொண்ட ஸ்வாமியான க்ருஷ்ணனுடைய
பின்—பின்னே
(அவ்வபதாநத்துக்குத்தோற்று)
நெறி—அவன்போனவழியே
கொண்ட—போய்த்திரிகிற
நெஞ்சனாய்—நெஞ்சையுடையேனாய்
பிறவித்துயர்-ஜந்மப்ரயுக்ததுரிதங்களை
கடிந்து—காற்கடைக் கொண்டநாதரித்து
குறிக்கொள்—கர்த்த்ருத்வாதித்யாகத்தாலும்மமதாதிகளாலும்குறிக்கொள்ளப்படுவதான
ஞானங்களால்—வேதநத்யாநோபாஸநரூபபர்வபேதங்களாலும்
(ஸத்வித்யாதஹராவித்யாதி வ்யக்திபேதங்களாலும் பலவகைப்பட்ட ஜ்ஞாநயோகங்களாலே) (க) "ஜ்ஞாநாநாம் ஸஹஸ்ரேஷு- ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு" (உ) "பஹூநாம் ஜந்மநாமந்தே" என்கிறபடியே
ஊழியூழி—அநேககாலங்களிலே
செய்—செய்யப்பட்ட
தவமும் — பக்தியோகமாகிறதபஸ்ஸினுடைய பலத்தை
கிறிக்கொண்டு—பகவத்க்ருபையாகிற நல்விரகைக்கொண்டு
இப்பிறப்பே—இஜ்ஜந்மத்திலே
சிலநாளில்—அல்பகாலத்திலே
யான் — அநுபவத்துக்கடைவில்லாத நான்
எய்தினன்—கிட்டப்பெற்றேன்.

கிறி - விரகு. (அ)

ஆறு ;—(குறிக்கொள்) தாமிப்படி யெம்பெருமானையபேக்ஷிக்க, அவனும், "நாம்விஶ்லேஷிக்க ப்ரஸங்கமென்" என்றருளிச்செய்ய, தாமும் நிவ்ருத்தாதி ஶங்கராய்க்கொண்டு ; அதிதுஷ்கரமாய் அநேககாலஸாத்யமான கர்மயோகஜ்ஞாந யோகஸஹக்ருதபக்தி யோகஸாத்யமானஸம்ஸார நிவ்ருத்தி பூர்வகபகவதநுபவத்தை இஜ்ஜந்மத்திலே அல்பகாலத்திலே அயத்நேந நான்பெற்றேனென்று தாம்பெற்ற ஸம்ருத்தியைச்சொல்லி யநுபவிக்கிறார். ... (அ)

---

ஈடு ; அவ ;—(ஒன்பதாம்பாட்டு) (ந) "ஸோஸ்நுதே ஸர்வாந்காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா - ஸோஸ்நுதே ஸர்வாந்காமாந்

---

(க) லக்ஷ்மீதந்த்ரம். (உ) கீதை - எ - கக. (ந) தை - ஆந - க.

ஸஹப்ரஹ்மணாவிபஶ்சிதா" என்கிறபடியே, என்னுடைய ஸகலது ரிதங்களும்போம்படி ஸர்வேஶ்வரனை யநுபவிக்கப்பேற்றேனென்று ஹ்ருஷ்டராகிறார்.

கடிவார் தண்ணந்துழாய்க் கண்ணன்விண்ணவர்பெருமான்
படிவானமிறந்தபரமன் பவித்திரன்சீர்ச்
செடியார்நோய்கள்கெடப் படிந்துகுடைந்தாடி
அடியேன்வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே. (௬)

ப ;—அநந்தம் இப்படியவன்குணங்களை யநுபவித்து ஆநந்தியானே னென்கிறார்.

கடி—பரிமளம்
வார்—ப்ரவஹியாநிற்கிற
தண்ணந்துழாய் — செவ்வித்திருத்துழாயையுடையனாய்க்கொண்டு
கண்ணன்—ஆஶ்ரிதபவ்யனை க்ருஷ்ணனாய்
விண்ணவர் பெருமான் — இவ்வடிவழகை யநுபவிக்கிறபரமபத வாஸிகளுக்கவ்வருகானமேன்மையையுடையதனக்கு
வானம்—பரமபதத்திலும்
படி—ஒப்பு
இறந்த—இல்லையாகையாலே
பரமன்—தனக்குமேலில்லையான பெரியவனாய்
பவித்திரன்—இப்பெருமையறியாதாரிவுகேட்டையும் போக்கியநுபவிப்பிக்கும்பாவநபூதனுடைய
சீர்—பாத்வஸௌலப்ய போக்யத்வபாவநத்வப்ரகாசகமானகுணங்களிலே
செடியார்—ஒன்றோடொன்று மிடைந்துதூறுமண்டினாற்போலேயிருக்கிற
நோய்கள்—விஷயருசி தொடக்கமான மஹாவ்யாதிகள்
கெட—நஶிக்கும்படி
படிந்து—கிட்டி
குடைந்து—எங்குமுட்புக்கு
ஆடி—முழுகி
அடியேன்—அவனை யொழியச்செல்லாதபடி அநந்யார்ஹனானநான்
வாய்மடுத்து-புஜிக்கைக்கு உபகரணமான அபிநிவேஶமாகிறவாயைமடுத்து
பருகி—பெருவிடாயன் தண்ணீர்குடித்தாற்போலே நிரம்பபுஜித்து
களித்தேன் — நிரதிஶயமானவாநந்தத்தைப்பெற்றேன்

படிவானமிறந்தவென்று-வடிவழகுக்கு மேகமொப்பல்ல வென்றுமாம்.(௬)

ஆறு ;—(கடிவார்) நிரவதிகபோக்யபூதனாய், * அயர்வறுமமரர்களதிபதியாய், திருநாட்டிலுங்கூடத் தன்னோடொத்தாரையும் மிக்காரையுமுடையவ னல்லாமையாலே பரமனாய், ஸ்வாஶ்ரிதருடைய ஸ்வஸம்ஶ்லேஷ விரோதிஸர்வதோஷங்களையும் போக்கும்

ஸ்வபாவனுயிருந்த வெம்பெருமானுடைய கல்யாணகுணங்களாகிற வம்ருதவெள்ளத்திலே என்னுடைய விடாயெல்லாங்கெடும்படி போய்ப் புக்குப்படிந்துகுடைந்தாடி வாய்மடுத்துப்பருகிக் களித்தே னடியேனென்கிறார். ... ... (௯)

---

ஈடு; அவ;—(பத்தாம்பாட்டு) "களித்தேன்" என்ற, திரியட்டும் ஸம்ஸாரிகளோடே யிருக்கையன்றியே, இவ்வநுபவத்துக்கு தேசிகரான நித்யஸூரிகள் திரளிலே போய்ப் புகுவதெப்போதோ வென்கிறார்.

களிப்புங்கவர்வுமற்றுப் பிறப்புப்பிணி மூப்பிறப்பற்று
ஒளிக்கொண்டசோதியுமா யுடன்கூடுவதென்றுகொலோ
துளிக்கின்றவானிந்நிலஞ் சுடராழிசங்கேந்தி
அளிக்கின்றமாயப்பிரா னடியார்கள்குழாங்களையே. (௧௦)

ப ;—அநந்தரம் ஏவம்விதபோகாநந்தத்துக்கு முக்யபோக்தாக்கள் ஸூரிகளாகையாலே, அவர்களோடுகூடுகையை யர்த்திக்கிறார்.

களிப்பும்—விஷயலாபத்தில் களிப்பும்
கவர்வும்—தத்அலாபத்திலபிநிவேஸமும்
அற்று—அற்று
பிறப்புப்பிணி மூப்பிறப்பற்று—அதுக்கடியான ஜந்ம வ்யாதிஜராமரணங்களுமற்று
ஒளிக்கொண்ட-ஆவிர்ப்பூதமான ஜ்ஞாநாதிகளாகிற ஒளிகளுக்கு ப்ரகாசகமான
சோதியுமாய்—ஜ்யோதிர்மய விக்ரஹத்தையுடையோமாய்க் கொண்டு
துளிக்கின்ற—வர்ஷிக்கிற
வான்—ஆகாசத்தையும்
இ—அத்தாலே தரிக்கிற
நிலம்—பூமியையும் (பாதகாஹிதமாம்படி)
சுடர்—பேரொளியையுடைய
ஆழி—திருவாழியையும்
சங்கு—திருச்சங்கையும்
ஏந்தி—ஏந்தி
அளிக்கின்ற—ரக்ஷித்தருளுகிற
மாயப்பிரான்—மஹோபகாரகனுடைய
அடியார்கள் — நித்யதாஸ்யைக நிரூபணீயரான ஸூரிகளுடைய
குழாங்களை—ஸங்கங்களை
உடன்—ஒருகோம்படி யுடன்பட்டு
கூடுவது—கூடுவது
என்றுகொலோ—என்றோ.

ஸமஸ்தவிரோதி நிவ்ருத்திபிறந்து ஆவிர்ப்பூதஸ்வரூப ஸ்வபாவரானவர்க்குப்ராப்யம் அடியாரான ஸூரிகளென்றுகருத்து. (௧௦)

ஆறு ;—(களிப்பும்) இப்படி யெம்பெருமானுடைய குணங்களாகிற அம்ருதத்தை புஜிக்கிறவாழ்வார், இந்தவம்ருதத்தை நிரஸ்

தஸமஸ்த ப்ரதிபந்தகனுப்கொண்டு பகவத்குணைகபோகரானநித் ஸித்தபுருஷர்களுடைய திவ்யபரிஷத்திலேசென்று அவர்களோடே கூட நான்புஜிப்பதென்றோ வென்கிறார். ... (௧

ஈடு ; அவ ; —(பதினோராம்பாட்டு) நிகமத்தில் - இத்திருவாய் மொழியை, பகவதேகபோகராயிருப்பாரென்னைப்போலே தனிப்பட டாதே திரளாகவநுபவியுங்கோளென்கிறார்.

குழாங்கொள் பேரரக்கன்குலம்வீயமுனிந்தவனைக்
குழாங்கொள்தென்குருகூர்ச்சடகோபன்தெரிந்துரைத்த
குழாங்கொளாயிரத்து ளிவைபத்துமுடன்பாடிக்
குழாங்களாயடியீருடன்கூடிநின்றாடுமினே (௧௧)

ப ;—அநந்தரம், இத்திருவாய்மொழியைப்பாடி பரஸ்பரஸங்கதராய் ஸங்கி பவித்து ப்ரீதிப்ரேரிதராய் வர்த்தியுங்கோளென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

குழாங்கொள்-பாதகரான ராக்ஷஸரைத் திரள்திரளாகவுடையனு யிருக்கிற
பேர்—பெருமையையுடையனுன ராவ ணனுகிற
அரக்கன்-ராக்ஷஸனுடைய
குலம்—குலமகப்பட
வீய—நசிக்கும்படி
முனிந்தவனை—முனிந்தருளினவனை
குழாங்கொள் — ஸ்ரீ வைஷ்ணவர்கள் திரளையுடைத்தான
தென்குருகூர்—திருநகரிக்கு நிர்வாஹ கரான
சடகோபன்—ஆழ்வார்
தெரிந்து—ஆராய்ந்து
உரைத்த—அருளிச்செய்த
குழாங்கொள்—பத்தானதிரள்களை வடி வாகவுடைத்தான
ஆயிரத்துள்—ஆயிரம் திருவாய்மொழி யிலும்
இவைபத்தும்—இவைபத்தையும்
உடன்—அர்த்தத்தோடே யுடன்பட்டு
பாடி—ப்ரீதிக்குப் போக்குவீடாகப்பாடி
குழாங்களாய்—பரஸ்பர ஸம்ஶ்லிஷ்ட ராய்க்கொண்டு பல திரளாய்
அடியீருடன் — அடியாரான வுங்கள் ஸ்வரூபத்துக்கநுரூபமாம் படி ஏககண்டராய்
கூடி—ஸம்ஶ்லேஷித்து
நின்று—இடைவிடாதே நின்று
ஆடுமின் — ஸஸம்ப்ரமந்ருத்தம் பண் ணப்பாருங்கோள்.

இது - கலிவிருத்தம்.

(௧௧)

ஆறு ;—(குழாங்கொள்) ஸபுத்ரஜநபாந்தவமாக ராவணன்மடி யும்படி சிவந்தவனையுள்ளபடிகண்டுசொன்ன இத்திருவாய்மொழியை பகவதேக போகராயிருப்பாரெல்லாருங்கூடி புஜியுங்களென்கிறார்.

ஈடு ;—முதற்பாட்டில், திருவுள்ளத்தைக் கொண்டாடினார் ; இரண்டாம்பாட்டில், அத்தையுமிசைவித்த ஸர்வேஶ்வரனைக்கொண்டாடினார் ; மூன்றாம்பாட்டில், தம்நெஞ்சிற்பட்டதொரு உபகாரத்தைச்சொன்னார் ; நாலாம்பாட்டில், அதுக்குப்ரத்யுபகாரமாக ஆத்மஸமர்ப்பணம்பண்ணி அது தனக்கநுரூபித்தார் ; அஞ்சாம்பாட்டில், எனக்குப்ராதமஸுக்ருதமும் நீயேயானபின்பு உன் திருவடிகளைக்கிட்டினேனேயன்றோவென்றார் ; ஆறாம்பாட்டில், இன்றோகிட்டிற்று, தேவரெனக்கு விசேஷகடாக்ஷம்பண்ணினவன்றே பெற்றேனேயல்லேனோவென்றார் ; ஏழாம்பாட்டில், அவனுடையபோக்யதையையநுஸந்தித்து, உன்னைப்பிரியில் தரியேனென்றார்; எட்டாம்பாட்டில் இப்படி நிரதிஶயபோக்யனானவனை எளியதொருவிஷயமாலே லபிக்கப்பெற்றேனென்றாராதல்; அன்றியே, அநேககாலங்கூடிப்பண்ணிலபிக்கக்கடவ தபஃபலத்தை அவனைப்பின்சென்று எளிதாகலபித்தேனென்னுதல் ; ஒன்பதாம்பாட்டில், என்னுடைய ஸகலக்லேஶங்களும் போம்படியநுபவித்துக்களித்தேனென்றார் ; பத்தாம்பாட்டில் இப்படியிவனையநுபவித்துக்களிப்பார் திரளிலேபோய்ப்புகப்பெறுவதெப்போதோ வென்றார் ; நிகமத்தில், இத்திருவாய்மொழியை ஸாபிப்ராயமாக வப்யஸித்து, நாலுநாளும் நால்வரிருவருள்ளார் கூடியிருந்தநுபவிக்கப்பாருங்கோளென்கிறார். (கக)

வடக்குத்திருவீதிப் பிள்ளை திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் மூன்றாந்திருவாய்மொழி

முற்றிற்று.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## இரண்டாம்பத்து

# நான்காந் திருவாய்மொழி

## ஆடியாடி ப்ரவேசங்கள்.

---

ய ;—நாலாந்திருவாய்மொழியில், இப்படி தாமாசைப்பட்டபடியை யநுபவிக்கப்பெறாமையா லவஸந்நராய், "தமக்குப்பிறந்த ஆர்த்த்யதிசயத்தை ஶமிப்பிக்கைக்கு, ஸர்வரக்ஷகனாய் போக்யபூதனானவனையொழிய இல்லை" என்றறுதியிட்டு; அவன் ஆஶ்ரிதனான ப்ரஹ்லாதனுக்குதவினபடியையும், அநிருத்தனுக் குதவினபடியையும், அபிமதையான பிராட்டிக் குதவினபடியையும், நாட்டுக்குதவினபடியையும், ஶத்தபாவதையையும், நிரதிஶயபோக்யதையையும் ரக்ஷணார்த்தமான ஆஸத்தியையும், ஆஸந்நஜநங்களுக்கு மநுபவவிரோதிகளைப் போக்கினபடியையும், ரக்ஷணோபகாரணவத்தையையும், விரோதிமிகுத்தாலும் வென்று ழிப்பண்ணும் வீரப்பாட்டையு மநுஸந்தித்து, தம்முடைய ஆர்த்தியைப் பரிவர்முகத்தாலே அவனுக்கறிவித்தபடியை, பிரிந்தநிலைமகளாற்றாமைக்கு நல்தாயிரங்கின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். ... *

ஆறு ;—(ஆடியாடி) இப்படிநித்யபுருஷர்களோடேகூட வெம்பெருமானை யநுபவிக்க ஆசைப்பட்டவாழ்வார், அப்போதே யப்படி யநுபவிக்கப்பெறாமையாலே வந்தநிரதிஶயாவஸாதத்தாலே யொரு க்ஷணமாத்ரமு மாத்மதாரணம்பண்ண வொண்ணாத தபநீயதஶாபந்நராய், அந்தத்தஶாநுகுணமாக வெம்பெருமானைக்குறித்துத் தாம் சொல்லுகிறவார்த்தைகளையுஞ் செய்கிறசேஷ்டிதங்களையுங் கண்டு தம்மோடுஸமாநஶோகரான தம்முடையபந்துக்க ளெம்பெருமானை நோக்கித் தம்முடையதசையை விண்ணப்பஞ்செய்து சொல்லுகிறபடியை யநுஸந்தித்து; இப்பொருளை, எம்பெருமானை யாசைப்பட்டு அத்யந்தமவஸந்நையா யிருந்தாளொரு பிராட்டியுடைய திருத்தாயார் அவளுடைய தசையைவிண்ணப்பஞ்செய்துகொண்டு, "இவள் முடிவதற்குமுன்பே சடுக்கெனவந்துவிஷயீகரித்தருள வேணும்" என்றுகொண்டெம்பெருமானை யபேக்ஷிக்கிற வாக்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார்.

ஈடு ;—கீழிற்றிருவாய்மொழியிலே - "பருகிக்களித்தேனே" என்று ஹ்ருஷ்டராய், "அது தன்னைப்பாகவதர்களோடே உசாவித்

தரிக்கவேணும்" என்றுபாரித்து, அதுக்கிவ்விபூதியிலாளில்லாமை யாலே, நித்யவிபூதியிலே நித்யஸூரிகள் திரளிலேபோய்ப்புக்கு* (க) * வொயயஸஃ வாறாஸ்ரு - போதயந்த: பரஸ்பரம்பண்ணி யநுபவிக்கக்கோலி நினைத்தபோதே அத்திரளிலேபோய்ப்புக் கநுப விக்கப்பெறாமையாலே மிகவுமவஸந்நராய், தம்முடையதஶையை ஸ்வகீயரான ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானுக் கறிவிக்கிறபடியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார்.

* அஞ்சிறையமடநாரையில் - தூதுவிடக்ஷமரானார்; * வாயுந் திரையுகளில் - கண்ணுற்கண்ட பதார்த்தங்களடைய பகவதலாபத் தாலே நோவுபடுகிறனவாகக்கொண்டு அவற்றுக்குமாக நோவுபட க்ஷமரானார்; அவ்வளவன்றிக்கே ஆற்றாமைகரைபுரண்டு, தாமான தன்மையழிந்து ஒருபிராட்டிதசையைப்ராப்தராய், அதுதன்னி லும்தன்தசை தான் வாய்விட்டுப்பேசமாட்டாதே பார்ஶ்வஸ்த்தர றிவிக்க வேண்டும்படியாய், ஸ்த்திதிகமநஶயநாதிகளி லொருநியதி யின்றியிலே அரதியாய்நோவுபட, இப்பெண்பிள்ளை தசையை யநு ஸந்தித்த திருத்தாயார், " ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்பண்ணி ஆர்த்தராணாரார்த்தியெல்லாம் பரிஹரிக்கக்கடவ ஸ்வபாவரானநீர் உம்மையாசைப்பட்டவிவள் நோவுபடப்பார்த்திருப்பதே" என்று எல்லாவளவிலுமவனை யிட்டுப்பரிஹரித்துக்கொள்ளுங் குடியாகை யாலே அவன்திருவடிகளிலேபொகட்டு, " இவளிடையாட்டத்தில் நீர்செய்யநினைத்திருக்கிறதென் " என்று கேட்கிறபாசுரத்தாலே தம்முடையதஶையை யருளிச்செய்கிறார்.

காசையிழந்தவனுக்கும், பொன்னையிழந்தவனுக்கும், ரத்நத் தையிழந்தவனுக்கு மொத்திராதிரேகலேஶம்; அவதாரத்திலே* பெருநிலங்கடந்த நல்லடிப்போதை யநுபவிக்கவாசைப்பட்டுக்கிடை யாமையாலே வந்தவாற்றாமை - * அஞ்சிறையமடநாரையில்; "நம்பி யைத்தென்குறுங்குடிநின்ற" என்றர்ச்சாவதாரத்திலே யநுபவிக்க வாசைப்பட்டுக் கிடையாமையாலே வந்தவாற்றாமை - *வாயுந்திரை யுகளில்; இதில் - அவன்றனக்கும் ப்ராணபூதரான நித்யஸூரிகளை யநுபவிக்கவாசைப்பட்டுக் கிடையாமையாலே வந்தவாற்றாமையா கையாலே அவற்றிலுமிதுக்காற்றாமை விஞ்சியிருக்கும்; நித்யஸூரி கள் திரளிலேபோய்ப் புக்கநுபவிக்கப் பெறாமையாலே நோவுபடுகிற

(க) கீதை.

தாகில், பின்னையவர்களைச் சொல்லிக்கூப்பிடாதே அவனைச்சொல்லிக்கூப்பிடுவானென்னென்னில்; எங்கேனுமொருகாட்டிலே ரத்நங்கள்பறியுண்டாலும், நாட்டிலே ராஜாவின்வாசலிலே அவன்பேர் சொல்லியிறே கூப்பிடுவது; அவர்களோட்டை ஸம்ஶ்லேஷத்துக்கும் கடவனவனாகையாலே அவனைச்சொல்லிக்கூப்பிடுகிறது.

பகவத்விஶ்லேஷத்திலேயுட்புகநின்றுவிறே பாகவதவிஶ்லேஷந் தான்தெரிவது; (க) [ கஊா நூ ஹஂஸெ ஷ்ஷ ஶாி ஸாெதநஜஹா தூநா । ஸஷ௱வெ ஈவஸீ மாஸ கூயாவாவ-மநரூந - கதாந் வஹம்ஸமேஷ்யாமி பரந்தகமஹாத்மநா । ஸத்ருக்நேநசவீரேணத் வயாசரகுநந்தந ] ஸ்ரீபரதாழ்வானோடும் ஸ்ரீஸத்ருக்நாழ்வானோடும் கூடப்பெறாத கிழிக்குறையாலே, கூடநிற்கிற இளையபெருமாளோடும் கூடிற்றுய்த்தோற்றிற்றில்லையிறே பெருமாளுக்கு; (உ) [ மஹெநவஹி தாராஜொ லக்ஷணெநவஸீதயா - குஹேநஸஹி தோராமோலக்ஷ்மணேநசஸீதயா ] கூடப்போன இளையபெருமாளோடும் பிராட்டியோடும் கூடிற்றுய்த்தோற்றிற்று ஸ்ரீகுஹப்பெருமாளோடு கூடினபின்பிறே; இப்படியிறே அவன்றனக்கு மங்வயவ்யதிரேகங்களிருக்கும்படி; ததீயஸம்ஶ்லேஷத்தையாசைப்பட்டுப் பெறாமையாலே வந்தஇழவு, பெற்றபகவத்ஸம்ஶ்லேஷமிழந்து, அடியேபிடித்து ப்ரார்த்திக்கவேண்டும்படியாய் வந்துவிழுந்தது. * வாயுந்திரையுகளி லார்த்தி தீரவந்து ஸம்ஶ்லேஷித்த ஸம்ஶ்லேஷம் முற்றுவதற்குமுன்னே வந்தபிரிவாகையாலும் ஆற்றவொன்றுதிறே.

---

ஈடு; அவ;—முதற்பாட்டில், ஆபத்தேசெப்பேடாக ஆஶ்ரிதன்ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலேவந்து உதவும் ஸ்வபாவனானவனைச் சொல்லிக்கூப்பிடாநின்றுளென்கிறாள். *

ஆடியாடி யகங்கரைந்திசை
பாடிப்பாடிக் கண்ணீர்மல்கி யெங்கும்
நாடிநாடி நரசிங்காவென்று
வாடிவாடு மிவ்வாணுதலே. (க)

ப;—முதற்பாட்டில், "ப்ரஹ்லாதனுக்குதவினாற்போலே வந்துதவுகிறிலன்" என்று இவள் தளராநின்றுளென்கிறாள்.

---

(க) ரா - ஆர கக - சo. (உ) ரா - பா - க - உகூ.

இவ்வாணுதல்—ஒளிவிடுகிற நெற்றியையுடையளான விவள்
ஆடியாடி — வல்லாராடினாற்போலே தர்ஸநீயமாம்படி, தன்னுற்றாமையாலே நின்றவிடத்தில் நில்லாதேபலகாலுமுலாவி
அகங்கரைந்து — மநஸ்ஸைதில்யம்பிறந்து
இசைபாடிப்பாடி — அந்தக்லேஸமடியாக, இசையிலே பலகாலும் பாடுவாரைப்போலே ப்ரலாபித்து
கண்ணீர்மல்கி—கரைந்தநெஞ்சு ப்ரவஹிக்குமாபோலே கண்கள் நீர்மல்கி
எங்கும்—ஸர்வதேஸத்திலும்
நாடிநாடி — அவன்வரவை யாராய்ந்து பலகாலும்பார்த்து
நரசிங்காவென்று—எங்குந்தோற்றவல்ல நரஸிம்ஹரூபத்தையுடையவனே யென்று
வாடிவாடும்—அவ்வளவிலும் வரக்காணாமையாலே வாட்டத்தின் மேல் வாட்டமாம்படி தளராநிற்கும். (க)

ஆறு;-எம்பெருமானைப்பிரிந்த வ்யஸநத்திலே தன்னைக்கொண்டு தரிக்கமாட்டாமையாலே தன்னுடைய ஆஸ்வாஸார்த்தமாக அவனுடையகுணசேஷ்டிதங்களைப்பாடிபாடினவிடத்திலும் அது தனக்காஸ்வாஸகரமாகாதேஅவஸாதகரமேயாக, "இனியவனைக்கண்டாலல்லது தரிக்கமுடியாது" என்றுபார்த்து அவனையெங்குந்தேடி, ஆஸ்ரிதருடைய துர்த்தஸைகளில் ஸஹஸைவதோன்றிக்கொண்டுநிற்கும் ஸ்வபாவனானவனேயென்றழைத்துப் பின்னையுங்கண்டாலுந் தேறுகதொருபடி அறவாடிப்போயறவாடினாள் இவ்வாணுதலென்று திருத்தாயார் ப்ரலாபிக்கிறாள். ... ... ... (க)

---

ஈடு ; அவ ;—(இரண்டாம்பாட்டு) நடுவேவாடுமித்தனையேயோ வேண்டுவது, விரோதிகிடக்கச் செய்தேயென்ன, பாணனுடைய பாஹுவநத்திலும் ப்ரபலமோ! இவள் விரோதியென்கிறாள்.

வாணுதலிம்மடவரலும்மைக்
காணுமாசையுள் நைகின்றாள் விறல்
வாணனாயிரந் தோள்துணித்தீருமைக்
காண நீரிரக்க மிலீரே. (உ)

ப ;—அநந்தரம், அநிருத்தனை நிரோதித்தபாணனைத் தோள்மிடுக்கறுத்த நீர் இவளுக்கிரங்கு கிறிலீரென்கிறாள்.

வாள்—ஒளிவிடுகிற
நுதல்—நுதலையுடையளாய்
இம்மடவரல்—மடப்பத்தால் விஞ்சின விவள்
உம்மை—தர்ஸநீயரான வும்மை
காணுமாசையுள்—"காணவேணும்" என்கிறவாசையிலே
நைகின்றாள்—ஸிதிலையாகாநின்றாள்;
விறல்—பெருமிடுக்கனான
வாணன்—பாணனுடைய
ஆயிரந்தோள் துணித்தீர் — ஆயிரந்தோள் துணி தவபே
உம்மை—உம்மை
காண—காண்கைக்கு
நீர்—நீர்
இரக்கமிலீர் — இரக்கமில்லாமைய யிராநின்றீ

இவளாசைப்பட்டாலும் பசையில்லை, உம்முடைய இரக்கமிறே காட்டு மென்று கருத்து. (உ

ஆறு ;—(வாணுதல்) "உம்மைக்காணவேணும்" என்னுமா சையாலே இவள்நையாநின்றாள் ; உம்மைக்காணும்படி யிவள்பக்க க்ருபைபண்ணுகிறிலீர்; ப்ரதிகூலர் திறத்திலன்றோ இப்படி நைர் க்ருண்யம்பண்ணுவது; உம்மையாசைப்பட்டார் திறத்திலுமிப்பட நைர்க்ருண்யம் பண்ணலாமோவென்கிறாள். ... (உ

---

ஈடு ; அவ ;—(மூன்றாம்பாட்டு) இன்றுஇச்செயல் செய்யக்கட தாக நினைத்தநீர், அன்று*உண்ணுதுறங்காதொலிகடலை யூடறுத்த அச்செயலை என்றியசெய்தீரென்கிறாள்.

இரக்கமனத்தோ டெரியணை
அரக்குமெழுகு மொக்குமிவள்
இரக்கமெழீ ரிதற்கென்செய்கேன்
அரக்கனிலங்கை செற்றீருக்கே. (௩

ப ;—அநந்தரம், பிராட்டிக்காக ராவணனையும் லங்கையையுமழித்த நீ இரங்குகிறிலீர், இதற்குச் செய்வதென்னென்கிறாள்.

இரக்கம்—க்லேஸோத்தரமான
மனத்தோடு—நெஞ்சோடே
இவள்—இவள்
அரக்கும்—சிக்கென்றவரக்கும்
மெழுகும்—மெத்தென்ற மெழுகும்
எரியணை யொக்கும் — அக்நிஸகாஸத்தி லொக்க வுருகுமாப்போலே, கற்பும்மடமும் கட்டுக்குலையாநின்றாள் ;
இரக்கமிலீர்—நீரிரக்கந்தோற்ற விரு கிறிலீர்
இதற்கு—இது நிமித்தமாக
அரக்கன்-ராக்ஷஸனான ராவணனுடைய
இலங்கை-லங்கையை
செற்றீருக்கு—அழித்தவுமக்கு
என்—எத்தை
செய்கேன்—செய்வேன்.

இல்லாத விரக்கத்தை யுண்டாக்கவோ? இவள் மைதில்யத்தை (க) "தத்தஸ்யஸத்ருஸம்பவேத் - தத்தஸ்யஸத்ருஸம்பவேத்" என்றவள் நெஞ்சுபோலே சிக்கெனப் பண்ணவோவென்று கருத்து. (ரு)

ஆறு ;—(இரக்கமனத்தோடு) அவஸந்நமான மநஸ்ஸை யுடையளாய், எரியணையரக்கு மெழுகும்போலே விரஹாக்நியாலே தஹ்யமானையான விவள்பக்கல் க்ருபையுங்கூடப் பண்ணுகிறிலீர். இதற்கென்செய்கேன். கெட்டேன், ஓ கொடுமையே! இதுவென்கிறாள்.

ஈடு ; அவ ;—(நான்காம்பாட்டு) "'அரக்கனிலங்கை செற்றீர்' என்கிறவிது நியதஸ்வபாவமன்றுகாண், காதாசித்கங்காண்" என்றாள் திருத்தாயார் ; அது பொறுக்கமாட்டாமை, அதுதன்னையே சொல்லுகிறாள்.

இலங்கைசெற்றவனே யென்னும்பின்னும்
வலங்கொள் புள்ளுயர்த்தா யென்னுமுள்ளம்
மலங்கவெவ்வுயிர்க்கும் கண்ணீர்மிகக்
கலங்கிக் கைதொழும் நின்றிவளே. (ச)

அநந்தரம், நாட்டுக்குதவினபடியைச் சொல்லி க்லேஶியாநின்றாளென்கிறாள்.

இவள்—இவள்
பின்னும்—முன்புத்தை க்லேஶத்தை வன்றியே, பின்னையும்
இலங்கை—மாலிப்ரப்ருதிகளிருந்த லங்கையை
செற்றவனே—செறுத்தவனே
என்னும்—என்னும்;
(அதுக்குதுப்பாக)
வலங்கொள்—பலவானை
புள்—பெரியதிருவடியை
உயர்த்தாய்—வாஹநமும் த்வஜமுமாக வுடையவனே
என்னும்—என்னும்,
(அப்படி தனக்குவந்து தோற்றுமையாலே)
உள்ளம்—நெஞ்சு
மலங்க—அலமாக்கும்படி
வெம்—வெவ்விதாக
உயிர்க்கும்—மூச்சுவிடும்;
கண்ணீர்—கண்ணீரானது
மிக — மேலிட
கலங்கி—அறிவுகலங்கி
நின்று -- வருகிறானாக நினைத்து
கைதொழும்-அஞ்ஜலிபண்ணாநிற்கும்.

ஆறு ;—(இலங்கை) இப்படி நான் அவனுடைய கொடுமையை நினைத்து "இலங்கைசெற்றீர்" என்று சொல்லுமளவில், தான்

(க) ரா - ஸு - ருக - ௯௦.

அத்தைக்கேட்டு அவனுடைய ப்ராணயித்வத்தையே நினைத்து, இலங்கைசெற்றவனே யென்னும்; பின்னையும், பெரியதிருவடிமேலே யேறி யருளிவந்து தோன்றாயென்னும் ; என்றால் அப்போதே வரக் காணாமையாலே உள்ளம்மலங்க வெவ்வுயிர்க்கும் ; கண்ணீர்மிகக் கலங்கி இவள்நின்று கைதொழாநிற்கு மென்கிறாள். (ச)

---

ஈடு ; அவ ;—(அஞ்சாம்பாட்டு) இவளிப்படி க்லேசிக்கிற ...த் திலும் வரக்காணாமையாலே, நிர்த்தயரென்கிறாள்.

இவளிராப்பகல் வாய்வெரீஇத் தன
குவளையொண் கண்ணநீர்கொண்டாள் வண்டு
திவளுந் தண்ணந்துழாய் கொடீரென
தவளவண்ணர் தகவுகளே. (ரு)

ப ;—அநந்தரம் ஶுத்தபாவரான வும்முடைய ஸ்வபாவமிருந்தபடி யென்னென்கிறாள்.

| | |
|---|---|
| இவள்—விலக்ஷணையானவிவள் | வண்டு—வண்டுகள் |
| இராப்பகல்—இரவோடுபகலோடு வாசியற | திவளும்—மதுபாநம்பண்ணி, ரஸாயந ஸேவை பண்ணினாரைப் போலே படிந்து ஒளி விடும்படியான |
| வாய்வெரீஇ—திருத்துழாயை வாய் வெருவி (அதுகிடையாமையாலே) | தண்ணந்துழாய்—திருத்துழாயை |
| தன—தன்னுடைய | கொடீர்—கொடுக்கிறிலீர்; |
| குவளை—நெய்தல்போலே | தவளவண்ணர்—ஆஶ்ரிதவிஷயத்தில் ஶுத்தஸ்வபாவரான உம்முடைய |
| ஒண்—அழகியவான | |
| கண்—கண்களிலே | |
| நீர்—ஶோகாஶ்ருவை | தகவுகள்—க்ருபாதிஸ்வபாவங்கள் |
| கொண்டாள்—உடையளானாள்; | என—என்னென்னவாயிருக்கின்றன. |

வாய்வெருவினதற் கிரக்கமற்று, கண்ணநீர்க்கிரக்கமற்று, “இவளுக்குக் கொடுக்கவேண்டும்” என்றிரக்கமற்று, வண்டுகளுக்குக் கொள்ளைகொடுத்தது என்ன ஸ்வபாவமென்று கருத்து. (ரு)

ஆறு ;—(இவள்) “இலங்கைசெற்றவனே” என்றும், “வலங் கொள் புள்ளுயர்த்தாய்” என்றுமிப்படியிராப்பகல் வாய்வெருவி, தனகுவளை யொண்கண்ணநீர்கொண்டாள் ; இப்படிதயநீயதஶை வரச்செய்தேயும் வண்டுதிவளும் தண்ணந்துழாய் கொடுக்கிறிலீர் ;

பரமகாருணிகரான வும்முடைய காருண்யமிருக்கும்படி யிதுவோ வென்கிறாள். ... ... ... (டு)

ஈடு ; அவ ;—(ஆறும்பாட்டு) இவளவஸாதத்தைக்கண்ட திருத்தாயார் "நிர்த்தயர்" என்றாள் ; இவளதுபொறாதே, "தகவுடையவனே" என்று அத்தைநிரூபகமாகச் சொல்லாநின்றாளென்கிறாள்.

தகவுடையவனே யென்னும் பின்னும்
மிகவிரும்பும் பிரானென்னு மென
தகவுயிர்க்கமுதே யென்னு முள்ளம்
உகவுருகி நின்றுள்ளுளே. (சு)

ப ;—அநந்தரம் தன்னிலேபரிதிலையாய், உம்முடைய போக்யதாதிசயத்தைப்பேசிவாய்புலற்றா நின்றாளென்கிறார்.

(இவள்)

உள்ளம்—தன்னெஞ்சு
உக—அழியும்படி
உருகி—ஸ்வரூபம் நீராயுருகி
உள்ளுளே—தன்னிலேதன்னிலே
நின்று—நின்று
தகவு—என்னைப் புஜிப்பிக்கைக் கடியான க்ருபாதிஸ்வபாவங்களை
உடையவனே—உடையவனே
என்னும்—என்னும்,
பின்னும்—அவ்வளவிலே நில்லாதே
மிக—மேன்மேலும்
விரும்பும்—விரும்பும்படியான
பிரான்—உபகாரகனே
என்னும்—என்னும்,
எனது—என்னுடைய
அகவுயிர்க்கு—அந்தராத்மாவுக்கு [மே
அமுதே—நித்யமான நிரதிசயபோக்ய
என்னும்—என்னாநிற்கும்.

மிகவிரும்புமென்று• தன்னை அவன் விரும்பினபடியாகவுமாம். (சு)

ஆறு ;—(தகவு) இப்படியிவளுடைய ப்ரஸங்கத்தாலே அவனுடைய க்ருபையைநினைத்துப் பரமகாருணிகனேயென்றுகூப்பிடும் ; இப்படிக்ருபையையுடையவன் நம்மைக்கைவிடானென்று பார்த்துப் பின்னையும் மிகவுமாசைப்படும் ; ஆசைப்பட்ட வப்போதே பெறாமையாலேவந்த வவஸாதத்தாலே நெஞ்சுருகும்படியுருகிநின்று, கேட்கச் சொல்லக்ஷமையல்லாமையாலேபோய்த் தன்னுள்ளுளே பிரானே யென்றும், என்னுடையபோக்யமென்றுஞ் சொல்லாநிற்கு மென்கிறாள். ... ... ... (சு)

ஈடு ; அவ ;—(ஏழாம்பாட்டு) தன்னெஞ்சிலோடுகிறது பிறரறியாதபடி அடக்கமுடையவிவள், வாய்விட்டுக்கூப்பிடும்படி இவளை வஞ்சித்தா னென்கிறாள்.

உள்ளுளாவி யுலர்ந்துலர்ந்தென
வள்ளலேகண்ணனே யென்னும்பின்னும்
வெள்ளநீர்க்கிடந்தா யென்னு மென
கள்விதான்பட்ட வஞ்சனையே. (எ)

ப ;—அநந்தரம், " அபேக்ஷித்தார்க்கு உபகரிக்க அணித்தாகவர்த்திக்கிறவனே " என்றுநின்றாளென்கிறாள்.

எனகள்வி—எனக்குத் தன்னெஞ்சில் விகாரந்தோன்றாதபடி மறைக்குங்களவையுடையவிவள்
தான்பட்ட—தானகப்படும்படி யவன் செய்த
வஞ்சனை—வஞ்சனைகளிருந்தபடி
உள்ளுள்—ஹ்ருதய ஸ்த்தாநத்துக்குள்ளே நிற்கிற
ஆவி—அஸோஷ்யமான அந்தராத்மாவானது
உலர்ந்துலர்ந்து—உலர்த்திமேலுலர்த்தியாம்படியாய்
என—எனக்குன்னை முற்றூட்டாகத் [தந்த
வள்ளலே—மஹோதாரனே
கண்ணனே—அதுதானுன் பேறும்படியான தாழ்ச்சியையுடைய க்ருஷ்ணனே
என்னும்—என்னும்,
பின்னும்—அதுக்குமேலே (அவதாரகந்தமாம்படியணித்தாக)
வெள்ளநீர்—பரிபூர்ண ஜலமான கடலிலே
கிடந்தாய்—கண்வளர்ந்தருளினவனே
என்னும்—என்னும்.

அப்படுக்கை தனக்குறுப் பென்றிருக்கிறாள். (எ)

ஆறு ;—(உள்ளுளாவி) எம்பெருமானைப் பிரிகையாலே பரிதப்தையாய் அந்தப்பரிதாபத்தைப் பொறுக்கமாட்டாமையாலே, விடாய்பட்டார் " தண்ணீர் தண்ணீர் " என்னுமாபோலே என்வள்ளலே! என்கண்ணனேயென்னும்; பின்னும் வெள்ளநீர்க்கிடந்தாயென்னும்; எம்பெருமானையுங்கூட வஸீகரிக்கு மழகுடையளானவிவள் அவனுடைய குணங்களிலே இங்ஙனே யகப்பட்டாளென்கிறாள். (எ)

---

ஈடு ; அவ ;—( எட்டாம்பாட்டு ) உம்மை யநுபவித்து ஸுகிக்க வைத்திரல்லீர்; கம்ஸனைப்போலே முடித்துவிட்டீரல்லீர், உம்மை ' ரக்ஷகர் " என்றிருந்த விவள் படும்பாடே யிதுவென்கிறாள்.

வஞ்சனேயென்னுங் கைதொழுந்தன
நெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும் விறல்
கஞ்சனைவஞ்சனை செய்தீருமைத்
தஞ்சமென்றிவள் பட்டனவே. (அ)

ப ;—அநந்தரம், ஆஸந்நஜநங்களுக்கு அநுபவவிரோதி நிவர்த்தகரான மைவிஶ்வஸித்து இவள் பட்டபாடுகளென்னென்கிறுள்.

வஞ்சனே—உட்புகுந்தாரைப்போலே பவ்யதையைக்காட்டி வஞ்சித்தவனே
என்னும்—என்னும்
கைதொழும்—"அவ்வஞ்சகத்துக்குத் தொழவேண்டாவோ" என்று ப்ரணயரோஷத்தாலே கையெடுத்துத் தொழாநிற்கும்; (பூர்வஸம்ஶ்லேஷ ப்ரகாரத்தை நினைத்து)
தனநெஞ்சம்—தன்னெஞ்சானது
வேவ—தக்தமாம்படி
நெடிதுயிர்க்கும்—நெடுமூச்செறியும்;
விறல்—பெருமிடுக்கனை
கஞ்சனை—கம்ஸனை
வஞ்சனைசெய்தீர்—அவன் வஞ்சனை அவனோடேபோம்படி பண்ணினவரே
உம்மை—மதுரையில் பெண்களுக்குதவின வும்மை
தஞ்சமென்று—தனக்குத்தஞ்சமென்று
இவள்—இவள்
பட்டன—பட்டவெள்ளம்
ஏ—என்.

இப்படி காணத்ரயமும் ஶிதிலமாம்படி பண்ணவேணுமோ வென்று கருத்து. (அ)

ஆறு ;—(வஞ்சனே) உன்னுடைய குணங்களிலே என்னை யகப்படுத்தினவனே யென்னும்; பின்னைத்தன் திருவாயாலொன்றுஞ் சொல்லமாட்டாமையாலே தன்கைகளாலே தொழுதிருக்கும்; அப்போதே அவனைக் காணுமையாலே தன்னெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும்; "தன்னுடைய வாபத்துக்குத் துணை" என்று விஶ்வஸித்திருந்த விவளும் உமக்கு ப்ரதிகூலனை கம்ஸன்பட்டது படுவதே யென்கிறுள். ... ... ... (அ)

---

கூ; அவ;—(ஒன்பதாம்பாட்டு) "இவள்பட்டன" என்கைக்கு என்பட்டாளென்ன ; படுவதெல்லாம் பட்டாளாகில் இவளினி என் படுவாளென்கிறுள்.

பட்டபோதெழுபோ தறியாள் விரை
மட்டலர்தண்டுழா யென்னுஞ் சுடர்
வட்டவாய்நுதி நேமியீர் நும
திட்டமென்கொ லிவ்வேழைக்கே. (கூ)

ப ;—அநந்தரம், இவ்வளவில், ரக்ஷோபகாணவத்தையை யுடைய உம்முடைய நினைவு ஏதாயிருக்கிறதென்கிறாள்.

(உறங்காமையாலும், உணர்ந்துதெளிவுடையளாயிராமையாலும்)
பட்டபோது—அஸ்தமித்தபோதும்
எழுபோது—உதித்தபோதும்
அறியாள்—அறிகிறிலள்;
(அறிகிறது நெஞ்சத்திலேயாகையாலே)
விரை—பரிமளமும்
மட்டு—மதுவும்
அலர்—பரம்பின
தண்டுழாய்—செவ்வித்திருத்துழாய்
என்னும்—என்னுநிற்கும்;
சுடர்—ஜ்வாலைகளையுடைய
வட்டம்—வட்டமான
வாய்—வாயையும்
நுதி—கூர்மையையுமுடைய
நேமியீர்—திருவாழியையுடையவரே
நுமது—ப்ரதிபந்தகத்தைக் கழித்துக்கிட்ட பரிகாரமுடையீரான வும்முடைய
இட்டம்—நினைவானது
இவ்வேழைக்கு—பற்றிற்றுவிடமாட்டாத விச்சபலைக்கு
என்கொல்—ஏதாயிருக்கிறது.

ஸத்தைக் குறுப்பாயிருக்கிறதோ, முடிவுக்குறுப்பாயிருக்கிறதோவென்று கருத்து. (கூ)

ஆறு ;—(பட்டபோது) ஆஸ்ரிதரக்ஷணார்த்தமாகத் திருவாழியை யேந்திக்கொண்டிருக்கிற நீர், உம்மோடு ஸம்ஸ்லேஷிக்கையிலுள்ள வபிநிவேஶத்தாலே மற்றொன்று மநுஸந்திக்க க்ஷமையன்றிக்கே யிருக்கிற விவள்திறத்தில் செய்யநினைத்தருளிற்றுஎன்னென்கிறாள். ... ... ... (கூ)

---

ஈடு; அவ ;—(பத்தாம்பாட்டு) இவள், நோக்கொன்று மொழிய அல்லாதவெல்லா மொழிந்தாள் ; இந்நோக்கொன்றையும் நோக்கிக்கொள்ளீரென்கிறாள்.

ஏழைபேதை யிராப்பகற்றன
கேழிலொண்கண்ணநீர் கொண்டாள்கிளர்
வாழ்வைவேவ விலங்கைசெற்றீரிவள்
மாழைநோக்கொன்றும் வாட்டேன்மினே. (கo)

ப ;—அநந்தரம், விரோதிமிக்கால் வெந்துவிழப்பண்ணும் வீரப்பாட்டையுடைய நீர் ; இவள்நோக்கொன்று மொழியச்சென்றற்றது; இத்தைமுடியாதொழிய வேணுமென்கிறாள்.

ஏழை—கிட்டாதொழியிலும் விடாத சபலையுமாய்
பேதை—என்சொற்கேளாத பேதையுமான விவள்
இராப்பகல்—இரவோடு பகலோடு வாசியற
தன—தன்
கேழ்—ஒப்பு

இல்—இல்லாத
ஒண்—அழகிய
கண்—கண்கள்
நீர்—நீர்
கொண்டாள்—கொள்ளும்படியானாள்;
கிளர்—மிக்கவுயர்த்தியை யுடைத்தாய், பரபீடாபலமான
வாழ்வு—ராவணைஶ்வர்யம்
வேவ—அக்நிஸாத்காம்படி
இலங்கை—லங்கையை
செற்றீர்—அழியச்செற்றவனே (அவனுக்கு சவினற்போலே)
இவள்—இவளுடைய
மாழை—முக்தமான மானின்நோக்குப் போலே யிருக்கிற
நோக்கொன்றும்—நோக்கை யொன்றையுமாகிலும்
வாட்டேன்மின்—க்ஷயிப்பியாதொழிய வேணும்

இவள் நோக்குக்கிவர் எல்லார்க்கு முஜ்ஜீவநஹேதுவென்று கருத்து. (௧௦)

ஆறு ;—(ஏழைபேதை) உம்மையாசைப்படும் ஸ்வபாவையாய், உம்முடைய துர்லபத்வத்தை யறியமாட்டாத பால்யதஶாபந்நையா யிருந்தவிவள், உம்மை யாசைப்பட்டுப்பெறாத வ்யஸநத்தாலே அத்யந்தமவஸந்நையானாள் ; இவள் முடிவதற்குமுன்னே ப்ரதிபந்தகங்களையும் நீரேபோக்கிக்கொண்டு ஈண்டெனவந்து ரக்ஷித்தருளவேணுமென்று எம்பெருமானை யபேக்ஷிக்கிறாள். ... (௧௦)

---

ஈடு ; அவ ;—(பதினொன்றாம்பாட்டு.) நிகமத்தில்-இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார், இவர் ப்ரார்த்தித்தபடியே நித்யஸூரிகள் திரளிலேபோய்ப்புக்கு ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே * சூட்டுநன்மாலைப்படியே திருமாலை சாத்தி யடிமைசெய்யப் பெறுவர்களென்கிறார்.

வாட்டமில் புகழ்வாமநனை யிசை
கூட்டி வண்சடகோபன் சொல்லமை
பாட்டோராயிரத் திப்பத்தாலடி
சூட்டலாகு மந்தாமமே. (௧௧)

ப ;—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவதாராதநரூப கைங்கர்யத்தை யருளிச்செய்கிறார்.

(நோக்குவாடாதபடி தன்குறைவு தோன்ற அர்த்தியாய்வந்து முகங்காட்டினபடியாலே)
வாட்டம்—வாட்டம்
இல்—இல்லாத
புகழ்—குணப்ரதையை யுடைய
வாமநனை—வாமநனைக்குறித்து
வண்—உதாரரான
சடகோபன்—ஆழ்வார்
இசை—இசையோடே
கூட்டி—கூட்டி
சொல்—சொன்ன

| | |
|---|---|
| அமை—லக்ஷணபூர்த்தியாலே யமைதியையுடைய | இப்பத்தால்—இப்பத்தால் |
| ஓர்—அத்விதீயமான | அடி—அந்தவாமநனடியிலே |
| பாட்டு—பாட்டுக்கள் | அம்—அழகிய |
| ஆயிரத்து—ஆயிரத்திலும் | தாமம்—மாலையை |
| | சூட்டலாகும்—சூட்டலாம். |

இது வஞ்சிவிருத்தம். (கக)

ஆறு ;—(வாட்டமில்) ஆழ்வாரிப்படி யவஸந்நரானவிடத்தில், அவருடைய அவஸாதமெல்லாம் போம்படிவந்து தோன்றி யருளுகையாலே, வாட்டமில்லாத ப்ரணயித்வ வாத்ஸல்ய காருண்ய ஸௌசீல்யாதி கல்யாணகுணங்களை யுடையனாயிருந்த எம்பெருமானைச்சொன்ன வித்திருவாய்மொழி, அவன் திருவடிகளிலே யழகியதொரு திருமாலையாகச் சூட்டலாமென்கிறார். (கக)

ஈடு ;—முதற்பாட்டில்-ஆஸ்ரித்ராபத்தே செப்பேடாக வுதவும் ஸ்வபாவனானவன், இவளுடைய ஆபத்துக்குவந் துதவுகிறிலனென்றாள் ; இரண்டாம்பாட்டில்-“ விரோதியுண்டே ” என்று நினைவாக, பாணனுடைய பாஹுவநத்திலும் வலிதோ இவள் விரோதியென்றாள் ; மூன்றாம்பாட்டில்-இப்படி செய்யநினைத்த நீர், முன்பு அச்செயலை என்றியசெய்தீரென்றாள் ; நாலாம்பாட்டில்-அதுபொறுக்கமாட்டாமல் அதுதன்னையே யுபகாரமாகச் சொல்லாநின்றாளென்றாள் ; ஐந்தாம்பாட்டில் - அவ்வளவிலும் வாராமையாலே, நிர்த்தயனென்றாள் திருத்தாயார் ; ஆறாம்பாட்டில்-அதுபொறுக்கமாட்டாமல், கெடுவாய்! ஆகரத்தில் தகவுமறுக்குமோ, அதுநங்குறை காணென்கிறாளென்றாள் ; ஏழாம்பாட்டில் - அவன் குணஹாநி தன்னையே குணமாகக்கொள்ளும்படி இவளை வஞ்சித்தானென்றாள் ; எட்டாம்பாட்டில்-உம்மை யபாஸ்ரயமாகப் பற்றினவிவள் படும்பாடே இதுவென்றாள் ; ஒன்பதாம்பாட்டில் - இவள்பேற்றில் நீர்செய்தருள நினைத்திருக்கிற தென்னென்றாள் ; பத்தாம்பாட்டில் - மோஹித்தது நோக்கொன்றுமேயாயிற்று, இதொன்றையும் நோக்கிக்கொள்ளீரென்றாள் ; நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யஸித்தார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினார். ... ... (கக)

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளேசரணம்.

இரண்டாம்பத்தில் நான்காந்திருவாய்மொழி முற்றிற்று.

---



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

## இரண்டாம்பத்து

# ஐந்தாந் திருவாய்மொழி

## அந்தாமத்தன்பு ப்ரவேசங்கள்.

ப ;—அஞ்சாந் திருவாய்மொழியில், இப்படி யிவருடைய ஆர்த்தியைக் கண்டு த்வரிதனாய் ஸம்ஸ்லேஷித்த ஸர்வேஸ்வரனுக்கு ப்ரீதியாலேவந்த ஸௌந்தர்யாதிஸயத்தை யருளிச்செய்கிறதாக; ப்ரதமத்திலே ஸங்க்ரஹேண பூஷணவயவாயுத ஸோபாவிஸிஷ்டமான வடிவழகையும், அத்தோடேகூடின விபூத்யுந்மேஷத்தையும், ஸம்ஸ்லேஷகாரிதமான ரக்ஷகத்வோந்மேஷத்தையும், ஸ்த்திரௌஜ்ஜ்வல்யத்தையும், உபமாநராஹித்யத்தையும், அபர்யந்தபூஷணாதி யோகத்தையும், தர்ஸநீய சேஷ்டிதத்வத்தையும், ஸம்ஸ்லேஷ வைலக்ஷண்யத்தினுடைய வாசாமகோசரதையையும், சொல்லுகைக் கதிகாரிகளில்லை யென்னுமிடத்தையும், சொல்லுகை யரிதென்னுமிடத்தையு மருளிச்செய்து, தம்முடைய ஸம்ஸ்லேஷப்ரீதிகாரித ஸௌந்தர்ய பாரம்யத்தை யருளிச்செய்கிறார்.

ஆறு ;—(அந்தாமத்தன்பு) இப்படி தோற்றியருளின வெம்பெருமான் தம்மோடு கலந்த கலவியையும், அக்கலவியால் தமக்குப் பிறந்த ஸம்ருத்தியையுஞ் சொல்லுகிறார். ... ... *

ஈடு ;—(க) “ [illegible] - கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே ” என்னுமாபோலேயிறே கீழ் * ஆடியாடியில் ஆழ்வார்க்குப்பிறந்த வ்யஸநம் ; அதெல்லாமாறும்படியாக, ( உ ) “ [illegible] - அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தம் ” என்கிறபடியே பெரியத்வரையோடே ஆயுதாபரணங்களை அக்ரமமாகத்தரித்துக்கொண்டு மடுவின் கரையிலே அரைகுலையத்தலைகுலையவந்துஉள்ளேபோய்ப்புக்கு, ஆனையையொருகையாலும் முதலையையொருகையாலுமாக வணைத்தெடுத்துக்கொண்டு கரையிலேயேறி, (ங) “ [illegible] - க்ராஹம்சக்ரேணமாதவ: ” என்கிறபடியே ப்ரஜையின்வாயிலே முலையைக்கொடுத்து க்ரந்தியை சிகித்ஸிப்பிக்குமாபோலே, பெரியபிராட்டியாரும் தானுமாக இரண்டுக்கும் நலிவுவாராமே திருவாழி

(க) விஷ்ணுதர்ம - சுஅ. (உ) ரங்க - ஸ்த - ருஎ. (ங) விஷ்ணுதர்ம.

யாலேவிடுவித்து, சாத்தியருளின திருப்பரிவட்டத்தலையைச்சுருட டித்திருப்பவளத் திலேவைத்து அதினுடைய புண்வாயை வேது கொண்டுதிருக்கையாலே குளிரஸ்பர்ஶித்துநின்றாப்போலே இவருட "வலங்கொள்புள்ளுயர்த்தாய்" என்று கூப்பிட்ட ஆர்த்தநாதட செவிப்பட்டு, "அழகிதாக நாம் ஜகந்நிர்வஹணம்பண்ணினோம் நாமாரானோம்" என்று பிற்பாட்டுக்கு லஜ்ஜாபயங்களினாலே விவ் வலனாய், தன்னுடைய ஸ்வரூபரூபகுணங்கள், ஒப்பனை, திவ்யாயுதங் கள்சேர்ந்தசேர்த்தி, இவையெல்லாவற்றோடும்வந்து ஸம்ஶ்லேஷித்து அத்தாலே ஹ்ருஷ்டனாய் க்ருதக்ருத்யனாயிருக்கிற விருப்பை யநுப வித்து, அவ்வநுபவஜநிதஹர்ஷப்ரகர்ஷத்தாலே தாம்பெற்றபேற் றைப்பேசி யநுபவிக்கிறார். ... ...

ஈடு; அவ;—(முதற்பாட்டு) "அடியார்கள்குழாங்களை - உடன் கூடுவதென்று கொலோ" என்று இவராசைப்பட்டபடியேவந்து கலந்தானென்கிறார்.

அந்தாமத்தன்பு செய்தென் னாவிசேரம்மானுக்கு
அந்தாமவாண் முடிசங்காழி நூலாரமுள
செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம்
செந்தாமரையடிக்கள் செம்பொன்திருவுடம்பே. (க)

ப;—முதற்பாட்டில், பூஷணாதி விஶிஷ்டமான விக்ரஹஶோபையை யநுபவிக்கிறார்.

அந்தாமத்து—பரமபதத்தில்
அன்பு—விருப்பத்தை
செய்து—பண்ணி
என்னாவி—ஹேயனானவென்னெஞ்சுக்குள்ளே
சேர்—பொருந்தின
அம்மானுக்கு—நிருபாதிகஸ்வாமியானவனுக்கு
(ஶோஷித்வஸூசகமான)
அம்—அழகிய
தாமம்—மாலையையுடைத்தான
வாள்—உஜ்ஜ்வலமான
முடி—திருவபிஷேகம்
சங்காழி—திவ்யாயுதங்கள்
நூல்—திருயஜ்ஞோபவீதம்
ஆரம்—திருவாரம்
உள — இவைஸ்ப்புரித்துத் தோன்றாநின்றன;
கண் —திருக்கண்கள்
செந்தாமரைத்தடம்—சிவந்த தாமரைத் தடாகமாயிராநின்றன;
செம்—சிவந்த
கனி—பக்வபலம்போன்ற
வாய்—அதரம்
செம்—சிவந்த

கமலம்— தாமரையாயிராநின்றது;
அடிக்கள்—திருவடிகள்
செம்—சிவந்த
தாமரை—தாமரையாயிராநின்றது;
திருவுடம்பு—திருவுடம்பு
செம்பொன் — செம் பொன்னுயிரா நின்றது.

இப்பாட்டு - அந்தராதித்ய வித்யையிற்சொன்ன ஹிரண்மய விக்ரஹயோகத்தையும், புண்டரீகாக்ஷத்வாத்யவயவஶோபையையும், கிரீடமகுடாத்யாபரணஶோபையையும், த்ருதசங்கசக்ரத்வத்தையுஞ்சொல்லி, இப்படியாதித்ய மண்டலாந்தர்வர்த்தியானவன், (க) "ஸயஶ்சாயம்புருஷேயஶ்சாஸாவாதித்யேஸஏகஃ" என்கிறபடியே-அழகிய ஆதித்யமண்டலத்திற் பண்ணும்விருப்பத்தை யென்னெஞ்சிலே பண்ணிப்புகுந்து, அந்தவ்யக்த்யைக்யமிங்கே ஸ்ப்புரிக்கும்படி அத்யுஜ்ஜ்வலனாயிராநின்றானென்றுஞ்சொல்லும். (க)

ஆறு ;—நித்யநிர்த்தோஷ நிரதிஶயகல்யாண திவ்யதாமத்திற் பண்ணும் ப்ரேமத்தை என்பக்கலிலே பண்ணிக்கொண்டு, ஸர்வ திவ்யபூஷணாயுத பூஷிதமாய்நிரதிஶய ஸௌந்தர்யாதி கல்யாணகுண விஶிஷ்டமாய், ஶுத்தஜாம்பூநத ப்ரபமான திவ்யரூபத்தோடே வந்து என்னோடேகலந் தருளினானென்கிறார். ... (க)

ஈடு ; அவ ;—( இரண்டாம்பாட்டு ) தம்மோடேகலந்த பின்பு அவனுக்குப்பிறந்த புகரைச்சொல்லி, தன்னுடம்பைப்பற்றி ப்ரஹ்மேஶாநாதிகள் ஸத்தையாம்படி யிருக்கிறவன்தான் என்னுடம்பைப் பற்றித் தன்ஸத்தையாம்படி யிராநின்றானென்கிறார்.

திருவுடம்புவான்சுடர் செந்தாமரைகண்கைகமலம்
திருவிடமேமார்வ மயனிடமேகொப்பூழ்
ஒருவிடமுமெந்தை பெருமாற்கரனேயோ
ஒருவிடமொன்றின்றி யென்னுள்கலந்தானுக்கே. (உ)

ப ;—அநந்தரம் இவ்வவயவஶோபையையுடையவன், ப்ரஹ்மருத்ராதிகளான விபூதிபூதர்க்கும் பிராட்டியோபாதிதிருமேனியிலே யிடங்கொடுத்த ஔஜ்ஜ்வல்யத்தை யருளிச்செய்கிறார்.

(க) தை - ஆந.

| | |
|---|---|
| ஒருவிடமொன்றின்றி — ஸ்வரூபரூப குணவிபூதிக ளொன்றுஞ் சோராதபடி | செம்—சிவந்த |
| என்னுள்—என்னுள் | தாமரை—தாமரைபோலே செவ்விபெற்றது |
| கலந்தானுக்கு—கலந்த | மார்வம்—திருமார்வு |
| எந்தைபெருமாற்கு-என்குலநாதனுக்கு | திருவிடமே — லக்ஷ்மீஸ்தாநமேயயிற்று |
| திரு — ஶ்லாக்யமான | கொப்பூழ்—கொப்பூழ் |
| உடம்பு—வடிவு | அயன்—ப்ரஹ்மாவுக்கு |
| வான்சுடர்—ஆதித்யவர்ணமாயிராநின்றது | இடமே—ஸ்தாநமேயாயிற்று; |
| கண்கைகமலம்—திருக்கண்ணும் திருக்கையும் | ஒருவிடமும்—நீக்கியுள்ளவிடம் |
| | அரனே—ருத்ரனேயாயிராநின்றது; |
| | ஓ—இதென்ன ஆஶ்சர்யம். |

ஒருவுதல் - நீங்குதல். தந்திருவுள்ளத்திலே அவன்கலந்தபின்பு ரூபௌஜ்ஜ்வல்யமும் அவயவௌஜ்ஜ்வல்யமுமுண்டானவோபாதி, விபூத்யௌஜ்ஜ்வல்யமுமுண்டாயிற்றென்று கருத்து. (உ)

ஆறு ;—(திருவுடம்பு) என்னோடே கலந்தருளுகிறான், ஸர்வேஶ்வரியான பெரியபிராட்டியாரோடும் ஆஶ்ரிதரான ப்ரஹ்மருத்ராதிகளோடும் கலந்தருளினப்போலன்றியே, தன்னுடைய நிரதிஶயதேஜோமயமானதிருவுடம்பி லொருப்ரதேஶமொழியாமே ஸமஸ்தப்ரதேசத்தாலுங் கலந்தருளினான் ; ஒருவனுடைய அபிநிவேஶமேயி தென்கிறார். ... ... ... ... (உ)

---

ஈடு ; அவ ;—(மூன்றாம்பாட்டு) ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தவஸ்துக்களும் தன்னைப்பற்றியுளவாம்படியிருக்கிற ஸர்வேஶ்வரன், தானென்னைப்பற்றியுளனாய், என்னோடேவந்து கலந்தானென்கிறார்.

என்னுள்கலந்தவன் செங்கனிவாய்செங்கமலம்
மின்னுஞ்சுடர்மலைக்குக் கண்பாதங்கைகமலம்
மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள
தன்னுள்கலவாத தெப்பொருளுந்தானில்லையே. (ங)

ப ;—அநந்தரம் தன்னுள்ளிராத வஸ்துவுக்கு ஸத்தையில்லையாமோபாதி, என்னுள் தான் கலவாதபோது தனக்கு ஸத்தையில்லையாகநினைத்துஎன்னுள்ளே கலந்து உஜ்ஜ்வலனானனென்கிறார்.

என்னுள்—என்னுள்ளே
கலந்தவன்—கலந்தவனாய்
மின்னும்—அத்தாலேவிளங்கின
சுடர்—சுடரையுடைய
மலைக்கு—மலைபோன்றவனுக்கு
செங்கனிவாய் செங்கமலம் கண்பாதங்கை கமலம் — முன்புசொன்ன அவயவசோபையும் யதாபூர்வ மத்யுஜ்ஜ்வலமாயிராநின்றது
மன்னும்—ஸ்த்திரமாய்
முழு—பூர்ணமான
ஏழுலகும்—ஸகலலோகங்களும்
வயிற்றின்—அவன்வயிற்றிலேயாய்
உள—ஸத்தைபெறாநின்றன;
தன்னுள்—தனக்குள்ளே
கலவாதது—ஸம்பந்தியாதிருப்பது
எப்பொருளுந்தான் — ஏதேனுமொரு பொருளும்
இல்லை—இல்லை.

ஸர்வவஸ்துவுக்கும் தத்வ்யதிரேகத்தில் ஸத்தாஹாநி ஸ்வரூபப்ரயுக்தை; ஈஶ்வரனுக்கு "இவருடையவ்யதிரேகத்தில் ஸத்தையில்லை" என்று நினைக்கிறவிடம் ஶ்ரீலக்ருதமென்று கருத்து. (ங)

ஆறு ;—(என்னுள்) நிரதிஶயகல்யாணகுண திவ்யரூபத்தையுடையனாய், ஸ்வஸங்கல்பாதீந ஸமஸ்தவஸ்துஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திகனாயிருந்தவன் என்னுள்ளேகலந்தருளினானென்கிறார். (ங)

ஈடு ; அவ ;—(நான்காம்பாட்டு) நீரொருகாற்சொன்னத்தையொன்பதின்கால்சொல்லி இங்ஙனேகிடந்து படுகிறதென்னென்ன ; நானதுதவிர்கிறேன், நீங்கள் அவ்விஷயமொருகாலிருந்தபடியேயெப்போதுமிருக்கும்படி பண்ணவல்லீர்களோவென்கிறார்.

எப்பொருளுந்தானாய் மரதகக்குன்றமொக்கும்
அப்பொழுதைத்தாமரைப்பூ கண்பாதங்கைகமலம்
எப்பொழுதும்நாள்திங்க ளாண்டூழியூழிதொறும்
அப்பொழுதைக்கப் பொழுதென்னாராவமுதமே. (ச)

ப;—அநந்தரம் நிரதிஶயபோக்யபூதனானவன் என்னுள்ளே புகுந்தபின்பு ஸ்த்திரஸ்வபாவனானானென்கிறார்.

எப்பொழுதும்—எல்லாக்ஷணம்
எந்நாள்—எல்லாநாள்
எத்திங்கள்—எல்லாமாஸம்
எவ்வாண்டு—எல்லாவாண்டு
எவ்வூழியூழிதொறும்—எல்லா வகைப்பட்டவூழிதோறும்
அப்பொழுதைக் கப்பொழுது — அவ்வோகாலங்களிலே
என்—என்னுள்ளேகலந்து
ஆரா—அத்ருப்திகரமான
அமுதம்—அம்ருதமானவன்,
(அத்தால்வந்ததன்னுடைய ப்ரீத்யதிஶயத்தால்)

| | |
|---|---|
| எப்பொருளும்—எல்லாப்பொருளும் | அப்பொழுதை—அப்போதலர்ந்த |
| தானாய்—தானானஸர்வாத்ம பாவமும்நி றம்பெற்று | தாமரைப்பூ—தாமரை போலே |
| | கண்—கண்ணும் |
| மரதகக்குன றமொக்கும் — மரதகமலே போலேயுயர்த்தியும் நிறமுமாமுமுடைய | அப்பொழுதைக் கமலம் } அப்போதைக்கட லம்போலே |
| | பாதம்—பாதமும் |
| னானன்; | கை—கையும்புதுமைபெற்றன. (சு) |

ஆறு ;—(எப்பொருளும்) ஸர்வாந்தராத்மபூதனாய், அளவிறந்த வழகையுடையனாயிருந்தவிவன், அழகாலே ஸர்வகாலமும் ப்ரதிக்ஷணம் எனக்கபூர்வவத்போக்யமாயிராநின்றான் ; ஒருவனுடையவழகிருக்கும்படியேயீதென்கிறார். ... ... (சு)

---

ஈடு ; அவ ;—(ஐந்தாம்பாட்டு) இத்தனைபோதும் தாமரையை ஸிக்ஷித்து உபமாநமாகச் சொல்லிப்போந்தார் ; விஷயத்திலே யவகாஹித்தவாறே நேர்கொடுநேரே யுபமாநமாய் நின்றதில்லை ; அவற்றைக்கழித்து உபமேயந்தன்னையே சொல்லுகிறார்.

ஆராவமுதமா யல்லாவியுள்கலந்த
காரார்கருமுகில்போ லென்னம்மான்கண்ணனுக்கு
நேராவாய்செம்பவளங் கண்பாதங்கைகமலம்
பேராரநீண்முடி நாண் பின்னுமிழைபலவே. (ரு)

ப ;—அநந்தரம் தம்முடையதிருவுள்ளத்திலே கலந்தவனுடைய அவயவ ஸோபைக்கு உபமையில்லையென்கிறார்.

| | |
|---|---|
| ஆராவமுதமாய் — நிரதிஸயபோக்யபூதனாய் | வாய்—அதரத்தை |
| | நேராது—ஒவ்வாது; |
| அல்—ஒன்றல்லாத | கமலம்—கமலங்கள் |
| ஆவியுள்—என்னெஞ்சுக்குள்ளே | கண்பாதம்கை—கண்பாதங்கைகளை |
| கலந்த—கலந்து | நேரா—ஒவ்வா; |
| (அத்தாலே) | (அதுக்குமேலே) |
| கார்...கார்காலத்திலே | பேர்—பெரிய |
| ஆர்...பூர்ணமான | ஆரம்—ஆரமும் |
| கருமுகில்போல்—காளமேகம் போலே யிருக்கிற | நீள்—உயர்ந்த |
| | முடி—முடியும் |
| என்னம்மான்—என்னுடைய தனை | நாண்—நாணுமுதல் |
| கண்ணனுக்கு—க்ருஷ்ணனுக்கு | பின்னும்...மற்றுமுண்டான |
| செம்—சிவந்த | இழை—ஆபரணங்களும் |
| பவளம்—பவளம் | பல—அஸங்க்யாதங்கள். (ரு) |

ஆறு ;—(ஆராவமுதமாய்) நிருபமமான ஸௌந்தர்யத்தையுடையனாய், அபரிமித திவ்யபூஷணோபேதனாய், ஸர்வகாலமுமநுபவித்தாலு மாராதபோக்யமாயிருந்தவன், அத்யந்தமவஸ்துபூதனாயிருந்த வென்னுள்ளே கலந்தருளினானென்கிறார். (ரு)

---

ஈடு ; அவ ;—(ஆறாம்பாட்டு) தம்முடனேகலந்து ஆற்றனாய் அநேகசரீர பரிக்ரஹம்பண்ணி யென்னை யநுபவியாநின்றான் கிடீரென்கிறார்.

பலபலவேயாபரணம் பேரும்பலபலவே
பலபலவேசோதிவடிவு பண்பெண்ணில்
பலபலகண்டுண்டு கேட்டுற்றுமோந்தின்பம்
பலபலவேஞானமும் பாம்பணைமேலாற்கேயோ. (சு)

**ப ;—அநந்தரம் பூஷணாத்யபரிச்சேதத்தை யநுபவிக்கிறார்.**

பாம்பணைமேலாற்கு—திருவநந்தாழ்வானைப்படுக்கையாகக்கொண்டாற்போலே யென்னோடேகலந்தவனுக்கு
பண்பெண்ணில்--ஸ்வபாவநிரூபணம்
ஆபரணம்—ஆபரணம் பண்ணில்
பலபல — கிரீடாதிரூபபேதத்தாலும் ஓரொன்றில்ஸம்ஸ்த்தாநபாஹுள்யத்தாலும்பலபலவாயிருக்கும்
பேரும்—நாமமும்
பலபல—வ்யக்திபேதத்தாலும் நிர்வசநமுகத்தாலுமோரொன்றநேகநாமாத்மகமாகையாலேபலபலவாய்ருக்கும்
சோதி—ஜ்யோதிரூபமான
வடிவு—அப்ராக்ருதவிக்ரஹமும்
பலபல — பரவ்யூஹாதிபேதத்தாலும் அவாந்தரபேதத்தாலும் பலபலவாயிருக்கும் ;
கண்டுண்டுகேட்டு } இந்த்ரிய த்வாராத
ற்றுமோந்தின்பம் } த்தத்விஷய ஸம்யோகத்தால் வருகிற ஸுகமும்
பலபல...வ்யக்திபேதத்தாலு மவாந்தரபேதத்தாலும் பலபலவாயிருக்கும்;
ஞானமும்--தத்த்வாரா பதார்த்தங்களிற் பிறக்கிற ஜ்ஞாநமும்
பலபல-அப்படியேபலபலவாயிருக்கும்.

இந்த்ரியத்வாராவருகிற ஸுகஜ்ஞாநங்களிலீஶ்வரனுக்கு யதாக்ரமத்தாலும் வ்யுத்க்ரமத்தாலும் வருமநியமத்தாலே பன்மைசொல்லவுமாம். (சு)

ஆறு ;—( பலபலவே ) அஸங்க்யேயதிவ்ய பூஷணங்களையும், அஸங்க்யேயகல்யாணகுணங்களையும், அஸங்க்யேய தேஜோமயகல்யாண திவ்யரூபங்களையும், அஸங்க்யேய திவ்யபோகங்களையும்,

அஸங்க்யேய திவ்யஜ்ஞாநங்களையுமுடையனாய், நாகபர்யங்கஸாயியாய் இப்படி பரிபூர்ணனாயிருந்து வைத்து என்னோடே கலந்தருளினானென்கிறார். ... ... ... ... (சு)

---

ஈடு ; அவ ;—(ஏழாம்பாட்டு) *அயர்வறுமமரர்க ளதிபதியாயிருந்துவைத்து, க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளி, ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப் பண்ணிற்றெல்லாம் எனக்காகக் காணென்கிறார்.

பாம்பணைமேற்பாற்கடலுள் பள்ளியமர்ந்ததுவும்
காம்பணைதோள்பின்னைக்கா யேறுடனேழ்செற்றதுவும்
தேம்பணையசோலை மராமரமேழெய்ததுவும்
பூம்பிணையதண்டுழாய்ப் பொன்முடியம்போரேறே. (எ)

ப ;—அநந்தரம் தம்மோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே அவனுடைய திவ்ய சேஷ்டிதங்கள் தமக்கு ப்ரகாஶித்து நிறம்பெற்றபடியை யநுபவிக்கிறார்.

பாற்கடலுள்—பாற்கடலிலே
பாம்பணைமேல்—பாம்பணையின்மேலே
பள்ளி—கண்வளர்ந்தருளுகையை
அமர்ந்ததுவும்—பொருந்ினதும்,
காம்பணை—மூங்கில்போன்ற
தோள்—தோளையுடைய
பின்னைக்காய்—நப்பின்னைப்பிராட்டிக்காக
ஏறேழு—ஏறேழையும்
உடன்—ஏகோத்யோகத்திலே
செற்றதுவும்—கொன்றதுவும்,
தேம்—தேனையும்
பணைய—பணையையுமுடைய
சோலை — (அத்தால்) சோலையாகத்தழைத்த
மராமரம்—மராமரம்
ஏழு—ஏழு
எய்ததுவும்—எய்ததுவும்
பூ—அழகிய
பிணைய—தொடையையுடைத்தாய்
தண்—குளிர்ந்த
துழாய்—திருத்துழாயாலே யலங்க்ருதமாய்
பொன்—அத்யுஜ்ஜ்வலமான
முடி—முடியையுடைத்தாய்
அம்—தர்ஶநீயமாய்
போர்—விரோதிநிரஸநோத்யோகஶீலமாய்செருக்கையுடைத்தான
அம்—ருஷபம்போன்றவஸ்து.

"ஏறு" என்றசொற்கீடாக - அமர்ந்ததுவும், செற்றதுவும், எய்ததுவுமென்றக்ரிணை. (எ)

ஆறு !—(பாம்பணை) தன்னுடையஸர்வ சேஷ்டிதங்களையுமெனக்கே போக்யமாகச்செய் தருளினானென்கிறார். ... (எ)

---

ஈடு ; அவ ;— (எட்டாம்பாட்டு) * அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து என் தண்மையைப்பாராதே என்னோடேவந்து கலந்த விம்மஹாகுணத்தை என்னால்பேசி முடியாதென்கிறார்.

பொன்முடியம்போரேற்றை யெம்மானைநாற்றடந்தோள்
தன்முடிவொன்றில்லாத தண்டுழாய்மாலையனை
என்முடிவுகாணாதே யென்னுள்கலந்தானைச்
சொன்முடிவுகாணேனல் சொல்லுவதென்சொல்லீரே. (அ)

ப ;—அநந்தரம் ஸம்ஶ்லேஷவைலக்ஷண்யத்தினுடைய வாசாமகோசரதையை யருளிச்செய்கிறார்.

பொன்—உஜ்ஜ்வலமான
முடி—அபிஷேகத்தையுடைய [னாய்
அம்போரேற்றை — பெரும் செருக்க
எம்மானை— அந்தஸ்வாதந்த்ர்யச்செருக்கைக்காட்டி யென்னை யடிமைகொண்ட நாதனாய்
நால்—நாலுவகைப்பட்ட
தடம்—பெரிய
தோள்—திருத்தோளையுடையனாய்
தன்—தன்பெருமைக்கு
முடிவொன்றில்லாத – முடிவில்லாதவனாய்
(இந்த மேன்மைக்கும் போக்யதைக்கும் ஸூசகமான)
தண்—குளிர்ந்த
துழாய்மாலையனை – திருத்துழாய்மாலையையுடையனாய்
என்முடிவு காணாதே } என்னுத்கர்ஷத்துக்கெல்லைகாணாதவோபாதி என் நிகர்ஷத்தின் முடிவு காணாதே
என்னுள்—என்னெஞ்சுக்குள்ளே
கலந்தானை—கலந்தவனை
நான்—நான்
(ஸ்வஸம்வேத்யமாக வறியுமதொழிய)
சொல்—பாசுரமிட்டுச் சொல்லும்
முடிவு—ப்ரகாரம்
காணேன்—காண்கிறிலேன் ;
சொல்லுவது— நீங்களநுபவித்த விஷயம் வ்ருத்தகீர்த்தநம் பண்ணுமோபாதி யிங்குச்சொல்லுவது
சொல்லீர்–உண்டாகிற் சொல்லுங்கோளென்று லௌகிகரைக் குறித்துரைக்கிறார்.

லோகவ்யாவ்ருத்தனுடைய ஸம்ஶ்லேஷஸாரஸ்யம் வாசாமகோசரமென்று கருத்து. விஶ்லேஷதசையில் என்முடிவுகாணாதேயென்றுமாம். (அ)

ஆறு ;—(பொன்முடி) வாங்மநஸாபரிச்சேத்யகிரதிஶய கல்யாணஸ்வரூபகுண விபூதிகளை யுடையனாயிருந்துவைத்து, என்னுடைய ஸ்வரூபஸ்வபாவகுண வ்ருத்தாதிகளினுடைய நிஹீநதையைப்பாராதே என்னுள்ளேகலந்த இஸ்ஸௌஶீல்யத்துக்கொரு முடிவு காண்கிறிலேன் ; ஆனபின்பு எதைச்சொல்லுவது சொல்லீரென்கிறார். ... ... ... (அ)

ஈடு ; அவ ;— (ஒன்பதாம்பாட்டு) "பாசுரமில்லை" என்று கைவாங்கமாட்டாரே ; ஸம்ஸாரிகளைப்பார்த்து, என்னுயஜனஸர்வேஸ்வரனை எல்லாருங்கூடியாகிலும் சொல்லவல்லீர்களோவென்கிறார்

சொல்லீரென்னம்மானை யென்னுவியாவிதனை
எல்லையில்சீரென் கருமாணிக்கச்சுடரை
நல்லவமுதம் பெறற்கரியவீடுமாய்
அல்லிமலர்விரையொத் தாணல்லன்பெண்ணல்லனே. (கூ)

ப;—அநந்தரம், நிரதிஶய போக்யபூதனானவனைச் சொல்லவல்லீர்களாகில் சொல்லுங்கோளென்கிறார்.

என்—எனக்கு
அம்மானை—ஸ்வாமியாய்
என்னுவி—என்னுத்மாவுக்கு
ஆவிதனை—ஆத்மாவாய்
எல்லையில்—எல்லையில்லாத
சீர்-ஸௌகுமார்யாதி குணங்களையுடைத்தான
என் கருமாணிக்கச்சுடரை — நீலரத்ந ஜ்யோதிஸ்ஸுபோலே யிருக்கிறவடிவை யென்னை யநுபவிப்பித்தவனை
சொல்லீர்—எல்லாருஞ்சேர்ந்து சொல்லலாமாகிற் சொல்லுங்கோள் (சொல்லவொண்ணுமைக் கடியென்னென்னில்)
நல்ல—லௌகிகாம்ருதத்தில் விலக்ஷணமான
அமுதம்—நித்யபோக்யாம்ருதமுமாய் (பரமயோகிகளுக்கும்)
பெறற்கு—பெறுதற்கு
அரிய—அரிதான
வீடுமாய்—மோக்ஷஸ்த்தாந நிர்வாஹகனுமாய்
அல்லிமலர்—தாமரைப்பூவில்
விரையொத்து—பரிமளம்போலே நிஷ்க்ருஷ்டபோக்யரூபனாய்
பெண்ணல்லன் — பும்ஸ்த்வத்தாலே ஸ்த்ரீகளில் வ்யாவ்ருத்தனானவோபாதி
ஆணல்லன்—புருஷோத்தமத்வத்தாலே ஸமஸ்தபுருஷவ்யாவ்ருத்தனுயிருக்கும்.

ஆதலாற்சொல்ல வரிதென்று கருத்து. (கூ)

ஆறு ;—(சொல்லீர்) இப்படி அவனுடையகுணங்கள் சொல்ல நிலமன்றியே யிருக்கச்செய்தேயும், தம்முடைய ஆராமையாலே அவன்குணங்களைக் காலதத்வமெல்லாம் சொன்னாலும் அவற்றுக்கொரு முடிவு காண்கிறிலேனென்று, பின்னையுமவனுடையகுணங்களைச்சொல்லி, பரமபோக்யனாய் ஸ்த்ரீபுந்நபும்ஸகாதி ஸர்வபதார்த்த விஸஜாதீயனாயிருந்து வைத்து, தன்னழகாலே எனக்கு தாரகனாய் என்னுள்ளேபுகுந்து கலந்தருளின வெம்பெருமானுடைய இந்த

ஸௌஸீல்யாதி குணங்களை நீங்களும் சொல்லிகோளென்று ஸ்ரீ வைஷ்ணவர்களைக்குறித் தருளிச்செய்கிறார். ... (கூ)

ஈடு; அவ ;—(பத்தாம்பாட்டு) என்னோடுகலந்த வெம்பெருமான் படிபேசப் பெரிது மிறுக்குடைத்தென்கிறார்.

ஆணல்லன்பெண்ணல்ல னல்லாவலியுமல்லன்
காணலுமாகா னுளனல்ல னில்லையல்லன்
பேணுங்காற் பேணுமுருவாகு மல்லனுமாம்
கோணைபெரிதுடைத் தெம்பெம்மானைக்கூறுதலே. (க0)

ப;-அநந்தரம், அவன் ஸ்வபாவத்தைச்சொல்லுகை மிகவு மரிதென்கிறார்.

ஆண்—ஆணும்
அல்லன்—அன்றியே
பெண்—பெண்ணும்
அல்லன்—அன்றியே
அல்லா—ப்ரயோஜநவத்தல்லாத
அலியும்—அலியும்
அல்லன்—அன்றியே
காணலும்—அவற்றைக்காணும் ப்ரமாணத்தாற்காணவும்
ஆகான்—ஒண்ணுதே
உளனல்லன்–ப்ரதிகூலர்க்கு உளனன்றியே
இல்லையல்லன்—அநுகூலர்க்கிலனன்றியே
பேணும்—ஆஸ்ரிதராயாதரித்த
கால்—காலத்தில்
பேணும்—அவர்களாதரித்த
உருவாகும்—வடிவையுடையனுய்
அல்லனுமாம்—ஆதரமில்லாதவளவில் அப்படியல்லனுயிருக்கும்
எம்பெம்மானை—என் ஸ்வாமியை
கூறுதல் — இப்ப்ரகாரம் அவன் காட்டக்கண்ட நான்கூறுமிடத்து
பெரிது—மிகவும்
கோணை—மிறுக்கு
உடைத்து—உடைத்து.

கோணை - மிறுக்கு. ஸர்வவிதஜாதீயனுகையாலே "ஏவம்விதன்" என்று சொல்லவரிதென்று கருத்து. (க0)

ஆறு ;—(ஆணல்லன்) ஸ்த்ரீபுந்நபும்ஸகாதி ஸர்வபதார்த்தவிஸஜாதீயனுதலால் தத்கோசரப்ரமாணங்களுக்கு அகோசரனுயிருந்து வைத்து, ஆஸ்ரிதஸுலபனுய் ஆஸ்ரிதருடைய விவக்ஷாநுகுணமான திவ்யரூபசேஷ்டிதங்களை யுடையனுய், அநாஸ்ரிதருக்கு துர்லபனுயிருந்த வெம்பெருமான் என்னோடு கலந்தவிக்குணம்சொல்லநிலமன்றாகிலும் சொல்லாதொழிய முடிகிறதில்லையென்கிறார். (க0)

ஈடு ;—நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவருண்டாகில், அவர்கள் பரமபதத்திலேபோய் நித்யாநுபவம்பண்ணப்பெறுவரென்கிறார்.

கூறுதலொன்றாராக் குடக்கூத்தவம்மானைக்
கூறுதலேமேவிக் குருகூர்ச்சடகோபன்
கூறினவந்தாதி யோராயிரத்து ளிப்பத்தும்
கூறுதல்வல்லாருளரேல் கூடுவர்வைகுந்தமே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ப ;—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

ஒன்று—ஒருகுணத்தை
கூறுதல்—சொல்லிலும்
ஆரா—சொல்லமுடியவொண்ணாத
குடக்கூத்த — குடக்கூத்துமுதலான ஸீலாதிகுணங்களையுடைய
அம்மானை—ஸ்வாமியை
கூறுதல் — உள்ளபடியே சொல்லுவதாக
மேவி—உத்யோகித்து
குருகூர்ச் சடகோபன் — அவனாலே லப்தஜ்ஞாந ப்ரேமரான ஆழ்வார்
கூறின—அருளிச்செய்த
அந்தாதி–அந்தாதியாகையாலே யடைவுகுலைக்கவொண்ணாத
ஓர்—அத்வி தீயமான
ஆயிரத்துள்—ஆயிரத்தில்
இப்பத்தும்—இப்பத்தையும்
கூறுதல்—சொல்ல
வல்லார்—வல்லார்
உளரேல்—உண்டாகில்
வைகுந்தம்—பரமபதத்தை
கூடுவர்—கூடுவர். (கக)
இது கலிவிருத்தம்.

ஆறு ;—( கூறுதல் ) காலதத்வமெல்லாஞ்சொன்னாலுமாராத குணசேஷ்டிதங்களையுடையனான வெம்பெருமானைச்சொன்ன வித்திருவாய்மொழியைச் சொல்லவல்லார், திருநாட்டிலேபோய் எம்பெருமானை யநுபவிக்கப்பெறுவாரென்கிறார். ... (கக)

---

முதற்பாட்டில் - இவராசைப்பட்டபடியே அடியார்கள் குழாங்களோடேவந்துகலந்தபடிசொன்னார் ; இரண்டாம்பாட்டில் - தம்மோடேகலந்தபின்பு அவன்திருமேனியும் திவ்யாவயவங்களும் திவ்யாயுதங்களும் நிறம்பெற்றதென்றார் ; மூன்றாம்பாட்டில் - தம்மோடே கலந்து தன்ஸத்தைபெறுதல், இல்லையாகில் இல்லையாம்படியாய் வந்து கலந்தானென்றார் ; நாலாம்பாட்டில்-கீழிவனுக்கு த்ருஷ்டாந்தமாகச்சொன்னவை நேர்நில்லாமையாலே அவற்றைசிக்ஷித்துச்சேர்த்

தநுபவித்தார்; அஞ்சாம்பாட்டில் - அதுதானுமுபமாநமாக நேரில்லாமையாலே, அவற்றைக்கழித்து உபமேயந்தன்னையே யநுபவித்தார்; ஆறும்பாட்டில் - இப்படி விலக்ஷணனானவன், முக்தன்தன்னை யநுபவிக்குமாபோலே தானென்னையநுபவித்தானென்றார்; ஏழாம்பாட்டில் - தமக்காக ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப் பண்ணினானென்றார்; எட்டாம்பாட்டில் - அவனை என்றுற்பேசமுடியாதென்றார்; ஒன்பதாம்பாட்டில் - துணைதேடிக்கொண்டு, திரியவும் பேசுகையிலே யுபக்ரமித்தார்; பத்தாம்பாட்டில் - "இப்படிகளால் என்னோடேகலந்தவிம்மாஹாகுணமொன்றையும்பேச" என்றால் சாலமிறுக்குடைத்தென்றார்; நிகமத்தில் - இதுகற்றார்க்குப் பலஞ்சொல்லித்தலைக்கட்டினார். ... ... ... (கக)

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் ஐந்தாம்திருவாய்மொழி

முற்றிற்று.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## இரண்டாம்பத்து.

# ஆறாந்திருவாய்மொழி.

## வைகுந்தா - ப்ரவேஸங்கள்.

ப ;— ஆறாந்திருவாய்மொழியில், தம்மோடு ஸம்ஸ்லேஷித்த ப்ரீத்யதிஸயத்தாலே அத்யந்தம் ஹ்ருஷ்டனை ஸர்வேஸ்வரன், " இவர் நிகர்ஷாநுஸந்தாநத்தாலே அகலத்தேடி இத்தைக்குலைக்கிற்செய்வதென் " என்கிற அதிஸங்கைபண்ணி, தன்விஸ்லேஷபீருத்வத்தை இவருடைய திருவுள்ளத்திலே ப்ரகாசிப்பிக்க, "நம்முடையவளவில் இவனபிநிவேஸமிருந்தபடியென்" என்று அத்யந்தஹ்ருஷ்டராய், இவனுடைய வந்ஸங்காநிவ்ருத்யர்த்தமாக ; தாமவனைச் சிக்கெனப்பற்றினமையையும், அவன்றான் அநந்யபராய்த் தம்மோடேகலந்தபடியையும், ஸ்வாநுபவத்தைக்கொடுத்த ஔதார்யாதிசயத்தையும், அவ்வௌதார்யமடியாகத்தாம் விடமாட்டாமையையும், லப்தபோகரான தமக்குவிட யோக்யதையில்லையென்னுமிடத்தையும், இவ்வநுபவஸித்தியால் தமக்குவந்த பூர்த்தியையும், அந்தலாபம் தம்மளவில்நில்லாமல் ஸம்பந்தி ஸம்பந்தி பர்யந்தமானபடியையும், இதுக்கு விஸ்லேஷம் பிறவாமையில் தமக்குண்டான அபேக்ஷையையும், க்ருஷிபண்ணினவன்றான் இத்தைக்குலையானென்னுமிடத்தையும், அவன்குலைக்கிலும் தாம் விடக்ஷமரல்லரென்னுமிடத்தையுமருளிச்செய்து, அவனுடைய விஸ்லேஷாதிஸங்கையை நிஸ்ஸேஷமாக நிவர்த்திப்பித்தருளுகிறார்.

ஆறு ;—(வைகுந்தா) ஆழ்வார், தம்மோடு கலந்தகலவியால் எம்பெருமானுக்குவந்த ப்ரீதியைப்பேசுகிறார்.

---

ஈடு ;—* ஆடியாடியிலார்த்திதீரவந்து ஸம்ஸ்லேஷித்தபடிசொல்லிற்று - * அந்தாமத்தன்பு ; அந்தஸம்ஸ்லேஷத்தால் பிறந்தப்ரீதி அவனதென்னுமிடஞ்சொல்லுகிறது - இத்திருவாய்மொழி. "ப்ரணயிப்ரீத்யநுஸந்தாநங்காணிது" என்று ஆளவந்தாரருளிச்செய்யும்படி-ஆழ்வார்விஷயமாக ஈஸ்வரனுக்குண்டான ப்ரீதிசொல்லுகிறது இதில்.

*ஊனில்வாழுயிரிலே - ஆழ்வார்தாம் பகவதநுபவம்பண்ணித் தமக்கவன்பக்கலிலேயுண்டான ப்ரேமம் அவனளவில் பர்யவஸி

யாதே, "அடியார்கள் குழாங்களையுடன்கூடுவதென்றுகொலோ" என்று - ததீயரளவும் சென்றபடிசொல்லிற்று; இத்திருவாய்மொழியில் - ஸர்வேஶ்வரன் ஆழ்வார்பக்கல் பண்ணின ப்ரேமம் இவரொருவரளவன்றிக்கே, ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் வெள்ளமிடுகிறபடி சொல்லுகிறது; இரண்டுதலைக்கும் ரஸமதிஶயித்தால் ஸம்பந்திஸம்பந்திகளளவும் செல்லுமிறே; "எமர்கீழ்மேலெழுபிறப்பும் விடியாவெந்நரகத்தென்றும் சேர்தல் மாறினர்" என்கிறாரிறே.

உபயவிபூதியுக்தனாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஸர்வப்ரகாரபரிபூர்ணனான தான் தன்படிகளொன்றும் குறையாதபடிவந்து இவரோடே ஸம்ஶ்லேஷித்து, அந்தஸம்ஶ்லேஷந்தான் "தன் பேறு" என்னுமிடந்தோற்ற ஹ்ருஷ்டனாய், "அநாதிகாலம் *எதிர்சூழல்புக்குத்திரிந்தவஸ்துவை ஒருபடி ப்ராபிக்கப்பெறுவோமே, இவர்தாம் இனி நம்மை விடிற்செய்வதென்" என்றதிஶங்கைபண்ணி அவனலமாக்கிறபடியைக்கண்டு, "நீயிங்ஙன்படவேண்டா" என்று அவனதிஶங்கையைப் பரிஹரித்து அவனையுளனாக்குகிறார்; (க) "ெவெெஉஹிா௨ெஸகஹிஹி-க-ு-ெடீயாஸஹ - வைதேஹி ரமஸேகச்சிச்சித்ரகூடேமயாஸஹ" என்றாற்போலேயாயிற்று இதில் ரஸமும்; மைதிலி, உன்னையறிந்தாயே, நம்மையறிந்தாயே, கலக்கிற தேஶமறிந்தாயே யென்றாரிறேபெருமாள்.

ஈடு; அவ;—(முதற்பாட்டு) முதற்பாட்டில், *அந்தாமத்தன்பிலே - ஆழ்வாருடனேவந்துகலந்து தான்பெறாப்பேறுபெற்றானாயிருக்கச்செய்தே, இவர், "அல்லாவியுள்கலந்த" என்றும், "என்முடிவுகாணாதே யென்னுள்கலந்தான்" என்றும் - தம்முடைய நைச்யத்தை யநுஸந்தித்தவாறே, "*வளவேழுலகுதலையெடுத்து இன்னமிவர் நம்மைவிடிற்செய்வதென்" என்று எம்பெருமானுக்குப் பிறந்த அதிஶங்கையை நிவர்த்திப்பிக்கிறார். *

வைகுந்தாமணிவண்ணனே யென்பொல்லாத்திருக்குறளாவென்னுள் மன்னி
வைகும்வைகல்தோறு மமுதாயவானேறே
செய்குந்தாவருந்தீமை யுன்னடியார்க்குத் தீர்த்தசுரர்க்குத்தீமைகள்
செய்குந்தாவுன்னைநான் பிடித்தேன்கொள் சிக்கெனவே. (க)

(க) ரா - அயோ - கூச - கஅ.

ப;-முதற்பாட்டில், நிரதிஶயபோக்யனாய் அநிஷ்டநிவர்த்தகனானவுன்னை நான் சிக்கெனப்பற்றியிருக்கிறேனென்று திருவுள்ளம் பற்றேறன்கிறார்.

வைகுந்தா—பரமபத நிலயத்வத்தாலே அஸாதாரணஶேஷியாய்
மணிவண்ணனே—நீலரத்நம் போன்ற வடிவையுடையனாகையாலே ஸுலபனாய்
என்பொல்லாத் திருக்குறளா—தர்ஶநீயமான வாமந விக்ரஹத்தை யுடையனாகையாலேபோக்யனாய்
(இவ்வாகாரத்ரயத்தையும் ப்ரகாஶிப்பித்துக்கொண்டு)
என்னுள்—என்னெஞ்சுக்குள்ளே
மன்னி—ஸ்திரஸம்ஶ்லேஷம்பண்ணி
வைகும்—இருக்கிற
வைகல்தோறும்—காலந்தோறும்
அமுதாய—நித்யபோக்யமாய்க்கொண்டு
வானேறே—நித்யஸூரிஸமாநமாம்படியநுபவிப்பிக்கிறமேன்மையையுடையனாய்
செய்—தானே செய்துகொள்ளப்பட்டு
குந்தா—பலப்ரதாநத்தில்குந்தாதே
அரும்—பரிஹரிக்கவரிதான
தீமை—கொடியபாபங்களை
உன்னடியார்க்கு—உன்னோடு ஶேஷத்வஸம்பந்தமுடையார்க்கு
தீர்த்து—தீர்த்து
(அவைப்ரதிகூலரான அஸுரப்ரக்ருதிகள் பக்கலிலேயாம்படி)
அசுரர்க்கு—அவர்களுக்கு
தீமைகள்—அநர்த்தத்தை
செய்—விளைக்கும்
குந்தா—குந்தமாகிற ஆயுதத்தையுடையவனே
உன்னை—இப்படிபோக்யபூதனாய்அநிஷ்டநிவர்த்தகனாயாஶ்ரிதபக்ஷபாதியானவுன்னை
நான்—உன்னினிமையறிந்து உன்னையொழியச்செல்லாதநான் (இனி)
சிக்கென—விடாதபடி ஸ்திரமாக
பிடித்தேன்—பற்றினேனாகை
கொள்—திருவுள்ளம்பற்று.

"செய்குந்தாவரும்" என்றுசொல்லாய் - செய்யப்பட்டுக்கடக்கவரிய என்றுமாம். "குந்தமென்று - மரமாய், அதின் வெளுப்பையிட்டு ஶுத்தியைக் காட்டுகிறது" என்றுஞ்சொல்லுவர். பொல்லாவென்று-விபரீதலக்ஷணையாலே அழகைச்சொல்லுகிறது. என்பொல்லாவென்று - தம்மையநந்யார்ஹராக்கிற்று அவ்வழகாலே யென்றுகருத்து. (க)

ஆறு ;—ஸ்ரீவைகுண்டநிலயனாய், ஆஶ்ரிதஸுலபனாய், நிரவதிகஸௌந்தர்யத்தையுடையனாய், என்னுள்ளேபுகுந்திருந்து எனக்கபூர்வவத்பரமபோக்யபூதனாய், *அபர்வருமமரர்களதிபதியாய், ஆஶ்ரிதருடைய வநுபவைகவிநாஶ்யமான ஸமஸ்தபாபங்களையும்போக்கி ப்ரதிகூலர்க்கு துঃக்கங்களையும் விளைவிக்கும் ஸ்வபாவனாய், நிர்மலனாயிருந்த வுன்னைபரமப்ராப்யமாகப்பற்றினே னென்கிறார். (க)

---

ஈடு ; அவ ;—( இரண்டாம்பாட்டு ) அவன், "இவர்நம்மை விடிற்செய்வதென்" என்றதிஶங்கைபண்ணபடியைச்சொல்லிற்று - கீழிற்பாட்டில் ; இவர், "விடேன்" என்றபின்பு அவனுக்குவடிவில் பிறந்தபௌஷ்கல்யம் சொல்லுகிறது இப்பாட்டில்.

சிக்கெனச்சிறிதோரிடமும் புறப்படாத்தன்னுள்ளேயுலகுகள்
ஒக்கவேவிழுங்கிப் புகுந்தான்புகுந்ததற்பின்
மிக்கஞானவெள்ளச்சுடர் விளக்காய்த் துளக்கற்றமுதமாயெங்கும்
பக்கம்நோக்கறியா னென்பைந்தாமரைக்கண்ணனே. (உ)

ப ;—அநந்தரம் தம்முடையபக்கல் கலந்து அவனுஜ்ஜ்வலஸ்வரூபனாய்க் கொண்டு ஓரிடத்திலங்யபரதையற்றிராநின்றானென்கிறார்.

சிறிதோர்—அல்பமான
இடமும்—தேசமும்
புறப்படா—புறம்புபோகாதபடி
உலகுகள்—உலகுகளை
தன்னுள்ளே—தன்ஸங்கல் பத்துக்குள்ளே
ஒக்கவே—ஏகப்ரகாரமாக
விழுங்கி—அடக்கி
சிக்கென — இனியொருகாலும் புறப்படாதபடி
புகுந்தான்—என்னுள்ளேபுகுந்தான்;
புகுந்ததற்பின்—புகுந்தபின்
மிக்க—மிகுத்துவருகிற
ஞானவெள்ளம்—ஜ்ஞாநபூர்த்தியாகிற
சுடர்—ப்ரபைக்காஶ்ரயமான
விளக்காய்—ஸ்வரூபமாகிற தேஜோத்ரவ்யமாய்
துளக்கு—நான் சிக்கெனப்பிடித்தபின் புவிஶ்லேஷாதிஶங்கையால் வந்தநடுக்கமும்
அற்று—தீர்ந்து
அமுதமாய் — நிரதிஶய போக்யபூதனாய்
என்—என்னையேபார்த்திருக்கிற
பை—அழகிய
தாமரை—தாமரைபோன்ற
கண்ணன்—கண்ணையுடையவன்
எங்கும்—ஓரிடத்திலும்
பக்கம்—பக்கத்தில்
நோக்க—நோக்க
அறியான்—அறிகிறிலன்.

என்பக்கலபிநிவேஶம் பத்நீபரிஜநாதிகள்பக்கலிலும் காண்கிறிலனென்று கருத்து; ஸ்வரூபாதிகளிலவனுக்குண்டான ஸ்ப்புரிதப்ரகாஶமும் ஸ்வஸம்ஶ்லேஷமடியாகவென்று நினைக்கிறார். (உ)

ஆறு ;—(சிக்கென) இப்படி தம்முள்ளேபுகுந்தபின்பு எம்பெருமானுக்குப்பிறந்தஸம்ருத்தியைப் பேசுகிறார்.

ஜகத்ஸ்ருஷ்ட்யாத்யங்யபரதையைப் போக்கிக்கொண்டு என்னுள்ளேபுகுந்தான் ; புகுந்ததற்பின் அளவிறந்த ஜ்ஞாநாதி ஸகலகல்யாணகுணவிஶிஷ்டனாய், விஜ்வரனாய், ப்ரமுதிதனாய், ஹர்ஷாதி

ரயத்தாலே புதுக்கணித்த திருக்கண்களையுடையனாய், என்னையல்லது எங்கும் பக்கநோக்கறியானென்கிறார். (உ)

ஈடு ; அவ ;—(மூன்றாம்பாட்டு) நித்யஸூரிகளுக்கு மவ்வருகானவன் தன்னை நான்தேஹிகளையநுபவிக்கும்படி பண்ணினவிதுவும் ஔதார்ய மேதானென்கிறார்.

தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவுந் தலைமகனைத்துழாய்விரைப்
பூமருவுகண்ணி யெம்பிரானைப் பொன்மலையை
நாமருவிநன்கேத்தி யுள்ளிவணங்கி நாமகிழ்ந்தாட நாவலர்
பாமருவிநிற்கத்தந்த பான்மையேவள்ளலே. (௩)

ப ;—அநந்தரம் தன்னைக்காணத்ரயத்தாலும் நிரந்தராநுபவம் பண்ணுவித்த மஹோதாரனவன் என்னையொழியவறிகிறிலனென்கிறார்.

தாமரை—தாமரைபோன்ற
கண்ணனை—கண்களையுடையனாய் (அவ்வழகாலே)
விண்ணோர்—நித்யஸூரிகள்
பரவும்—நிரந்தரமாகப் புகழும்படியான
தலைமகனை — மேன்மையையுடையவ[னாய்]
விரை—விரையும்
பூ—பூவும்
மருவு—மருவின
துழாய்க் கண்ணி } துழாய்மாலையையுடையனை யக்கொண்டு
எம்—எங்களுக்கு
பிரானை—ஸ்வாமியாய்
பொன்மலையை } எங்களோட்டைச் சேர்த்தியாலே பொன்மலைபோலே யோங்கியுஜ்வலனான தன்னை
நாம்—நாங்கள்நிகர்ஷம்பார்த்தகலாதே
மருவி—மருவி
நன்கு—ஸூரிகளோபாதி அங்குத்தைக்குத்தகுதியாம்படிநன்றாக
ஏத்தி—ஏத்தி
உள்ளி—அவர்கள்சிந்தையுள் வைக்குமாபோலே நினைத்து
வணங்கி—(க) "வணங்கி வழிபடும்" என்றபடியேதிருவடிகளிலே விழுந்து
(இப்படிகாணத்ரயத்தாலுமுண்டானவநுபவத்தாலே)
நாம்—நாங்கள்
மகிழ்ந்து—ஆநந்திகளாய்
ஆட—ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணும்படியாக
நா—நாவிலே
அலர்—அலருகிற
பா—பாவிலே
மருவி—மருவி
நிற்க—திருவாய்மொழிபாடிநிற்கும்படி
தந்த—உபகரித்த
பான்மை—ஸ்வபாவத்துக்கு
ஏய்—பொருந்தின
வள்ளல்— ஔதார்யகுணவிஶிஷ்டனானவன்.

எங்கும் பக்கநோக்கறியானென்றந்வயம். பான்மை - ஸ்வபாவம். (௩)

(க) தி - வாய் - க - சு - ஐ.

ஆறு ;—(தாமரை)நிரதிஶயஸௌந்தர்யலாவண்யாதி கல்யாண குணவிஶிஷ்டனாய், நிரதிஶயஸுகந்ததிவ்யமால்யா லங்க்ருதனாய், ஶேஷஶேஷாஶநவைநதேயாதிதிவ்யபுருஷர்களாலேஸம்ஸ்துயமாந னாயிருந்தவனை, நாம்மருவிநன்கேத்தியுள்ளிவணங்கி நாமகிழ்ந்தாடும் படிநம்முடைய நாவிலேயலருகிற சொற்களுக்குத் தன்னைவிஷயமா கத்தருகையே ஸ்வபாவமாயிருப்பதே!,என்னவதாங்யனோவென்கிறார்

ஈடு; அவ;—(நான்காம்பாட்டு)"நாமருவிநன்கேத்தியுள்ளி வணங் கிநாமகிழ்ந்தாட" என்று - தம்முடையநைச்யத்தை யநுஸந்தித்த வாறே, "இவர்நம்மைவிடிற்செய்வதென்" என்று, அவனதிஶங்கை பண்ண, நிர்ஹேதுகமாக வுன்வடிவழகை நீயென்னையநுபவிப்பிக்க அநுபவித்து, அத்தாலேஶிதிலனானநான் உன்னைவிட ஸம்பாவனை யுண்டோ வென்கிறார்.

வள்ளலேமதுசூதனா வென்மரதகமலையே யுனைநினைந்து
எள்கல்தந்தவெந்தா யுன்னையெங்ஙனம்விடுகேன்
வெள்ளமேபுரைநின்புகழ் குடைந்தாடிப்பாடிக்களித்துகந்துகந்து
உள்ளநோய்களெல்லாந் துரந்துய்ந்துபோந்திருந்தே. (ச)

ப ;—அநந்தரம் ஸர்வப்ரகாரோபகாரகனானவுன்னை விடப்போமோவென் கிறார்.

வள்ளலே—அர்த்தித்வநிரபேக்ஷமாகவுப கரிக்கும்மஹோதாரனாய்
மதுசூதனா — உபகாரங்கொள்ளுகிற வென்விரோதியை மதுவையழித்தாற் போலேயழிக்கும விரோதிகனானவெனக்கு
மரதகமலையே—உத்துங்கமா யுஜ்வலமா னமரதகமலைபோலே யிருக்கிறவடிவையநு பவிப்பிக்குமவனாய் (க) "மாற்பான்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு" என்கிறபடியே)
உனை—உன்னை
நினைந்து—அநுஸந்தித்து
எள்கல்—இதரவிஷயங்களை யிகழும்ஸ் வபாவத்தை
தந்த—தந்த
எந்தாய்—ஸ்வாமியே
வெள்ளமேபுரை—பெருங்கடல்போலே யபரிச்சிந்நமான
நின்—உன்னுடைய
புகழ்—குணங்களை
குடைந்து—அவகாஹித்தநுபவித்து
ஆடிப்பாடி—அந்தப்ரீதியாலே; ஆடுவ துபாடுவதாய்
களித்து—களித்து
உகந்துகந்து—அதோளவில்நில்லாதே மேன்மேலனவுகந்து

(க) ந - திருவ கச.

உள்ளநோய் களெல்லாம் — அஹங்காரார்த்தகாமங்கள், அநுபவவிஶ்லேஷம். நிகர்ஷாநுஸந்தாநம்முதலாக வுள்ளநோய்களையெல்லாம்
துரந்து—தூரப்போம்படியகற்றி
உய்ந்து—லப்தஸத்தாகனாய்
போந்து — ஸம்ஸாரஸ்த்திதிகுலைந்து உன்னளவும்போந்து
இருந்து — (க) "மாயநாரஸைநாத - காயந்நாஸ்தே" என்றநுபவித்துக்கொண்டிருக்கப்பெற்றுவைத்து
உன்னை - இப்படியுபகாரகனானவுன்னை
எங்ஙனம்—எங்ஙனே
விடுகேன்—விடுவேன். (ச)

ஆறு;—(வள்ளலே) ஆஶ்ரிதர்க்கு ஆத்மதாநம்பண்ணும்ஸ்வபாவனே, தத்விரோதிநிரஸந ஸ்வபாவனே, என்னுடைய பரமபோக்யமே, உன்னைநினைந்தால் நீராயுருகும் ப்ரக்ருதியாக வென்னைப் பண்ணினவனே, உன்னுடைய ஏவம்விதமான கல்யாணகுணங்களாகிற அம்ருதவெள்ளத்தைக் குடைந்தாடிப்பாடிக்களித் துகந்துகந்து உள்ள நோய்க ளெல்லாந் துரந்து உய்ந்துபோந்திருந்து உன்னையெங்ஙனே விடும்படி யென்கிறார். ... ... (ச)

ஈடு ; அவ ;—(அஞ்சாம்பாட்டு) ஆத்மாந்ததாஸ்யத்திலே அதிகரித்தநான் உன்னைவிடப்ரஸங்கமுண்டோவென்கிறார்.

உய்ந்துபோந்தென்னுலப்பிலாத வெந்தீவினைகளைநாசஞ்செய்துனதந்தமிலடிமை யடைந்தேன் விடுவேனோ
ஐந்துபைந்தலையாடரவணைமேவிப் பாற்கடல்யோகநித்திரைச்
சிந்தைசெய்தவெந்தா யுன்னைச்சிந்தைசெய்துசெய்தே. (ரு)

ப ;—அநந்தரம் த்வதநுபவஜநித கைங்கர்யபோகத்தைப் பெற்றநான் விடும்படியென்னென்கிறார்.

பாற்கடல்—திருப்பாற்கடலிலே
ஐந்து—ஐந்துவகையாய்
பை—விரிந்த
தலை—பணங்களையுடையவனாய்
ஆடு—அசைந்துவருகிற
அரவணை—திருவரவணையின்மேலே
மேவி—பொருந்தக்கண்வளர்ந்து
யோகம்—ஜகத்ரக்ஷணயோகத்தில் நிப்ருததையாலே
நித்திரை—உறங்குவாரைப்போலே
சிந்தைசெய்த—ரக்ஷணப்ரகார சிந்தைபண்ணின
எந்தாய்—என்ஸ்வாமியே
உன்னை—இப்படி ரக்ஷகத்வத்தை ப்ரகாஶிப்பித்தவுன்னை
சிந்தைசெய்து செய்து — நிரந்தராநுஸந்தாநம் பண்ணி
உய்ந்து—லப்தஸ்வரூபனாய்
போந்து—அந்யபராரானஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தனாய்

(உ) கை - ப்ரமா ...

என்—நானே யெனக்குத் தேடிக்கொண்டு
உலப்பிலாத—அஸங்க்யாதமாய்
வெம்—க்ரூரமாய்
தீ—அக்நிகல்பமான
வினைகளை —பாபங்களை
நாசஞ்செய்து—நஶிக்கும்படி பண்ணி
உனது—ப்ராப்தனானவுன்னுடைய
அந்தமில்—அபரிச்சிந்நமான
அடிமை—கைங்கர்யபோகத்தை
அடைந்தேன்—கிட்டப்பெற்றநான்
விடுவேனோ—விடக்ஷமனல்லன்.

ஆஶ்ரிதவிஷயத்தில் உனக்குப் பொருத்தமில்லாமல் விடுகிறேனோ; அவர்கள் ரக்ஷணத்தில் உனக்குச்சிந்தையில்லாமல் விடுகிறேனோ; உன்னநுபவத்தில் எனக்கு ஶீலநமில்லாமல் விடுகிறேனோ? என்ஸ்வரூபம் ப்ரகாஶியாமல் விடுகிறேனோ? விஷயாஸக்தரான ஸம்ஸாரிகளோடு பொருத்தமுண்டாய் விடுகிறேனோ? ப்ரதிபந்தகமான பாபமுண்டாய் விடுகிறேனோ, ப்ராப்யமான கைங்கர்யத்தில் சுவடறியாமல் விடுகிறேனோ? இப்படி லப்தாபீஷ்டனான நான் விடுவேனோ வென்றுகருத்து. (ரு)

ஆறு ;—(உய்ந்து) த்வதநுபவ ஜநிதமான ப்ரீதியாலே களித்தாடுகிற திருவநந்தாழ்வான்மேலே உன்னுடைய திவ்யரூபகுணங்களையநுபவித்துக்கொண்டு கண்வளர்ந்தருளுகிற வுன்னையநுபவித்துஉய்ந்துபோந்திருந்து, என்னுடைய முடிவில்லாத மஹாதுக்கங்களைப்போக்கி உன்னந்தமிலடிமையடைந்தேன் ; இனிவிடுவேனோ வென்கிறார். ... ... ... ... (ரு)

---

ஈடு ; அவ ;—(ஆறும்பாட்டு) ஆஶ்ரிதனுடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே தோற்றுவானொருவனானபின்பு எனக்கொரு கர்த்தவ்யாம்ஶமுண்டோ வென்கிறார்.

உன்னைச்சிந்தைசெய்துசெய் துன்னெடுமாமொழியிசை பாடியாடியென்
முன்னைத்தீவினைகள் முழுவேரரிந்தனன்யான்
உன்னைச்சிந்தையினலிகழ்ந்த விரணியனகல்மார்வங்கீண்டவென்
முன்னைக்கோளரியே முடியாததென்னெனக்கே. (கூ)

ப ;—அநந்தரம் இந்தக்கைங்கர்யலாபத்தாலே தம்முடைய ஸர்வாபீஷ்ட

உன்னை—வகுத்தஸ்வாமியுமாய் உபகாரகனுமானவுன்னை
சிந்தையினுல்—நெஞ்சாலே
இகழ்ந்த—அநாதரித்த
இரணியன்—ஹிரண்யனுடைய
அகல்—பேரிடமுடைத்தான
மார்வம்—மார்வை
கீண்ட—அநாயாஸேநகிழித்தவனுய்
என்—விரோதிநிவ்ருத்திக்குநிதர்ஶநபூதனுய்
முன்னை — ஆஶ்ரிதனுனப்ரஹ்லாதன் நினைவுக்குமுற்கோலின
கோளரியே—நரஸிம்ஹமானவனே!
உன்னை—இப்படி ஆபத்ஸகனுய்ப்ராப்தனுய்போக்யனுனவுன்னை
சிந்தைசெய்துசெய்து—நிரந்தராநுஸந்தாநம்பண்ணி
நெடு—அந்தப்ரீதியாலேயுத்துங்கமான
உன்—உன்னுடையகுணவாசகமான
மொழி—திருவாய்மொழியை
மா—அவ்விஷயத்துக்கீடானபெருமையுடைய
இசை—இசையோடே
பாடி—பாடி
ஆடி—அப்பாட்டுக்கீடானவபிநயந்தோற்றும்படியாடி
(இப்படிகாணத்ரயத்தாலுமுண்டான போகத்தாலே)
என்—என்னுடைய
முன்னைத்தீவினைகள் — அநாதிகாலார்ஜிதபாபங்களை
(க) "[illegible] நாவஜாநம்ஸரந்- நோபஜநம்ஸ்மரந்" என்னும்கணக்கிலே
யான்—நான்
முழுவேரரிந்தனன் — ஒன்றொழியாமல்வேரோடேயரிந்தேன்.

போக்த்ருத்வமித்தலையிலே யானவோபாதி, விரோதிநிவர்த்தகத்வமும் இங்கேயாகக்குறையில்லையிறே ; ஸ்வரூபம்தத்ப்ரகாரமானபின்பு,
எனக்கு—எனக்கு
முடியாதது—தலைக்கட்டாதது
என்—எதுதான்.

ஸர்வாபீஷ்டமும் ஸித்தமன்றோவென்று கருத்து. (சு)

ஆறு ;—(உன்னை) இப்படியுன்னை ஸர்வகரணங்களாலு மநுபவித்து என்னுடைய ஸமஸ்தப்ரதிபந்தகங்களையும் போக்கினேன்; ஆஶ்ரிதனுன்னைக் கோலுவதற்குமுன்பு அவனுடைய இஷ்டத்தை முடித்துக்கொண்டிருக்கும் ஸ்வபாவனுனவனே, எனக்கு முடியாததென் ; இந்தஸம்ருத்தியெல்லாம் உன்னுடைய ப்ரஸாதத்தாலே விளைந்ததென்கிறார். ... ... ... (சு)

---

ஈடு ; அவ ;—(ஏழாம்பாட்டு) என்னளவில் விஷயீகாரம் என்னுடையஸம்பந்தி ஸம்பந்திகளளவும் சென்றதுகிடீரென்கிறார்.

---

(க) சாந்தோ - அ - கஉ.

முடியாததென்னெனக்கேலினி முழுவேழுலகுமுண்டானுகந்துவந்து
அடியேனுட்புகுந்தா னகல்வானுமல்லனினிச்
செடியார்நோய்களெல்லாந்துரந் தெமர்கீழ்மேலெழுபிறப்பும்
விடியாவெந்நரகத் தென்றுஞ்சேர்தல் மாறினரே. (எ)

ப ;—அநந்தரம் என்பக்கல்பண்ணினவுபகாரம் என்குலத்தில் ஸம்பந்தித்தாரெல்லாருமுஜ்ஜீவிக்கும்படியாயிற்றென்கிறார்.

முழுவேழுலகும்—ஸமஸ்தலோகமும்
உண்டான் — தன்செல்லாமையாலே தனக்குள்ளேயாம்படி அவற்றையமுதுசெய்தவன்
உகந்து — அச்செல்லாமைதனக்கென் பக்கலிலே யுண்டாய், அதுக்குமேல் ஆதராதிசயத்தையுடையனாய்க் கொண்டு
அடியேன் —என்னுடைய ஶேஷத்வ ஸம்பந்தமேபற்றாசாக
உள்—உள்ளே
வந்து—வந்து
புகுந்தான்—புகுந்தான்;
இனி—இனி (அந்தலோகங்கள்போலே)
அகல்வானும்—புறம்புபோமவனும்
அல்லன்—அல்லன்; (இதடியாக)
கீழ்—கீழும்
மேல்—மேலும்
எழுபிறப்பும்—எழுபிறப்பிலும்
எமர்—என்னோடுஸம்பந்தமுடையார்
செடி—செடிபோலே
ஆர்—செறிந்த
நோய்களெல்லாம் — அவித்யாகர்மவாஸநாதிகளான ஸமஸ்தவ்யாதிகளையும்
துரந்து—கடக்கவோட்டி
விடியா—ஒருகால்முடிந்து வெளிச்சிறப்பதன்றியே
வெம்—நிரதிசயஸந்தாபகரமான
நரகத்து —ஸம்ஸாரமாகிறநிரயத்திலே
என்றும் —யாவதாத்மபாவி
சேர்தல்—கிட்டுகை
மாறினர்—தவிர்ந்தார்கள்.
இனி — இப்படிகுலஸம்பந்திபர்யந்தமாக என்னைப்பக்ஷபதித்தபின்பு
எனக்கேல்—எனக்காகில்
முடியாதது—முடியாதது
என்—உண்டோ.

என்னோடநுபந்தித்ததாகில் எல்லாக்காரியமும்தலைக்கட்டுமென்றுகருத்து.

ஆறு ;—(முடியாததென்) ஸர்வேஶ்வரனாயிருந்த வெம்பெருமானுக்கு என்பக்கலபிநிவேஶம் என்னளவில்பர்யவஸியாதே, என்னோடுஸம்பந்தித்தார்பக்கலிலுங்கூட வெள்ளங்கோத்தது, ஆதலால் அவனென்னை யகலநினைக்கிறிலன் ; இனி முடியாததொன்றுண்டோ வென்கிறார். ... ... ... ... (எ)

ஈடு ; அவ ;—(எட்டாம்பாட்டு) இப்படி கனத்தபேற்றுக்கு நீர் செய்த ஸுக்ருதமென்னென்ன ; ஒருஸுக்ருதத்தால்வந்ததல்ல, நான்பிறந்து படைத்ததென்கிறார். அதுவுமொன்றுண்டு, அநாதியாகப்பிறந்து போந்தேனென்கிறார்.

மாறிமாறிப்பலபிறப்பும்பிறந் தடியையடைந்துள்ளந்தேறி
ஈறிலின்பத்திருவெள்ளம் யான்மூழ்கினன்
பாறிப்பாறியசுரர்தம்பல்குழாங்கள் நீறெழப்பாய்பறவையொன்று
ஏறிவீற்றிருந்தாயுன்னை யென்னுள்நீக்கேலெந்தாய். (அ)

ப ;—அநந்தரம் இப்பேறெனக்கு விச்சேதியாதொழியவேணுமென்கிறார்.

பல பிறப்பும்—தேவதிர்யங்மநுஷ்யஸ்த்தாவராதிகளான நாநாஜந்மங்களிலும்
மாறிமாறிப் பிறந்து—ஒருகால் பிறந்ததிலே மீண்டுமீண்டும் பிறந்துபோரச்செய்தே
அடியை—உன் திருவடிகளை
அடைந்து-கிட்டி-மோக்ஷத்வஜ்ஞாநத்தையுடையேனாய்
உள்ளந்தேறி—"நீயேயுபாயபூதன்" என்கிறநெஞ்சில் தோற்றத்தையுடையேனாய், உன்னுடையவநுபவத்தாலே ஜநிதமான
ஈறு—முடிவு
இல்—இல்லாத
இன்பம்—ஆநந்தமாகிற
இரு—பெரிய
வெள்ளம்—வெள்ளத்திலே
யான்—அஹமர்த்தபூதனானநான்
மூழ்கினன்—அவகாஹித்தேன்;
அசுரர்தம்—அஸுரர்களுடைய
பல்—பலவகைப்பட்ட
குழாங்கள்—குழாங்களானவை
பாறிப்பாறி—பஹுமுகமாகஶிதிலமாய்
நீறு—தூளியாய்
எழ—கிளரும்படி
பாய்—அவர்களுடைய ஸேநாமத்யத்திலேபாயக்கடவனான
ஒன்று—அத்விதீயனாயுள்ள
பறவை—பெரியதிருவடியின்மேலே
ஏறி—ஏறி
வீறு—உன்மேன்மைதோன்றும்படி
இருந்தாய்—இருந்த
எந்தாய்...என்னுதனே
உன்னை...ப்ராப்தனுமாய் ஶரண்யனுமாய் போக்யனுமாய் விரோதிநிவர்த்தகனுமானவுன்னை
என்னுள்—உனக்குஸர்வப்ரகாரபரதந்த்ரனான என்னுள்ளிநின்றும்
நீக்கேல்...அகற்றாதொழியவேணும்.

ஆறு ;—(மாறிமாறி) உன்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்குவிரோதியான ஸம்ஸாரத்தில் வர்த்திக்கிறநான், நிர்ஹேதுகமாக வுன்திருவடிகளையே ப்ராப்யமாகப்பெற்று அதிலேயுள்ளந்தேறி, முடிவில்

லாத வழகியவின்பவெள்ளத்திலே முழுகினேன்; ஆஶ்ரிதருடைய வபேக்ஷிதங்களைச்செய்யும் ஸ்வபாவனுயிருந்த நீ யினியென்னைக்கை விடாதொழியவேணுமென்றபேக்ஷிக்கிறூர். ... (அ)

---

ஈடு; அவ;—(ஒன்பதாம்பாட்டு) முதலிலேயுன்னை யறியாதிருக்கிறவென்னை, உன்னையும் உன்போக்யதையையு மறிவித்து உன்னுலல்லது செல்லாதபடியாக்கினநீ இனியென்னைவிட்டுப் போகாதொழியவேணுமென்கிறூர்.

எந்தாய்தண் திருவேங்கடத்துள்நின்றூ யிலங்கைசெற்றூய்மராமரம்
பைந்தாளேழுருவ வொருவாளிகோத்தவில்லா [த்தவெம்
கொந்தார் தண்ணந்துழாயினுயமுதே யுன்னையென்னுள்ளேகுழை
மைந்தா வானேறே யினியெங்குப்போகின்றதே. (கூ)

ப;—அநந்தரம் நீயே க்ருஷிபண்ணிக்கலந்து இனியெங்கே றப்போவதென்கிறூர்.

எந்தாய்—எனக்குநிருபாதிகஸ்வாமியாய்
தண்—ப்ரமஹ்ரமான
திருவேங்கடத்துள்—திருமலையிலே
நின்றூய் — எழுந்தருளிநின்றஸுலபனுய்
இலங்கை — ஆஶ்ரிதவிரோதிகளுக்கு வாஸஸ்த்தாநமானலங்கையை
செற்றூய்—அழித்தவனுய்
மராமரம்—மராமரங்களினுடைய
பை—பருத்த
தாள்—அடி
ஏழு—ஏழும்
உருவ—உருவும்படி
ஒருவாளி—ஒருவாளியை
கோத்த—அநாயாஸேநகோத்த
வில்லா—வில்லையுடையவனுய்
கொந்து—கொத்தாய்
ஆர்—செறிந்து
தண்—குளிர்ந்த
அம்துழாயினுய் — திருத்துழாயாலே யலங்க்ருதனுய்
எம்மமுதே — நித்யபோக்யனுய்க்கொண்டு
உன்னை—ஏவம்விதனனவுன்னை
என்னுள்ளே—என்னுள்ளே
குழைத்த—ஏகத்ரவ்யமாம்படிகலசின
மைந்தா—நித்யயௌவநஸ்வபாவனுய் (இந்நிலையாலே)
வான்—ஸூரிகளுக்கும்
ஏறே—செருக்கனும்படிநின்றவனே

அஸாதாரண ஸம்பந்தத்தையும், ஸௌலப்யத்தையும், விரோதிநிவர்த்தகத்வத்தையுங்காட்டி, மஹாராஜரைப்போலே யென்னையும்விஶ்வஸிப்பித்து ஒப்பனையழகைக்காட்டியெனக்கு நித்யபோக்யனுய்ப் பிரிக்கவொண்ணுதபடி கலந்து அத்தாலே இளகிப்பதித்து

| | |
|---|---|
| இத்தாலே நித்யவிபூதிக்கும் மேலான மேன்மையையுடைய நீ [விட்டு | எங்கு—எங்கே |
| இனி—இனி (இந்தஸம்ஸ்லேஷத்தை | போகின்றது—போகிறது. |

இனிப்போகாதே யென்றுகருத்து. (கூ)

ஆறு ;—(எந்தாய்) திருமலையிலே புகுந்து நின்றருளினபடியை யும், உன்னுடைய திருவவதாரங்களையும், உன்னுடைய திவ்யசேஷ்டிதங்களையும், உன்னுடைய வழகையும், ஸ்ரீவைகுண்டநாதனயிருந்தருளும்படியையும், மற்றுமுள்ளபடியை யடங்கவெனக்கு போக்யமாகக்காட்டியருளி, உன்னை யென்னுள்ளே யொன்றாகக்குழைத்தருளின நீயினியெங்கேபோவது ; போவேனென்றால்தான் போகமுடியுமோ வென்கிறார். ... ... ... (கூ)

---

ஈடு ; அவ ;—(பத்தாம்பாட்டு) நாம்போகாதொழிகிறோம், நீர் நம்மைவிடாதொழியவேணுமேயென்ன ; நீபண்ணின வுபகாரங்களைக்கண்டுவைத்து விட ஸம்பாவனையுண்டோவென்கிறார். காலத்ரயத்திலும் ஸர்வவிதபந்துவுமான வுன்னைவிட ஸம்பாவனையில்லையென்கிறார்.

போகின்றகாலங்கள்போயகாலங்கள் போகுகாலங்கள்தாய்தந்தை
யுயிராகின்றாயுன்னை நானடைந்தேன் விடுவேனோ
பாகின்றதொல்புகழ் மூவுலகுக்கும்நாதனே பரமாதண்வேங்கட
மேகின்றாய் தண்டுழாய் விரைநாறுகண்ணியனே. (க0)

ப ;—அநந்தரம் உன்னுபகாரங்களைக்கண்ட நான் உன்னைப்பெற்று வைத்து விடக்ஷமனோ வென்கிறார்.

| | |
|---|---|
| போகின்றகாலங்கள் போயகாலங்கள் போகுகாலங்கள் } வர்த்தமாநமாயும் பூதமாயும் ஆகாமியாயு முள்ளகாலத்திலும் | புகழ்—குணப்ரதையை யுடையனாய்க் கொண்டு |
| தாய்தந்தையு யிராகின்றாய் } தாயும்தந்தையும் தன்னுத்மாவும் தனக்குப்பண்ணும் பரிவைப்பண்ணுநிற்பானாய் | மூவுலகுக்கும்—த்ரிவிதசேதநாசேதநங்களுக்கும் |
| | நாதனே—நாதனாய் |
| | பரமா—இப்பெருமைக்குத் தனக்குமேவில்லாதவனாய் இம்மேன்மை [யன்றியே |
| பாகின்ற—இப்படி ஸர்வதோமுகமான ரக்ஷணத்தாலேபரக்கிற | தண்—ஶ்ரமஹரமான |
| தொல்—அநாதிஸித்தமான | வேங்கடம்—திருமலையிலே |
| | மேகின்றாய்—மேவிநிற்கிற ஸௌலப் |

| | |
|---|---|
| யத்தை யுடையனுய் (இப்பரத்வஸௌலப்யங்களுக்கும் போக்யதைக் | நாறு—ப்ரவஹிக்கிற |
| | கண்ணியனே—மாலையையுடையவனே |
| | உன்னை—ஏவம்விதனுனவுன்னை |
| தண்—குளிர்ந்த கும்ஸூசகமாய்) | அடைந்தேன் — ஸம்ஶ்லேஷிக்கப்பெ |
| துழாய்—திருத்துழாயையுடைத்தாய் | நான்—நான் [ற்ற |
| விரை—பரிமளம் | விடுவேனே—விடக்ஷமனே. (௧௦) |

ஆறு ;—(போகின்ற) ஸர்வாத்மாக்களுக்கும் மாதாசெய்யும் நன்மையும் பிதாசெய்யும் நன்மையும் தான் தனக்குச்செய்யும்நன்மையும் ஸர்வகாலமுமெனக்குச்செய்தருளும் ஸ்வபாவனுய், நிரவதிகநித்யஸித்த கல்யாணகுணவிஶிஷ்டனுய், ஸர்வலோகேஶ்வரனுய், நிரஸ்தஸமாப்யதிகனுய், திருமலையிலேபுகுந்தருளி எனக்குங்கூட பரமஸுலபனுய், பரமபோக்யனுயிருந்த வுன்னைநானடைந்தேன் ; இனிவிடுவேனேவென்றுகொண்டுதாம் எம்பெருமானேடு கலந்தகலவிக்குத் தம்மாலும் அவனாலும் ஹேத்வந்தரத்தாலு மொழிவில்லையென்கிருர். ... ... ... (௧௦)

---

ஈடு ; அவ ;—(பதினேன்ரும்பாட்டு) நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லாரரரேனுமாகவுமாம், அவர்களுக்கு குலசரணகோத்ராதிகள் அப்ரயோஜகம், இவ்வாகாரத்தாலே அவர்கள் பகவதீயரென்கிருர்.

கண்ணித்தண்ணந்துழாய்முடிக் கமலத்தடம்பெருங்
கண்ணனைப்புகழ்நண்ணித்தென்குருகூர்ச் சடகோபன்மாறன்சொன்ன
எண்ணிற்சோர்விலந்தாதியாயிரத்துள் ளிவையுமோர்பத்திசையொடும்
பண்ணிற்பாட வல்லாரவர் கேசவன்றமரே. (௧௧)

ப ;—அநந்தரம் இத்திருவாய்மொழிக்குப் ப்லமாக பகவச்சேஷத்வஸித்தியை யருளிச்செய்கிருர்.

| | |
|---|---|
| கண்ணி—மாலாகாரமாய் | புகழ்—அவனுடையஆஶ்ரிதஸம்ஶ்லேஷகாரிதமான குணப்ரதையை |
| தண்—குளிர்ந்த | நண்ணி—கிட்டி |
| அம்துழாய்—திருத்துழாயாலே யலங்க்ருதமான | தென்—அழகிய |
| முடி—திருமுடியையும் | குருகூர்—திருநகரிக்குநிர்வாஹகராய் |
| கமலம்—கமலம்போலேதர்ஶநீயமாய் | மாறன்—“மாறன்” என்கிறகுடிப்பேரையுடைய |
| தடம்—விஶாலமாய் | |
| பெரு—நீண்ட வனை | சடகோபன்—ஆழ்வார் |
| கண்ணனை — திருக்கண்களையுடைய | சொன்ன—அருளிச்செய்த |

எண்ணில்—பகவதபிப்ராயத்தை
சோர்வில்—தப்பாத (வொண்ணுத
அந்தாதி—அந்தாதியாயடைவு குலைக்க
ஆயிரத்துள்—ஆயிரத்துள்
ஓர்—அத்விதீயமான
இவைபத்தும்—இவைபத்தையும்
இசையொடும்—இசையோடேகூட

பண்ணில்—பண்ணிலே
பாடவல்லாரவர் — பாடவல்லாரானவர்கள்
கேசவன்றமர்—ஸர்வாதிகனை ஸர்வேப்வரனோடே அவ்யவஹிதஸம்பந்தயுக்தரானவர்கள்.

எண்ணென்று - ஜ்ஞாநமாய், தத்வஜ்ஞாநத்தைத்தப்பாத வாயிரமென்றுமாம். பண்ணென்று - ஸ்வரம். இசையென்று - கீதப்ரகாரம். இது - இரண்டாமடியும் மூன்ருமடியும் அறுசீராய், முதலடியும் ஈற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை. (கக)

ஆறு ;—(கண்ணி) எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளையுள்ளபடியேயநுபவித்து, அநுபவித்தபடியேசொன்ன இத்திருவாய்மொழியை யிசையோடும்பண்ணிலே பாடவல்லார்க்கு, "கேசவன்றமர்" என்னுமிவ்வாகாரமில்லாதவாகாராந்தரமில்லையென்கிருர்.

---

ஈடு ;—முதற்பாட்டில் - எம்பெருமான் "இவர்நம்மைவிடிற்செய்வதென்" என்கிறவதிஸங்கையைப்போக்கிஞர் ; இரண்டாம்பாட்டில் - அதுபோனபின்பு அவனுக்குப்பிறந்த புதுக்கணிப்பைச்சொன்ஞர்; மூன்றும்பாட்டில்-தமக்கவன் பண்ணின ஔதார்யத்தையநுஸந்தித்து வித்தரானுர்; நாலாம்பாட்டில் - அவன் உமக்குப்பண்ணின ஔதார்யமேதென்ன, இதரவிஷய வைராக்யமென்ருர் ; அஞ்சாம்பாட்டில் - இதரவிஷய வைராக்யபூர்வகமாக ஆத்மாந்த தாஸ்யத்திலே அதிகரித்தநான் இனியொருநாளும் விடேனென்ருர்; ஆறும்பாட்டில்-ஆப்ரிதர்க்கு உதவுவாயானபின்பு எனக்கொருகுறையுண்டோவென்ருர் ; ஏழாம்பாட்டில் - என்னுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கு மொருகுறையில்லையென்ருர் ; எட்டாம்பாட்டில் - இதுக்குத் தாமநுஷ்டித்த வுபாயமின்னதென்ருர் ; ஒன்பதாம்பாட்டில் - "இவரகவாயறியவேணும்" என்றேரடிபோர நிற்க, இனிப்போக வொண்ணுதென்ருர் ; பத்தாம்பாட்டில் - நாம்போகாதொழிகிறேம், நீர்தாம்போகா தொழியவேணுமேயென்ன, காலத்ரயத்திலும் ஸர்வவிதபந்துவுமான வுன்னை விடஸம்பாவனையில்லையென்ருர் ; இதில்கற்றூர்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டிஞர்.

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் ஆறுந்திருவாய்மொழி

முற்றிற்று.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## இரண்டாம்பத்து

# ஏழாந் திருவாய்மொழி.

## கேசவன்றமர் ப்ரவேசங்கள்.



ப ;—ஏழாந்திருவாய்மொழியில், ஸ்வஸம்பந்தி பரம்பராபர்யந்தமாக ஈஶ்வரன்பண்ணின பக்ஷபாதத்தாலே தம்மளவில் அவனுடைய அபிநிவேஶாதிஶயத்தைக்கண்டு உகந்து; ஸ்வஸாந்தாநிக விஷயத்தில் அவனுடைய ப்ரஸாதவிஶேஷத்தையும், அதுக்கடியான தம்மளவில் பக்ஷபாதத்தையும், தத்கார்யமான வுபகாரத்தையும், அவ்வுபகாரம் தங்குலத்திலுள்ளார்க்கும் ப்ராப்திபர்யந்தமான படியையும், இதடியாக ஈஶ்வரனுக்குப்பிறந்த ஔஜ்வல்யத்தையும், இதுக்கடையஹேதுவான க்ருபாபாரவஶ்யத்தையும், அநுபவிக்கைக் குறுப்பாக ஸத்த்வோத்தரமான சித்தப்ரதாநத்தையும், பொல்லாநெஞ்சைப்போக்கின படியையும், ப்ரேமயுக்தமான நல்லநெஞ்சிலே புகுந்தபடியையும், அந்நெஞ்சு அவனை விடாதொழியவேணுமென்கிற அபேக்ஷையையும், இன்னின்னபடியாக அவன் தன்னை முழுக்கக்கொடுத்த ஔதார்யத்தையும், இவ்வௌதார்யாதிஶயம் அதிஶயிதஜ்ஞானர்க்கு மபரிச்சேத்யமென்னுமிடத்தையு மருளிச்செய்து, ஸ்வவிஷயத்திலாதாம் ஈஶ்வரனுக்கு ஸம்பந்தித்ரயஸந்தாநஸம்ரக்ஷணபர்யந்தமானபடியை அவனுடைய ஆஶ்ரிதரக்ஷணார்த்த குணசேஷ்டித ப்ரகாஶகங்களான திருத்வாதஶ நாமங்களோடேகூட வருளிச்செய்கிறார். *

ஆறு ;—(கேசவன்றமர்) என்பக்கலுள்ள அபிநிவேஶத்தாலே என்னோடு ஸம்பந்தித்தாரையுங்கூட விஷயீகரித்தருளினானென்று ப்ரஸ்துதமானபொருளை விஸ்தரிக்கிறது. *

ஈடு ;—* ஆடியாடியில் "வாடிவாடும்" என்கையாலே - ஒருநீர்ச்சாவியாய் வாடினபடிசொல்லிற்று ; அந்தவொருநீர்ச்சாவியானதுதீர *காரார்கருமுகில் கலந்துவர்ஷித்தபடி சொல்லிற்று - *அந்தாமத்தன்பில் ; அப்படிவர்ஷித்தபடியாலே "ஈறிலின்பத்திருவெள்ளம் யான்மூழ்கினன்" என்று - வெள்ளமிட்டுப் பெருகினபடி சொல்லிற்று * வைகுந்தாமணிவண்ணனில் ; "எமர்கீழ்மேலெழுபிறப்பும் மாசதிரிதுபெற்று" என்கையாலே - அவ்வெள்ளமிருகரையும் புரண்டபடிசொல்லுகிறது - * கேசவன்றமரில்.

இவர் * ஆடியாடியில் பட்டவார்த்திதீரவந்து கலந்தபடிசொல்லிற்று-* அந்தாமத்தன்பு; அக்கலவியால் பிறந்தப்ரீதி அவனதானபடிசொல்லிற்று - * வைகுந்தாமணிவண்ணன்; அந்தப்ரீதிதான் ஆழ்வாரொருவரளவிலுமன்றிக்கே, † தம்மோடுபரம்பரயா ஸம்பந்தமுடையாரளவும் வெள்ளமிட்டுப் பெருகினபடியைச் சொல்லுகிறது இத்திருவாய்மொழியில். ஸர்வேஶ்வரன் ஆழ்வாரோடேவந்து ஸம்ஶ்லேஷித்து அத்தால்பிறந்தப்ரீதி தம்மொருவரளவிலுமன்றிக்கே தம்மோடுபரம்பரயா ஸம்பந்தமுடையாரளவும் பெருகினபடியைக் கண்டு, "இது இவன் என்பக்கல்பண்ணின பக்ஷபாதாதிஶயமிறே" என்று இனியராய், தம்மைவிஷயீகரிக்கைக்கீடான குணசேஷ்டிதாதிகளை யநுஸந்தித்து அவற்றுக்கு வாசகமான திருத்வாதஶநாமத்தாலே அவனைப்பேசி யநுபவிக்கிறார்.

ஸர்வேஶ்வரன் ஒருவனை விஷயீகரித்தால், அதுபின்னை அவனளவிலே நில்லாதிறே. (க) [𑌮𑌰𑌣𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑌿 𑌵𑍈𑌰𑌾𑌣𑌿 - மரணாந்தாநிவைராணி] ருஷிகள் குடியிருப்பை யழித்து, மைதிலியைப் பிரித்து, நம்முயிர்நிலையிலே நலிந்தாப்போலே ஸ்ரீ ஜடாயுமஹாராஜரை நலிந்து, இவையெல்லாம் செய்யமாட்டானே இவனினி. (க) [𑌨𑌿𑌰𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌨𑌃 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌮𑍍 - நிர்வ்ருத்தம்நஃப்ரயோஜநம்] இவன் ஜீவிக்கிறநாளிலே "நாம்செய்யும் நன்மை இவன் விலக்காதொழிவது காண்" என்றிருந்தோம், அது அந்நாளில் பெற்றிலோம்; நாம்தேடியிருந்தது முந்துறமுன்னம் ஸித்திக்கப்பெற்றோமிறே. (க) [𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑌾𑌮𑌸𑍍𑌯 𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌃 - க்ரியதாமஸ்யஸம்ஸ்காரஃ] இவன் நாம்செய்யும் நன்மை விலக்காதானவளவு பிறந்தவின்று மிழக்கவேணுமோ, வேண்டுவன செய்யப்பாரும். (க) [𑌮𑌮𑌾𑌪𑍍𑌯𑍇𑌷 𑌯𑌥𑌾 𑌤𑌵 - மமாப்யேஷயதாதவ] நீரிருய்த்திருந்திராகில், குடற்றுடக் குடையாரிலேயொருவன் செய்யுமித்தனையன்றோ; நாமிவனுக்கு வேண்டுவன செய்ய; நீர்பின்னைக்கடக்க நில்லீரென்றாரிறே. ஸ்ரீவிபீஷணாழ்வான் பக்கலோரம் ராவணனளவுஞ்சென்றதிறே.

"மஹாராஜர்க்குஶத்ரு" என்று வாலியை நிரஸித்துவைத்து, மஹாராஜர் கண்ணநீர்பொறுக்கமாட்டாதே (உ)"ஸஜோ தவாஷ்ஃ-

(க) ரா - யு - ௧௧௪ - ௧௦௧. (உ) ரா - கிஷ் - ௨௪ - ௨௯. † அவரோடு.

ஸஞ்ஜாதபாஷ்பஃ" என்று தாமும் கண்ணநீர்விழவிட்டாரிறே. (க) [ யஜெ ௭ நஜு தஸஜ - தர்மேமநஸ்ஸதேபத்ர ] ஸ்ரீமாலாகாரர் பக்கல் விஷயீகாரம் அவர் ஸந்தாநத்தளவும் சென்றதிறே; ஸ்ரீகண்டாகர்ணன் பக்கல் பண்ணினவிஷயீகாரம் அவன்தம்பி யளவுஞ் சென்று, "நீயவனுக்கு நல்லையாகில் அவன்முன்னாகப்போ" என்றருளிச்செய்தானிறே. எம்பாரித் திருவாய்மொழி யருளிச்செய்யப் புக்கால், "ஸ்ரீவைஷ்ணவனானேனென்கிறார்" என்பராம்; வைஷ்ணவத்வஸிந்ஹமிறே திருத்வாதசநாமம்; ஆழ்வாருடைய நெடுமாற்கடிமையும், எம்பெருமானுடைய நெடுமாற்கடிமையும் இரண்டாயிற்று நெடுமாற்கடிமை; அதில் எம்பெருமானுடைய நெடுமாற்கடிமை இத்திருவாய்மொழி. *

---

ஈடு; அவ;—(முதற்பாட்டு) ஸம்பந்தி ஸம்பந்திகள் பக்கலிலும் எம்பெருமானபிநிவிஷ்டனானபடியைக்கண்டு, இதெல்லாம் என்பக்கலுண்டான விஷயீகாராதிஸய மிறேயென்று ஹ்ருஷ்டராகிறார்.

கேசவன்தமர்கீழ்மே லெமரேழெழுபிறப்பும்
மாசதிரிதுபெற்று நம்முடையவாழ்வு வாய்க்கின்றவா
ஈசனென்கருமாணிக்க மென்செங்கோலக்கண்ணன் விண்ணோர்
நாயகனெம்பிரா னெம்மான் நாராயணனாலே. (க)

ப;—முதற்பாட்டில், தம்முடைய குலத்திலுள்ளார் பகவதபிமாநாந்தர்க்கதரானபடியை யருளிச்செய்கிறார்.

ஈசன்—ஸர்வஸாதாரணமான ஸ்வாமித்வத்தை யுடையனாய்
என்கருமாணிக்கம் — அப்படியேபொதுவன்றியே நீலரத்நம்போன்றவடிவையெனக்குக்காட்டி
என்செங்கோலக்கண்ணன் — அவ்வடிவுக்கு பரபாகமாம்படி சிவந்தழகிய திருக்கண்களாலே யென்னை யநந்யார்ஹனாக்கி
விண்ணோர்நாயகன்—பரமபத வாஸிகளோபாதி அங்கீகரித்து
எம்பிரான் — என்னை யநுபவிப்பித்து
எம்மான்—எனக்கு நாதபூதனானவுறவடியாக
நாராயணனாலே—நிரதிஸய வாத்ஸல்யயுக்தனானநாராயணனாலே
கீழ்மேலெழெழுபிறப்பும்— கீழ்மேலேழேழுபிறப்பும்

---

(க) வி - பு - ரு - கக - உஎ.

| | |
|---|---|
| கேசவன் தமர்—ஸர்வாதிகனை கேசவன் தமரான | சதிர்—சதிரை |
| எமர்—எமரானவர்கள் | பெற்று—பெற்று (அத்தாலே) |
| இது — நிர்ஹேதுகபகவதங்கீகாரமாகி [றவிந்த | நம்முடை—நம்முடைய |
| மா—பெரிய | வாழ்வு-ஸ்ரீவைஷ்ணவத்வ ஸ்ரீயானது |
| | வாய்க்கின்றவா-வளருகிறபடியே. (க) |

ஆறு ;—ஸர்வேஶ்வரனாய், நிரதிஶயஸௌந்தர்யாதி கல்யாண குணகனாய் *அபர்வறுமமரர்களதிபதியாய், எனக்கு ஸ்வாமியாயிருந்த நாராயணனாலே, யேநகேநாபிப்ரகாரேண ஸாக்ஷாத்வா பரம்பரயாவா என்னோடு ஸம்பந்தமுடையா ரெல்லாரும் பகவதேகபோகரானார்கள் ; தத்ஸம்பந்தத்தினாலே பகவதேகபோகத்வலக்ஷணமான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீ நமக்கு விளையும்படியே யிதுவென்கிறார். (க)

---

ஈடு ; அவ ;—(இரண்டாம்பாட்டு) "நாராயணனாலே" என்று நாராயணஶப்தம் ப்ரஸ்துதமாயிற்றே ; அதுக்கர்த்தமருளிச்செய்வதாக ஶப்தத்தை யுபாதாநம் பண்ணுகிறார்.

நாரணன்முழுவேழுலகுக்கும் நாதன்வேதமயன்
காரணம்கிரிசைகருமமிவை முதல்வனெந்தை
சீரணங்கமரர்பிறர்பலருந் தொழுதேத்தநின்று
வாரணத்தை மருப்பொசித்தபிரா னென்மாதவனே. (உ)

ப;—அநந்தரம் கீழுக்தமான நாராயணஶப்தார்த்தத்தை யுபபாதியாநின்று கொண்டு ஸ்வவிஷயபக்ஷபாதத்தை யருளிச்செய்கிறார்.

| | |
|---|---|
| நாரணன்—நாராயண ஶப்தவாச்யனாய் அதினுடைய வர்த்தமான | சீர்—குணோத்தராய் |
| முழுவேழுலகுக்கும்—ஸமஸ்தலோகத்துக்கும் | அணங்கு—திவ்யரான |
| நாதன்—ஸ்வாமியாய் | அமரர்—தேவர்களும் |
| வேதமயன் — அந்தஶப்தத்தையே ப்ரதாநமாக ப்ரதிபாதிக்கிற வேதப்ரதிபாத்யனாய் | பிறர்—ருஷிகளும் மநுஷ்யாதிகளுமான |
| காரணம்—க்ரியாஹேது | பலரும்—எல்லாரும் |
| கிரிசை—க்ரியை | தொழுது—வணங்கி |
| கருமம்—க்ரியாபலமான கார்யம் | ஏத்த—ஸ்தோத்ரம் பண்ணும்படியாக |
| இவை—இவற்றுக்கு | நின்று—நின்று |
| முதல்வன்—காரணபூதனாய் | வாரணத்தை—குவலயாபீடத்தை |
| | மருப்பு—கொம்பை |
| | ஒசித்த—முறித்த |
| | பிரான்—மஹோபகாரகனாய் |
| | என் — இப்படி நாரஶப்தார்த்தங்கள் |

| | |
|---|---|
| தனக்கு விபூதியானபடியை யெனக்கு ப்ரகாசிப்பித்த | மாதவன்–ஶ்ரிய:பதியான க்ருஷ்ணன் எந்தை—என்னை யநந்யார்ஹனுக்கின பேரஷி. |

சீரணங்கென்று - லக்ஷ்மியாகவுமாம். (உ)

ஆறு ;—(நாரணன்) "ஈசன்" என்று ப்ரஸ்துதமான ஈஶ்வரத்வத்தையுபபாதிக்கிறது.

ஸர்வாந்தராத்மபூதனுய், ஸர்வலோகேஶ்வரனுய், ஸர்வவேதவேத்யனுய், காரணத்துக்கும் க்ரியைக்கும் கார்யத்துக்கும் நிர்வாஹகனுயிருக்குமவைத்து, எனக்கு போக்யமாகைக்காக, பெரியபிராட்டியாரும் * அயர்வறு மமரர்களும் தொழுதேத்த, அதினுலே ஸம்வர்த்திதபலனுய்நின்று வாரணத்தை மருப்பொசித்தபிரான் மாதவனுலே எமரேழேழுபிறப்பும் கேசவன்தமராயிற்றென்கிருர். (உ)

---

ஈடு ; அவ ;—(மூன்ரும்பாட்டு) கீழே "மாசதிரிதுபெற்று" என்ருர் ; இந்நன்மைக்கடியென்னென்ன ; நினைவின்றிக்கேயிருக்க அந்த:புரவாஸிகள் சொல்லும் வார்த்தையைச்சொன்னேனென்கிருர் (க) "ஜாமாதா தயிதஸ்தவேதி பவதீஸம்பந்த த்ருஷ்ட்யா ஹரிம் பஶ்யேம" - ஜாமாதா தயிதஸ்தவேதி பவதீஸம்பந்தத்ருஷ்ட்யா ஹரிம் பஶ்யேம" என்ருரிறேபட்டர்.

மாதவனென்றதேகொண் டென்னையினியிப்பாற்பட்டது
யாதவங்களுஞ்சேர்கொடே னென்றென்னுட்புகுந்திருந்து
தீதவங்கெடுக்குமமுதஞ் செந்தாமரைக்கட்குன்றம்
கோதவமிலென்கன்னற்கட்டி யெம்மானென்கோவிந்தனே. (ந.)

ப ;—அநந்தரம் இப்பக்ஷபாதமடியாக ஸ்வவிஷயத்திலுக்திமாத்ரத்தையே பற்ருசாகக்கொண்டுபண்ணின வுபகாரத்தை யருளிச்செய்கிருர்.

| | |
|---|---|
| என்—எனக்காக | கொண்டு—பற்ருசாகக்கொண்டு |
| கோவிந்தன்—க்ருஷ்ணனுய் வந்தவதரித்த | என்னை — உக்தியில்வாசியறியாத வென்னை |
| எம்மான்—என்னுடைய ஸ்வாமியான | இனி—உக்த்யநந்தரமாக |
| மாதவன்—ஸ்ரீமான் [வன் | இப்பாற்பட்டது — மேலுள்ள காலமெல்லாம் |
| என்றதே—என்று நான்சொன்னவிந்த அஹ்ருதயோக்தியையே | அவங்கள்—அவித்யாதிகளான குறைகள் |

(க) ஶ்ரீகுணரத்ந - ருஉ.

யாதும்—ஏதேனுமொன்றையும்
சேர்கொடேன்—சேர்கொடேன்
என்று — என்றுஸங்கல்பித்து அதுக்கிடாக
என்னுள்—என்னெஞ்சுக்குள்ளே
புகுந்து—புகுந்து
இருந்து—அநந்யபரனாயிருந்து
தீது—புத்திபூர்வகமான தீமையையும்
அவம்—ப்ராமாதிகமான அவத்தையும்
கெடுக்கும்—கெடுக்கும்படியான
அமுதம் — நித்யபோக்யபூதனாய் இஸ் ஸம்ஶ்லேஷத்தாலே
செம்—சிவந்த
தாமரை—தாமரைபோலேயிருக்கிற
கண்—திருக்கண்களையும்
குன்றம்—ஸுஸ்த்திரமாய்வளர்ந்த வடிவையு மநுபவிப்பித்து
கோது—கோதும்
அவம்—அவமும்
இல்—இல்லாத
என்கன்னற்கட்டி — கன்னற் கட்டி போலே யெனக்கினியனானான்.

கன்னற்கட்டி - கருப்புக்கட்டி. அதுக்கு, கோதும், அவமுமாவது - நீரஸமானவஸ்த்வந்தரஸம்ஸர்க்கமும், பாகதோஷமும். ஈஶ்வரனுக்கு, கோதும், அவமுமாவது - உபகாரத்தினுடைய ஹேதுஸாபேக்ஷத்வமும், ஸ்வப்ரயோஜநார்த்தத்வமும். (௩)

ஆறு ;—(மாதவன்) இப்படி எம்பெருமான் என்னோடு ஸம்பந்தித்தாரையுங்கூட விஷயீகரிக்கும்படி என்னை வைஷ்ணவனுக்குகைக்கு ஹேதுவான என்பக்கலுள்ள சுகிருதமேதென்னென்னில் ; அதின்னதென்று சொல்லுகிறது.

யத்ருச்சயாபிராட்டி பரிக்ரஹித்தார் சொல்லுவதொருசொல்லைச்சொல்ல, அச்சொல்மாத்ரத்தையேகொண்டு மெய்யேபிராட்டி பரிக்ரஹமாயிருப்பாரைப்பார்த்தருளும் பார்வையாலே யென்னைப் பார்த்தருளி, “இவரையாகாதேநான் நெடுங்காலமெல்லாமிழந்தது” என்று, இழந்தகாலத்தை யநுஸந்தித்துமோஹித்து, பின்னைநெடும் போதுகூட ப்ரபுத்தனாய், “போனகாலத்தை யினிச்செய்யலாவதில்லையிறே, இனி யிப்பாலுள்ளகாலமாகிலும் என்னைவிடேன்” என்று, நிரதிஶய ஸௌந்தர்யத்தை யுடையனாய், நிரதிஶயபோக்யபூதனாய், ஆஶ்ரிதஸுலபனாய், பரமகாருணிகனா யிருந்த எம்பெருமான் என்னுள்புகுந்திருந்து, என்பக்கலுள்ள ஸ்வஸம்ஶ்லேஷ விரோதியான ஸ்வரூப ப்ரயுக்ததோஷத்தையும் ஹேதுக்ருதமான தோஷத்தையும்போக்கி, எனக்கு பரமபோக்யனானனென்கிறார். (௩)

ஈடு ; அவ ;—(நான்காம்பாட்டு) என்னோடு பரம்பரயாஸம்பந்த முடையாரையுங்கூட என்னைப்போலேயாக்கின ஒருவனுடைய ஸாமர்த்த்யமிருக்கும்படியே! என்று விஸ்மிதராகிறார்.

கோவிந்தன்குடக்கூத்தன்கோவலனென்றென்றேகுனித்து
தேவும்தன்னையும் பாடியாடத்திருத்தியென்னைக்கொண்டென்
பாவந்தன்னையும் பாறக்கைத்தெமரேழேழ்பிறப்பும்
மேவுந்தன்மையமாக்கினான் வல்லனெம்பிரான்விட்டுவே. (ச)

ப ;—அநந்தரம் இவ்வுபகாரம் ஸ்வஸம்பந்திகுலபர்யந்தமாம்படிபண்ணின ஸாமர்த்த்யத்தை யருளிச்செய்கிறார்.

| | |
|---|---|
| வல்லன்—நினைத்ததுசெய்யவல்லஶக்தி மானாய் | தன்னையும்—தனக்கஸாதாரண ஸ்வபாவமான நீர்மையையும் |
| விட்டு — ஸமஸ்த பதார்த்தங்களையும் வ்யாபித்து | பாடி-ப்ரீதிக்குப் போக்குவீடாகப்பாடி |
| | ஆட—ஸஞ்சரிக்கும்படி |
| எம்பிரான் - ஊரைவளைந்தொருவனைப் பிடிக்குமாபோலே யென்னை யங்கீகரித்த ஸ்வாமியானவன் | திருத்தி—இரும்பைப்பொன்னாக்குவாரைப்போலே நித்யஸூரி ஸமாநனாம்படி திருத்தி |
| கோவிந்தன் — ஜாத்யுசிதமான கோஸம்ருத்தியையுடையவன் | என்னை—என்னை |
| | கொண்டு—தன்னுடையவனாகக் கைக்கொண்டு, ஸ்வாங்கீகார விரோதியான |
| குடக்கூத்தன் — அந்த ஸம்ருத்த்யுசிதமான ஹர்ஷவ்யாபாரமாயுள்ள குடக்கூத்தை யுடையவன் | என்—என்னுடைய |
| | பாவந்தன்னையும்—பாபங்களையும் |
| கோவலன்—இந்த வைஶ்வர்யசேஷ்டிதங்களுக் கநுரூபமான கோபாலஜந்மத்தையுடையவன் | பாற—ஓடிப்போம்படி |
| | கைத்து—துரத்தி |
| | எமர்—என்னோடேஸம்பந்தமுடையார் |
| என்றென்றே-என்றென் றிவற்றைத் தனித்தனியேசொல்லி | ஏழேழ்பிறப்பும்—ஏழேழுஜந்மமும் |
| | மேவும்—தன்னைப்ராபிக்கும் |
| குனித்து—ப்ரீதியாலே கூத்தாடி | தன்மையம்—தன்மையை யுடையோமாம்படி |
| தேவும் — இந்த ஸௌலப்யத்துக்கடியான பரத்வத்தையும் | ஆக்கினான்—பண்ணினான். |

இதொருஶக்தியோகமிருந்தபடி யென்னென்று கருத்து. பாற - ஓட. (ச)

ஆறு ;—(கோவிந்தன்) இப்படி யென்னுள்ளேபுகுந்திருந்து தன்னுடைய குணசேஷ்டிதங்களையேத்திக் களிக்கும்படியாகவும், தன்னுடைய ஸர்வேஶ்வரத்வத்தையும் ஆஶ்ரிதபாரதந்த்ர்யமாகிற

தன்னுடைய ஸ்வரூபத்தையும் பாடியாடும்படியாகவு மென்னைத் திருத்தி, இப்படியென்னை விஷயீகரித்து, பின்னை என்பக்கலுள்ள ப்ரதிபந்தகங்களை யெல்லாம்போக்கி அவ்வளவில் பர்யவஸியாதே, என்னோடு ஸம்பந்தித்தாரையுங்கூட என்னைப்போலே தன்திருவடிகளை ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவராக்கினான்; வல்லன் வல்லனெம்பிரான், வல்லனென்னயன், வல்லனென்னப்பன், வல்லனென்றென்று அவனைப்புகழுகிறார். ... ... ... (ச)

ஈடு; அவ;—(ஐந்தாம்பாட்டு) திருமாலையாண்டானோடே எம்பெருமானார் திருவாய்மொழிகேட்டருளுகிறநாளில், பாட்டுக்கள்தோறும் சிலவார்த்தைகளையருளிச்செய்து "இது அர்த்தமானாலோ" என்றால், "இது விஶ்வாமித்ரஸ்ருஷ்டி, ஆளவந்தாரருளிச்செய்யக் கேட்டறியேன்" என்று பணிக்குமாண்டான்; ஆண்டான் "இப்பாட்டுக்கு விஶ்வாமித்ரஸ்ருஷ்டி வேண்டாவாயிருந்ததீ" என்ன, "இப்பாட்டால் - தன்னவயவஸௌந்தர்யத்தாலே யென்னைத் தனக்காக்கினானென்கிறார்" என்றருளிச்செய்தருளினாராம்.

அதுவுங்கிடக்க, பட்டருளிச்செய்வதொன்றுண்டு - "ஆழ்வாரையுமாழ்வார்பரிகரத்தையும் விஷயீகரித்து, அத்தாலே திருமேனியிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தைச் சொல்லுகிறது" என்று; (க) "விரோபிதஜடாஸ்நாதஸ்ஸீதயா லக்ஷ்மணேந ச । மஹார்ஹவஸநோ ராமஸ் ஸ்ரக்வீ நாநாவிபூஷண: - விரோபிதஜடஸ்ஸ்நாதஶ்சித்ரமால்யாநுலேபந: । மஹார்ஹவஸநோ ராமஸ் தஸ்தௌ தத்ர ஶ்ரியாஜ்வலந்" என்று நின்றாற்போலே.

விட்டிலங்குசெஞ்சோதித் தாமரைபாதங்கைகள்கண்கள்
விட்டிலங்குகருஞ்சுடர் மலையேதிருவுடம்பு
விட்டிலங்குமதியஞ்சீர் சங்குசக்கரம்பரிதி
விட்டிலங்குமுடியம்மான் மதுசூதனன்றனக்கே. (ரு)

ப;—அநந்தரம் ஸபரிகரமாகத் தம்மையங்கீகரித்தபடியாலே அவனுக்குப் பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தையருளிச்செய்கிறார்.

இப்பாட்டில் முதலடியில், விட்டுவென்று - திருநாமமாகப்பிரித்து, "விட்டிலங்குமுடியம்மான்" என்று நாலாமடியோடே யந்வயித்துக்கிடக்கிறது;

(க) ரா - யு - கஉக - கரு.

அல்லாதபோது, திருநாமம்முதலாயெழுகிறபாட்டுக்களின் மர்யாதைகுலையும். "விட்டு" என்னுமிவ்விடத்திலுகரம் - குற்றியலாகக்கொள்க.

| | |
|---|---|
| விட்டு—விஷ்ணுவாய் | இலங்கு—விளங்காநிற்கிற |
| விட்டு—பரந்து | கரு—நீலமான |
| இலங்கு—விளங்குகிற | சுடர்—ப்ரபையையுடைத்தான |
| முடி—அபிஷேகத்தையுடையனாய் | மலையே—மலைபோன்றது |
| அம்மான்—ஸ்வாமியான | திரு—அழகிய |
| மதுசூதனன் றனக்கு—மதுஸூதநன் தனக்கு | உடம்பு—வடிவு ; |
| இலங்கு—இலங்கி | சீர்—அழகிய |
| செம்—சிவந்த | சங்கு—சங்கு |
| சோதி—ஒளியையுடைய | விட்டு—பரம்பி |
| தாமரையே—தாமரைபோன்றன | இலங்கு—விளங்குகிற |
| பாதம்—திருவடிகளும் | மதியமே—சந்த்ரனைப்போன்றது ; |
| கைகள்—திருக்கைகளும் | சக்கரம்—சக்ரம் |
| கண்கள்—திருக்கண்களும் ; | விட்டிலங்கு—அப்படிப்பட்ட |
| விட்டு—விகஸிதமாய் | பரிதியே—ஆதித்யனைப்போன்றது. |

ஸாமாநாதிகரண்யம் - உபமாநோபமேயபாவத்தாலே. (ரு)

ஆறு ;—(விட்டிலங்கு) இப்படி யென்னை வைஷ்ணவனுக்குகைக்குத் தன்னழகை யுபகரணமாகக்கொண்டு என்னுள்ளே புகுந்தருளினானென்கிறார். ... ... ... (ரு)

---

ஈடு ; அவ ;—(ஆறாம்பாட்டு) தன்பக்கல் நான்ப்ரவணனாகைக்கு எம்பெருமான் வருந்திற்றெல்லாம் தன்க்ருபையாலே யென்கிறார்.

மதுசூதனையன்றிமற்றிலேனென் றெத்தாலுங்கருமமின்றித்
துதிசூழ்ந்தபாடல்கள்பாடியாடி நின்றூழியூழிதொறும்
எதிர்சூழல்புக்கெனைத்தோர்பிறப்பு மெனக்கேயருள்கள்செய்ய
விதிசூழ்ந்ததாலெனக்கே லம்மான் றிரிவிக்கிரமனையே. (சா)

ப ;—அநந்தரம் கீழ்ச்சொன்ன வுபகாரத்துக்கும் தத்க்ருதௌஜ்ஜ்வல்யத்துக்கும் ஹேதுவான க்ருபாபாரவஶ்யத்தை யருளிச்செய்கிறார்

| | |
|---|---|
| மதுசூதனையன்றி – என்விரோதியைப் போக்கின மதுசூதனையன்றி | இலேன்—உடையேனல்லேன் |
| | என்று—என்று |
| | எத்தாலும்—ஏதேனு மொருபதார்த்தத்தாலும் |
| மற்று—மற்றுப்ராப்யம் | கருமம்—ஒருகார்யம் |

இன்றி—அற்று
துதி—ஸ்தோத்ரரூபத்தாலே
சூழ்ந்த — அவன் குணகளுதிகளைச் சூழ்ந்த
பாடல்கள்—பாடல்களை
நின்று—ப்ரயோஜநார்த்தமன்றியே ஸ்வயம்ப்ரயோஜநமாக நின்று
பாடி—பாடி
ஆட—ஆடும்படி
ஊழியூழிதொறும்—கல்பந்தோறும் கல்பந்தோறும்
எனைத்து—அநேகங்களாய்
ஓர்—அத்விதீயங்களான
பிறப்பும்—பிறப்புக்கள்தோறும்
எதிர்—எனக்கபிமுகனுகைக்கீடான
சூழல்புக்கு-சூழ்ச்சியோடேயவதரித்து
எனக்கே—எனக்கேயஸாதாரணமாக
அருள்கள்—ப்ரதம கடாக்ஷந்தொடங்கி பரபக்திபர்யந்தமானவுபகாரங்களை
செய்ய—பண்ணுகைக்கு
எனக்கு—எனக்குறுப்பான
ஏல்—என்றுகோளையுடையவனுய்
அம்மான்—ஸ்வாமியான
திரிவிக்கிரமனை—த்ரிவிக்ரமனை
விதி—தப்பவொண்ணுத விதியென்னலாம்படியான க்ருபையானது
சூழ்ந்தது—சூழ்ந்துகொண்டது.

ஏலுதல் - கொள்ளுகையாதல்; தகுதியாகவுமாம். (சு)

ஆறு ;—(மதுசூதனை) அநாதிகாலந்தொடங்கி யின்றளவும்வர நான்பிறந்த பிறவிகள்தோறும் என்னைவஶீகரிக்கைக்கீடான வடிவுகளைக்கொண்டுவந்து பிறந்தருளி யென்னைவஶீகரித்து, மதுசூதனல்லது எனக்குமற்றொருப்ராப்யமில்லை யென்றத்யவஸித்து, தத்வ்யதிரிக்தங்களை யெல்லாம்விட்டு ஸர்வகாலமும்நின்று துதிசூழ்ந்தபாடல்கள் பாடியாடுகையாகிற விஸ்ஸம்ருத்தியை எனக்கேதந்தருளுகைக்காக, திரிவிக்கிரமனை யெனக்காகவே க்ருபையாகிறவிதி சூழ்ந்ததென்கிறார்

---

ஈடு ; அவ ;—(ஏழாம்பாட்டு) உன்னுடைய குணநுஸந்தாநபூர்வகமாக ஸ்துதிப்ரணுமங்களைப் பண்ணிக்கொண்டு உன்னை யநுபவிக்குமிதுவே ப்ரயோஜநமாயிருக்கும் மநஸ்ஸையெனக்குத் தந்தாயென்கிறார்.

திரிவிக்கிரமன்செந்தாமரைக்க ணெம்மானென்செங்கனிவாய்
உருவிற்பொலிந்த வெள்ளைப்பளிங்குநிறத்த னென்றென்றுள்ளிப்
பரவிப்பணிந்து பல்லூழியூழி நின்பாதபங்கயமே
மருவித்தொழும் மனமேதந்தாய் வல்லைகாணென்வாமனனே. (எ)

ப ;—அநந்தரம் ஸ்வாநுபவத்துக்குறுப்பாக ஸத்வோத்தரமான மநஸ்ஸைத் தந்தானென்கிறார்.

திரிவிக்கிரமன்—த்ரைவிக்ர மாபதாநத்தாலே லோகத்தை யாநந்யார்ஹமாக்கின வனாய் அதுபோலே
செம்—சிவந்த
தாமரை—தாமரைபோன்ற
கண்—கண்ணாலே
எம்மான்—(க) "ஜிதந்தே - ஜிதம்" என்னும்படி யென்னை யடிமைகொண்டஸ்வாமியானவன்
செம்—சிவந்த
கனி—கனிபோலேயிருக்கிற
வாய்—திருப்பவளத்தின்
உருவில்—வடிவிலே
பொலிந்த—பரம்பிவளர்ந்துவருகிற
வெள்ளை—வெளுத்த
பளிங்கு—பளிங்குபோலேயிருக்கிற
நிறத்தன்—திருமுத்தின்நிறத்தை
என்—எனக்கநுபவிப்பித்தவன்
என்றென்று — என்றென்றுதனித்தனியே
உள்ளி—சேஷ்டிதத்தையுங் கண்ணழகையும் முறுவலழகையும் நெஞ்சாலேயநுபவித்து
பரவி—அதுள் ளடங்காமையாலேயக்ரமமாகப்பரவி
பணிந்து — அந்தப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு திருவடிகளிலேவிழுந்து
பல்—பலவகைப்பட்ட
ஊழியூழி —கல்பவிபாகத்தையுடைத்தான காலதத்வமுள்ளதனையும்
நின்—ப்ராப்தனானவுன்னுடைய
பாதபங்கயமே—போக்யமான திருவடிகளிலே
மருவி — அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு பொருந்தி
தொழும்—அடிமைசெய்யும்
மனமே—மநஸ்ஸையே
தந்தாய்—தந்தாய்,
என்வாமனனே—என்வாமனனே
வல்லைகாண்—வல்லைகாண்.

மஹாபலியினுடைய நெஞ்சைவஞ்சித்தநுகூலமாக்கினநீ, என்னெஞ்சையுமநுகூலிப்பிக்க ஶக்தனென்றுகருத்து. (எ)

ஆறு ;—(திரிவிக்கிரமன்) ஆஶ்சர்ய திவ்யசேஷ்டிதன், ப்ரபுத்தமுக்தாம்புஜசாருலோசநன், அழகியதிருப்பவளத்தையுடையவன், ஸுஸ்மிதன், இவற்றாலே யென்னை யடிமையாக்கினவனென்றென்றுள்ளிப் பரவிப்பணிந்து இப்படியே ஸர்வகாலமு முன்னுடைய பாதபங்கயமே மருவித்தொழும் மனமேதந்தாய் ; வல்லைகாண் எம்பிரானே வல்லைகாண் ; ஒருவர்க்குஞ்செய்ய முடியாதனவெல்லாஞ்செய்ய வல்லானொருவனல்லையோ வென்கிறார். ... (எ)

---

(க) ஜிதந்தா - க - க.

ஈடு; அவ;—(எட்டாம்பாட்டு) எம்பெருமான் தந்திறத்திற் பண்ணின வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரங்காணுமல் தடுமாறுகிறார்.

வாமனனென்மரதகவண்ணன் தாமரைக்கண்ணினன்
காமனைப்பயந்தாயென்றென் றுன்கழல்பாடியேபணிந்து
தூமனத்தனனுய்ப் பிறவித்துழதிநீங்கவென்னைத்
தீமனங்கெடுத்தா யுனக்கென்செய்கேனென்சிரீதரனே. (அ)

ப;—அநந்தரம் அநுபவத்துக் குறுப்பல்லாத நெஞ்சைப்போக்கினவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமுண்டோ வென்கிறார்.

வாமனன்-ஸர்வஸுலபனானவாமநனே
என்—எனக்கநுபாவ்யமான
மரதகவண்ணன் — மரதகம்போன்ற வடிவழகையுடையவனே
(போக்தாக்களைக்கண்டுகந்து பூர்ணமாகநோக்கும்)
தாமரை—தாமரைபோலும்
கண்ணினன்—கண்ணை யுடையவனே
காமனை—எல்லாரு மாசைப்படுமழகையுடையகாமனுக்கும்
பயந்தாய்—உத்பாதகனானவனே
என்றென்று—என்றென்றுசொல்லி
உன்கழல்—உன் திருவடிகளை
பாடியே—பாடியே
பணிந்து—பணிந்து
தூமனத்தனனுய்—ப்ரயோஜநாந்தரங்களிற்போகாத ஶுத்தமநஸ்ஸை யுடையேனுய்
பிறவி—ஜந்மப்ரயுக்தமான
துழதி—அலமாப்பு
நீங்க—தீரும்படியாக
என்னை—என்னை
தீமனங் கெடுத்தாய்— விஷயாந்தரங்களிலே யங்யபரமான தீயமனங் கெட்டுப்போம்படிபண்ணினுய்;
என்—இப்படியெனக்குபகாரகனான
சிரீதரனே—ஸ்ரீமானே
உனக்கு—பரிபூர்ணனானவுனக்கு
என்—எத்தை
செய்கேன்—செய்கேன்.

ஶ்ரியஃபதியாகையாலே பூர்ணனானவுனக்குச் செய்யலாவதொரு ப்ரத்யுபகாரமில்லையென்று கருத்து. (அ)

ஆறு;— (வாமனன்) நிரதிஶய ஸௌந்தர்ய ஜந்மபூமியாயிருந்தவுன்னுடைய வடிவையுமழகையும் அநந்யப்ரயோஜநனுய்க் கொண்டு பாடி, உன் திருவடிகளைப் பணிந்துகொண்டு ப்ரதிபந்தகங்களைப் போக்கும்படி யென்னுடைய மநஸ்ஸை உன்திருவடிகளல்லது மற்றொன்றறியாதபடி பண்ணினுய்; ஸ்ரீமானே, உனக்கு நானென்ன கைம்மாறு செய்வதென்கிறார். .. ... ... (அ)

ஈடு ; அவ ;—(ஒன்பதாம்பாட்டு) * ஆடியாடியிற்பிறந்த வ்யஸந மெல்லாம் நான்மறந்து மிகவும் ப்ரீதனும்படிபண்ணி, இந்த்ரியங்களைத்தாணிட்டவழுக்காக்கினுனென்கிருர். பக்திபூர்வகமாக வுன்னை யநுபவிபாநிற்கச்செய்தே, ப்ரதிபந்தகங்களும் நீங்கி நிரதிஶயஹர்ஷமும் பிறக்கும்படி உன்னையென்னுள்ளே வைத்தாயென்று ப்ரீதராகிருராகவுமாம்.

ஸிரீஇதரன்செய்யதாமரைக்கண்ண னென்றென்றிராப்பகல்வாய்
வெரீஇ* அலமந்துகண்கள்நீர்மல்கி வெவ்வுயிர்த்துயிர்த்து*
மரீஇயதீவினைமாளவின்பம்வளர வைகல்வைக
லிரீஇ* உன்னையென்னுள்வைத்தனை யென்னிருடீகேசனே! (கூ)

ப;-அநந்தரம் விஶ்லேஷதுக்கந்தீரும்படி யென்னெஞ்சுக்குள்ளே புகுந்து நான் ஹ்ருஷ்டனும்படி யநுபவிப்பித்தானென்கிருர். தூமனத்திலேதோற்றுவித்தபக்திக்கு விஷயமாய்க்கொண்டு நானுகக்கும்படி புகுந்தானென்கிருரென்றுமாம்.

ஸிரீஇதரன்—ஶ்ரிய:பதியானவன்
செய்ய—அவளோட்டை ஸம்ஶ்லேஷப்ரீதியாலே செவ்விபெற்ற
தாமரை—தாமரைபோலும்
கண்ணன்—கண்ணையுடையவன்
என்றென்று—என்றென்று "இவளிராப்பகல் வாய்வெரீஇ" என்கிறபடியே
இராப்பகல்—இரவும்பகலும்
வாய்வெரீஇ—வாய்வெருவி
அலமந்து—"எங்கும் நாடிநாடி" என்கிறபடியே யலமந்து
கண்கள்நீர்மல்கி—"குவளையொண்கண்ணநீர் கொண்டாள்" "கேழிலொண்கண்ணநீர்கொண்டாள்" என்கிறபடியே கண்ணநீர்மல்கி
வெவ்வுயிர்த்துயிர்த்து—"உள்ளம்மலங்க வெவ்வுயிர்க்கும்" "நெஞ்சம் வேவ நெடிதுயிர்க்கும்" என்கிறபடியே பலகாலும் வெவ்விதாக நெடுமூச்செறிந்து
மரீஇய—இப்படி * ஆடியாடியில் மருவின
தீவினை—தீவினை
மாள—போம்படியாக
இன்பம்வளர—* அந்தாமத்தன்புசெய்தொடங்கி யின்பம்வளரும்படி
வைகல்வைகல்—ஸர்வகாலமும்
என்னிருடீகேசனே—என்னிந்த்ரியங்களுக்கு நியாமகனுகையாலே
என்னுள்—உனக்குவிதேயமானவென்னெஞ்சிலே
உன்னை—நியந்தாவாய் போக்யனுன வுன்னை
இரீஇ—"பக்கநோக்கறியான்" என்கிறபடியே யிருத்தி
வைத்தனை—வைத்தாய்.

பக்திபாரவஶ்யத்தாலேவந்த விகாரத்தை - வெவ்வுயிர்த்துயிர்த்தறுதியாகச் சொல்லி, ப்ராப்திப்ரதிபந்தக நிவ்ருத்திபிறந்து அநுபவாநந்தம் வளரும்படி ஸம்ஶ்லேஷித்தப்ரகாரத்தைச் சொல்லிற்றாகவுமாம். (௯)

ஆறு ;—(சிரீஇதரன்) ஸ்ரீதரனுகையாலே செய்யதாமரைக் கண்ணனென்றென்றிராப்பகல் வாய்வெருவி யலமந்து கண்கள்நீர் மல்கி வெவ்வுயிர்த்துயிர்த்து மருவியிருந்த தீவினைகள்மாள இன்பம் வளர எப்போதுமுன்னை யென்னுள்ளேயிருத்தி வைத்தருளினாய் ; இப்படியுன்னழகாலே யென்னுடைய கரணங்களையுந் தோற்பித்தவனே, உனக்கென்செய்கேனென்கிறார். ... (௯)

---

ஈடு ; அவ ;—(பத்தாம்பாட்டு) நமக்கு மிகவு முபகாரகனானவனை நீயொருகாலும் விடாதேகிடாயென்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்கிறாரிப்பாட்டில்.

இருடீகேசனெம்பிரா னிலங்கையரக்கர்குலம்*
முருடுதீர்த்தபிரானெம்மா னமரர்பெம்மானென்றென்று*
தெருடியாகில்நெஞ்சேவணங்கு திண்ணமறியறிந்து*
மருடியேலும் விடேல்கண்டாய் நம்பிபற்பநாபனையே. (௧௦)

ப ;—அநந்தரம் இப்படி ஸர்வப்ரகாரோபகாரகனை விடாமையிலுண்டானவபேக்ஷையை யருளிச்செய்கிறார்.

இருடீகேசன் — தமேந்த்ரியாநமான வென்னுடையமாந ஸேந்த்ரியத்தை நியமித்து
எம்பிரான் — எனக்குபகாரகனாய் அதுக்கு உதாஹரணமென்னலாம்படி
இலங்கை — லங்கையில்
அரக்கர்குலம் — ராக்ஷஸகுலத்துக்கு
முருடு — முருடான ராவணனை
தீர்த்த — அழித்து
பிரான் - நாட்டுக்குபகரித்தவன்
அமரர்பெம்மான் — நித்யஸூரிகளோபாதி
எம்மான் — என்னை யநுபவிப்பித்த ஸ்வாமியானவன்
என்றென்று — என்று பலபடியு மநுஸந்தித்து
நெஞ்சே — நெஞ்சே
தெருடியாகில் — அறிவுடையையாகில்
வணங்கு — அவனைவணங்கும்படி பார்;
திண்ணம் — சிக்கென இத்தை
அறி — புத்திபண்ணு;
அறிந்து — இவ்வறிவுக்குமேல்
மருடியேலும் — அயோக்யதையடியான கலக்கம்வந்ததேயாகிலும்
நம்பி — குணபரிபூர்ணனாய்
பற்பநாபனை - காரணபூதமான திருநாபிகமலத்தையுடைய இம்மஹோபகாரகனை
விடேல்கண்டாய் — விடாதேகிடாய்.

என்று நெஞ்சையபேக்ஷிக்கிறார். (௧௦)

ஆறு ;—(இருடீகேசன்) தன்னழகாலும் செயலாலுமென்னை யடிமைகொண்டவன், * அயர்வறுமமரர்க ளதிபதியென்றென்று அவனையேத்திநினைந்து வணங்கு; இத்தையழகியதாகக்கைக்கொள் ளக்கொண்டு, மறந்தும் நம்பி பற்பநாபனை விடாதேகிடாய்நெஞ்சே யென்றுகொண்டு தம்முடையநெஞ்சைக் குறைகொள்ளுகிறார். (கO)

---

ஈடு ; அவ ;—( பதினோராம்பாட்டு ) அத்யந்தவிலக்ஷணனாயி ருந்துவைத்து, அத்யந்தஸுலபனாய் என்னை யடிமைகொண்டவன் என்னையல்லதறியானானென்கிறார்.

பற்பநாப னுயர்வறவுயரும் பெருந்திறலோன்*
எற்பரனென்னையாக்கிக் கொண்டெனக்கே தன்னைத்தந்த
கற்பகம்*என்னமுதம் கார்முகில்போலும் வேங்கடநல்
வெற்பன்*விசும்போர் பிரானெந்தை தாமோதரனே. (கக)

ப ;—அநந்தரம் இப்படியறிவுபிறந்த நெஞ்சையுடையவெனக்கு அவன் ஸர்வப்ரகாரோபகாரகனானென்கிறார்.

பற்பநாபன்—ஜகதுத்பத்திஹேதுவான திருநாபிகமலத்தை யுடையனாய் (உத்பந்ந ஜகத்ரக்ஷணார்த்தமாக)
உயர்வற—மிகவும்
உயரும்—உயராநின்ற
பெரும்—அபரிச்சிந்நையான
திறலோன்—ஶக்தியை யுடையனாய்
எற்பரன் — இம்மேன்மையோடே யென்பக்கலிலே தத்பரனாய். அதடியாக
என்னை—என்னை
ஆக்கி—உண்டாக்கி
கொண்டு—அங்கீகரித்து
எனக்கே—எனக்கே யஸாதாரணமாம் (படி
தன்னை — தன்னை
தந்த — தந்த
கற்பகம்—கல்பகமாய்
என்—எனக்கு
அமுதம்—போக்யமாய்
கார்முகில்போலும்... ஸம்பாராமலுபகரிக்கும் காளமேக ஸத்ருஶனாய் (அதுக்குயோக்ய ஸ்தலமான)
வேங்கடம்—திருவேங்கடமென்று பேராய்
நல்—விலக்ஷணமான
வெற்பன்—திருமலையில்நிலையை யுடையனாய், இந்நிலையிலே
விசும்போர்—நித்யஸூரிகளை
பிரான்—அநுபவிப்பிக்கிற ஆஶ்ரிதபவ்யதையை யுடையனான,
தாமோதரன்—தாமோதரன்
எந்தை—என்னையடிமைகொண்டான்

கல்பகத்திற்காட்டிலிவனுக்குவாசி - அர்த்தியையுண்டாக்குகையும், அவனைத்தானே ஸ்வீகரிக்கையும், அவனபேக்ஷித்ததைக்கொடுக்கையன்றியே தன்னைக்கொடுக்கையும், தானே போக்யமாகையும். (கக)

ஆறு ;—(பற்பநாபன்) அவன் நம்மைவிடிற்செய்வதென்னென்னில்; அளவிறந்த வழகையுடையனாய், நிரவதிகதேஜஃப்ராப்ருதிகல்யாணகுணங்களையுடையனாய், என்னை ஸ்வேதரஸர்வவிஷய வைராக்யபூர்வக ஸ்வாநுபவைகபோகனாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத்தந்த பரமோதாரனாய், என்னுடையபோக்யமாய், நிரதிஶயஸௌந்தர்யபரிபூர்ணமான திருமலையோடுள்ள ஸம்பந்தத்தாலே லப்தமான இந்த ஔதார்யத்தையுடையனாய், திருநாட்டில் திவ்யபுருஷர்களுக்குநாதனாய், எனக்கு ஸ்வாமியாய், ஆஶ்ரிதபராதீநனான வெம்பெருமான் என்னையல்லதறியான்; ஆதலால் அவனென்னை விடானென்கிறார். (கக)

---

ஈடு ; அவ ;—(பன்னிரண்டாம்பாட்டு) "எற்பரன்" என்கிறபடியே - என்னளவில் அவன் செய்தாப்போலே செய்வார்க்கு அவனைக்காணலாமல்லது, "ஸ்வயத்நத்தாலே யறிவோம்" என்பார்க்கு அறியப்போகாதென்கிறார்.

தாமோதரனைத் தனிமுதல்வனை ஞாலமுண்டவனை*
ஆமோதரமறிய வொருவர்க்கென்றே தொழுமவர்கள்*
தாமோதரனுருவாகிய சிவற்குந் திசைமுகற்கும்*
ஆமோதரமறியவெம்மானை யென்னாழிவண்ணனையே. (கஉ)

ப ;—அநந்தரம், தம்மளவி லவன்பண்ணின வுபகாரம் அதிஶயிதஜ்ஞாநர்க்கு மளவிடவொண்ணாதென்கிறார்.

| | |
|---|---|
| தாமோதரனை—"ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தையும் | ஆமோ—போமோ" |
| | என்று—என்று |
| தனிமுதல்வனை—ஸமஸ்தஜகதேக காரணத்வத்தையும் | தொழுமவர்கள்—தொழுமவர்களாய் |
| | தாமோதரன்—அந்த தாமோதரனுக்கு |
| ஞாலமுண்டவனை—ப்ரளயாபத்ஸகத்வத்தையு முடையவனை | உருவாகிய-ப்ரகார தயாஶேஷபூதரான |
| | சிவற்கும்—ருத்ரனுக்கும் |
| தாம்—பரிச்சேதித்து | திசைமுகற்கும்—ப்ரஹ்மாவுக்கும் |
| அறிய—அறிய | (கடுகிலேகடலை |
| ஒருவர்க்கு—ஒருவர்க்கும் | மடுத்தாற்போல) |

என்—என்பக்கலிலே
ஆழிவண்ணன்—தன்குணார்ணவத்தை வைத்து
எம்மானை—என்னை யடிமைகொண்ட [ஸ்வாமியை
தாம்—அளவிட்டு
அறியவாமோ—அறியப்போமோ.

ஸாமாந்யமான வுபகாரங்களை யறிந்தாலும், என்பக்கல் பண்ணின விசேஷோபகாரமறிய அரிதென்று கருத்து. (கஉ)

ஆறு ;—(தாமோதரனை) ஆஸ்ரிதபாரதந்த்ரனாய், ஸர்வஜகதேககாரணனாய், ஸர்வஜகத்ரக்ஷகனாயிருந்த வெம்பெருமானை, ஒருவர்க்குந் தானறியலாமோ வென்று தொழுகிற, பரமபுருஷஸேஷைதகஸ்வபாவரானசிவற்கும் திசைமுகற்கும் எம்மானை யென்னாழிவண்ணனைத் தாமறியலாமோ வென்றுகொண்டு, அவனுடைய அபரிச்சேத்ய மஹத்வத்தைச்சொல்லி, ஏவம்பூதனானவன் கிடீர் எற்பானாயிருக்கிறவனென்கிறார். ... ... ... (கஉ)

---

ஈடு ; அவ ;—(பதின்மூன்றாம்பாட்டு) நிகமத்தில் - இத்திருவாய்மொழிதானே எம்பெருமான் திருவடிகளைச் சேர்த்துவிடு மென்கிறார்.

வண்ணமாமணிச்சோதியை யமரர்தலைமகனை*
கண்ணனை நெடுமாலைத் தென்குருகூர்ச்சடகோபன்*
பண்ணியதமிழ்மாலை யாயிரத்துள்ளிவைபன்னிரண்டும்*
பண்ணிற்பன்னிருநாமப்பாட் டண்ணல்தாளணைவிக்குமே.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ப ;—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவத்ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

வண்ணம்—நிறத்தையுடைத்தாய்
மா—பெருவிலையனான
மணி—நீலமணியினுடைய
சோதியை—ஒளிபோலேயிருக்கிற தேஜஸ்ஸையுடையனாய் (இவ்வழகு)
அமரர்—நித்யஸூரிகளுக்கும்
தலைமகனை—பரிச்சேதிக்கவொண்ணாத பெரியவனாய்
கண்ணனை—ஆஸ்ரிதரைத்தானே யநுபவிக்குமவனாய்
நெடுமாலை—அதுக்கடியான நிரதிசய வ்யாமோஹத்தை யுடைய [னானவனைப்பற்ற
தென்—அழகிய
குருகூர்—திருநகரிக்கு நிர்வாஹகரான
சடகோபன்—ஆழ்வார்
பண்ணிய—செய்ததாய்
தமிழ்மாலை—ஸர்வாதிகாரமான த்ராவிட ஸந்தர்ப்பரூபமான
ஆயிரத்துள்—ஆயிரந் திருவாய்மொழிக்குள்ளும்
பண்ணில்—பண்ணிலே வர்த்திப்பதாய்

| | | |
|---|---|---|
| பன்னிருநாமப் பாட்டு | திருத்வாதஶநாமத்தைப்பற்றி வருகிறபாட்டான | அண்ணல் . ஸர்வேஶ்வரன் |
| | | தாள்—திருவடிகளை |
| இவைபன்னிரண்டும் | .. இவை பன்னிரண்டும் | அணைவிக்கும் .. ப்ராபிப்பிக்கும். |

இது கலித்துறை. (கஉ

ஆறு ;—(வண்ணமாமணி) இத்திருவாய்மொழி வல்லார் எம்பெருமானைப் பெறுவாரென்கிறார். ... ... (கஉ)

ஈடு ; – முதற்பாட்டில் - தம்மோடு ஸம்பந்தி ஸம்பந்திகளுமெல்லாரும் தம்மைப்போலே விஷயீக்ருத ரானார்களென்றார் ; இரண்டாம்பாட்டில் - அதுக்கடி நாராயணனுகையாலே என்றும், அந்நாராயண ஶப்தார்த்தத்தையு மருளிச்செய்தார்; மூன்றாம்பாட்டில்- இப்படி விஷயீகரிக்கைக்கு ஹேதுசொன்னார் ; நாலாம்பாட்டில் - ஸர்வகாலமும் தன்னையே யநுபவிக்கும்படி பண்ணினானென்றார் ; அஞ்சாம்பாட்டில் - இப்படி தம்மை யநுபவிப்பித்ததனாலே அவன் வடிவில் புகரைச்சொன்னார் ; ஆறாம்பாட்டில் - இப்படி யென்னை விஷயீகரிக்கைக்கடி நிர்ஹேதுக க்ருபையென்றார் ; ஏழாம்பாட்டில் - தன்னையே ஸர்வகாலமு மநுபவிக்கும்படியான நெஞ்சைத் தந்தானென்றார் ; எட்டாம்பாட்டில் - தந்தவளவன்றிக்கே, விரோதியான நெஞ்சையும் போக்கினானென்றார் ; ஒன்பதாம்பாட்டில் - தன்னுடைய கல்யாணகுணங்களையே நானநுபவிக்கும்படி என்ஹ்ருதயத்திலே புகுந்தானென்றார் ; பத்தாம்பாட்டில் - அநுபவவிரோதியான இந்த்ரியங்களையும் தன்வழியாக்கிக்கொண்டானென்றார்; பதினோராம்பாட்டில் -' ஏவம்பூதனானவன் என்னையல்லதறியாதானானென்றார் ; பன்னிரண்டாம்பாட்டில் - என்னைப்போலே காண்பார்க்குக் காணலாமொழிய ஸ்வயத்நத்தாலறியப் போகாதென்றார் ; நிகமத்தில் - பலம்சொல்லித் தலைக்கட்டினார். (கஉ)

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

இரண்டாம்பத்தில் ஏழாந்திருவாய்மொழி

முற்றிற்று.

---



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## இரண்டாம்பத்து

# எட்டாந் திருவாய்மொழி

### அணைவதரவணை ப்ரவேசங்கள்.

ப:.. எட்டாந்திருவாய்மொழியில், "மேவுந்தன்மையமாக்கினான்" என்று ஸ்வஸம்பந்தி ஜநங்களுக்கும் ப்ராப்திபர்யந்தபலரூப மோக்ஷப்ரதனாய்க் கொண்டு ஈஶ்வரன் நிற்கிறநிலையையும், அதுக்கடியான பரத்வத்தையு மநுஸந்தித்து, "இத்தை ஸம்ஸாரிகளிழக்க வொண்ணாது" என்றுபதேசிப்பாராகக்கோலி; அவனுடைய ஸர்வநிர்வாஹகத்வத்தையும், ஸம்ஸார நிவ்ருத்திபூர்வகமான மோக்ஷப்ரதத்வத்தையும், அதுக்குறுப்பான சேஷ்டித வைலக்ஷண்யத்தையும், இந்தவ்யாபார ப்ரகாசிதமான ஸௌலப்யாதி குணங்கள் நித்யாநுபாவ்ய மென்னுமிடத்தையும், அந்தகுண ப்ரகாஶகமான வவதாரபாஹுள்யத்தையும், அவதாரதசையிலும் பரத்வம் அதிப்ரஸித்தமென்னு மிடத்தையும், அவதீர்ணனானவன் ரக்ஷணவ்யாமோஹத்தால் பண்ணும் வ்யாபாரம் அநேகமென்னு மிடத்தையும், அவதீர்ணனுடைய பரத்வோபயுக்தமான வதிஶயிதாகாரங்கள் அறியவல்லாரில்லையென்னு மிடத்தையும், அவனுடைய வாஶ்ரிதஸௌலப்யம் அபரிச்சிந்நமென்னுமிடத்தையும், ஏவம்விதனைத் தாமநுபவிக்கப் பெற்றமையையு மருளிச்செய்து, உபதேஶாந்நிவ்ருத்தராய் ஸ்வலாபத்தோடே தலைக்கட்டுகிறார். இதில் சொல்லுகிற பரத்வம், முதற்றிருவாய்மொழிபோலே - ஸ்வரூபகதமாயு மன்றியே, * திண்ணன் வீட்டிற்போலே - மநுஷ்யத்வே பரத்வமுமன்றியே, மோக்ஷப்ரதத்வோபயுக்தமா யிருக்கிறது. *

ஆறு ;—(அணைவது) "தாமோதரனை" என்கிறபாட்டில் ப்ரஸ்துதமான ஸர்வேஶ்வரத்வத்தைத் தம்முடைய ப்ரீத்யதிஶயத்தாலே ஸஹேதுகமாக வுபபாதித்து, இப்படி ஸர்வேஶ்வரனை வெம்பெருமானை யாஶ்ரயியுங்கோளென்று பரரைநோக்கி அருளிச்செய்கிறார். *

ஈடு ;—ஸர்வேஶ்வரன் தம்பக்கல் பண்ணின வ்யாமோஹம் தம்மொருவரளவிலுமன்றிக்கே, தம்மோடு ஸம்பந்தமுடையாரளவிலும் வெள்ளமிட்டபடியைச் சொன்னார் - கீழ் ; இத்திருவாய்மொழியில் - "நம்மோட்டை ஸம்பந்தமே ஹேதுவாக அவனிப்படி விஷயீகரிப்பானானபின்பு ஸம்ஸாரிகளுக்கும் நம்மோட்டையொரு ஸம்பந்தத்தை யுண்டாக்கி அவன் க்ருபைக்கு விஷயமாக்குவோம்" என்று, அவர்களுக்கு மோக்ஷப்ரதத்வத்தை யருளிச்செய்கிறார்.

இத்திருவாய்மொழி தன்னை - "ஈம்வரத்வஞ் சொல்லுகிறது" என்று நிர்வஹிப்பாருமுண்டு; "மோக்ஷப்ரதத்வஞ் சொல்லுகிறது" என்று பட்டரருளிச்செய்யும்படி. இவைதானொன்றை யொன்றுவிட்டிராது; ஈம்வரனாயிற்று மோக்ஷப்ரதனுமவன்; மோக்ஷப்ரதனும் போது ஈம்வரனாகவேணும். இது தன்னிற் செய்ததாகிற தென்னென்னில்; ஆழ்வார்க்கு முதல்தன்னிலே ஸர்வேம்வரன் அத்வேஷத்தைப் பிறப்பித்து, ஆபிமுக்யத்தைப் பிறப்பித்து, ருசியையுண்டாக்கி, இவர்விடிலும்தான் விடாதேவிரும்பி, இதுதான் இவர் தம்மளவிலன்றிக்கே தம்மோடு ஸம்பந்தமுடையாரளவு மிப்படியே பெருகிக் கரைபுரளுகிறபடியை யநுஸந்தித்து, "ஸர்வேம்வரன் ஸ்வபாவமிதுவானபின்பு,நாம்பெற்றபேறு எல்லாரும்பெறும்படிபண்ணுவோம்" என்று, ஸம்ஸாரிகளை யடையப்பார்த்து, அவர்களுக்கு, "மோக்ஷப்ரதன்" என்னுமிடத்தை யருளிச்செய்கிறார்.

இவர், தாம்பெற்றதாய்ப் பிறர்க்குபதேசிக்கிற பேறுதான்; பிராட்டி, திருவடி, திருவநந்தாழ்வானைப் பரிகரமாக வுடைத்தாய், எத்தனைபேறு மளவுடையார்க்கும் ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்கவரிதாய், அவனாலே பெறப்பார்ப்பார்க்கு வருத்தமறப்பெறலாய், ஸம்ஸாரத்தில் போகங்கள்போலே அஸ்த்திரமாயிருக்கை யன்றிக்கே நித்யமாய், அவிமுதமாயிருக்கை யன்றிக்கே அத்யந்தம்ஸ்ப்புடமாய், துக்கமிம்ரமா யிருக்கையன்றிக்கே ஸுகைகதாநமாய், மங்களமாய், உத்தமமாய், அபரிச்சிந்நமாய், இப்படியிருக்கிற முக்தப்ராப்ய போகத்தைத் தமக்கும் தம்பரிகரத்துக்கும் அவன் கொடுப்பானாகப் பாரிக்கிறபடியைக்கண்டு, "ஸம்ஸாரிகளையு மீத்ருமபோகிகளாம்படி பண்ணவேணும்" என்று பார்த்து அவர்களைக்குறித்து ஹிதமருளிச்செய்ய, அதுகேட்டபின்பும் அவர்கள் பழையநிலையில் நின்றும் குலையாதே, மால்யவான் தொடக்கமானார் ராவணனுக்குச் சொன்ன ஹிதம்போலே அவர்களித்தை யநாதரித்திருக்க, "நாம்நம்முடைய வநுபவத்தை விட்டு இவர்களோடே துவக்குண்கிறவிதுக்கு ப்ரயோஜநமென்" என்று, வழிபறிக்கும்நிலத்தில் தம் கைப்பொருள் கொண்டு தப்பினார் ஹ்ருஷ்டராமாபோலே, "நாம்முந்துறமுன்னம் இவர்களைப்போலே யாகாதொழியப் பெற்றோமிறே" என்று ஸ்வலாபத்தை யநுஸந்தித் தினியராகிறார். *

ஈடு ; அவ ; — (முதற்பாட்டு) முக்தப்ராப்யபோகத்தைச் சொல்லுகிறது. முதற்பாட்டுத்தான் இத்திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹமாய், மேலுள்ளபாட்டுக்களிலே ஒருபதத்தைப் பற்றிப்போருமவையும், அது தன்னைப்பற்றி யெழுமவையுமா யிருக்கிறது.

* அணைவதரவணைமேற் பூம்பாவையாகம்
புணர்வது*இருவரவர் முதலுந்தானே*
இணைவனு மெப்பொருட்கும் வீடுமுதலாம்*
புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே. (க)

ப :—முதற்பாட்டில், இத்திருவாய்மொழியி லர்த்தத்துக்கு ஸங்க்ரஹரூபமான ஸர்வநிர்வாஹகத்வத்தை யருளிச்செய்கிறார்.

அரவு—திருவநந்தாழ்வானாகிற
அணைமேல்—அணைமேலே
அணைவது—அபிமதமாகச்சேர்வது;
பூ—பூவிலேபரிமளம்வடிவு கொண்டாற்போலே போக்யபூதையான
பாவை—பிராட்டியின்
ஆகம்—திருமேனியை
புணர்வது—போக்யமாக ஸம்ஸ்லேஷிப்பது;
(இது நித்யவிபூதிநிர்வாஹகத்வம்; லீலாவிபூதி நிர்வஹணத்தில்)
அவர்--காரணேஸ்வரராகப்ரஸித்தரான
இருவர்—ப்ரஹ்மருத்ரர்கள்
(இவருடைய வுத்பத்திஸ்திதியாதிகளுக்கும்)
தானே—தானே
முதலும்—ஹேதுவாயிருக்கும் ;
எப்பொருட்கும்—ரக்ஷ்யமானஜகத்தில் ஸமஸ்தபதார்த்தங்களுக்கும்
இணைவனும்—அவதாரமுகத்தாலே ஸஜாதீயனுமிருக்கும்;
வீடு--ரக்ஷணத்துக்குமேலெல்லையான மோக்ஷத்துக்கு
முதலாம்—ஹேதுவாயிருக்கும்;
(இத்தால் ஸர்வமுக்தி ப்ரஸங்கியாமைக்காக)
பிறவி—ஸம்ஸாரமாகிற
கடல்—கடலை
நீந்துவார்க்கு--நீந்திக்கரையேற வேண்டுவார்க்கு
புணைவன்—தெப்பமாமவனு மிருக்கும்
புணைவன் - தெப்பமாமவன். (க)

ஆறு ;—நாகபர்யங்கசாயி யாகையாலும், ச்ரிய:பதியாகையாலும், ப்ரஹ்மருத்ரர்களுக்கு நிர்வாஹகனாகையாலும், ஸர்வாத்மஸஜாதீயதயா அவதீர்ணனைக்கொண்டு ஸர்வஜகத்ரக்ஷகனாகையாலும், முமுக்ஷுக்களுக்கு ப்ரதிபந்தக நிவர்த்தகனைக் கொண்டு மோக்ஷப்ரதனாகையாலும், நாராயணனே ஸர்வேச்வரனென்கிறார். (க)

ஈடு ; அவ ; —(இரண்டாம்பாட்டு) "என் தனிநாயகன் புணர்ப்பு" என்கையாலே - எம்பெருமான்றன் வேணுமோ, அவனோடுள்ள ஸம்பந்தமே மோக்ஷப்ரதமென்கிறார்.

நீந்துந்துயர்ப்பிறவியுட்பட மற்றெவ்வெவையும்*
நீந்துந்துயரில்லா வீடுமுதலாம்*
பூந்தண்புனற்பொய்கை யானையிடர்கடிந்த*
பூந்தண்டுழா யென்தனிநாயகன் புணர்ப்பே. (உ)

ப ;—அநந்தரம், ஸம்ஸார நிஸ்தரண பூர்வகமான மோக்ஷத்துக்கு ஹேது அவனுடைய ஸம்பந்தமென்கிறார்.

(இஸ்ஸம்ஸார நிவ்ருத்திக்கு நிதர்ஸந மென்னலாம்படி.)
பூ—பூவையுடைத்தாய்
தண் — குளிர்ந்த
புனல்—புனலையுடைய
பொய்கை—பொய்கையிலே
யானை—யானைக்கு
இடர்—முதலையால்வந்த விடரை
கடிந்த—போக்கின
பூ — செவ்வியையுடைத்தாய்
தண்—குளிர்ந்த
துழாய்—திருத்துழாயையுடையனாய் (அத்தாலே)
என்—எனக்கு
தனிநாயகன்—அத்விதீய நாயகனானவனுடைய
புணர்ப்பு—ஸம்பந்தமானது
நீந்தும்—இச்சேதநனுக்கு நீந்தா நிற்கும்படி துஸ்தரமாய்
துயர்—து:கோத்தரமான.
பிறவி—பிறவி
உட்பட—உட்பட
மற்று—மற்றும்
நீந்தும்—நீந்தும்படியான
எவ்வெவை — ஜராமரணாதிகளானவெவ்வகைப்பட்ட
துயரும்—துக்கமும்
இல்லா —ஸ்பர்ஸியாத
வீடு—மோக்ஷாரம்பத்துக்கு
முதலாம்—ஹேதுவாம்.

முதற்பாட்டில் - வீடுமுதலாமென்றத்தை விவரித்தது. (உ)

ஆறு ; —(நீந்தும்) "வீடுமுதலாம்" என்கிறபதத்தை விவரிக்கிறது. ஜந்மஜராமரணாத்ய பரிமித ஸமஸ்த து:கரஹிதமான மோக்ஷத்துக்குக் காரணம் எம்பெருமானோடுள்ள ஸம்பந்தம் ; அதெங்கே கண்டோமென்னில், ஸ்ரீகஜேந்த்ராழ்வான் பக்கலிலே கண்டோமென்கிறார். (உ)

ஈடு ; அவ ;—(மூன்றும்பாட்டு) "இருவரவர்முதலுந்தானே" என்கிறபதத்தை விவரியா நின்றுகொண்டு, ஶ்ரிய:பதி யானவனுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களை ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார்.

புணர்க்குமயனு மழிக்குமரனும்*
புணர்த்ததன்னுந்தியோ டாகத்துமன்னி*
புணர்த்ததிருவாகித் தன்மார்வில்தான்சேர்*
புணர்ப்பன் பெரும்புணர்ப் பெங்கும்புலனே. (ரு)

ப ;—அநந்தரம், அவனுடைய திவ்யமான சேஷ்டிதங்கள் ஸர்வத்ர ப்ரஸித்தமென்கிறார்.

தன்—தன்னை
புணர்த்த—உத்பாதித்த
உந்தியோடு—திருநாபியோடேகூட
ஆகத்து—திருமேனியிலொரு பார்ஶ்வத்திலும்
மன்னி—நித்யவாஸம்பண்ணி
புணர்க்கும்—லோகஸ்ருஷ்டி பண்ணுகிற
அயனும்—அஜனுமாய்
அழிக்கும்—ஸம்ஹரிக்கிற
அரனும்—ஹரனுமாய்
(இப்படி தத்தத்தராத்மதையாலே ததாத்மகனாய்)
தன்மார்வில்—தன்மார்விலே
புணர்த்த—நிரூபகமாம்படி சேர்த்துக் கொள்ளப்பட்ட
திருவாகி—திருவுடையனாய்
தான்—தானே
சேர்—தனக்குத்தகுதியான
புணர்ப்பன்—ஸ்வாதீந சேஷ்டிதனானவனுடைய
பெரு—அபரிச்சிந்நமான
புணர்ப்பு—திவ்ய வ்யாபாரங்களான[வை
எங்கும்—எங்கும்
புலன்—கண்டநுபவிக்கலாம்படி ப்ரஸித்தம்.

"இருவரவர் முதலுந்தானே" என்றதை விவரித்தது. (ரு)

ஆறு ;—(புணர்க்கும்) ஜகத்ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கும் தன்னுந்தியை யாஶ்ரயமாகக் கொடுத்துவைக்கும் ; ஜகத் ஸம்ஹர்த்தாவான ருத்ரனுக்கும் தன் திருவுடம்பை யாஶ்ரயமாகக் கொடுத்துவைக்கும் ; ஸர்வ லோகேஶ்வரியான பிராட்டிக்கும் தன் திருமார்வைக் கொடுத்துவைக்கும் ; திருவனந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளும் ; இப்படி யெம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வ ஸிந்தூதமான திவ்யசேஷ்டிதங்கள் எங்கும் ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார்.

ஈடு ; அவ ;—(நான்காம்பாட்டு) அவனுடைய ஈஶ்வரத்வத்தில் கண்ணழிவற்றிருந்தது, " இனியிதுக் கவ்வருகில்லை யென்று நன்மைபெறவேணும் " என்றிருப்பார் அவனைக்கடுக ஆஶ்ரயிக்கப் பாருங்கோளென்கிறார்.

புலனைந்துமேயும் பொறியைந்துநீங்கி*
நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்*
அலமந்துவீய வசுரரைச்செற்றான்*
பலமுந்துசீரிற் படிமினோவாதே. (ச)

ப ;—அநந்தரம், ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமான பரமபத ப்ராப்திக்கு ஏவம்விதனுடைய குணங்களிலே நித்யாவகாஹநம் பண்ணுங்கோளென்கிறார்.

புலன்—புலப்படும் விஷயங்கள்
ஐந்து—ஐந்திலும்
மேயும்—பொருந்தி
பொறி—பொறிபோலேயிவனை யகப்படுத்திக்கொள்ளும்
ஐந்து — ஐந்திந்த்ரியங்களின் வசத்தினின்றும்
நீங்கி—அகன்று
நலம்—ஆநந்தம்
அந்தமில்லது—அளவிறந்திருப்பதாய்
ஓர்—அத்விதீயமான
நாடு—தேசத்திலே
புகுவீர் – போய்ப்புகவேண்டியிருப்பீர்!
அலமந்து—அலமந்து
வீய —நசிக்கும்படி
அசுரரை—அசுரரை
செற்றான்—கொன்றவனுடைய
முந்து—ஆரம்பமே தொடங்கி
பலம்—இனிமையாலே " பலம்" என்னலாம்படியான
சீரில்—குணங்களிலே
ஓவாதே—என்றுமொக்க
படிமின்—அவகாஹியுங்கோள்;

ரஸாயநமான பயஃபாநநைரந்தர்யத்தாலே பித்தஶாந்தியும்இனிமையும் பிறக்குமாபோலே, போக்ய குணங்களிலே நிரந்தராநுபவம்பண்ணவே அநிஷ்ட நிவ்ருத்தியு மிஷ்டப்ராப்தியுந் தன்னடையே வருமென்றுகருத்து. புலனும் பொறியுமென்கிற இவையிரண்டும் - விஷயங்களுக்கு மிந்த்ரியங்களுக்கும் கலந்து போய்வரும். (ச)

---

ஆறு ;—(புலன்) ப்ரக்ருதிபந்தவிநிர்முக்தராய்க்கொண்டு நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர் ; இப்படி ஸர்வேஶ்வரனாயிருந்த எம்பெருமானுடைய நிரதிஶயபோக்யமான கல்யாண குணங்களிலே ஓவாதே படியுங்களென்கிறார். ... ... (ச)

ஈடு ; அவ ;—(ஐந்தாம்பாட்டு) கீழே " இணைவனாமெப்பொருட்கும் " என்றார் ; அத்தை யுபபாதிக்கிறார்.

ஓவாத்துயர்ப்பிறவியுட்பட மற்றெவ்வெவையும்*
மூவாத்தனிமுதலாய் மூவுலகுங்காவலோன்*
மாவாகியாமையாய் மீனாகிமானிடமாம்*
தேவாதிதேவபெருமா னென்தீர்த்தனே. (டு)

ப ;—அநந்தரம், ஸமஸ்த காரணபூதனானவன் கார்யபூத ஜகத்ரக்ஷணார்த்தமாகப் பண்ணின அவதாரங்களில் வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார்.

ஓவா—அவிச்சிந்நமான
துயர்—து:கத்தைத் தருவதான
பிறவி — ஜந்மஸம்பந்தரூபமான ஸ்ருஷ்டி
உட்பட—அகப்பட
மற்று — மற்றஸ்த்திதி ஸம்ஹாராதிகளான
எவ்வெவையும் — எல்லா வ்யாபாரங்களுக்கும்
மூவா—மூத்துச்சோம்பிவிடாத
தனிமுதலாய் — ஸஹாயாந்தர நிரபேக்ஷகாரணபூதனாய்க்கொண்டு
மூவுலகும் — ஸ்ருஜ்யமான லோகத்தினுடைய
காவலோன் – ரக்ஷணத்தையுடையனாய்
தேவ—ப்ரஹ்மாதிதேவதைகளுக்கும்
ஆதிதேவர்—அவ்வருகாம்படி ஆதிதேவர்களான அயர்வறுமமரர்களுக்கு
பெருமான்—அதிபதியாய்
என்—எனக்கு
தீர்த்தன்—அவகாஹிக்குந் துறையாம்படி ஸுலபனானவன்
(அந்த ஜகத்ரக்ஷணார்த்தமாக)
மாவாகி — வேதப்ரவர்த்தகனான ஹயக்ரீவனாய்
ஆமையாய் மீனாகி—புராணப்ரவர்த்தக கூர்ம மத்ஸ்ய ரூபியாய்
மானிடமாம்—கீதோப நிஷதாசார்யனுமானமநுஷ்யனுமாம்.

" இணைவனுமெப்பொருட்கும் " என்கிற பதத்தை விவரிக்கிறது. (டு)

ஆறு ;—(ஓவா) " இணைவனும் '; என்கிற பதத்தை விவரிக்கிறது.

ஸம்ஸாரசக்ர ப்ரவர்த்தகனாகையாலும், ப்ரஹ்மேசாநாதி தேவர்களுக்குக் காரணபூதனாய் * அயர்வறுமமரர்களுக்கு ஸ்வாமியாகையாலும், அசேஷதோஷப்ரத்யநீகனாகையாலும், தேவமநுஷ்யாதி வ்யாபாரங்களைப் பண்ணிக்கொண்டு ஸர்வஜகத்ரக்ஷகனாகையாலும் அவனே ஸர்வேஶ்வரனென்கிறார். (டு)

---

ஈடு ; அவ ;— (ஆறாம்பாட்டு) நீர் சொல்லுகிறவனுக்கு இந்த வுத்கர்ஷமெல்லாமுண்டோவென்ன ; முன்பே அர்ஜுநன் நிரூபித்து நிர்ணயித்த வர்த்தம் நாமின்றாராயும்படி குறைபட்டிருந்ததோவென்கிறார்.

தீர்த்தனுலகளந்த சேவடிமேற்பூந்தாமம்*
சேர்த்தியவையே சிவன்முடிமேற் றான்கண்டு*
பார்த்தன்தெளிந்தொழிந்த பைந்துழாயான்பெருமை*
பேர்த்துமொருவராற் பேசக்கிடந்ததே. (கூ)

ப ;—அநந்தரம், இவ்வவதாரதசையி லுண்டான பரத்வம் அதி ப்ரஸித்த மென்கிறார்.

| | |
|---|---|
| தீர்த்தன் — பாவநபூதனான க்ருஷ்ணனுடைய (பூர்வாவதாரத்திலே) | கண்டு—கண்டு |
| உலகு—லோகத்ரயத்தை நயும் | பார்த்தன்—அர்ஜுநன் |
| அளந்த—அளந்துகொண்ட | தெளிந்தொழிந்த—அறுதியிட்ட (அந்த) |
| செ—செவ்வையையுடைய | பை—பசுத்த |
| அடிமேல்—திருவடிகளிலே | துழாயான்—திருத்துழாயை யுடையவனுடைய |
| பூ—அழகிய | பெருமை—பரத்வமானது |
| தாமம்—மாலைகளை | பேர்த்தும்—இப்பார்த்தனையொழிய |
| சேர்த்தி—ஸமர்ப்பித்து | ஒருவரால்—வேறொருவராலும் |
| அவையே—அவற்றையே | பேச—உபபாதித்துச் சொல்லவேண்டும்படி |
| சிவன்—சிவனுடைய | கிடந்ததே—தெளியாதுகிடந்த அம்சமுண்டோ. |
| முடிமேல்—ஜடாமகுடத்திலே | |
| தான்—தானே | |

ஸுப்ரஸித்தமன்றோ வென்றுகருத்து. (கூ)

ஆறு ;—(தீர்த்தன்) யாவனொருவனுடைய பாதோதகத்தை ஶிரஸாவஹிக்கையாலே ருத்ரன்பரிஶுத்தனானன்; யாவனொருவன் திருவடிகளிலே சாத்தின பூந்தாமம் ருத்ரன் தலையிலே காணப்பட்டது ; அங்ஙனேயிருந்த பைந்துழாயான் பெருமை ஸுப்ரஸித்தமன்றோ ; சொல்லவேணுமோ வென்கிறார். (கூ)

---

ஈடு ; அவ ;— (ஏழாம்பாட்டு) ஒருவனநுவர்த்தநங்கொண்டு நிஶ்சயிக்கவேணுமோ ; அவனுடைய இஷ்டஸர்வ சேஷ்டாவிஷயமாயன்றோ இஜ்ஜகத்திருக்கிறது, இதுவேபோராதோ பரத்வஹேது வென்கிறார்.

கிடந்திருந்துநின்றளந்து கேழலாய்க்கீழ்புக்
கிடந்திடும்* தன்னுள் கரக்குமுமிழும்*
தடம்பெருந்தோ ளாரத்தழுவும் பாரென்னும்
மடந்தையை * மால்செய்கின்ற மாலார்காண்பாரே. (எ)

ப ;—அநந்தரம், ரக்ஷ்யமான ஜகத்தைப்பற்றத் தன்வாத்ஸல்யத்தாலே அநேக வ்யாபாரங்களைப் பண்ணுமென்கிறார்.

(ரக்ஷணார்த்தமாக)
கிடந்து—(க) "ப்ரதிஶிஶ்யே மஹோததே: ப்ராஞ்ஜலி: ப்ரதிஶிஶ்யே மஹோததிம்" என்று சடர்கரையிலே வழிவேண்டிக் கிடந்தும்
இருந்து—(௨) "உடஜே ராமமாஸீநம் ஜடாமண்டலதாரிணம்" என்று திருச்சித்ரகூடத்திலே யிருந்தும்
நின்று—(௩) "அவஷ்டப்ய ச திஷ்டந்தம் அவஷ்டப்ய ச திஷ்டந்தம்" என்றும் ராவணவதாநந்தரம் தேவதாஸந்நிதியில் வில்லைநடுக்கொத்துப் பிடித்து நின்றும், அன்றியே, (௪) "புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கை யிருந்து வைகுந்தத்துள்நின்று" என்கிறபடியே அர்ச்சாவதாரத்தில் ஸ்தலத்தில்கிடந்துமிருந்தும் நின்றும்
அளந்து—த்ரிவிக்ரமனாயநங்யார்ஹமாம்படியளந்தும்

கேழலாய்—வாராஹரூபியாய்
கீழ்—ப்ரளய ஜலத்துக்குக் கீழே
புக்கு—புக்கு
இடந்திடும்—அண்ட கடாஹத்தினின்று மொட்டுவிடுவித்தெடுத்தும்
(மஹா ப்ரளயத்திலே வடதளஶாயியாய்)
தன்னுள்—வயிற்றுக்குள்ளே
கரக்கும்—தெரியாதபடி கரந்தும்
உமிழும்—வெளிநாடு காணும்படி யுமிழ்ந்தும்
தடம்—இடமுடைத்தான
பெரு—பெரிய
தோள்—திருத்தோள்கள்
ஆர—நிரம்பும்படி
தழுவும்—அஸாதாரண விக்ரஹத்தோடே தழுவியும்
(இப்படி)
பாரென்னும்—பூமியென்று சொல்லப்படுகிற
மடந்தையை—மடந்தையை
மால்—ஸர்வாதிகனான ஈஶ்வரன்
செய்கின்ற—பண்ணுகிற
மால்—வ்யாமோஹத்தை
காண்பார்—அறியவல்லார்
ஆர்—ஆர்.

அதிஶயிதஜ்ஞாநர்க்கு மறியவொண்ணாதென்று கருத்து. (எ)

---

(க) ரா - யு - ௨௧ - க (௨) ரா - அயோ - ௧௧ - ௨௫
(௩) ரா - கி - ௧௯ - ௨௫ (௪) தி - வாய் - ௧ - ௨ - ௪.

ஆறு ;—(கிடந்து) எம்பெருமான்றனக்கு இந்த ஜகத்தானது இஷ்ட ஸர்வசேஷ்டா விஷயமாயிருக்கையாலே அவனுக்கே சேஷமென்கிறார். (எ)

---

ஈடு ; அவ ;—(எட்டாம்பாட்டு) அவனுடைய அத்புத கர்மங்களைத் தனித்தனியும் திரளவும் பரிச்சேதிக்கப் போகாது எத்தனையேனுமளவுடையார்க்கு மென்கிறார்.

காண்பாராரெம்மீசன் கண்ணனையென்காணுமாறு*
ஊண்பேசிலெல்லா வுலகுமோர்துற்றாற்றா*
சேண்பாலவீடோ வுயிரோமற்றெப்பொருட்கும்*
ஏண்பாலுஞ்சோரான் பரந்துளனுமெங்குமே. (அ)

ப ;—அநந்தரம், அவனெனக்கு ப்ரகாசிப்பித்த அதிசயிதாகாரங்கள் துரவபோதமென்கிறார்.

எம்—எனக்கு
ஈசன்—ஸ்வாமியாய்
கண்ணனை—ஸுலபனான க்ருஷ்ணனை
காண்பார்—அறியவல்லார்
ஆர்—ஆர்;
(அவன்படியிதுவானால்)
காணுமாறு—அறியும்படி
என்—எங்ஙனே?
(அவனுக்கு)
ஊண்—ஊண்
பேசில்—சொல்லப்பார்க்கில்
(க)"அத்தாசராசரக்ரஹணாத்" என்கிற படியே,
எல்லாவுலகும்—சராசராத்மகமான ஸகலலோகமும்
ஓர் துற்று—ஒருபிடிக்கும்
ஆற்றா—போராது!
வீடோ—அவனுக்கிருப்பிடமான வீடானது
சேண்பால்—(உ) "விஶ்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷு — விஶ்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷு" என்கிறபடியே ஸர்வலோகத்துக்கு மவ்வருகான பரமபத ப்ரதேசத்திலது;
அவனே—அவனே
மற்று—தன்னையொழிந்த
எப்பொருட்கும்—ஸகலபதார்த்தங்களுக்கும்
உயிர்—அந்தராத்மா;
ஏண்பாலும்—ஒருரேகாமாத்ரமும்
சோரான்—சோரவிடாதவனாய்க்கொண்டு
எங்கும்—எல்லா ப்ரதேசத்திலும்
பரந்து—பரந்து
உளனும்—நில்லாநிற்கும்.

---

(க) ப்ரஹ்மஸூ-க-உக. (உ) சாந்தோ-ந-கந.

ஸர்வஜகத் க்ராஸஶீலனாய், பரமபத நிலயனாய், ஸர்வ பதார்த்தங்களிலும் அந்தர்ப்ரவிஷ்டனானவனை யெங்ஙனே பரிச்சேதித்தறிவதென்று கருத்து.

எண் என்று—வரையாய், ரேகையைக்காட்டுகிறது. "ஓ" என்கிற அசைகள் - வினாவைக்காட்டுகிறது. (அ)

ஆறு ;—(காண்பாரார்) ஸர்வஜகந்நிகரண நியமநஸமர்த்தனான எம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வம் ஒருவர்க்கறிகைக்கு பூமியோவென்கிறார்.

---

ஈடு ; அவ ;— ஒன்பதாம்பாட்டு;—நீர்சொன்னது அநுபபந்நமாயிருந்ததீ!, "ஒருவஸ்துவே அநேக பதார்த்தங்களிலே குறைவற வ்யாபித்திருக்கும்" என்றால் இது கூடுமோவென்ன; கெடுவிகாள், அவன் ஸர்வகதத்வத்தை யிசையாதவிரணியன் பட்டது படாதே கிடிகோளென்கிறார்.

எங்குமுளன்கண்ணனென்ற மகனைக்காய்ந்து*
இங்கில்லையாலென் றிரணியன்தூண்புடைப்ப*
அங்கப்பொழுதே யவன்வீயத்தோன்றிய* என்
சிங்கப்பிரான்பெருமை யாராயுஞ்சீர்மைத்தே. (கூ)

ப ;—அநந்தரம், அவனுடைய ஆஶ்ரித ஸௌஶீல்யாதிஶயம் அபரிச்சேத்யமென்கிறார்.

(க) "𑌸𑌰𑍍𑌵𑌂 𑌵𑍍𑌯𑌾𑌪𑍍𑌯 𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 - ஸர்வம் வ்யாப்ய ஸ்த்தித:" என்கிறபடியே.
கண்ணன்—"ஸர்வநிர்வாஹகனானஸர்வேஶ்வரன்
எங்கும்—ஸர்வத்ர
உளன்—ஸந்நிஹிதன்"
என்ற—என்ற
மகனை—புத்ரனை
காய்ந்து—கோபித்து
இங்கு—"இவ்விடத்திலே
இல்லை—இல்லை"
என்று—என்று
தூண்—தானறுதியிட்ட தூணை
இரணியன்—ஹிரண்யன்
புடைப்ப—தட்ட,
அங்கு—அத்தூணிலே
அப்பொழுதே—அக்காலந்தன்னிலே
அவன்—ஹிரண்யன்
வீய—நசிக்கும்படி
தோன்றிய—தோற்றின
என்—என்னுடைய
சிங்கம்—நரஸிம்ஹரூபியான
பிரான்—மஹோபகாரகனுடைய [யம்
பெருமை—ஆஶ்ரிதபக்ஷபாதமாஹாத்ம்
[யும்
ஆராயும்—நெஞ்சால் பரிச்சேதிக்கா
சீர்மைத்தே—தன்மைத்தோ. (கூ)

---

(க) தை. நாரா - கக.

ஆறு ;—(எங்கும்) ஆஶ்ரிதார்த்தமாகத் தன்னுடைய ஸர்வாந்தராத்மத்வத்தை ப்ரத்யக்ஷமாக்கியருளின எம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வ மஹிமை யொருவர்க்காராய நிலமோ, ஆனபின்பு இங்ஙனேயிருந்த இவனை யாஶ்ரயியுங்களென்கிறார். (கூ)

---

ஈடு ; அவ ;—(பத்தாம்பாட்டு) "இவர்களைவிடீர், நாம் முந்துற முன்னம் இவர்களைப்போலே யாகாதே அவனை யநுபவிக்கப்பெற்றோமிறே" என்று ஸ்வலாபாநுஸந்தாநத்தாலே ஹ்ருஷ்டராகிறார்.

சீர்மைகொள்வீடு சுவர்க்கநரகீறு*
ஈர்மைகொள்தேவர்நடுவா மற்றெப்பொருட்கும்*
வேர்முதலாய்வித்தாய்ப் பரந்துதனிநின்ற*
கார்முகில்போல்வண்ணனென் கண்ணனைநான்கண்டேனே. ()

ப ;—அநந்தரம், இப்படி ஸர்வ ப்ரகாரோபகாரகனாய் மோக்ஷப்ரதனானவனை நானநுபவிக்கப் பெற்றேனென்று ஹ்ருஷ்டராகிறார்.

| | |
|---|---|
| சீர்மைகொள் - புண்யபாபகாரிதமாகையன்றிக்கே பகவத்க்ருபைக ஸாத்யமான சீர்மையையுடைய | முதலாய்—நிமித்தமுமாய், |
| வீடு - மோக்ஷமும் | வித்தாய்—உபாதாநமுமாய்க்கொண்டு |
| சுவர்க்கநரகு—புண்யபாபபலரூபமான ஸ்வர்க்கநரகங்களும் | பரந்து—ஸர்வத்ரவ்யாப்தனாய் வைத்து |
| ஈறு—மேலெல்லையாக | தனி—வ்யாப்ய பதார்த்தங்களில் வ்யாவ்ருத்தனாய் |
| ஈர்மைகொள்-பலப்ராப்தநிபந்தநமான வீரப்பாட்டையுடைய | நின்ற—நிற்பானாய் |
| தேவர்—தேவர்கள் | கார்—கார்காலத்திலே |
| நடுவா-ஸாதநபலங்களுக்கு நடுவாகவும் | முகில்போல்—மேகம்போன்ற |
| மற்று—ப்ரதமபாவியான | வண்ணன் — வடிவை யுடையனாய்க்கொண்டு |
| எப்பொருட்கும் — ஸாதநாதி ஸமஸ்த பதார்த்தங்களுக்கும் | என் — எனக்கு ஸுலபனான |
| வேர்—ஸஹகாரியுமாய் | கண்ணனை—க்ருஷ்ணனை |
| | நான்—நான் |
| | கண்டேனே—அநுபவிக்கப் பெற்றேனென்று கொண்டு ஸ்வலாபத்துக்குஹ்ருஷ்டராகிறார். |

ஈர்மைகொள் தேவரென்று — உபயபாவநாநிஷ்டரென்றுமாம். (கo)

ஆறு ;—(சீர்மை) ஸ்வர்க்காபவர்க்காத்ய மோக்ஷ புருஷார்த்தங்களுக்கும், நரகாத்ய புருஷார்த்தங்களுக்கும், இவற்றுக்கு போக்தாக்

களான தேவாதி ஸ்த்தாவராந்தமான ஸகலாத்ம வர்க்கத்துக்கும் தாரகனாய், காரணபூதனாய், நியந்தாவாய், ஸ்வேதர ஸமஸ்த விஸஜாதீயா? ப்ராக்ருத மஹாவிபூதியை யுடையனாய்நின்ற வெம்பெருமானை நான் காணப்பெற்றேனென்றுகொண்டு ஸ்வலாபத்தைப்பேசி முடிக்கிறார். (க0)

---

ஈடு ; அவ ;—(பதினோராம்பாட்டு) நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார்கள் இத்திருவாய்மொழியிற்சொன்ன முக்தப்ராப்யபோகத்தைப் பெறுவரென்கிறார்.

கண்டலங்கள்செய்ய கருமேனியம்மானை*
வண்டலம்புஞ்சோலை வழுதிவளநாடன்*
பண்டலையிற்சொன்ன தமிழாயிரத்திப்பத்தும் வல்லார்*
விண்டலையில்வீற்றிருந் தாள்வரெம்மாவீடே.

ப ;—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக ஸ்வாராஜ்ய நிர்வாஹகத்வத்தை யருளிச்செய்கிறார்.

கண்—கண்ணில்
தலங்கள்—பரப்பெங்கும்
செய்ய—சிவந்து
கரு — அதுக்குரபபாகமாய் ஶ்யாமளமான
மேனி—திருமேனியையுடைய
அம்மானை—ஸர்வ ஸ்வாமியை
வண்டு—வண்டுகள்
அலம்பும்—மது வெள்ளத்திலே யலைகிற
சோலை—சோலைகளையுடைய
வழுதிவளநாடன்—திருவழுதிவளநாட்டையுடைய ஆழ்வார்
பண்டலையில் — பண்டான் தாளமாம்படி அதின்மேலே.
சொன்ன—அருளிச்செய்த
தமிழாயிரத்து—ஆயிரந் திருவாய்மொழியில்
இப்பத்தும்—இப்பத்தும்
வல்லார்—வல்லார்
விண்டலையில்—பரமாகாசத்தின்மேலே
வீற்றிருந்து-(க)"ஸ ஸ்வராட் பவதி"என்கிறபடியேஸ்வாதந்த்ரமாகவிருந்து
எ—ஸர்வப்ரகாரவிஶிஷ்டமாய்
மா—நிரதிஶயபோக்யமான
வீடு—மோக்ஷாநந்தத்தை
ஆள்வர் — ஸ்வாதீநமாக அநுபவிப்பார்கள்

என்னோடு என்ன நுபந்திகளோடு வாசியற எங்களுக்குத் தருவதாகவிருக்கிற பெரிய வீடென்றுமாம்.

இது - கலிவிருத்தம். (கக)

---

(க) சாந்தோ ா-உடு.

ஆறு ;—(கண்டலங்கள்) இத்திருவாய்மொழியை வல்லாரிட்ட வழக்காம் திருநாடென்கிறார். (கக)

---

முதற்பாட்டில் - இந்திருவாய்மொழியில் பரக்கச்சொல்லுகிற வர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்யாநின்றுகொண்டு, "ஸம்ஸாரமாகிற இக்கடலைக் கடக்கவேணும்" என்றிருப்பார்க்குக் கடத்திக்கொடுக்குமென்றார்; இரண்டாம்பாட்டில் - அவன் வேணுமோ, அவனோட்டை ஸம்பந்தமே கடத்துமென்றார்; மூன்றாம்பாட்டில் - அவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதங்கள் ப்ரத்யக்ஷிக்கலாமென்றார்; நாலாம்பாட்டில் - * "அந்தமில் பேரின்பத்தைப் பெறவேணும்" என்றிருப்பார் அவனை யாச்ரயியுங்கோளென்றார்; அஞ்சாம்பாட்டில் - கீழ் "இணைவனாமெப்பொருட்கும்" என்றத்தை விவரித்தார்; ஆறாம்பாட்டில் - இவ்வுத்கர்ஷமெல்லா மவனுக்குண்டோ வென்ன, நாமாராயவேண்டாதபடி அர்ஜுநன் பண்டே தெரிந்தறுதியிட்டானென்றார்; ஏழாம்பாட்டில்-ஒருவனநுவர்த்தநங்கொண்டறியவேணுமோ, அவனுக்குஇஷ்ட ஸர்வசேஷ்டா விஷயமாயன்றோ ஜகத்திருக்கிறதென்றார்; எட்டாம்பாட்டில் - வ்யாப்தி தொடக்கமான அவனுடைய அபதாநங்களொருவரால் பரிச்சேதிக்க முடியாதென்றார்; ஒன்பதாம் பாட்டில் - அவனுடைய வ்யாப்தியை யிசையாதார் ஹிரண்யன்பட்டது படுவாரென்றார்; பத்தாம்பாட்டில் - ஏவம்பூதனானவனை நான்கண்டநுபவிக்கப் பெற்றேனென்றார்; நிகமத்தில் - இது கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினார்.

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

எட்டாந் திருவாய்மொழி முற்றிற்று.

---



ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# ஒன்பதாந் திருவாய்மொழி.

## எம்மாவீடு - ப்ரவேசங்கள்.

ஆறு ;—(எம்மாவீடு) (க) "நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்" என்ற ப்ராப்ய ப்ரஸங்கத்தாலே, ஸ்வாபிமதமான புருஷார்த்தத்தை நிஷ்கர்ஷித்து அத்தைப் ப்ரார்த்திக்கிறார்.

ப;—ஒன்பதாம் திருவாய்மொழியில், ஈஸ்வரனுடைய மோக்ஷப்ரதத்வத்தை அநுபவித்தவர், அந்த மோக்ஷப்ரகாரங்களெல்லாவற்றுக்கும் தாத்பர்ய பூமியாவது - பகவத் பாரதந்த்ர்யமேயென்று நிஷ்கர்ஷித்து ; அவன் திருவடிகளோட்டை ஸம்பந்தமே உத்தேஸ்யமென்னுமிடத்தையும், தத்விஷய ஜ்ஞாநத்தி லபேக்ஷையையும், ஜ்ஞாநாநுரூபமான ஸ்துத்யநுபவத்தில் ஸ்ரத்தையையும், அநுபாவ்யம் ததேகபாரதந்த்ர்யமென்னுமிடத்தையும், அதினுடைய அவிஸ்மரணம் ஆநந்த ஜநகமென்னுமிடத்தையும், அந்த ஸ்ம்ருதிகாரிதமான பாஹ்யாநுபவாபேக்ஷையையும், நிரந்தரமான ஆந்தராநுபவம் அத்ருப்திகரமென்னுமிடத்தையும், அல்பகாலாநுபவத்திலும் அதிஸயிதாபிநிவேஸத்தையும், அநுபாவ்ய விஷயத்தோடுண்டான அப்ருதக்ஸித்தி ஸம்பந்தத்தையும், அந்த ஸம்பந்தத்தைக் குலையாமையிலுண்டான அபேக்ஷையையு மருளிச்செய்து, மோக்ஷப்ரதனை ஈஸ்வரன் ஸந்நிதியிலே மோக்ஷ தாத்பர்யத்தை நிஷ்கர்ஷித்தபேக்ஷித்தருளுகிறார்.

ஈடு ;—கீழிற்றிருவாய்மொழியிலே (க) "நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர்" என்றுஇவர்தாமு மருளிச்செய்து, ஸர்வேஸ்வரனும் இவர்க்கும் இவர்பரிகரத்துக்கும் மோக்ஷங்கொடுப்பானாகப் பாரிக்க, அத்தைக்கண்டு ; தேவரீர் எனக்கு மோக்ஷம் தந்தருளப் பார்த்ததாகில் இங்ஙனே தரப்பார்ப்பது ; அதாகிறது "உனக்கு மோக்ஷங்கொள்" என்று எனக்காகத் தருகையன்றிக்கே, "நமக்காகக்கொள்" என்று தேவர்க்கேயாம்படியாகத் தரவேணுமென்று தாம் நினைத்திருந்தபடியை அவன் திருமுன்பே ப்ரார்த்திக்கிறார்,

ஆனாலிதுதான் பின்னை இத்தனைநாள் நிஷ்கர்ஷியாதொழிவானென்னென்னில் ; அவன் மேன்மேலென குணாநுபவத்தைப் பண்ணுவிக்கையாலே அதுக்குக் காலம்போந்ததித்தனையல்லது, இது நிஷ்கர்ஷிக்க அவஸரம் பெற்றிலர். ஆனாலு மிப்போதும் குணாநுபவமேயன்றோ பண்ணுகிறதென்னில் ; அதப்படியே ; அவன் தம்

பக்கலிலே மேன்மேலனப்பண்ணுகிற விருப்பத்தைக் கண்டு, "இவனுக்கு இந்த வ்யாமோஹம் முடிய அநுவர்த்திப்ப தொன்றாயிருந்தது; நாமிவனை மீட்டாகிலும் நம்முடைய ப்ராப்யத்தை நிஷ்கர்ஷிப்போம்" என்று பார்த்து, "நீ இங்ஙனே நில்" என்று அவனை நிறுத்திவைத்து ப்ராப்யநிஷ்கர்ஷம்பண்ணுகிறார்.

எம்பாரித் திருவாய்மொழி யருளிச்செய்யப்புக்கால், இருந்தவர்களை "யார்" என்றுகேட்டுக் கதவுகளையு மடைப்பித்து, குஹ்யமாகவா மருளிச்செய்வது. ப்ராப்யமாகி லிப்படியன்றோ இருப்பது; இவர் நிஷ்கர்ஷிக்க வேண்டுகிற தென்னென்னில்; ஸர்வேஶ்வரன் இவ்வாத்மாவுக்கே ஶேஷியாய் இவனும்ஶேஷபூதனாய், அவனுடைய உபாயபாவமும் நித்யமாயிருக்கச் செய்தேயன்றோ இவனுக்கு இன்று ஸ்வீகாரம் வேண்டுகிறது; அப்படியே, அவன் ஸ்வதந்த்ரனாகையாலே நினைத்தபோது நினைத்தபடிகொள்வா னொருவனாகையாலே, ப்ராப்தி ஸமயத்தி லநுபவமிருக்கும்படியையும் நிஷ்கர்ஷித்துப் பெறவேணுமிறே, உத்தரார்த்தத்திலு மிவ்வர்த்தத்தைச் சொல்லாநின்றதிறே. த்வயந்தன்னில் நிஷ்கர்ஷிக்கவேண்டுகிறதென்னென்னில், பூர்வார்த்தத்தால் சொன்னஸாதநம் ஸர்வபலப்ரதமாகையாலே ப்ரயோஜநாந்தரபரராய் ஶரணம்புகுவார்க்கு மவற்றைக் கொடுத்து விடுவானொருவனிறே ஸர்வேஶ்வரன்.

இது தன்னிலோடுகிற தென்னென்னில்; "முக்தனாய் நிரதிஶய ஸுகாநுபவத்தைப் பண்ணவுமாம், ஆத்மப்ராப்தியைப் பெறவுமாம், ஆத்மவிநாஶமே யாகவுமாம், நரகாநுபவம்பண்ணவுமாம், இவற்றிலெனக்கொரு நிர்ப்பந்தமில்லை; உனக்காய்வருமன்று இவை யித்தனையும் வரவுமாம், எனக்காய்வருமன்று இவை யித்தனையும் வேண்டா; ஆனபின்பு தேவருக்குறுப்பாமிதுவே எனக்கு வடிவாம்படி பண்ணியருளவேணும்" என்று ஸ்வப்ராப்யத்தை நிஷ்கர்ஷிக்கிறார்.

இப்படிப்பட்ட பரிமாற்றந்தான் லோகத்தில் பரிமாறுவதொன்றல்ல; இவ்வாழ்வார் பக்கலிலேகாணுதல்; ராமாயண புருஷர்களில் ஸ்ரீபரதாழ்வான், இளையபெருமாள், இவர்கள் பக்கலிலேகாணுதல் செய்யுமித்தனை; கைகேயி, (க) "ராஜநு — ராஜந்" என்றசொல் பொறுக்கமாட்டாமே திரளிலேவந்து கூப்பிட்டானிறே (உ) [வியைா

(க) ரா-அயோ-எஉ உ௯. (உ) ரா-அயோ-அஉ-கo

வஸஹாஜெ — விலலாபஸபாமத்யே] ஒரு திரளாகவிருந்து என்னுடைய ஶேஷத்வத்தை அபஹரிப்பதே; (க) "உஸரஹிது - ஷி தெநெவ யா ராக்ஞாஹிதஞ்ஸஹ - தஸ்யபிர்முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும்ப்ருஶம்" என்னும்படி இழந்த வஸ்துவுக்குத் தக்கபடியா யிருக்குமிறே கூப்பீடும். [ஜமஹெ வ-ஜகர்ஹேச] ஸந்த்யாவந்தனத்துக்குப் பிற்பாடரை ஶிஷ்டகர்ஹை பண்ணுவாரைப் போலே கர்ஹித்தான். [வரொஹிதஃ - புரோஹிதம்] அழகியதாக விக்குடிக்குமுன்னேடி ஹிதம்பார்த்தாய். [ஸஹாஜெ வரொஹிதம் ஜமஹெ - ஸபாமத்யே புரோஹிதம் ஜகர்ஹே] (உ) "நியமாதிக்ரமம் ரஹஸிபோதயேத்" என்கிற நிலையும்பார்த்திலன்; (ங) [ராஜஞா ஹஞ ராமஸ - ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய] ஒருவனுக்கிரண்டு வஸ்து ஶேஷமானால் ஒன்றையொன்று நிர்வஹிக்குமோ; ஆனால், ராஜ்யந்தானென்னையாண்டாலோ. [யஹவக்ரு ஹேஹா ஹஸி - தர்மம்வக்துமிஹார்ஹஸி] பெருமாள் காடேறப்போனார்; சக்ரவர்த்தி துஞ்சினார்; நாடு அராஜகமாய்க் கிடக்கவொண்ணாது; நின்றுரில் ப்ரதாகர் தலையிலே முடியைவைக்கவேணும்" என்று பார்த்தா யித்தனை போக்கி, இதுக்கு விஷயபூதனானவென்னைப்பார்த்து வார்த்தைசொல்விற்றில்லை. (ங) [கயஂ உஶரயாஜாதொ ஹவெ ராஜ ஹார ககஃ - கதம்தஶரதாஜ்ஜாதோ பவேத்ராஜ்யாபஹாரகः] அவர் பொகட்டுப்போன ராஜ்யத்தை அபஹரித்து, அவரைப்பிரிந்த வநந்தரத்திலே முடிந்தவன் வயிற்றிலே பிறந்தேனும்படி எங்ஙனேநான்.

இளையபெருமாள், "நில்" என்ன, (ச) [கா ஷ - குருஷ்வ] என்றாரிறே; அங்வபத்தாலே தரிக்கக்கடவ வஸ்துவை வ்யதிரேகித்து நிற்கச்சொல்லுகையாவது அழிக்கையிறே. "குரு" என்றதே, "குருஷ்வ" என்றாரிறே - ஆருடைய ப்ரயோஜநத்துக்கு ஆர்தானிரக்கிறார்; உம்முடைய இழவுக்கு நீர் பதறுகிறதென். [அநசரம் - அநுசரம்] பண்ணும் ப்ரகாரத்தை விதிக்கிறார். நீர்தாம் "நில்" என்றருளிச்செய்தது, நான், நிற்கச்சொல்

(க) (உ) ஆபஸ்தம்ப தர்மம்.

(ங) ரா-அயோ-கஉ-அஉ. (ச) ரா-அயோ-௩௧-உச.

னுகைக்கு யோக்யனும்படியிருக்கையிறே; உம்முடைய சாயையை "நில்" என்று சொல்லிற்றிலீரே, சாயையோபாதி உம்மைப்பின் செல்வேனாகவேணும். "நீரும் நிழலும் வாய்த்திருப்பதொரு ப்ரதேஶத்தைப் பார்த்துப் பர்ணஶாலையைச் சமையும்" என்ன, நந்தலையிலே ஸ்வாதந்த்ரயத்தை வைத்தபோதே பெருமாள் நம்மைக் கைவிட்டார்" என்று வேறுபட்டார். (க) "ஸவ உ-க்ஷ-ா உ ண-ஏவமுக்தஸ்து ராமேண] "இதுக்கு முன்பெல்லாம் நம் குறையாலேயிழந்தோம்' என்றிருந்தோம்; இவர்தாமே நம் ஸ்வரூப மழியக் காரியம் பார்த்தார், இனி, 'நம் ஸ்வரூபம்' என்றொன்றுண்டோ" என்று வேறுபட்டார். [லக்ஷ்மணஃ - லக்ஷ்மணஃ] பாரதந்த்ர்யத்தை நிரூபகமாகவுடையவர். [ஸம்ய தாஞ்ஜலிஃ- ஸம்யதாஞ்ஜலிஃ] நாம்நம் ஸ்வரூபத்தை யழித்துக்கொண்டவன்று நோக்குகையன்றிக்கே, ஶேஷிதானே யழித்தவன்றும் ஸ்வரூபத்தைத் தரவற்றாயிற்று அஞ்ஜலி. ஸர்வாபிமத ஸாதநமாயிற்று. [ஸீதாஸமக்ஷ - ஸீதா ஸமக்ஷம்] பண்ணின அஞ்ஜலிக்கு அந்யபரதை பாவிக்க வொண்ணாதவள் ஸந்நிதியிலே. [காகுத்ஸ்த - காகுத்ஸ்தம்] பிராட்டி ஸந்நிதியும் மிகையாம்படியான குடிப்பிறப்பையுடையவரை. [இதம்வசநமப்ரவீத் - இதம்வசநமப்ரவீத்] "இவ்வார்த்தையைச் சொல்லுவானே" என்று கொண்டாடுகிறார் ருஷி. (உ) [பரவாநஸ்மி - பரவாநஸ்மி] உம்முடைய அஸ்மிதைபோலல்லகாணும் என்னுடைய அஸ்மிதை.

இப்படிக்கொத்த பாரதந்த்ர்யத்தை யாயிற்று இவராசைப்படுகிறது. "இது தானொருவரபேக்ஷிக்கு மதுவுமல்ல, அபேக்ஷிப்பாரில்லாமையாலே நாம் கொடுத்துப்போரு மதுவுமல்ல; அவ்வழி புல்லெழுந்துபோயிற்றுக்காணும்" என்று அவன நாதரித்திருக்க; புருஷனர்த்திக்க வருமதிறே - புருஷார்த்தமாவது; "இப்பேறித்தனையும் நான்பெற்றேனாகவேணும்" என்று இவரபேக்ஷிக்க, அவனும் தலைதுலுக்கப்பெற்றாராய்த் தலைக்கட்டுகிறார்.*

ஈடு;—அவ; முதற் பாட்டு. எவ்வகையாலும் விலக்ஷணமான மோக்ஷத்திலும் எனக்கபேக்ஷையில்லை, உன் திருவடிகளை யென் தலையிலே வைக்கவேணுமென்கிறார்.

---

(க) ரா-அயோ-ஆர-௩௧-௬ (உ) ரா-ஆர-௧௫-எ

எம்மாவீட்டுத் திறமும்செப்பம்*நின்
செம்மாபாதபற்புத் தலைசேர்த்து*ஒல்லைக்
கைம்மாதுன்பங் கடிந்தபிரானே*
அம்மாவடியேன் வேண்டுவதீதே. (க)

ப;— முதற்பாட்டில், ஸர்வப்ரகார விஶிஷ்டமான மோக்ஷத்திலும் திருவடிகளோட்டை ஸம்பந்தமே யுத்தேஶ்யமென் றபேக்ஷிக்கிறார்.

ஏ—எவ்வகைப்பட்ட
மா—உத்க்ருஷ்டமான
வீட்டுத்திறமும்—மோக்ஷப்ரகாரமும்
செப்பம்—சொல்லோம்;
நின்—உன்னுடைய
செ—சிவந்த
மா—உத்தேஶ்யமான
பாதபற்பு—திருவடித்தாமரைகளை
தலை—தலையிலே
ஒல்லை—கடுக
சேர்த்து—சேர்க்கவேணும்;
கை — துதிக்கைமுழுத்தும்படி யழுத்தன
மா—ஆனையினுடைய
துன்பம்—து:க்கத்தை
கடிந்த—போக்கின
பிரானே—மஹோபகாரகனாய்
அம்மா — இவ்வபதாநத்தைக் காட்டி என்னை யடிமைகொண்ட ஸ்வாமியே
அடியேன் — உனக்கடியேனான நான்
வேண்டுவது—என் ஸ்வரூபத்துக்குத் தகுதியான பலமாக வேண்டியிருப்பது
ஈதே—இதுவே.

புருஷனர்த்தித்ததன்றோ - புருஷார்த்தமென்று கருத்து. ஒல்லை - சடக்கென. கைம்மா - ஆனை, ஒல்லை - கைம்மாவென்று கூட்டவுமாம். செப்பம் சேப்போம். அன்றியே, செப்பமென்று - செவ்விதாமென்றாய், மோக்ஷ ப்ரகாரமெல்லாம் செவ்விதானதையாவது - திருவடிகளிலே சேர்த்தியென்றாகவுமாம். * (க)

ஆறு;—எத்தனையேனு முத்க்ருஷ்ட புருஷார்த்தமான ஸ்ரீவைகுண்டத்திலும் எனக்கபேக்ஷையில்லை; மற்றெதிலே யபேக்ஷையுள்ளதென்னில்; உன்னுடைய அழகிய திருவடிமலர்களை என் தலையிலேவைத்தருளவேணும்; அது செய்தருளுமிடத்து ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குச் செய்தருளினப்போலேவந்து செய்தருளப் பற்றாது, செய்துகொண்டு நிற்கவேணும்; ஈதே அடியேன் வேண்டுவதென்கிறார். * (க)

ஈடு; அவ;—இரண்டாம்பாட்டு. முதற்பாட்டில் - காயிகமான பேற்றை யபேக்ஷித்தார்; இதிலே - மாநஸமானபேற்றை யபேக்ஷிக்கிறார்.

ஈதேயானுன்னைக்கொள்வ தெஞ்ஞான்றும்*என்
மைதோய்சோதி மணிவண்ணவெந்தாய்*
எய்தாநின்கழல் யானெய்த*ஞானக்
கைதா காலக்கழிவு செய்யேலே. (உ)

ப:—அநந்தரம், இந்த ஸம்பந்த விஷயமான ஜ்ஞாநத்தைத் தந்தருளவேணுமென்கிறார்.

| | |
|---|---|
| என்—என்க்கிந்தருசிஜநகமான | ஈதே—இதுவே; ஏதென்னில், |
| மை—கருமை | எய்தா—பெறுதற்கரிய |
| தோய்—செறிந்த | நின்—உன் |
| சோதி—ஒளியையுடைத்தான | கழல்—திருவடிகளை |
| மணி—மாணிக்கம்போன்ற | யான்—நான் |
| வண்ணம்—வடிவழகையுடைய | எய்த—பெறுதற்கீடான |
| எந்தாய்—என்ஸ்வாமியே | ஞானக்கை—தெளிவாகிற ஜ்ஞாநக் கையை |
| உன்னை—உன்னை | |
| யான்—நான் | தா—தரவேணும்; |
| எஞ்ஞான்றும்—எக்காலத்திலும் | காலக்கழிவு—காலவிளம்பம் |
| கொள்வது—கொள்ளும் ப்ரயோஜநம் | செய்யேல்—பண்ணாதேகொள். |

ஞானத்தை - கையென்றது, தமக்காலம்பந மாகையாலே. * (உ)

ஆறு;—(ஈதே) எற்றைக்கு மிதுவே நானுன்பக்கல் கொள்ளும் ப்ராப்யம். பக்தி யோகத்தாலல்லது ஸித்திக்குமோவென்னில்; அந்தபக்தியோகந் தன்னையும் நீயே ஈண்டெனத் தந்தருளவேணுமென்கிறார். (உ)

---

ஈடு; அவ;—மூன்றாம்பாட்டு. இதில் - வாசிகமான பேற்றை யபேக்ஷிக்கிறார்.

செய்யேல்தீவினையென் றருள்செய்யும் * என்
கையார்சக்கரக் கண்ணபிரானே *
ஐயார்கண்ட மடைக்கிலும் * நின்கழ
லெய்யாதேத்த வருள்செய்யெனக்கே. (௩)

ப :—அநந்தரம், அவ்வறிவுக்கிடாக ஆபத்தசையிலும் உன்னை ஸ்தோத்ரம் பண்ணும்படி பண்ணியருளவேணுமென்கிறார்.

தீவினை—"அக்ருத்ய கரணாதிகளான தீவினைகளை
செய்யேல்—செய்யாதேகொள்"
என்று—என்று
என்—என் பக்கலிலே
அருள்—க்ருபாகார்யமான நியமநத்தை
செய்யும்—பண்ணுகைக் கருப்பாய்
கை—திருக்கையோடு
ஆர்—பொருந்தின
சக்கரம்—திருவாழியையுடையனாய்
கண்ணன்—க்ருஷ்ணனான ஸௌலப்யத்தாலே
பிரானே—உபகரித்தவனே
ஐ—ஐயாலே
ஆர்—நின்றந்த
கண்டம்—கண்டமானது
அடைக்கிலும்—உக்தி ஸாமர்த்யமில்லாதபடி நிர்விவாமாகிலும்
நின்—விரோதி நிவர்த்தகனாய் ஸுலபனாய் ப்ராப்தனானவுன்
கழல்—திருவடிகளை
எய்யாது—இளைப்பற்று
ஏத்த—ஏத்தும்படி
எனக்கே—எனக்கேயஸாதாரணமாக
அருள்செய்—க்ருபையபண்ணியருளவேணும்.

ஐ - ஶ்லேஷ்மா. (ஈ)

ஆறு ;—(செய்யேல்) உன்கையுந் திருவாழியுமாயிருக்கிற அழகைக்காட்டி வ்யதிரிக்த விஷயத்தில் ப்ராவண்யத்தைத் தவிர்த்து உன் திருவடிகளி லென்னை ப்ரவணனாக்கினவனே, உத்க்ராந்தி தசையிலுங்கூட உன்திருவடிகளை நானிளையாதேத்தும்படி பிரானே க்ருபைபண்ணி யருளவேணுமென்கிறார். * (ஈ)

ஈடு ; அவ ;—நான்காம் பாட்டு. இத்திருவாய்மொழியில் இவர் நிஷ்கர்ஷித்த ப்ராப்யமாவது - ஸ்ரக்சந்தநாதிகளோ பாதி தனக்கேயாக வெனைக்கொளுமீதே யென்றிறே ;

இவ்விடத்திலே எம்பாரருளிச்செய்யும்படி - "ஸர்வேஶ்வரன் த்ரிவிதசேதநரையும் ஸ்வரூபாநுரூபமாக வடிமைகொள்ளா நின்றான் ; நாமு மிப்படி பெறுவோமே" என்று. முக்தரும் நித்யரும், தாங்களு மாநந்தித்து அவனையு மாநந்திப்பிப்பர்கள் ; பத்தர், தாங்களாநந்தியாதே அவனை யாநந்திப்பிப்பர்கள் ; * இன்புறு மிவ்விளையாட்டுடையானிறே. "* மயர்வறமதிநல மருளப்பெற்றவர், 'தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே' என்று ப்ரார்த்திப்பானேன்? 'திருவுள்ளமானபடி செய்கிறான்' என்றிராதே" என்று - பிள்ளை

திருநறையூரரையர் எம்பாரைக்கேட்க, "அதுகேளீர்; முன்பு பிரிந்தன்று, பின்பு பிரிவுக்கு ப்ரஸங்கமுண்டாயன்று, இரண்டுமின்றியிருக்கத் திருமார்விலே யிருக்கச்செய்தே, 'அகலகில்லேன், அகலகில்லேன்' என்னப்பண்ணுகிறது விஷய ஸ்வபாவமிறே; அப்படியே ப்ராப்யருசி ப்ரார்த்திக்கப்பண்ணுகிறது" என்றருளிச்செய்தார்.

* எம்மாவீட்டிலெம்மாவீடாய், வைஷ்ணவ ஸர்வஸ்வமுமாய், உபநிஷத் குஹ்யமுமாய், ஸர்வேச்வரன் பக்கலிலே அபேக்ஷித்துப் பெறுமதாய், இவ்வாத்மாவுக்கு வகுத்ததுமான பாரதந்த்ர்யத்தை அவன் பக்கலிலே யபேக்ஷிக்கிறார்.

எனக்கேயாட்செய் யெக்காலத்துமென்று * என்
மனக்கேவந் திடைவீடின்றி மன்னி *
தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே *
எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பே. (ச)

ப:—அநந்தரம், காயிகமாயும், மாநஸமாயும், வாசிகமாயுமுள்ள பகவச் சேஷத்வத்தை கீழ் மூன்றுபாட்டிலு மநுஸந்தித்து, இதில் ப்ரதாநமான ததேக பாரதந்த்ர்யத்தை ப்ரயோஜநதயா நிஷ்கர்ஷிக்கிறார்.

எக்காலத்தும்—எல்லாக்காலத்திலும்
எனக்கே—எனக்கே
ஆள்—அடிமை
செய்—செய்
என்று—என்றருளிச்செய்து, அவ்வளவில் நில்லாதே
என்—என்னுடைய
மனக்கே—மநஸ்ஸுக்கே
வந்து—வந்து
இடைவீடு—விச்சேதம்
இன்றி—இல்லாதபடி
மன்னி—நிரந்தரவாஸம்பண்ணி
தனக்கே—பிறர்க்குமன்றியே, எனக்குமன்றியே, எனக்கும் தனக்குங் கூடவுமன்றியே, தனக்கே
ஆக—பாரதந்த்ரனும்படி
எனை—என்னை
கொள்ளும்—அங்கீகரிக்கும்
ஈதே—இதுவே
எனக்கே—எனக்கநுரூபமாக
கண்ணனை—க்ருஷ்ணனை
யான்—நான்
கொள்—அபேக்ஷிக்கும்
சிறப்பு—ப்ரயோஜநம்.

சிறப்பு - ப்ரயோஜநம். (ச)

ஆறு;—(எனக்கே) தம்மை யடிமை செய்வித்துக்கொள்ளும்படியை யெம்பெருமானைக் கற்பிக்கிறார்.

"ஸர்வகாலமு மெனக்கே யடிமைசெப்" என்று திருவாயாலே யருளிச்செய்தருளி, ஒருக்ஷணமாத்ர மொழியாமே என் னெஞ்சிலே புகுந்திருந்தருளி, தாம் சாத்தியருளும் சாத்து, சந்தனம், திருமாலை, திருப்பரிவட்டங்கள்போலே என்னைத் தனக்கே ஶேஷமாகக்கொள்ளு மிதுவே எனக்கே கண்ணனை யான்கொள் சிறப்பென்கிறார். * (ச)

ஈடு; அவ;—ஐந்தாம்பாட்டு. கீழ் - மநோவாக்காயங்கள் மூன்றுமு முண்டான பேற்றையாசைப்பட்டு, இவை மூன்றுமு முண்டான அநுபவத்தில் உன்னுடையப்ரீதியிலே யந்தர்ப்பூதனுமிதுக்கு மேற்பட எனக்காயிருக்கு மாகாரத்தைத் தவிர்க்கவேணுமென்றார்; இதுதான் ஸம்ஸாரிகள் பக்கல் பரிமாறுவதொன்றல்ல, இவர்தாம் தம்மையாராகநினைத்து இந்தப்பேற்றை யபேக்ஷிக்கிறார் என்றாராய்ந்து பார்ப்போம்" என்று, நீராராய்த்தான் நம்மை யிப்படி யபேக்ஷிக்கிறதென்ன; தேஹமே ஆத்மா" என்பார்; "கேவல தேஹத்துக்கு இந்த்ரியமொழிய அநுபவமில்லாமையாலே இந்திரியங்களோகாண் ஆத்மா" என்பார்; அந்த இந்த்ரியங்களும் மநஸ்ஸஹகாரமில்லாதபோது பதார்த்த க்ரஹணம் பண்ணமாட்டாமையாலே மநஸ்ஸேகாண் ஆத்மா என்பார்; "அம்மநஸ்ஸு தனக்கும் ப்ராணங்கள் ஸஹகரிக்கவேண்டுகையாலே ப்ராணங்காண் ஆத்மா" என்பார்; "இவையெல்லா முண்டானாலும் அத்யவஸாயம்வேணுமே, அதுக்குக் கருவியான புத்திதத்வமேகாண் ஆத்மா" என்பார்; இவை யித்தனைக்கு மவ்வருகாய் ஜ்ஞாநகுணகமாய் ஜ்ஞாந ஸ்வரூபமாயிருப்பதொன்று ஆத்மா" என்பாராகா நிற்பர்கள்; அதிலெனக்கொரு நிர்ப்பந்தமில்லை, ஏதேனுமாக வுண்டானவஸ்து தேவர்க்குறுப்பாமிதுவே வேண்டுவதென்கிறார், (க) "வபுராதிஷுயோவி கோவிவா - வபுராதிஷுயோபிகோபிவா" என்றார்போலே.

சிறப்பில்வீடு சுவர்க்கநரகம்*
இறப்பிலெய்துக வெய்தற்க*யானும்
பிறப்பில் பல்பிறவிப் பெருமானை*
மறப்பொன்றின்றி யென்றுமகிழ்வேனே. (ரு)

---

(க) ஸ்தோ - ரு.

ப :—அநந்தரம், இப்பாரதந்த்ர்ய ப்ரகாஶகனை ஈஶ்வரனை மறவாதொழி கையாகிற வுகப்பைப் பெறவேணுமென்கிறார்.

இறப்பில்—இச்சரீரத்தை விட்டவளவிலே
சிறப்பில்—ஆநந்தமாகிற நன்மையிலேயான
வீடு—மோக்ஷம்
சுவர்க்கம்—ஸுகாபாஸமான ஸ்வர்க்கம்
நரகம்—து:கைகதாநமான நரகமாகிற விவற்றை
எய்துக—தேஹாத்பாரனுக் கொண்டு போய்க்கிட்டவுமாம்;
எய்தற்க—தேஹம்தானென்று யிவற்றைக்கிட்டாதே முடிந்துவிடவுமாம்;
பிறப்பு—தனக்குப்பிறவிக்குஹேது
இல்—இன்றியேயிருக்கச்செய்தே
பல்—பஹுதாவர்க
பிறவி—பிறக்கக்கடவனை
பெருமானை—ஸர்வேஶ்வரனை
ஒன்று—இவ்வவதாரத்தாலே யாஶ்ரிதரை நித்ய பாரதந்த்ராக்கின குணசேஷ்டிதங்க ளொன்றையும்
மறப்பின்றி—மறவாதே
என்றும்—என்றும்
மகிழ்வேன்—அவிஸ்மரணத்தால்வந்த ஆநந்தத்தை யுடையேனாகவேணும்.

கீழ்ப்பாட்டு மிப்பாட்டும் - முன்னிலையன்றியே ஸ்வகதாநுஸந்தாநமாயிருக்கிறது. * (ரு)

ஆறு ; - (சிறப்பில்) தேஹமே ஆத்மாவாகலாம், தேஹாதிரிக்தமாய் நித்யஸித்த ஜ்ஞாநகுணமான அஹமர்த்தமே ஆத்மாவாகலாம்; அதிலோராதரமில்லை ; கர்ம நிபந்தநமான ஜந்மரஹிதனுப்வைத்து ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக தேவமநுஷ்யாதிரூபேண வந்து பிறந்தருளும் ஸ்வபாவனுயிருந்த எம்பெருமானுடைய ஸர்வ திவ்யாவதாரங்களையும் ஸர்வ திவ்யசேஷ்டிதங்களையும் ஸர்வகல்யாணகுணங்களையும் மறவாதே என்று மநுபவிக்கப் பெறவேணுமென்கிறார்.* ()

---

ஈடு ; அவ ;— ஆறாம்பாட்டு. தேவாதி பதார்த்தங்களை யுண்டாக்கினாற்போலே, என்னையு முன்னை யநுபவிப்பேனும்படியாகப் பண்ணவேணுமென்கிறாராதல். அன்றியே, தேவாதி பதார்த்தங்களுக்கு ஒரோ ஸ்வபாவம் நியதமாம்படி பண்ணினாற்போலே, எனக்கு உன்னை யநுபவிக்குமது நியத ஸ்வபாவமாம்படி பண்ணியருளவேணு மென்கிறாராதல்.

---

(க) தை - ஆ.

மகிழ்கொள்தெய்வ முலோகமலோகம்*
மகிழ்கொள்சோதி மலர்ந்தவம்மானே*
மகிழ்கொள்சிந்தை சொற்செய்கை கொண்டு*என்றும்
மகிழ்வுற் றுன்னைவணங்க வாராயே, (சு)

ப:—அநந்தரம், இந்த ஆந்தராநுபவமடியாக பாஹ்யாநுபவத்தை யபேக்ஷிக்கிறார்.

மகிழ்கொள்—ஸுகப்ரசுரமான
தெய்வம்—தேவதாவர்க்கம்
உலோகம்—ஜ்ஞாநப்ரகாஶ யுக்தமான மநுஷ்யவர்க்கம்
அலோகம்—ப்ரகாஶரஹிதமான திர்யக்ஸ்தாவரங்கள்
மகிழ்—தேஜஸ்விதையால்வந்த வுகப்பை
கொள்—உடைத்தான
சோதி—ஜ்யோதி: பதார்த்தங்களாய்க்கொண்டு
மலர்ந்த— (க) "ஸ ஐக்ஷத பஹுஸ்யாம்" என்கிற கணக்கிலே விஸ்த்ருதனை
அம்மானே—ஸ்வாமியானவனே
மகிழ்கொள்—உன்பக்கலாபிமுக்யத்தலே ப்ரீதியுக்தமான
சிந்தை—நினைவையும்
சொல்—உக்தியையும்
செய்கை—க்ரியையையும்
கொண்டு—கொண்டு
என்றும்—ஸர்வகாலமும்
மகிழ்வுற்று—ஆநந்தநிர்ப்பரனாய்க்கொண்டு நான்
உன்னை—இக்கரணத்ரய வ்யாபாரத்தை யுண்டாக்கித் தந்தவுன்னை
வணங்க—அநுபவிக்கும்படி
வாராய்—எழுந்தருளிவரவேணும்

உலோகமலோகமென்று - சேதநாசேதநங்களாகவுமாம். (சு)

ஆறு;—(மகிழ்கொள்) பரமகாருண்யத்தாலே இஜ்ஜகத்தையெல்லாம் படைத்தருளினவனே, என்னுடைய ஸர்வகரணங்களாலும் ஸர்வகாலமும் த்வதநுபவைக ஸ்வபாவனாய்க்கொண்டு உன்னையநுபவிக்கும்படி வந்தருளவேணுமென்கிறார். * (சு)

---

ஈடு; அவ;—ஏழாம்பாட்டு. தம்முடைய அபிநிவேசத்தாலே, எல்லாக்காலமு மென்னை யடிமைகொள்ள வரவேணுமென்கிறார்.

வாராயுன் திருப்பாத மலர்க்கீழ்*
போராதே யான்வந் தடையும்படி
தாராதாய்*உன்னை யென்னுள்வைப்பி லென்று
மாராதாய் *எனக்கென்று மெக்காலே. (எ)

ப :—அநந்தரம், ஆந்தராநுபவ மாராமையாலே ஸவிஷாதமாக பாஹ்யா நுபவாபேக்ஷை பண்ணுகிறார்.

உன்னை—நித்யா நுபாவ்யனானவுன்னை
என்னுள்—என்னெஞ்சுக்குள்ளே
என்றும்—நிரந்தரமாக
வைப்பில்—வைக்குமிடத்தில்
எனக்காராதாய்—"அமையும்" என்னு தபடி யெனக்கத்ருப்திகரனாய்
என்றும்—எல்லாநாளிலும்
எக்கால்—எல்லாப்போதிலும்
உன்—ப்ராப்தனானவுன்னுடைய
திரு—ஶ்லாக்யமாய்
மலர்—போக்யமான
பாதம்—திருவடிகளிலே
கீழ்—பாதந்த்ரனாய்க்கொண்டு
போராதே—விஶ்லேஷாஹிதனும்படி
யான்—நான்
வந்து—வந்து
அடையும்படி—கிட்டுகைக்கு
தாராதாய்—அவகாஶந்தாராதவனே
(உன் திருப்பாத மலர்க்கீழ் போராதே யான் வந்தடையும்படி—நானப்படி கிட்டும்படி.)
வாராய்—வந்தருளவேணும். (எ)

ஆறு ;—(வாராய்) உன்னுடைய நிரவதிக போக்யதையை எனக்குக் காட்டிவைத்து உன்னை புஜிக்கத்தாராதிருக்கிற நீ, ஸர்வகாலமும் உன் திருப்பாத மலர்க்கீழ் போராதேயான் வந்தடையும்படி, பிரானே வாராயென்கிறார். * (எ)

---

ஈடு ; அவ ;—எட்டாம்பாட்டு, அத்யல்பகாலமாகிலும் ஶேஷியாய் என்னோடே ஸம்ஶ்லேஷிக்கப்பெறில், பின்னை யொருகாலமும் இதுவும் வேண்டாமென்று, தமக்கு அடிமை செய்கையிலுண்டான விடாயின் மிகுதியை யருளிச்செய்கிறார்.

எக்காலத்தெந்தையா யென்னுள் மன்னில்*மற்று
எக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்*
மிக்கார் வேதவிமலர் விழுங்கும்*என்
அக்காரக்கனியே யுன்னையானே. (அ)

ப : அநந்தரம், அத்யல்பகாலாநுபவம்பெறிலும் அதொழிய வேறொன்றும் வேண்டாவென்கிற அத்யபிநிவேஶத்தை யருளிச்செய்கிறார்.

மிக்கார்—அதிஶயித்த தஸ்வபாவராய்
வேதம்—வைதிகாக்ரேஸரரான
விமலர்—நிர்மலரானவர்கள்
விழுங்கும் – தங்களாதராதிஶயத்தாலே கபளீகரித் தநுபவிக்குங் கணக்கிலே

| | |
|---|---|
| என்—எனக்கு | மன்னில்—ப்ரகாசிப்பித்து நிற்கப்பெறில் |
| அக்காரம்—அக்காரந்தோய்ந்த | மற்று—இதொழிய |
| கனியே—கனிபோலே போக்யனானவனே | எக்காலத்திலும்—எல்லாக்காலத்திலும் |
| எக்காலத்து—ஏதேனு மல்ப காலத்திலேயாகிலும் | யாது—ஏதேனும் |
| எந்தையாய்—எனக்கு ஸ்வாமியான வாகாரந்தோன்றும்படி | ஒன்றும்—ஒன்றையும் |
| | உன்னை—உன்னை |
| | யான்—நான் |
| என்னுள்—என் நெஞ்சிலே | வேண்டேன்—அபேக்ஷியேன். (அ) |

ஆறு ;—(எக்காலத்து) எக்காலமு மென்னை யெல்லாவடிமையுஞ் செய்வித்துக்கொண்டு என்னுள்ளே மன்னில் "உன்னைப்பின்னை யொருகாலமு மொன்று மபேக்ஷிக்கிறிலேன்" என்றுகொண்டு எம்பெருமானை யபேக்ஷித்து, பின்னையும் எம்பெருமானுக் கடிமைசெய்கையிலுள்ள ஸ்ப்ருஹையாலே, எம்பெருமானையுள்ளபடி கண்டநுபவிக்கிற மஹாத்மாக்களாரோ வென்கிறார். (அ)

---

ஈடு ; அவ ;—(ஒன்பதாம்பாட்டு) "மிக்கார் வேதவிமலர் விழுங்கும்" என்று நித்யஸூரிகள் நித்யாநுபவம் பண்ணுகிறபடியை யநுஸந்தித்தார் ; அவர்களோடொத்த ப்ராப்தி தமக்குண்டாயிருக்க, இழந்திருக்கிறபடியையு மநுஸந்தித்து அநர்த்தப்பட்டேனென்கிறார்.

யானே யென்னை யறியகிலாதே *
யானே யென்றனதே யென்றிருந்தேன் *
யானேநீ யென்னுடைமையும் நீயே *
வானேயேத்து மெம்வானவரேறே. (கூ)

ப ;—அநந்தரம், ஸம்பந்தம் அப்ருதக்ஸித்தமாயிருக்க அநாத்ய ஜ்ஞாநத்தாலே அஹங்கார மமகாராதூஷிதனா யிழந்தேனென்கிறார்.

| | |
|---|---|
| யானே—நான்றானே | என் தனதே—என்னை யொழிந்தவையென்னுடைமை யாகவும் |
| என்னை—என்விஷயத்திலே | |
| அறிய—யாதாத்ம்யஜ்ஞாநம் | |
| கிலாதே—இல்லாமையாலே | என்று — அஹங்கார மமகாரங்களைப் பண்ணி |
| யானே—நான் ஸ்வதந்த்ரனேயாகவும் | |

இருந்தேன்—முடிந்துபோகாதே ஆத்ம நித்யத்வமுமநர்த்தாவஹமாம்படியிருந்தேன் ;
வானே—இவ்வறிவுகேடின்றியிலே யாதாத்ம்யஜ்ஞாநம் நடையாடும் பரமபதமாக
ஏத்தும்—உன்னுடைய ஸம்பந்தத்தையேத்தும்படி
அவ்வானவர்—அங்குள்ளார்க்கு
ஏறே—ஶேஷியான செருக்குத்தோன்றவிருக்குமவனே
(அர்த்தஸ்திதியுணர்ந்தால்)
யான்—நான்
நீயே—நீயேயென்னலாம்படி அப்ருதக்ஸித்தப்ராகாரபூதனுயிருப்பன் ;
என்னுடைமையும் — என்னுடைமையானவையும்
நீயே—உனக்கப்படி ப்ராகாரமாய்க்கொண்டு நீயேயென்னலாம்படியாயிருக்கும். (க)

ஆறு ;—(யானே) நானுமென்னுடைமையும் உனக்கேயடிமையா யிருக்கச்செய்தே, இதுக்குமுன்புபோன காலமெல்லாம் "உனக்கடிமை" என்னுமிடத்தை யறியாதே, நானென்றும், என்னுடையதென்று முண்டான ஸ்வாதந்த்ர்யாபிமாநத்தாலே நஷ்டனுனேனென்று தம்முடைய இழவை யநுஸந்தித்து அத்யந்தமவஸந்நராய், ஸ்வபாவத ஏவ அஸ்க்கலித ஜ்ஞாநராய், ஒரு க்ஷணமாத்ரமு மெம்பெருமானை யிழவாதே 'திருநாட்டிலேயிருந் தநுபவிக்கிறவர்க ளாரோவென்கிறார். ... ... ... ... (க)

---

ஈடு ; அவ ;—(பத்தாம்பாட்டு) "யானே யென்றனதே யென்றிருந்தேன்" என்று நீ ரநுதபிக்கும்படி பண்ணினோமாகில் உமக்குச் செய்யவேண்டுவ தொன்றுண்டோ, நீரிங்ஙனே கிடந்துபடுகிறதெதுக்காகவென்ன ; இதுக்காகவென்கிறார்.

ஏறேலேழும் வென்றேர்கொ ளிலங்கையை *
நீறேசெய்த நெடுஞ்சுடர்ச்சோதி *
தேறேலென்னை யுன்பொன்னடிச்சேர்த்து * ஒல்லை
வேறேபோக வெஞ்ஞான்றும் விடலே. (கo)

ப ;—அநந்தரம், அந்த ஸம்பந்தங் குலையாதபடி யென்னைக் கைவிடா தொழியவேணுமென்கிறார்.

ஏல்—ஏன்றுகொண்ட
ஏறு—ஏறு
ஏழும்—ஏழையும்
வென்று—வென்று
ஏர்—அழகை
கொள்—உடைத்தான
இலங்கையை—லங்கையை
நீறேசெய்த—பஸ்மஸாத்கரித்ததாலே

நெடும்—மிக்க
சுடர்—தேஜஸ்ஸையுடையனான
சோதி—உஜ்ஜ்வலவிக்ரஹனே
என்னை—என்னை
தேறேல்—"எனக்குநன்மையறிவன்" என்று விஸ்வஸியாதே
உன்—உன்னுடைய
பொன்—உஜ்ஜ்வலமான
அடி—திருவடிகளிலே
ஒல்லை—சடக்கென
சேர்த்து—சேர்த்து
வேறேபோக-விஷயாந்தரங்களை நினைத்துவேறுபோகும்படி
என்ஞான்றும்—எல்லாக்காலத்திலும்
விடல்—விடாதொழியவேணும்.

விதிநிர்மிதமான இந்த அந்வயத்தைப் பாலநம்பண்ணி, விடாதொழியவேணுமென்று கருத்து. * (கo)

ஆறு;—(ஏறேல்) இந்த ப்ராப்யத்தைப் பெறுகைக்கு ப்ரதிபந்தகங்களுளவேயென்னில்; அவற்றை யெல்லாம், நப்பின்னைப் பிராட்டிக்கும், அபோரகவநிகையில் பிராட்டிக்கும் உன்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்கு ப்ரதிபந்தகங்களை நீயேபோக்கினாற்போலே போக்கியருளி, உன் திருவடிகளிலே என்னை யீண்டெனச்சேர்த்தருளி, உன் திருவடிகளில் திவ்யரேகைபோலே பின்னை யொருகாலமும் உன்னைப் பிரியாதபடி தொருபடி பண்ணியருளவேணும்; இப்படி இக்ஷணமே செய்தருளாவிடில் ஒன்றும் தரியேனென்கிறார். (கo)

---

ஈடு; அவ;—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை அப்யஸிக்க வல்லார் இதிற் சொன்ன ப்ராப்யத்தைப் பெறுவரென்கிறார்.

※ விடலில் சக்கரத்தண்ணலை மேவல் *
விடலில் வண்குருகூர்ச் சடகோபன்சொல் *
கெடலி லாயிரத்துள்ளிவை பத்தும் *
கெடலில் வீடுசெய்யுங் கிளர்வார்க்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ப;...அநந்தரம், "இத்திருவாய்மொழி மோக்ஷாநந்தப்ரதம்" என்று பலத்தை யருளிச்செய்கிறார்.

விடல்—விடுதல்
இல்—இல்லாத
சக்கரத்து—திருவாழியையுடைய
அண்ணலை—ஸ்வாமியை (அப்படியே)
மேவல்—மேவி
விடலில்—விடக்ஷமல்லாத
வண்—மஹோதாரரான
குருகூர்ச்சடகோபன்—ஆழ்வார்
சொல்—அருளிச்செய்ததாய் (இதிலந்வயித்தார்க்கு)

கெடல்—அநர்த்தம்
இல்—வாராதபடியான
ஆயிரத்துள்—ஆயிரத்துள்
இவைபத்தும்—இவைபத்தும்
கிளர்வார்க்கு—ஸாதரமாகச் சொல்ல வல்லவர்களுக்கு (இதுதானே)

கெடலில் — அவித்யாத்யநர்த்த கந்த ரஹிதமான
வீடு—மோக்ஷாநந்தத்தை
செய்யும்—பண்ணிக்கொடுக்கும்.

கிளர்தல் - சொல்லுதல். கிளர்த்தியாய், உத்யோகமாகவுமாம்.
இது - கலிவிருத்தம், * (கக)

ஆறு;—(விடலில்) இப்படி ஆழ்வாரபேக்ஷிக்க, அபேக்ஷித்தபடியே திருமலையிலே புகுந்தருளி, ஆழ்வாரோடே, திருவாழியாழ்வானோடு ஸம்ஶ்லேஷித்தாற்போலே ஒருகாலும் பிரியாதபடி ஸம்ஶ்லேஷித்த எம்பெருமானைச்சொன்ன இத்திருவாய்மொழிவல்லார் ஆழ்வார் பெற்றபேறு பெறுவரென்கிறார். * ... ... (கக)

ஈடு;—முதற்பாட்டில் - காயிகமானபேற்றை யபேக்ஷித்தார்; இரண்டாம் பாட்டில் - மாநஸமானபேற்றை யபேக்ஷித்தார்; மூன்றாம்பாட்டில்-வாசிகமானபேற்றை யபேக்ஷித்தார்; நாலாம்பாட்டில், ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்தார்; அஞ்சாம்பாட்டில்-நீராய் இப்பேற்றை யபேக்ஷித்தீரென்ன, நானாயிடுக, உன்னையநுபவித்து மகிழும்படிபண்ணியருளவேணுமென்றார்; ஆறாம்பாட்டில் - த்ரிவித கரணங்களாலு முன்னைப்ரீதிபுரஸ்ஸரமாக அநுபவிக்கும்படிபண்ணி யருளவேணுமென்றார்; ஏழாம்பாட்டில் - அப்படிசடக்கெனச் செய்யாமையாலே யின்னாதானார்; எட்டாம்பாட்டில் - ஸ்வரூபாநுரூபமாக நீக்ஷணகாலமொன்றேடே யநுபவிக்கப்பெறில் பின்புள்ளகாலமெல்லாம் வேண்டேனென்றார்; ஒன்பதாம்பாட்டில் - உன்னை யநுபவிக்க இட்டுப்பிறந்துவைத்து, அதுகிடையாதபடி நானே யநர்த்தத்தைச் சூழ்த்துக்கொண்டேனென்றார்; பத்தாம்பாட்டில்-எனக்கொருநாளும், "ஜ்ஞாநவிஶேஷத்தைப் பண்ணித்தந்தோமிறே" என்று என்னை யென்கையிற்காட்டித் தாராதொழியவேணுமென்றார்: இதுகற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினார். *

வடக்குத்திருவீதிப் பிள்ளை திருவடிகளேசரணம்.
ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

இரண்டாம் பத்து.

# பத்தாந் திருவாய்மொழி.

கிளரொளி - ப்ரவேசங்கள்.

ஈடு ;—" கீழ் * எம்மாவீட்டிலே நிஷ்கர்ஷித்த ப்ராப்யம்பெறு கைக்குத் திருமலையை யாஸ்ரயிக்கிறார் " என்று ஆளவந்தாரருளிச் செய்தாராகத் திருமாலையாண்டான்பணிக்கும்படி; எம்பெருமானார், " அங்ஙனல்ல, இவர்பாட்டுத்தோறும் 'ஒல்லை' 'ஒல்லை' என்றும், 'காலக்கழிவுசெய்யேல்' என்றும் - த்வரிக்கப்புக்கவாறே, 'நமக்கு மறிவித்து நாமும் இவர்காரியஞ் செய்யக்கடவதாக வறுதியிட்டால், ஸரீரஸமநந்தரம் பேறுதப்பாது' என்றறுதியிட்டிருக்கலாயிருக்க, இவரிப்படித்வரிக்கிறது இச்சரீரத்தோடே நாமடிமைகொள்ளவே ணுமென்றுபோலே யிருந்தது; இனி இவர்க்கு நாம் நினைத்தபடி பரிமாறுகைக்கு ஏகாந்தமானதேசமேதோ' என்று * ஞாலத்தூடே நடந்துழக்கிப்பார்த்து வரச்செய்தே 'இவ்விடம் சால ஏகாந்த ஸ்த்தலமாயிருந்தது, என்று திருமலையிலே ஸந்நிதிபண்ணியருளி, 'நாம் உமக்கு முகந்தருகைக்காகவந்துநின்றோம், நீர் இங்கேவந்துநினைத்த வகைகளெல்லாம் பரிமாறி யநுபவியும், என்று தெற்குத் திருமலையிலே நிற்கிற நிலையைக் காட்டிக்கொடுக்க, இவருமத்தை யநுஸந்தித்து; பகவான் ப்ராப்யனானால் அவன் வர்த்திக்கும் தேசமும் ப்ராப்யமாகக்கடவதிறே ; அத்தாலே, திருமலையோடு, அதோடுசேர்ந்த அயன்மலையோடு, புறமலையோடு, திருப்பதியோடு, போம்வழியோடு, 'போகக்கடவோம்' என்றுதுணியும் துணிவோடுவாசியற ப்ராப்யாந்தர்க்கதமாயநுபவித்து இனியராகிறார் " என்று *

ப ;—பத்தாந்திருவாய்மொழியில், கீழ் - புருஷார்த்ததயா நிர்ணீதமான அத்யந்த பாரதந்த்ர்யயுக்தமாயிருந்துள்ள கைங்கர்யத்தை இவரபேக்ஷித்தபடியே, காலவிளம்பம் பிறவாதபடி இங்கே கொடுத்தருளுகைக்காகத் தெற்குத்திருமலையிலே யெழுந்தருளிநிற்கிறபடியை ப்ரகாசிப்பிக்கக்கண்டு அத்யந்த ஹ்ருஷ்டராய் ; அழகருடைய ஔஜ்ஜ்வல்யத்தையும், ஆபிரூப்யத்தையும், ஔதார்யத்தையும், ரக்ஷகத்வத்தையும், ரக்ஷணோபகரணவத்தையையும், ஆஸ்ரிதவ்யாமோஹத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், ஆஸ்ரிதாநுகூலதையையும், விரோதிநிரஸநஸீலதையையும், ஜ்ஞாநப்ரதத்வத்தையுமநுஸந்தித்து, "ஏவம்

விதனை ப்ராப்யபூதன்தானும் விரும்பும்படியான திருமலையே பரம ப்ராப்யம்' என்று நிஷ்கர்ஷித்து, முதலிட்டைந்து பாட்டாலே - திருவுள்ளத்தையும், மேலிட்டைந்து பாட்டாலே - லௌகிகரையுங்குறித்து அவன் போக்யதையை யுபதேசித்து முடித்தருளுகிறார். *

ஆறு ;—(கிளரொளி) இப்படி தம்மோடு கலந்தருளின வெம்பெருமான் நின்றருளின திருமலையை யநுபவிக்கிறார். *

ஈடு ; அவ ;—(முதற்பாட்டு) திருமலையை ப்ராபிக்கையே இவ்வாத்மாவுக்கு நிரதிஶய புருஷார்த்தமென்கிறார்.

❋ கிளரொளிபிளமை கெடுவதன்முன்னம் *
வளரொளிமாயோன் மருவியகோயில் *
வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை *
தளர்விலராகிற் சார்வதுசதிரே. (க)

ப ;—முதற்பாட்டில், நிரதிஶயௌஜ்ஜ்வல்ய விஶிஷ்டனை ஸர்வேஶ்வரன் விரும்பின திருமலையே ப்ராப்யமென்கிறார்.

| | |
|---|---|
| கிளர்—கிளர்ந்துவருகிற | மருவிய—பொருந்திவர்த்திக்கிற |
| ஒளி — ஜ்ஞாநௌஜ்ஜ்வல்யத்துக்கு யோக்யதையுண்டான | கோயில்—திவ்யஸ்த்தாநமாய் |
| இளமை—யௌவநாரம்பரூபமான விளமை | வளர் — வளராநிற்கச்செய்தே |
| கெடுவதன்முன்னம்—விஷயாந்தரகதமாய்க்கெடுவதற்கு முன்னே | இளம்— இளமையையுடைத்தான |
| வளர்—ஆஶ்ரிதார்த்தமாக விங்கேயெழுந்தருளின பின்பு வளர்ந்துவருகிற | பொழில்—பொழில்களாலே |
| ஒளி—ஶீலஸௌலப்யாதி குணௌஜ்ஜ்வல்யத்தையுடைய | சூழ்—சூழப்பட்டு |
| மாயோன்—ஆஶ்சர்யரூபனை ஸர்வேஶ்வரன் | மாலிருஞ்சோலை—அத்தாலே "மாலிருஞ்சோலை" என்றுதிருநாமமான திருமலையை |
| | தளர்வு—ப்ரயோஜநாந்தர ஸம்பந்தமாகிற தளர்த்தி |
| | இலராகி—அற்று |
| | சார்வதே—ப்ராபிக்குமதுவே |
| | சதிர்—சதிர். |

"இதொழிய ப்ரயோஜநாந்தரமுண்டு" என்றிருக்கை - இளமையென்று கருத்து. சேதநர் * பால்யத்திலே விவேகாத்மாக்களாய்க்கொண்டு அநந்ய ப்ரயோஜநராய்ப்பற்று மிது சதிரிறேயென்று தந்திருவுள்ளத்தைக்குறித்து உரைத்தாராயிருக்கிறது. (க)

ஆறு ;—யாதொன்றிலே நின்றருளுகையாலே அங்குத் தைச் சோலைபோல எம்பெருமானுடைய திருவுடம்பு அதிஶீதளமாய் அதிவர்த்திஷ்ணுவான் ஔஜ்ஜ்வல்ய யௌவநாதி கல்யாணகுணங்களை யுடைத்தாயிற்று ; அங்ஙனேயிருந்த திருமாலிருஞ்சோலையை, உங்களுக்குக் கரணபாடவமுள்ளபோதே உங்களுடைய க்லேஶமெல்லாம் தீரும்படிசென்று புஜியுங்கள் ; இது பரமப்ராப்யமென்கிறார்.()

---

ஈடு ; அவ ;—(இரண்டாம் பாட்டு) திருமலையோடுசேர்ந்த ஸ்ரீ பதியைக்கிட்டுகையே பரம ப்ரயோஜநமென்கிறார். அன்றிக்கே, திருமலைதன்னையே சொல்லுகிறதாதல். அன்றிக்கே, திருப்பதியையாதல்.

சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியாது *
அதிர்குரல்சங்கத் தழகர்தங்கோயில் *
மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை *
பதியதுவேத்தி யெழுவதுபயனே. (உ)

**ப** ;—அநந்தரம், அழகருடைய திருமலையோடுசேர்ந்த திருப்பதியை யேத்துமதே ப்ரயோஜநமென்கிறார்.

சதிர்—அர்த்தாநுரூபமாகவும் ஸ்வதோஷத்துக்கீடாகவுமொதுக்கி யுடப்புகொடுக்குஞ் சதிரையுடையாராய்
இளம்—இளமையாலேமதிமயக்கி (செல்லாமை தோன்றவிருக்கும்)
மடவார்—ஸ்த்ரீகளுடைய
தாழ்ச்சியை—தாழ்ச்சிதோற்றவிருக்குமுக்திசேஷ்டிதாதிகளை
மதியாது—ப்ரீதிபண்ணுதே
அதிர்குரல்—ஸம்ஶ்லேஷ ஜநிதப்ரீதியாலே முழங்குகிற
சங்கத்து—ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யுடையராகையாலே நிரதிஶய ஸௌந்தர்யத்தை யுடைய
அழகர்—அழகருக்கு
தங்கோயில்—அஸாதாரணஸ்த்தாநமாய்
மதி—சந்த்ரனைவன்
தவழ்—தவழும்படி யோங்கின
குடுமி—ஶிகாஶிகைகளையுடைத்தான
மாலிருஞ்சோலை—திருமலையில்
பதி—திருப்பதியாகிற
அது—ப்ரஸித்தஸ்தலத்தை
ஏத்தி—ஸ்தோத்ரம்பண்ணி
எழுவதே—உச்ச்ரிதராகையே
பயன்—ப்ரயோஜநம்.

இதுவும் - நெஞ்சுநோக்கியுரைத்தல். * (உ)

ஆறு ;—(சதிரிளமடவார்) ப்ராக்ருதவிஷயங்களிலே ப்ராவண்யத்தைவிட்டு, ப்ரதிகூலஹ்ருதயபேதகமான திவ்யத்வநியையுடைத்

தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யேந்துகையாலே நிரவதிகமான அழகை யுடையனாய், அத்தாலே "அழகர்" என்னுந் திருநாமத்தையுடையனான எம்பெருமானுக்குக் கோயிலாய், பரிபூர்ண சந்த்ரமண்டலத்தாலே யலங்க்ருதமான ஶிகரங்களையுடைத்தான திருமாலிருஞ்சோலைப் பதியையேத்தியெழுங்கள்; அதுவே பரமப்ரயோஜநமென்கிறார். * (௨)

---

ஈடு; அவ;—(மூன்றாம்பாட்டு) உத்தேஶ்யத்துக் கிதெல்லாம் வேணுமோ, திருமலையோடுசேர்ந்த அயன்மலையையடைய வமையுமென்கிறார்.

பயனல்லசெய்து பயனில்லைநெஞ்சே *
புயல்மழைவண்ணர் புரிந்துறைகோயில் *
மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை *
அயன்மலையடைவ தது கருமமே. (௩)

ப;—அநந்தரம், பரமோதாரன் வர்த்திக்கிற திருமலையோடுசேர்ந்த அயன்மலையை ப்ராபிக்கையே கார்யமென்கிறார்.

| | |
|---|---|
| நெஞ்சே—நெஞ்சே | உறை—நித்யவாஸம்பண்ணுகிற |
| பயனல்ல-ப்ரயோஜந ஶூந்யமானவற்றை | கோயில்—வாஸஸ்தாநமாய் |
| செய்து—செய்து | மயல்மிகு—கண்டார்நெஞ்சு கலங்கும்படி தர்ஶநீயமான |
| பயன்—ப்ரயோஜநம் | பொழில்—பொழில் |
| இல்லை—இல்லை; | சூழ்—சூழ்ந்த |
| புயல்—தூறலுந்துளியுமான | மாலிருஞ்சோலை-திருமலையினுடைய |
| மழை—காளமேகம்போலே | அயல்—அருகின |
| வண்ணர்-ஜலஸ்தலவிபாகமற வர்ஷிக்கும் ஸ்வபாவத்தையுடையவர் | மலை—மலையை |
| புரிந்து—அபிமுகனாய்க்கொண்டு | அடைவததுவே—அடைகையாகிற வதுவே |
| | கருமம்-கர்த்தவ்யம்-ஸ்வரூபப்ராப்தம். |

ஆறு;—(பயனல்ல) ப்ரயோஜந ஶூந்யமாயிருந்த செயல்களைச்செய்து ஒரு ப்ரயோஜநமில்லை நெஞ்சே; ஆதலால் அவற்றைத் தவிர்த்து ஆஶ்ரிதர்கு ஆத்மதாநம்பண்ணிக்கொண்டு நிற்கிறகோயிலாய், தன்னுடைய போக்யதையாலே ப்ரவிஷ்டரை யுந்மத்திப்பியா நின்ற பொழில்களையுடைத்தான மாலிருஞ்சோலையினுடைய அயன்மலையடைவது; அதுவே நமக்குப் பரமஹிதமென்கிறார். (௩)

---

ஈடு ; அவ ;—கர்மபந்தத்தைப் போக்கி ஆஸ்ரிதரானவர்க ளடிமைசெய்து வாழுகைக் கிடமாம்படி ஸர்வேஸ்வரன் வர்த்திக்கிற திருமலையை யாஸ்ரயிக்கையே ஸத்ருஸமென்கிறார்.

கருமவன்பாசங் கழித்துழன் றுய்யவே *
பெருமலையெடுத்தான் பீடுறைகோயில் *
வருமழைதவழும் மாலிருஞ்சோலைத் *
திருமலையதுவே யடைவது திறமே. (ச)

ப ;—அநந்தரம், ரக்ஷகனானவன் வர்த்திக்கிற பெரிய பொழில்சூழ்ந்த திருமலையை யாஸ்ரயிக்குமதுவே செய்யக்கடவபடி யென்கிறார்.

கருமம்—பந்தகமானகர்மங்களாகிற
வன்—கழற்றவரிய
பாசம்—பாசங்களை
கழித்து—கழற்றி
உழன்று — அடிமைசெய்து வ்யாபரித்து
உய்யவே — சேதநருஜ்ஜீவிக்கைக்காக (ஆர்த்தமான கோபகோபீ ஜநங்களுடையத ஆர்த்திதீரும்படி) [வே
பெரு—பெரிய
மலை—மலையை
எடுத்தான்—எடுத்துரக்ஷித்தவன்
பீடு—தன்னுடையரக்ஷணைஸ்வர்யம்
உறை—விளங்கும்படி நித்யவாஸம் பண்ணுகிற
கோயில்—ஸ்தாநமாய்
வரு—வர்ஷோந்முகமாய்வருகிற
மழை—மேகங்கள்
தவழும்—தவழும்படி
மால்—மிகவுமுயர்ந்து
இரும்—பரந்த
சோலை—சோலையையுடைத்தான
திருமலையதுவே—திருமலைதன்னையே
அடைவதே—அடைவதே
திறம்—செய்யும்படி.

மால் - உயர்த்தி. இருமை - பரப்பு. மாலிருஞ்சோலைத் திருமலையென்கையாலே - திருமலையிற்சோலையினுடைய ப்ராப்யதை தோற்றுகிறது. (ச)

ஆறு ;—(கருமம்) நிரஸ்தப்ரதிபந்தகராய்க்கொண்டு தன் திருவடிகளிலே நாமடிமைசெய்து உஜ்ஜீவிக்கைக்காகவே பரம காருணிகனைதான் வந்துறைகின்ற ஸமஸ்த ஸந்தாபநாஸகமான திருமலையையடைகையே அடிமைசெய்கைக்கு உபாயமென்கிறார். ... (ச)

---

ஈடு ; அவ ;—திருமலைக்குப் புறம்பான மலையைப்ராபிக்கையே நல்விரகென்கிறார்.

திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது *
அறமுயலாழிப்படை யவன்கோயில் *
மறுவில்வண்சுனைசூழ் மாலிருஞ்சோலைப் *
புறமலைசாரப்போவது கிறியே. (ரு)

**ப**;—அநந்தரம், ரக்ஷணோத்யுக்தமான திருவாழியை யுடையவன் வர்த்திக்கிற திருமலையின் புறமலையைக்கிட்டப்போவது நல்விரகென்கிறார்.

திறமுடை—நாநாவிதமான
வலத்தால் — பலங்களாலே,
(அக்ருதயகாருதிகளான)
தீ—கொடிய
வினை—பாபங்களை
பெருக்காது—வர்த்திப்பியாதே,
அறம்—ஆஶ்ரித ரக்ஷணமாகிற தர்மத்திலே
முயல்—உத்யோகத்தையுடைய
ஆழி—திருவாழியை
படையவன் — ஆயுதமாக வுடையவனுடைய
கோயில்—வாஸஸ்தாநமாய்
மறு — ஶைவலகர்த்தமாதிகளாகிற களங்கம்
இல்—அற்று
வண்—கிட்டினார்க்கு ஸர்வப்ரகாரோபஜீவ்யமான
சுனை—சுனைகளாலே
சூழ்—சூழப்பட்ட
மாலிருஞ்சோலை—திருமலையின்
புறமலை—புறமலையை
சார—கிட்ட
போவது—போகிறவது
கிறி—நல்விரகு.

கிட்டுமதிலும் கிட்டப்ரவர்த்திக்குமது நல் விரகென்று கருத்து. இப்பாட்டளவும் - உபதேசத்தை நெஞ்சோடே கூட்டி, மேல் - பிறரைக்குறித்து உபதேசிக்கிறார். ... ... ... ... ... (ரு)

ஆறு;—(திறமுடை) விரகாலும் பலத்தாலும் தீவினைபெருக்காதே, ஆஶ்ரிதரக்ஷணைக ஸ்வபாவனான திருவாழியை திவ்யாயுதமாக வுடையவனானவன் நின்றருளுகிற, நிர்மலமாய் ஸர்வ போக்யமாயிருந்த சுனைகளையுடைத்தான மாலிருஞ் சோலைமலையினுடைய புறமலை சாரப்போவது பரமப்ராப்யமென்கிறார். ... ... (ரு)

---

ஈடு; அவ; — திருமலைக்குப் போம் மார்க்கசிந்தை பண்ணுமிதுவே இவ்வாத்மாவுக்கு நல்லதென்கிறார்.

கிறியெனநினைமின் கீழ்மைசெய்யாதே *
உறியமர்வெண்ணெ யுண்டவன்கோயில் *
மறியொடுபிணைசேர் மாலிருஞ்சோலை *
நெறிபடவதுவே நினைவதுநலமே. (சா)

**ப**;—அநந்தரம், ஆஶ்ரித வ்யாமுக்தன் வர்த்திக்கிற திருமலைக்குப்போ கிறவழியை யுட்பட நினைக்குமதுவே நன்மையென்கிறார்.

| | |
|---|---|
| கீழ்மை—விஷயாந்தரங்களை நோக்கிப் போக நினைக்கும் நீசதையை | கோயில்—கோயிலாய் |
| செய்யாதே—பண்ணாதே (இத்தை) | மறியொடு — தன்னுடைய கன்றுக ளோடேகூட |
| கிறி—நல்விரகு | பிணை—மான்பேடைகள் |
| என—என்று | சேர்—சேருகிற |
| நினைமின்—நினையுங்கோள்; (எதென்னில்) | மாலிருஞ்சோலை—திருமலையினுடைய |
| உறி—உறியிலே | நெறி—வழியிலே |
| அமர்—பொருந்தச் சேமித்துவைத்த | பட—உட்படவேணுமென்கிற |
| வெண்ணெய்—வெண்ணெயை | அதுவே—அத்தையே |
| உண்டவன்—அமுதுசெய்த க்ருஷ்ணனுடைய | நினைவது—நினைக்கை |
| | நலம்—புருஷார்த்தம். |

மறி - குட்டி. பிணை - மான்பேடை. (சு)

ஆறு;—(கிறியென) இத்தையே பரமப்ராப்யமென்று நினையுங்கள், வேறொன்றை ப்ராப்யமென்று நினையாதே; உறியமர் வெண்ணெயுண்டவன் அச்சுவடழியாமே புகுந்து நின்றருளுகிற ஸர்வ போக்யமான திருமலையை அநந்ய ப்ரயோஜநராய்க்கொண்டு நினைக்குமதுவே ப்ராப்யமென்கிறார். ... ... (சு)

---

ஈடு; அவ—திருமலையைச் சென்று கிட்டி நிரந்தரவாஸம் பண்ணுகையே இவ்வாத்மாவுக்கு வெற்றியென்கிறார்.

நலமெனநினைமின் நரகழுந்தாதே *
நிலமுனமிடந்தான் நீடுறைகோயில் *
மலமறுமதிசேர் மாலிருஞ்சோலை *
வலமுறையெய்தி மருவுதல்வலமே. (எ)

**ப**;—அநந்தரம், ப்ரளயாபத்ஸகன் வர்த்திக்கிற திருமலையிலாநுகூல்யமே ப்ரபலமென்கிறார்.

| | |
|---|---|
| (பஹிஷ்டராய்,) | என—என்று |
| நரகு — ஸம்ஸாரநிரயத்தில் | நினைமின்—புத்திபண்ணுங்கோள்; |
| அழுந்தாதே—அழுந்தாதே, (இத்தை | முனம்—ப்ரளயங்கொண்ட முற்காலத்திலே |
| நலம்—பரமப்ரயோஜநம் | |

நிலம்—பூமியை
இடந்தான்—வராஹவேஷத்தைக் கொண்டு இடந்தெடுத்தவன்
நீடுறை—நித்யவாஸம்பண்ணுகிற
கோயில்—கோயிலாய்
மலமறு - சிகரங்களிலேதேய்கையாலே களங்கரஹிதனை
மதி—சந்த்ரன்
சேர்—பொருந்துகிற
மாலிருஞ்சோலை—திருமலையை
முறை—ஶேஷஶேஷி பாவமாகிற முறைப்பாட்டாலுள்ள
வலம்—ஆநுகூல்யத்தை
எய்தி—பெற்று
மருவுதலே—பொருந்துகையே
வலம்—பலோத்தரம்.

ஆறு ; — (நலம்) இதுவே ப்ராப்யமென்று நினையுங்கள், வேறொன்றை ப்ராப்யமாக நினையாதே ; நிலமுனமிடந்தான் என்னைக்கும் தனக்குக் கோயிலாகக்கொண்ட, பரமபுருஷ நிர்மலஜ்ஞாந ஜநகமான திருமலையை அநந்ய ப்ரயோஜநராய்க்கொண்டு வலம் செய்து மருவுங்கள் ; இதுவே பரம ப்ராப்யமென்கிறார். (எ)

---

ஈடு ; அவ—திருமலையை நிரந்தரமாக வலஞ்செய்கையே வழக்கென்கிறார்.

வலஞ்செய்துவைகல் வலங்கழியாதே *
வலஞ்செய்யுமாய மாயவன்கோயில் *
வலஞ்செய்யும்வானோர் மாலிருஞ்சோலை *
வலஞ்செய்துநாளும் மருவுதல்வழக்கே. (அ)

பு ;—அநந்தரம், ஆஶ்ரிதாநுகூலனான க்ருஷ்ணன் வர்த்திக்கிற திருமலையிலே நிரந்தராநுகூல வ்ருத்தியே ஸ்வரூபப்ராப்தமென்கிறார்,

(காரணங்களுக்கு)
வலம்—பலத்தை
செய்து—உண்டாக்கி
வைகல்—நிரந்தரமாக
வலம்—அந்தபலத்தை
கழியாதே—இதரவிஷயமாக்கிக்கெடாதே
வலம்—ஆஶ்ரிதர்க்கு பவ்யதையாகிற ஆநுகூல்யத்தை
செய்யும்—பண்ணும்
ஆயன்—க்ருஷ்ணனை
மாயவன்—ஆஶ்சர்யபூதனுடைய
கோயில்—கோயிலான
வானோர்—பரமபதவாஸிகள்
வலம்—அநுகூலவ்ருத்தி
செய்யும்—பண்ணும்
மாலிருஞ்சோலை—திருமலையைக் குறித்து
வலம்—ப்ரதக்ஷிணாத்யநுகூல வ்ருத்தியை
செய்து—பண்ணி
நாளும்—நிரந்தரம்
மருவுதல்—ஸம்ஶ்லேஷம்பண்ணுகை
வழக்கு—ந்யாயம். (அ)

